ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



பரம காருணிகரான பிள்ளை லோகாசார்யர் அருளிச்செய்த

# தத்வத்ரயம்

---

## தாடங்கும்போதநுஸந்திக்கும் தனியன்கள்.

---

[illegible] |
[illegible] ||

ஸ்ரீசைலேசதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம்
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்

[illegible] |
[illegible] ||

ாமாத்ருயோகீந்த்ரபாதரேகாமயம் ஸதா
த்மஸத்தாதிம் ராமாநுஜமுநிம் பஜே.

[illegible] |
[illegible] ||

... ரம்பாம் நாதயாமுநமத்யமாம்
ார்யபர்யந்தாம் வந்தே குருபரம்பராம்,

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

யோ நித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ்ததிதராணி த்ருணாய மேநே
அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ:
ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

மாதாபிதாயுவதயஸ் தநயாவிபூதிஸ்
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்
ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம்
ஸ்ரீமத்ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

பூதம் ஸரச்ச மஹதாஹ்வயபட்டநாத
ஸ்ரீபக்திஸாரகுலசேகரயோகிவாஹாந்
பக்தாங்க்ரிரேணுபரகாலயதீந்த்ரமிச்ராந்
ஸ்ரீமத்பராங்குசமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம்.

[illegible]
[illegible]

லோகாசார்யாய குரவே க்ருஷ்ணபாதஸ்ய ஸூநவே |
ஸம்ஸாரபோகிஸந்தஷ்டஜீவஜீவாதவே நம:.

𑌲𑍋𑌕𑌗𑍁𑌰𑍁𑌂 𑌗𑍁𑌰𑍁𑌭𑌿𑌸𑍍𑌸𑌹 𑌪𑍂𑌰𑍍𑌵𑍈𑌃
𑌕𑍂𑌰𑌕𑍁𑌲𑍋𑌤𑍍𑌤𑌮𑌦𑌾𑌸𑌮𑍁𑌦𑌾𑌰𑌮𑍍 ।
𑌶𑍍𑌰𑍀𑌨𑌗𑌪𑌤𑍍𑌯𑌭𑌿𑌰𑌾𑌮𑌵𑌰𑍇𑌶𑍌
𑌦𑍀𑌪𑍍𑌰𑌶𑌯𑌂 𑌵𑌰𑌯𑍋𑌗𑌿𑌨𑌮𑍀𑌡𑍇 ॥

லோககுரும் குருபிஸ் ஸஹ பூர்வை:
கூரகுலோத்தமதாஸமுதாரம் ।
ஸ்ரீநகபத்யபிராமவரேசௌ
தீப்ரஶயம் வரயோகிநமீடே.

கோதிலுலகாசிரியன் கூரகுலோத்தமதாதர்
தீதில்திருமலையாழ்வார் செழுங் குரவைமணவாளர்
ஓதரியபுகழ் திருநாவுடையபிரான் தாதருடன்
போதமணவாளமுனி பொன்னடிகள் போற்றுவனே.

ஜீயர் திருவடிகளே சரணம்.
ஜீயர் திருவடிகளே சரணம்.

## சாற்றும் போதநுஸந்திக்கும் தனியன்.

வாழியுலகாசிரியன் வாழியவன் மன்னுகுலம்
வாழிமுடும்பையென்னும் மாநகரம் - வாழி
மனஞ்சூழ்ந்தபேரின்பம் மல்குமிகநல்லார்
இனஞ்சூழ்ந்திருக்குமிருப்பு.

ஜீயர் திருவடிகளே சரணம்.
ஜீயர் திருவடிகளே சரணம்.

*[illegible]

லோகாசார்யக்ருபாபாத்ரம் கௌண்டிந்யகுலபூஷணம் |
ஸமஸ்தாத்மகுணாவாஸம் வந்தே கூரகுலோத்தமம்.

[illegible]

நம: ஸ்ரீசைலநாதாய குந்தீநகரஜந்மநே |
ப்ரஸாதலப்தபரமப்ராப்யகைங்கர்யசாலிநே ||

[illegible]

லோகாசார்யபதாம்போஜ ராஜஹம்ஸாயிதாந்தரம் |
ஜ்ஞாநவைராக்யஜலதிம் வந்தே ஸௌம்யவரம் குரும்.

[illegible]

ஸ்ரீஜிஹ்வாவததீசதாஸமமலமசேஷசாஸ்த்ரவிதம் |
ஸுந்தரவரகுருகருணாகந்தளிதஜ்ஞாநமந்திரம் கலயே.

ஓதுமுடும்பையுலகாசிரியனருள்
ஏதுமறவாதவெம்பெருமான் – நீதி
வழுவாச்சிறுநல்லூர் மாமறையோன்பாதம்
தொழுவார்க்கு வாரா துயர்.

*இந்தத் தனியன்கள் சில புஸ்தகங்களில் அச்சிடப்பட்டிருக்கின்றன.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமத்வரவரமுநயே நம:

விசதவாக்சிகாமணியான மணவாளமாமுனிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# தத்வத்ரய வ்யாக்யாநம்

## அவதாரிகை

"𑌅𑌨𑌾𑌦𑌿𑌮𑌾𑌯𑌯𑌾 𑌸𑍁𑌪𑍍𑌤𑌃" (அநாதிமாயயா ஸுப்த:)[1] என்கிறபடியே அநாத்யசித்ஸம்பந்த நிபந்தனமான அஜ்ஞாநாந்தகாரத்தாலே அபிபூதராய், ஆத்மஸ்வரூபம் ப்ரக்ருதே: பரமாய், ஜ்ஞாநாநந்தமயமாய், பகவதநந்யார்ஹ சேஷமாயிருக்கும்படியை அறியப் பெறுதே, "𑌦𑍇𑌵𑍋𑌹𑌂; 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑍋𑌹𑌂" (தேவோஹம், மநுஷ்யோஹம்)[2] என்று ஜடமான தேஹத்திலே அஹம்புத்தியைப் பண்ணியும், தேஹாதிரிக்தாத்மஜ்ஞானம் பிறந்ததாகில் "𑌈𑌶𑍍𑌵𑌰𑍋𑌹𑌮𑌹𑌂 𑌭𑍋𑌗𑍀" (ஈஶ்வரோஹமஹம் போகீ)[3] என்று ஸ்வதந்த்ரபுத்தியைப்பண்ணியும், சேஷத்வ ஜ்ஞாநமுண்டாய்த்ததாகில் அப்ராப்த விஷயங்களிலே அத்தை விநியோகித்தும், இப்படி "𑌯𑍋𑌨𑍍𑌯𑌥𑌾 𑌸𑌨𑍍𑌤𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌅𑌨𑍍𑌯𑌥𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 । 𑌕𑌿𑌂 𑌤𑍇𑌨 𑌨 𑌕𑍃𑌤𑌂 𑌪𑌾𑌪𑌂 𑌚𑍋𑌰𑍇𑌣𑌾𑌤𑍍𑌮𑌾𑌪𑌹𑌾𑌰𑌿𑌣𑌾 ॥" (யோந்யதா ஸந்தமாத்மாநம்

---

1. மா. உ. 2-21. அநாதிமாய. -அநாதியான ப்ரக்ருதி ஸம்பந்தத்தாலே; ஸுப்த:-உறங்குகிற (ஜ்ஞான சூந்யமான)

2. அஹம்-நான், தேவ:-தேவன்; அஹம்-நான், மநுஷ்ய: - மநுஷ்யன்.

3. கீதை 16. 14. அஹம்-நான், ஈச்வர:-ஈச்வரன், அஹம்-நான், போகீ-போகத்தை அநுபவிப்பவன்.

அந்யதா ப்ரதிபத்யதே, கிம் தேந ந க்ருதம் பாபம் சோ
ரேணாத்மாபஹாரிணா)[1] என்கிறபடியே ஆத்ம ஸ்வரூபத்
தில் அந்யதா ப்ரதிபத்தி ரூபமாய், அகில பாப மூலமான
ஆத்மாபஹாரத்தைப் பண்ணி, அல்பாஸ்திரத்வாதிதோஷ
துஷ்டமான ஶப்தாதி போகைகதத்பரராய்; "𑌵𑌿𑌚𑌿𑌤𑍍𑌰𑌾
𑌦𑍇𑌹𑌸𑌂𑌪𑌤𑍍𑌤𑌿𑌰𑍀𑌶𑍍𑌵𑌰𑌾𑌯 𑌨𑌿𑌵𑍇𑌦𑌿𑌤𑍁𑌮𑍍 । 𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑍇𑌵 𑌕𑍃
𑌤𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑍍 𑌹𑌸𑍍𑌤𑌪𑌾𑌦𑌾𑌦𑌿𑌸𑌂𑌯𑍁𑌤𑌾 ॥" (விசித்ரா தே
ஹஸம்பத்திரீச்வராய நிவேதிதும், பூர்வமேவ க்ருதா ப்ர
ஹ்மந் ஹஸ்தபாதாதிஸம்யுதா)[2] என்கிறபடியே கரண
களேபரவிதுரமாய், போகமோக்ஷஶூந்யமாய், அசிதவிஶே
ஷிதமாய்க் கிடக்கிறதசையிலே பரம தயாளுவான ஸர்வே
ஶ்வரன், ஸ்வசரணகமல ஸமாஶ்ரயணோபகரணமாகக்
கொடுத்த ஶரீரத்தைக் கொண்டு தத்ஸமாஶ்ரயணத்தைப்
பண்ணி யுஜ்ஜீவிக்கலாயிருக்க, அத்தைச் செய்யாதே "அந்
நாள் நீ தந்தவாக்கையின் வழியுழல்வேன்"[3] என்கிறபடி
யே, அதின் வழியே போய், ஆறு நீஞ்சக் கொடுத்த தெப்
பத்தைக் கொண்டு அக்கரை யேறலாயிருக்க நீர்போக்காலே
யொழுகிக் கடலிலே புகுவாரைப் போலே, ஸம்ஸார நிஸ்
தரணத்துக் குடலானவற்றையும், ஸம்ஸரணத்துக்குட
லாக்கி, அநாத்யவித்யா ஸஞ்சித அநந்த புண்ய பாபரூப
கர்மாநுகுணமாக * மாறி மாறிப் பல பிறப்பும் பிறந்து
பிறந்த ஜந்மந்தோறும் துரந்த தாபத்ரய தவாநல தஹ்ய
மாநராய், இப்படி அநாதிகாலம் போரா நிற்கச் செய்தே

---

1. பார.உத்யோ. 41. 34. ய:-எவன், அந்யதா-வேறாக, ஸந்தம்-இருக்கிற, ஆத்மானம்-ஆத்மாவை, அந்யதா-வேறுவிதமாக, ப்ரதிபத்யதே-எண்ணுகிறானோ. (சேஷமான ஆத்மாவை ஸ்வதந்த்ரமாக நினைக்கிறானோ) தேந-அந்த, ஆத்மாபஹாரிணா-ஆத்மாவை அபஹரிக்கிற, சோரேண-திருடனால், கிம்-எந்த, பாபம்-பாபம், ந க்ருதம்-செய்யப்படவில்லை.

2. விஷ்ணுதத்வம், ஹே ப்ரஹ்மன்!-ஓ ப்ராம்மணரே, ஈச்வராய-எம்பெருமானின் பொருட்டு, நிவேதிதும்-த்ரவ்யங்களையும் ஆத்மாவையும் ஸமர்ப்பிக்க ஹஸ்தபாதாதி ஸம்யுதா-கைகால் முதலியவைகளுடன் கூடின, விசித்ரா-ஆச்சரியமான, தேஹஸம்பத்தி:-சரீர அமைப்பானது, பூர்வமேவ-முன்னமேயே, க்ருதா-செய்யப்பட்டது.

3. தி. வா. 3-2-1

யும், அதீதாநாகதமறியாமையாலே, அதிலே ஒரு க்லேஶ மன்றிக்கே கர்ப்ப ஜந்ம பால்ய யௌவந வார்த்தக மரண நரக ரூபாவஸ்தா ஸப்தகத்தை ப்ராபித்து, து:கபரம்பரைகளை யநுபவித்து, இப்படி அநந்த க்லேஶபாஜநமான ஸம்ஸார ஸாகரத்திலே அழுந்திக் கிடந்தலைகிற சேதநருடைய அநர்த்த விஶேஷத்தை யநுஸந்தித்து, இவர்களுடைய உஜ்ஜீவநத்துக்கு க்ருஷிபண்ணிக்கொண்டு போருகிற ஸர்வபூத ஸுஹ்ருத்தான ஸர்வேஶ்வரன். "ஏவம் ஸம்ஸ்ருதி சக்ரஸ்தே ப்ராம்யமாணே ஸ்வகர்மபி: । ஜீவே து:காகுலே விஷ்ணோ: க்ருபா காப்யுபஜாயதே ॥" (ஏவம் ஸம்ஸ்ருதி சக்ரஸ்த்தே ப்ராம்யமாணே ஸ்வகர்மபி: । ஜீவே து:காகுலே விஷ்ணோ: க்ருபா காப்யுபஜாயதே)[1] என்கிறபடியே, தன்னுடைய திருவுள்ளத்திற் பிறந்த அபாரகாருண்யத்தாலே, "ஜாயமாநம் ஹி புருஷம் யம் பஶ்யேந் மதுஸூதந: । ஸாத்விகஸ் ஸ து விஜ்ஞேயஸ் ஸ வை மோக்ஷார்த்தசிந்தக: ॥" (ஜாயமாநம் ஹி புருஷம் யம் பஶ்யேந் மதுஸூதந: । ஸாத்விகஸ்ஸ து விஜ்ஞேயஸ் ஸ வை மோக்ஷார்த்தசிந்தக:)[2] என்கிறபடியே, ஜாயமாநகாலத்திற் பண்ணின விசேஷ கடாக்ஷத்தாலே, நிரஸ்த ரஜஸ்தமஸ்கனாய், ப்ரவ்ருத்த ஸத்வகுணகனாய், முமுக்ஷுவான சேதநனுக்கு தத்வஜ்ஞாநம் பிறந்தாலல்லது மோக்ஷஸித்தியில்லாமையாலே, தத்வஜ்ஞாநம் ஸம்பாத்யமாமளவில், அது ஶாஸ்த்ர ஜந்யமாதல், உபதேஶகம்யமாதலாக வேண்டுகையாலும்; ஶாஸ்த்ரஜந்யமா

---

1: அஹிர்புத்ந்யஸம்ஹிதை-14. ஏவம்-இவ்விதம், ஸம்ஸ்ருதி சக்ரஸ்தே-ஸம்ஸாரமாகிற சக்ரத்திலிருந்து கொண்டும், ஸ்வகர்மபி:-தன் கர்மங்களாலே, ப்ராம்யமாணே-சுழன்று கொண்டும், து:காகுலே-துக்கத்தால் கலங்கினவனுமான, ஜீவே-ஜீவனிடத்தில் விஷ்ணோ:-விஷ்ணுவிற்கு, காபி-ஒருவிதமான, க்ருபா-தயையானது, உபஜாயதே-உண்டாகிறது.

2. பா. மோ. 349-72 ஜாயமானம்-பிறக்கிற, யம்-எந்த, புருஷம், புருஷனை, மதுஸூதந:- மதுஸூதநன், பச்யேத்-கடாக்ஷிக்கிறானோ ஸ து-அவனே, ஸாத்விக:-ஸத்வகுணமுள்ளவனாக, விஜ்ஞேய:-அறியத்தக்கவன். ஸ வை-அவனே, மோக்ஷார்த்த சிந்தக:-மோக்ஷபுருஷார்த்தந்தை சிந்திப்பவன்.

மளவில் "ஶாஸ்த்ரஜ்ஞாநம் பஹுக்லேஶம்" (சாஸ்த்ரஜ்ஞாநம் பஹுக்லேசம்)[1] என்கிறபடியே, பஹுக்லேஶஸாத்யமாகையாலே துஸ்ஸாத்யமாகையாலும், வருந்தி ஸாதிக்கப் பார்த்தாலும் "அநந்தபாரம் பஹு வேதிதவ்யம் அல்பஶ்ச காலோ பஹவஶ்ச விக்நா: |" (அநந்தபாரம் பஹு வேதிதவ்யம் அல்பஶ்ச காலோ பஹவஶ்ச விக்நா: "[2] என்கிறபடியே, சேதநர் மந்தமதிகளுமாய், மந்தாயுஸ்ஸுக்களுமாய், அதுக்கு மேலே விக்நங்களும் அநந்தங்களாயிருக்கையாலே எல்லார்க்கு மொக்க ஸித்திக்கை யரிதாகையாலும்; இனித்தான் ஶாஸ்த்ராப்யாஸத்துக்கு அநதிகாரிகளான ஸ்த்ரீ ஶூத்ராதிகளுக்கு முமுக்ஷுத்வ முண்டானாலும் நிஷ்ப்ரயோஜநமாம்படி யிருக்கையாலும்; உபதேஶகம்யமாமளவில், உக்த தோஷமொன்று மில்லாமையாலும்; இந்த விஶேஷத்தைத் திருவுள்ளம்பற்றி, ஸகல ஶாஸ்த்ர நிபுணராய், ஸகல சேதநோஜ்ஜீவநகாமராய், பரம காருணிகரான பிள்ளை லோகாசார்யர், ஶ்ருதி ஸ்ம்ருதீதிஹாஸ புராணாதிகளிலே, துரவகாஹமாம்படி பரக்கச் சொல்லப்படுகிற சிதசிதீஶ்வர தத்வங்களுடைய ஸ்வரூப ஸ்வபாவ விஶேஷங்களை, அகில சேதநர்க்கும் ஸுக்ரஹமாகவும், ஸுவ்யக்தமாகவும், இப்ரபந்த முகேந வருளிச் செய்கிறார்.

நடுவில் திருவீதிப்பிள்ளை, பட்டர், ஆச்சான்பிள்ளை முதலான பூர்வாசார்யர்களுடைய ப்ரபந்த நிர்மாணத்துக்கும் கருத்திதுவிறே. நிரஹங்காரராய், பரஸம்ருத்திப்ரியராய், க்யாதிலாபாதி நிரபேக்ஷராயிருக்கிறவிவர்கள் பலரும் ப்ரபந்தமிட வேண்டுவானென்? ஒருவரிட்ட ப்ரபந்தத்தை மற்றுமுள்ளவர்கள் பரிபாலநம் பண்ண வமையாதோ? என்னில்; ஆழ்வார்கள் பலரும் ஏககண்டராயருளிச் செய்கையாலே அர்த்தத்துக்கு *ஆப்ததை ஸித்

1. உத்தரகீதை, சாஸ்த்ரஜ்ஞானம்-சாஸ்த்ரங்களாலுண்டாகும் ஜ்ஞானம், பஹுக்லேசம்-அதிக ச்ரமத்தை அளிக்கக்கூடியது.

2. அனந்தபாரம்- (சாஸ்த்ரங்கள்) கரையில்லாதது. வேதிதவ்யம்-அறியவேண்டியது, பஹு-அநேகம், கால: ச-காலமும், அல்ப:-சிறிது, விக்நா: ச-இடையூறுகளோ, பஹவ:-அநேகம்.

* ஆப்ததை - ப்ராமாணிகதை

த்தாப்போலே, ஆசார்யர்கள் பலரும் ஏககண்டமாக அருளிச்செய்த அர்த்தமென்று மந்தமதிகளும் விஶ்வஸிக்கைக்காக. இன்னமும் ஒரொன்றில் அவிஶதமான அர்த்த விஶேஷங்கள் ஒரொன்றிலே விஶதமாயிருக்கும்; அதுக்கடி ஸூக்திவிஶேஷங்களும், ஸங்கோசவிஸ்தரங்களும். இது ஏககர்த்ருகங்களான ப்ரபந்த விஶேஷங்களுக்குமொக்கும்.

---

# சித் ப்ரகரணம்

**1. முமுக்ஷுவான சேதநனுக்கு மோக்ஷமுண்டாம் போது தத்வத்ரய ஜ்ஞாநமுண்டாகவேணும்.**

*(முமுக்ஷுவான சேதநனுக்கு மோக்ஷமுண்டாம் போது தத்வத்ரய ஜ்ஞாநமுண்டாகவேணும்.) முமுக்ஷு ஆகிறான்-மோக்ஷும் இச்சையுடையவன். ஸம்ஸாரவிமோசநத்தில் இச்சையுடையவனென்றபடி: முமுக்ஷுவான என்கையாலே, ஸம்ஸாரநிவ்ருத்தியில் இச்சை ஒருவனுக்குண்டாகையிலுள்ள அருமை தோற்றுகிறது. இந்த இச்சை பிறவாமையிறே, அநாதிகாலம் ஸம்ஸரித்தது. உஜ்ஜிஜீவயிஷுவான ஸர்வேஶ்வரனும் இந்த இச்சை பிறக்குமளவுமிறே பார்த்திருக்கிறது.*

*ஸம்ஸாரத்தைப் பூண்கட்டிக் கொள்ள இச்சிக்கக் கடவ ஆத்மாவுக்கு தந்நிவ்ருத்தியில் இச்சை பிறக்கை துர்லபமிறே. இப்போது, இவர் 'சேதநன்' என்றதும் ஸாபிப்ராயம். அதாவது-சைதந்ய ப்ரயோஜநமுண்டாகத் தொடங்குகிறதும் இப்போதென்கை. அநாதிகாலம் வ்யர்த்தமே போய்த்தது இத்தனையிறே சைதந்யம்; அதாவது-உஜ்ஜீவநத்துக்கு உறுப்பாகாமை. இனித்தான் ஸம்ஸார நிவ்ருத்தியை இச்சிக்கிறது, * நிரஸ்தாதிஶய ஆஹ்லாத ஸுக ஹாவைக லக்ஷணையாகிற பகவத்ப்ராப்திக்கு உறுப்பாகவிறே. * தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமதிறேயுணர்வாவது. ஆத்மப்ராப்திக்கு உறுப்*

பாக ஸம்ஸாரநிவ்ருத்தியை இச்சித்தாலும் விபரீதஜ்ஞாந கார்யமாயித்தனை.

ஆகையால், பகவத்ப்ராப்திக்குவிரோதியான ஸம்ஸாரத்தினுடைய விமோசனத்தில் இச்சையுடையவனான அதிகாரிக்கு, அப்படியிருந்துள்ள (மோக்ஷம்) ஆகிற புருஷார்த்தம் ஸித்திக்கும் (போது தத்வத்ரய ஜ்ஞாநமுண்டாக வேணும்) என்கை.

தத்வ ஜ்ஞாநோத்பத்திக்கு முன்னே முமுக்ஷு ஜநிக்கக் கூடுமோ? என்னில்; "[illegible]" (பரீக்ஷ்ய லோகாந்)[1] "[illegible]" (ஜாயமாநம்)[2] இத்யாதி ஶ்ருதி ஸ்ம்ருதிகளிற் சொல்லுகிற ப்ரக்ரியையாலே கூடும்.

'உண்டாக வேணும்' என்று அபேக்ஷிதத்வம் தோற்ற அருளிச்செய்கையாலே, "[illegible]" (தத்வஜ்ஞாநாந்மோக்ஷலாபம்)[3] என்கிற நியமம் தோற்றுகிறது. 'தத்வ ஜ்ஞாநாந் மோக்ஷம்' என்கிற இது ஸகல ஸித்தாந்த ஸாதாரணமிறே. மோக்ஷத்திலும் தத்வத்திலுமிறே விப்ரதிபத்தியுள்ளது. ஆனால், 'ஜ்ஞாநாந் மோ

---

1. மு. உ. 1-2-12. பரீக்ஷ்ய லோகாந் கர்மசிதாந் ப்ராஹ்மணோ நிர்வேதமாயாத் நாஸ்த்யக்ருத: க்ருதேந, தத் விஜ்ஞாநார்த்தம் ஸ குருமேவாபிகச்சேத், ஸமித்பாணி: ச்ரோத்ரியம் ப்ரஹ்மநிஷ்டம்.

ப்ராஹ்மண: ய:-வேதாத்யயனம் செய்த எந்த பிராமணன், கர்மசிதாந்-கர்மங்களால் ஸம்பாதிக்கப்பட்ட, லோகாந்-லோகங்களை, பரீக்ஷ்ய-மீமாம்ஸைகளைக் கொண்டு நன்கறிந்து, அக்ருத:-நித்யனாகிய புருஷன், க்ருதேந-அநித்யமான கர்மத்தினால், நாஸ்தி-அடையப்பட மாட்டானென்று, நிர்வேதமாயாத்-சிந்தையடைவனோ, ஸ:-அந்தப் பிராம்மணன், தத் விஜ்ஞாநார்தம்-அந்தப் புருஷனை அறியும் பொருட்டு, ச்ரோத்ரியம்-வேதாந்தமறிந்தவனையும், ப்ரஹ்மநிஷ்டம்-பிரம்ம நிஷ்டையை யுடையவனையுமிருக்கிற, குரும் ஏவ-ஆசார்யனையே, ஸமித்பாணி:-ஸமித்தைக் கையிலேந்திக் கொண்டவனாய், அபிகச்சேத்-அடையக் கடவன்.

2. 3-ம் பக்கம் பார்க்க.

3. தத்வஜ்ஞாநாத் - தத்வத்தை அறிவதால், மோக்ஷலாபம்-மோக்ஷமடைதல் (கிட்டுகிறது).

க்ஷம்' என்கிற நியமம் கொள்ளும்போது, "𑌪𑌶𑍁𑌰𑍍𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌃 𑌪𑌕𑍍𑌷𑍀 𑌵𑌾 𑌯𑍇 𑌚 𑌵𑍈𑌷𑍍𑌣𑌵𑌸𑌂𑌶𑍍𑌰𑌯𑌾𑌃 । 𑌤𑍇𑌨𑍈𑌵 𑌤𑍇 𑌪𑍍𑌰𑌯𑌾𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌤𑌦𑍍𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 𑌪𑌰𑌮𑌂 𑌪𑌦𑌮𑍍 ॥" (பசுர் மநுஷ்ய: பக்ஷீ வா யே ச வைஷ்ணவஸம்ச்ரயா: | தேநைவ தே ப்ரயாஸ்யந்தி தத்விஷ்ணோ: பரமம் பதம்)[1] "𑌯𑌂 𑌯𑌂 𑌸𑍍𑌪𑍃𑌶𑌤𑌿 𑌪𑌾𑌣𑌿𑌭𑍍𑌯𑌾𑌂 𑌯𑌂 𑌯𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌾 । 𑌸𑍍𑌥𑌾𑌵𑌰𑌾𑌣𑍍𑌯𑌪𑌿 𑌮𑍁𑌚𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌕𑌿𑌂 𑌪𑍁𑌨𑌰𑍍𑌬𑌾𑌨𑍍𑌧𑌵𑌾 𑌜𑌨𑌾𑌃 ॥" (யம் யம் ஸ்ப்ருசதி பாணிப்யாம் யம் யம் பச்யதி சக்ஷுஷா | ஸ்தாவராண்யபி முச்யந்தே கிம் புநர் பாந்தவா ஜநா:)[2] என்று ஜ்ஞாந யோக்யதையில்லாத திர்யக் ஸ்தாவரங்களுக்கும் வைஷ்ணவ ஸம்பந்தத்தாலே மோக்ஷ ஸித்தியைச் சொல்லுகிற வசனங்களுக்கு வையர்த்த்யம் வாராதோ? என்னில்; வாராது. அவற்றுக்கு முமுக்ஷுத்வம் தானும் இல்லையிறே. இங்கு, 'முமுக்ஷு' ஆன சேதநனுக்கிறே 'மோக்ஷ' ஸித்திக்கு 'தத்வ ஜ்ஞான முண்டாக வேணும்' என்றது. அங்குத் தானும் முமுக்ஷுத்வமும், தத்வ ஜ்ஞாநமும் இரண்டும் இவற்றின் பக்கலின்றிக்கே யிருக்கச் செய்தேயும், இவை யிரண்டாலும் பூர்ணனாயிருப்பானொரு வைஷ்ணவனுடைய அபிமாநமேயிறே கார்ய கரமாகச் சொல்லுகிறது.

ஆகையாலே அபிமாநியானவனுடைய ஜ்ஞான விசேஷத்தைக் கடாக்ஷித்தே, அபிமாநாந்தர்பூதமானவிவற்றுக்கும் ஈச்வரன் கார்யம் செய்கையாலே. 'தத்வ ஜ்ஞாநாந்

---

4. பசுர்மநுஷ்ய: பக்ஷீ வா-பசு, மநுஷ்யன் பக்ஷீ முதலான, யே ச-எவையாலும், வைஷ்ணவஸம்ச்ரயா:-வைஷ்ணவனை ஆச்ரயிக்கின்றனவோ, தே-அவைகள், தேநைவ - அந்த ஸம்பந்தத்தாலேயே விஷ்ணோ:-விஷ்ணுவினுடைய, தத் பரமம் பதம்-அந்தப் பரம பதத்தை, ப்ரயாஸ்யந்தி-அடைகின்றன.

5. பா. ஆ 16. யம் யம்-எதை எதை, பாணிப்யாம்-திருக்கைகளாலே, ஸ்ப்ருசதி-தொடுகிறாரோ, யம் யம்-எதை எதை, சக்ஷுஷா-திருக்கண்களாலே, பச்யதி-பார்க்கிறாரோ, (அவ்வவை) ஸ்தாவராண்யபி-ஸ்தாவரமான போதிலும், முச்யந்தே-மோக்ஷத்தை யடைகின்றன, பாந்தவா ஜநா:-பந்துக்கள், கிம் புந:-மோக்ஷமடைவார்கள் என்பதில் சொல்ல வேண்டியதென்ன?

மோக்ஷம்' என்கிற இது அவ்விடத்திலும் ஸத்வாரகமாக ஸித்திக்கும். தத்வ ஜ்ஞாநமென்றதே 'தத்வ த்ரய ஜ்ஞாநம்' என்கையாலே தத்வங்களை அதிகமாகவும் ந்யூநமாகவும் கொள்ளுகிற பாஹ்ய குத்ருஷ்டி மதங்கள் அர்த்தாத் ப்ரதிக்ஷிப்தங்கள்.

இவர் தாம் 'தத்வ த்ரயம்' என்று நிர்ணயிக்கைக்கு ப்ரமாணமென்? என்னில்; நிர்தோஷ ப்ரமாணமான வேதாந்தம். "ஹொக்தா ஹொ஗்யம் ப்ரெரிதாரம் ச மத்வா" (போக்தா போக்யம் ப்ரேரிதாரம் ச மத்வா)[1] என்று போக்த்ரு சப்தத்தாலும், போக்ய சப்தத்தாலும், ப்ரேரயித்ரு சப்தத்தாலும் சித் அசித் ஈச்வர தத்வங்கள் மூன்றையுமிறே சொல்லுகிறது. ஆகையாலே, "வேதாந்த ப்ரதிபாத்யம் தத்வத்ரயமுமே' என்று நிஶ்சயித்து, 'மோக்ஷமுண்டாம்போது தத்வ த்ரய ஜ்ஞாநமுண்டாகவேணும்' என்கிறார்.

ஆனால், "தமெவம் விஷாநம்ருத இஹ ஹவதி। நாந்யஃ வந்தா அயநாய விஷ்யதெ।" (தமேவம் வித்வாநம்ருத இஹ பவதி। நாந்ய: பந்த்தா அயநாய வித்யதே)[2] என்று வேதாந்தங்கள் பகவத் தத்வ ஜ்ஞாநமொன்றுமே மோக்ஷ ஸாதநமென்று நிற்க, தத்வாந்தர பரிஜ்ஞாநத்தையும் இவர் மோக்ஷஸாதநமாக அருளிச் செய்வானென்? என்னில், பகவத் தத்வத்தை அறியும்போது ஸகல சேதநாசேதந விலக்ஷணமாகவும், இவற்றுக்குக் காரணமாகவும், வ்யாபகமாகவும், தாரகமாகவும், நியாமகமாகவும் சேஷியாகவும் அறிய வேண்டுகையாலும், தத்வாந்தரங்களை யறியாதபோது இப்படி அறிய விரகில்லாமையாலும் 'தத்வ த்ரய ஜ்ஞானமுண்டாக வேணும்' என்னக் குறையில்லை. "ஹொ

---

1. ச்வே, 1. 12. போக்தா-அநுபவிக்கிற சேதநனையும், போக்யம்-அநுபவிக்கப் படுகிற அசித்தையும், ப்ரேரிதாரம் ச-அநுபவிக்கும்படி செய்கிற ஈச்வரனையும், மத்வா-நினைத்து,

2. புரு. தம்-அப்படிப்பட்ட ஈச்வரனை, ஏவம் வித்வாந்-இவ்விதமாகத் தெரிந்து கொண்ட ஜ்ஞாநி, இஹ - இந்த லோகத்தில், அம்ருத: பவதி-முக்தனாகிறான். அந்ய:-வேறொரு, பந்தா:-வழியானது, அயநாய-மோக்ஷத்தின் பொருட்டு, ந வித்யதே-இல்லை.

𑌕𑍍𑌤𑌾 𑌭𑍋𑌗𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑍇𑌰𑌿𑌤𑌾𑌰𑌂 𑌚 𑌮𑌤𑍍𑌵𑌾" (போக்தா போக்யம் ப்ரேரிதாரம் ச மத்வா) [1] "𑌪𑍃𑌥𑌗𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑍇𑌰𑌿𑌤𑌾𑌰𑌂 𑌚 𑌮𑌤𑍍𑌵𑌾 𑌜𑍁𑌷𑍍𑌟𑌸𑍍𑌤𑌤𑌸𑍍𑌤𑍇𑌨𑌾𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌮𑍇𑌤𑌿" (ப்ருதகாத்மானம் ப்ரேரிதாரம் ச மத்வா ஜுஷ்டஸ் ததஸ் தேநாம்ருதத்வமேதி) [2] என்கிற ஶ்ருதிக்கும் ஹ்ருதயம் இதுவிறே. இங்ஙனன்றாகில், 'தமேவம் வித்வாந்' இத்யாதி ஶ்ருதியோடு இதற்கு விரோதம் வரும். ஆகையால், இந்த ஶ்ருதிச்சாயையாலே இவரும் அருளிச்செய்தாராகையாலே வேதாந்த விரோத ப்ரஸங்கமே இல்லை.

தத்வத்ரயந்தான் ஏதென்னும் ஆகாங்க்ஷையிலே அருளிச் செய்கிறார்;

2. தத்வ த்ரயமாவது— சித்தும், அசித்தும், ஈஶ்வரனும்.

(தத்வத்ரயமாவது— சித்தும், அசித்தும், ஈச்வரனும்) என்று. 'சித்' ஆவது-சைதந்யாதாரமான வஸ்து. 'அசித்' ஆவது-சைதந்ய அநாதாரமான வஸ்து. 'ஈஶ்வரன்' ஆகிறான்-யோக வைசேஷிகாதி தந்த்ரத்திலுள்ளார் சொல்லுகிற கணக்கிலே ஒரு புருஷ விசேஷமன்றிக்கே, வேதாந்திகள் சொல்லுகிற சிதசித்நியந்தா. "𑌕𑍍𑌷𑌰𑌂 𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌮𑌮𑍃𑌤𑌾𑌕𑍍𑌷𑌰𑌂 𑌹𑌰𑌃 𑌕𑍍𑌷𑌰𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌾𑌵𑍀𑌶𑌤𑍇 𑌦𑍇𑌵 𑌏𑌕𑌃 ॥" (க்ஷரம் ப்ரதாநமம்ருதாக்ஷரம் ஹர: க்ஷராத்மாநாவீசதே தேவ ஏக:) [3] "𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌪𑌤𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑍇𑌶𑌃"

---

1. 8-ம் பக்கம் பார்க்க.

2. ச்வே. 1-6. ஆத்மாநம்-ஜீவாத்மாவையும், ப்ரேரிதாரம்ச-அநுபவிக்கும்படி செய்கிற ஈச்வரனையும், ப்ருதக் மத்வா-விலக்ஷண ஸ்வபாவமுள்ளவர்களாக உள்ளபடி அறிந்து, தேந-அந்த ஜ்ஞாநத்தினால் ப்ரீதியடைந்த பரமாத்மாவினால், ஜுஷ்ட:-ப்ரீதியினால் விஷயீகரிக்கப் பட்டவனாய், தத:-பிறகு, அம்ருதத்வம்-மோக்ஷத்தை, ஏதி- அடைகிறான்.

3. ச்வே. 1-10 ப்ரதாநம்- பிரகிருதியானது க்ஷரம்-நசிக்கக் கூடியதால் க்ஷரமென்று சொல்லப்படுகிறது, ஹர:-ஜீவன், அமிருதாக்ஷரம்- மரணதர்மமில்லாமையால் அக்ஷரனென்று சொல்லப்படுகிறான், ஏக: தேவ:-ஸர்வேச்வரனான ஸ்ரீமந்நாராயணனொருவனே, க்ஷராத்மாநௌ-அந்த பிரகிருதியையும், ஜீவனையும், ஈசதே - நியமனஞ்செய்கிறான்.

(ப்ரதாந க்ஷேத்ரஜ்ஞ பதிர் குணேச:)[1] என்னக் கடவதிறே.

உத்தேசக்ரமத்திலே, தத்வத்ரயத்தினுடையவும் ஸ்வரூபஸ்வபாவவிசேஷங்களை உபபாதிப்பதாகத் திருவுள்ளம் பற்றி, ப்ரதமம் சித்-தத்வத்தை உபபாதிக்க உபக்ரமிக்கிறார்;

### 3. சித்தென்கிறது- ஆத்மாவை.

(சித்-என்கிறது ஆத்மாவை) என்று. நடுவிற்றிருவீதிப் பிள்ளை பட்டரும், ஆச்சான் பிள்ளையும் முதலான ஆசார்யர்கள் தத்வத்ரயமருளிச்செய்கிறவிடத்தில், அசிதுபக்ரமமாக அருளிச் செய்தார்கள். இவர் சிதுபக்ரமமாக அருளிச்செய்தார். இதுக்குக் கருத்து- அசித் தத்வம் ஹேயதயா ஜ்ஞாதவ்யமாகையாலும், ஈச்வரன் உபாதேயதயா ஜ்ஞாதவ்யனாகையாலும், இப்படி இரண்டு தத்வத்தையும் அறிகைக்கு அதிகாரியான சேதநனுடைய ஸ்வரூபம் தன்னை முதலிலே அறிந்து கொள்ள வேணுமிறே என்று.

அவர்கள் தானப்படியருளிச்செய்வானென்? என்னில்; ஆத்மாவினுடைய ப்ரக்ருதே: பரத்வஜ்ஞாநம் ப்ரக்ருதியை அறியாதபோது கூடாமையாலே, முந்துற ப்ரக்ருதிதத்வத்தையறிந்து, அநந்தரம் தத்வ்யதிரிக்தனாய் ததந்தர்வர்த்தியான ஆத்மாவை அறிந்து, அநந்தரம் ஆத்மாவுக்கு அந்தர்யாமியாய் சரீரத்துக்கு ஆத்மாவைப்போலே உபயத்துக்கும் அபிமாநியாயிருக்கிற பரமாத்மாவினுடைய ஸ்வரூபத்தை அறிகை புத்த்யாரோஹக்ரமமாகையாலே அருளிச்செய்தார்கள்.

அசிதுபக்ரமமாகச் சொல்லுகிற இது, "அந்நமயம்" தொடங்கி "ஆநந்தமயன்" அளவும் ஆரோஹித்த ச்ருதிமர்யாதைக்குச் சேரும். சிதுபக்ரமமாகச் சொல்லுகிற இது, "ஹொக்தா ஹொமுஂ வெுரிதாரஂ" (போக்தா போக்

1. ச்வே, 6-16. ப்ரதாந, க்ஷேத்ரஜ்ஞ, பதி:-அசேதநத்துக்கும், ஆத்மாவுக்கும், சேஷியாயிருக்கும், குணேச:-குணங்களுக்கும் நியாமகனான ஸர்வேச்வரன்.

யம் ப்ரேரிதாரம்) இத்யாதி ஶ்ருதிக்குச்சேரும்; ஆகையால், இரண்டு க்ரமமும் வேதாந்த ஸித்தம். "விஃவிதீஶ்வர தத்ஸ்வ ஹாவ" (சிதசிதீஶ்வரதத்ஸ்வபாவ) [1] என்று ஆளவந்தாரும், "அஶேஷவிஃவி஡ஸ்துஶேஷிணே" (அஶேஷ சித சித்வஸ்துஶேஷிணே) [2] என்று பாஷ்யகாரரும் அருளிச்செய்த வசநங்கள் உபய கோடியிலும் சேரும். எங்ஙனேயென்னில்; சிதுபக்ரம யோஜனைக்குத் தானே ஸ்வரஸமாயிருந்ததிறே. அசிதுபக்ரம யோஜனையில் வந்தால் க்ரமவிவக்ஷயா அன்று அவர்களப்படியருளிச்செய்தது; ஸமஸ்தபதமாக அருளிச்செய்கையாலே. ஸமாஸத்தில் அப்யர்ஹிதமாதல், அல்பாச்தரமாதல் முற்படக்கடவதென்கிற ந்யாயத்தைப் பற்ற அல்பாச்தரமான சிச்சப்தம் முன்னாக அருளிச் செய்தார்களித்தனை. அப்யர்ஹிதனை ஈஶ்வரன்றன்னை முதலிலெடாதே, சிச் சப்தத்தாலே சேதநனைச் சொல்லிற்று, "அல்பாச்தரம் பூர்வம்" (அல்பாச்தரம் பூர்வம்) [3] என்கிற அநுஶாஸநபலத்தாலே. இப்படி இரண்டு க்ரமமும் வேதவைதிக பரிக்ருஹீதமாகையாலே, இரண்டும் முக்யமென்று கொள்ளக் குறையில்லை.

சிச்சப்தம், "ப்ரேக்ஷோபலப்திஶ்சித் ஸம்வித் ப்ரதிபத் ஜ்ஞப்திசேதநா:" (ப்ரேக்ஷாபலப்திஶ்சித்ஸம்வித் ப்ரதிபத்ஜ்ஞப்திசேதநா:) [4] என்று, ஜ்ஞாநவாசி சப்தங்களோடே ஸஹபடிதமாகையாலும், ஜ்ஞாநாஶ்ரய வஸ்துவில் இதுக்கு ப்ரஸித்தி ப்ராசுர்யமில்லாமையாலும், "க்ஷராத்மாநாவீஶதே தேவ ஏக:" (க்ஷராத்மாநாவீஶ

---

1. ஸ்தோ. 4, சித், அசித், ஈச்வர, தத்ஸ்வபாவ-சித்து, அசித்து ஈச்வரன்—அவற்றின் ஸ்வபாவம்.

2. வே-ஸ. 1. அசேஷ, சித், அசித், வஸ்து, சேஷிணே-எல்லா விதமான சித்துக்கும் அசித்துக்கும் சேஷியானவனுக்கு.

3. அஷ். 2-2-34. அல்பாச் தரம் பூர்வம்-குறைந்த அச்செழுத்துக்களையுடைய பதம் (ஸமாஸத்தில்) முதலில் வரும்.

4, நாமலிங். ப்ரேக்ஷோபலப்திச்சித் ஸம்வித் ப்ரதிபத் ஜ்ஞப்தி சேதநா:-ப்ரேக்ஷா, உபலப்தி:, சித், ஸம்வித், ப்ரதிபத், ஜ்ஞப்தி, சேதநா—ஆகிய பதங்கள் புத்தியைக் குறிக்கின்றன.

தே தேவ ஏக:)[1] "ய ஆத்மாநமந்தரோ யமயதி யமாத்மா ந வெத, யஸ்யாத்மா ஶரீரம்" (ய ஆத்மாநமந்தரோ யமயதி யமாத்மா ந வேத யஸ்யாத்மா ஶரீரம்)[2] "ஆத்மா ஶுத்தோ‌க்ஷர:" (ஆத்மா ஶுத்தோக்ஷர:)[3] "ஆத்மா ஜ்ஞாநமயோ‌மல:" (ஆத்மா ஜ்ஞாநமயோமல:)[4] என்று, இப்படி ஶ்ருதி ஸ்ம்ருதிகளிலே பல இடங்களிலும் சொல்லுகை யாலே, ஆத்மஶப்தத்துக்கு ஜீவவிஷயத்தில் ப்ரஸித்தி ப்ராசுர்யமுண்டாகையாலும். "சித் என்கிறது-ஆத்மாவை" என்று ஸ்புடமாக அருளிச் செய்கிறார்.

இனி, இந்த ஆத்மாவினுடைய ஸ்வரூபமிருக்கும்படி எங்ஙனே? என்கிற சங்கையிலே, ஆத்மஸ்வரூபலக்ஷணத்தை அருளிச்செய்கிறார்;

**4.** **ஆத்மஸ்வரூபம் "சென்றுசென்று பரம்பரமாய்"[5] என்கிறபடியே, தேஹேந்த்ரியமந: ப்ராண புத்தி விலக்ஷணமாய், அஜடமாய். ஆநந்தரூபமாய், நித்யமாய், அணுவாய், அவ்யக்தமாய், அசிந்த்யமாய், நிரவயவமாய், நிர்விகாரமாய், ஜ்ஞாநாஶ்ரயமாய், ஈஶ்வரனுக்கு நியாம்யமாய் தார்யமாய், ஶேஷமாயிருக்கும்.**

(ஆத்மஸ்வரூபம் "சென்றுசென்று பரம்பரமாய்") என்று தொடங்கி. ஶ்ருதி ஸ்ம்ருத்யாதிகளிலே ஒன்றைச் சொல்லலாயிருக்க, இப்போது ஆழ்வாரருளிச்செய்த சந்தையை எடுத்து, தத்வப்ரதிபாதகங்களான ஶ்ருத்யாதிகளிலுங்காட்டில் தத்வதர்ஶிகளில் ப்ரதாநரான ஆழ்வாரு

1. 9-வது பக்கம் பார்க்க.

2. ஸுபா-உப. ய:-எவன், அந்தர:-அந்தர்யாமியாய், ஆத்மாநம்-ஜீவனை, யமயதி-நியமிக்கிறானோ, யம்-எவனை, ஆத்மா-ஜீவன், ந வேத-அறியவில்லையோ, யஸ்ய-எவனுக்கு, ஆத்மா-ஜீவன், சரீரம்-சரீரமோ.

3. வி. பு. 2-13-71. ஆத்மா-ஜீவன், சுத்த:-சுத்தன், அக்ஷர:-விகாரமில்லாதவன்.

4. வி. பு. 6-7-26. ஆத்மா-ஜீவன், ஜ்ஞாநமய:-ஜ்ஞான ஸ்வருபன், அமல:-பரிசுத்தன்.

5, தி-வா. 8-8-5

டைய வசநமே தத்வ நிர்ணயத்துக்கு முக்யப்ரமாண மென்று தோற்றுகைக்காக. "விதயஶ்ச வைதிகாஸ் த்வதீய கம்பீரமநோநுஸாரிண:" (விதயஶ்ச வைதிகாஸ் த்வதீயகம்பீரமநோநுஸாரிண:)[1] என்றிறே பரமாசார்யருமருளிச்செய்தது. ஸ்வரூபமாவது-ஸ்வம்மானரூபம்: அதாவது—அஸாதாரணாகாரம். சென்று சென்று பரம்பரமாய் என்றது-போய்ப்போய் ஒன்றுக்கொன்று மேலாயிருக்கிற அங்கமய ப்ராணமய மநோ மயங்களுக்கு அவ்வருகாய் என்றபடி. (தேஹேந்த்ரியமந:ப்ராணபுத்தி விலக்ஷணமாய்) என்கிற இடத்தில், புத்திஶப்தத்தால் - மநஸ்ஸநுக்ருஹீதமான அந்த:கரணத்தைச்சொல்லுகிறதோ? ஜ்ஞாநத்தைச் சொல்லுகிறதோ? என்னில்; இவருக்கு இங்கு விவக்ஷிதம் ஜ்ஞாநமாகவேணும்; தத்வசேகரத்தில் தேஹாதிவைலக்ஷண்யமருளிச் செய்கிறவிடத்தில் அப்படியருளிச்செய்கையாலே. "தேஹேந்த்ரியமந:ப்ராணதீப்யோऽந்ய:" (தேஹேந்த்ரியமந:ப்ராணதீப்யோந்ய:)[2] என்றிறே ஆளவந்தாரும் அருளிச் செய்தது.

உத்தேஶம், லக்ஷணம், பரீக்ஷை என்று மூன்று வகைப்பட்டிறே தத்வநிர்ணயக்ரமமிருப்பது; அதில் ('சித்தும சித்துமீஶ்வரனும்') என்று தத்வ த்ரயத்தையுமுத்தேஶித்து, உத்தேஶக்ரமத்திலே அவற்றினுடைய ஸ்வரூபஶோதநம் பண்ணுவதாக நினைத்து. ப்ரதமத்திலே சிச்சப்தோத்திஷ்டனான ஆத்மாவினுடைய ஸ்வரூபஶோதநம் பண்ணுவதாக உபக்ரமித்து, (தேஹேந்த்ரியமந:ப்ராணபுத்தி விலக்ஷணமாய்) என்று தொடங்கி (ஶேஷமாயிருக்கும்) என்னுமளவாக ஸ்வரூப லக்ஷணத்தை அருளிச் செய்தார். அத்தைப் பரீக்ஷிக்கிறார் மேல்.

---

1. ஸ்தோ. 20. வைதிகா: விதயஶ்ச—ஸ்வதந்த்ரமான சாஸ்த்ரங்களினுடைய விதிகளும், த்வதீய—தேவரீரை ஆச்ரயித்தவர்களுடைய, கம்பீர-கம்பீரமான, மந:—மநஸ்ஸை, அநுஸாரிண:—பின் செல்லாநின்றன.

2. ஆத்மஸித்தி. தேஹ, இந்த்ரிய, மந:, ப்ராணதீப்ய:—சரீரம், இந்த்ரியங்கள், மனது, ப்ராணன், புத்தி— இவைகளைக்காட்டிலும் அந்ய:—வேறுபட்டது.

அதில் ப்ரதமத்திலே ஆத்ம ஸ்வரூபத்தினுடைய தேஹாதி வைலக்ஷண்யத்தை சோதிப்பதாக தஜ்ஜிஜ்ஞாஸுக்களுடைய ப்ரச்நத்தை அநுபாஷிக்கிறார்;

5. ஆத்ம ஸ்வரூபம் தேஹாதி விலக்ஷணமானபடியென்? என்னில்;

(ஆத்மஸ்வரூபம் தேஹாதிவிலக்ஷணமானபடியென்? என்னில்) என்று. இதுதன்னை தத்வசேகரத்தில் இவர் தாமே விஸ்தரேண அருளிச்செய்தார்.

"தேஹம் அநேகாவயவஸங்காதாத்மகம் என்னுமிடம் ஸித்தம்; அதில் எல்லா அவயவங்களுக்கும் சைதந்யமுண்டாகில், அநேகசேதநோபபத்தி ப்ரஸங்கிக்கும். அவயவங்களுக்கு அந்யோந்யம் விவாதநியமமும், அவற்றில் மமதாபுத்தியும் மமதாவ்யவஹாரமும் கூடாது. ஓரவயவத்துக்கே சைதந்யங்கொள்ளில்; அது விச்சிந்நமானால் அவயவாந்தரம் அது அநுபவித்தத்தை ஸ்மரிக்கக்கூடாது. பின்பு, அஹம் புத்தி வ்யவஹாரங்களும், மமதாபுத்தி வ்யவஹாரங்களும் தவிரவேணும்; ஸர்வசரீரவ்யாபியான ஸுக துःகாநுபவமும் கூடாது. அவயவஸங்காதாத்மகமன்று சரீரம்; அவயவி. அதிலே சைதந்யமென்னவுமொண்ணாது; உபலம்பாநுபபத்திகளில்லாமையாலே அவயவிஸ்வீகாரம் அநுபபந்நமாகையாலே. "ஸ்தூலொஹம் மனுஷ்யோஹம்; ஸ்ரூஜ்யோஹம்; யுவைவொஹம் ஸபலோஹம்; மம ஶரீரம்" (கிஞ்ச, பாலதேஹோஹம் மந்தஜ்ஞாநः, யுவதேஹோஹம் பஹுஜ்ஞாநः, மம ஶரீரம்)[1] என்று, ஶரீராஹமர்த்தங்களில் பிறக்கிற பேத ப்ரதிபத்தியும், பேத வ்யவஹாரமும் கூடாது; (ஶரீரமாத்மா—மமாயமாத்மா) என்கிற விடத்திற் போலே அமுக்யம் என்ன வொண்ணாது; முக்யே பாதகமில்லாமையால். அன்றிக்கே, அஹம்-புத்திக்கு ஶரீரம் விஷயமென்று கொண்டாலும், ஶ்ருதியாலும் ஶ்ருத்

1. பாலதேஹோஹம்-பாலதேஹத்தையுடைய நான், மந்தஜ்ஞாநः-மந்த புத்தியுடையவன், யுவதேஹோஹம்-யௌவன சரீரத்தையுடைய நான், பஹுஜ்ஞாநः-மிகுந்த ஜ்ஞானமுடையவன், மம சரீரம்-என்னுடைய சரீரம்.

யர்த்தாபத்திகளாலும் தேஹாதிரிக்தனாய், தேஹாந்தர பரிக்ரஹ யோக்யனான ஆத்மா ஸித்தன். பாஹ்யேந்த்ரியங்களும் ஆத்மாவாக மாட்டாது; ஒருவனே ஸர்வேந்த்ரிய விஷயங்களையும் அறிகையால். இப்படிக் கொள்ளாதபோது "யாவனொருவன் நான் இவ்வர்த்தத்தைக் கண்டேன்; அந்த நானே ஸ்பர்சியாநின்றேன்" என்கிற ப்ரதிஸந்தாநமும் கூடாது. சக்ஷுஸ்ஸே ஆத்மாவாகில், அந்தன் ரூபத்தை ஸ்மரியாதொழியவேணும். ச்ரோத்ரமே ஆத்மாவாகில், பதிரன் சப்தத்தை ஸ்மரியாதொழியவேணும். இப்படி மற்றை இந்த்ரியங்களிலும் கண்டுகொள்வது. அந்த:கரணமும் ஆத்மாவாகமாட்டாது; ஸ்மர்த்தாவினுடைய ஸ்மரணாதி கார்யங்களுக்கு கரணமாக கல்பிதமாகையாலே. இது தானே ஸ்மரிக்கிறது என்னவொண்ணாது; ஸ்மரணத்துக்குக் கரணமில்லாமையாலே. கரணமுமிது தானே எனவொண்ணாது; விருத்தமாகையாலே. வேறேயொன்று கரணமென்னில்; அது பாஹ்யகரணமாகில், அதில்லாதவனுக்கு ஸ்ம்ருதி கூடாது; ஆந்தர கரணமாகில் ஆத்மாவுக்கு மநஸ்ஸென்று பேரிட்டதாய்விடும். ஆந்தரகரணம் அநபேக்ஷிதமாகில் இந்த்ரியார்த்தஸம்பந்தமுண்டான போதெல்லாம் ஜ்ஞாநம் பிறக்கவேணும். ஆகையால், மநஸ்ஸும் ஆத்மாவாக மாட்டாது. ப்ராணங்களும் ஆத்மாவாக மாட்டாது; ஸங்காதரூபங்களாகையாலே. தேஹம் ஆத்மாவென்கிற பக்ஷத்துக்குச் சொன்ன தூஷணங்கள் இங்கும் துல்யம். ஜ்ஞாநமும் ஆத்மாவாகமாட்டாது; எனக்கு ஜ்ஞாநம் பிறந்தது, நசித்தது என்று க்ஷணிகமுமாய், ஆத்மதர்மமுமாய்த் தோற்றுகையாலே ஸ்த்திரனாயிருப்பானொராத்மா உண்டென்னுமிடம் 'நேற்றுக் கண்ட நானே இன்றும் காணாநின்றேன்' என்கிற ப்ரத்யபிஜ்ஞையாலே ஸித்தம்"[1] என்று இப்படி விஸ்தரேண அருளிச்செய்தாரிறே.

இப்படி தனித் தனியே எடுத்துக் கழிக்குமளவில் க்ரந்த விஸ்தரமாமென்று மந்தமதிகளுக்கும் ப்ரதிபத்தி

1. தத்வசேகரம் 3.

யோக்யமாம்படி, தேஹாதிகளை ஸமுச்சித்யோபாதாநம் பண்ணி, அவற்றிற்காட்டில் ஆத்மாவுக்குண்டான வைல க்ஷண்யத்தைச் சில யுக்திவிசேஷங்களாலே ஸங்க்ரஹமாக அருளிச்செய்கிறார்;

6. தேஹாதிகள் "என்னுடைய தேஹாதிகள்" என்று ஆத்மாவில் வேறுபட்டுத் தோற்றுகையாலும், "இதம்" என்று தோற்றுகையாலும். ஆத்மா நான் என்று தோற்றுகையாலும், இவை ஒருக்கால் தோற்றி ஒருக்கால் தோற்றாமையாலும், ஆத்மா எப்போதும் தோற்றுகையாலும், இவை பலவாகை யாலும், ஆத்மா ஒருவனாகையாலும் ஆத்மா இவ ற்றில் விலக்ஷணனென்று கொள்ளவேணும்

(தேஹாதிகள்) என்று தொடங்கி. (தேஹாதிகள் "என்னுடைய தேஹாதிகள்" என்று ஆத்மாவில் வேறு பட்டுத் தோற்றுகையாலும், "இதம்" என்று தோற்று கையாலும், ஆத்மா நான் என்று தோற்றுகையாலும்). அதாவது—தேஹாதிகளானவை என்னுடைய தேஹம், என்னுடைய இந்த்ரியம், என்னுடைய மநஸ்ஸு. என்னு டைய ப்ராணன், என்னுடைய புத்தி என்று மமதாபுத்திக் கும், மமதாவ்யவஹாரத்துக்கும் விஷயமாய்க்கொண்டு, அஹமர்த்தபூதனான ஆத்மாவுக்கு அந்யமாய்த் தோற்று கையாலும்; அப்படியே, "இதுதேஹம், இது இந்த்ரியம்" என்று இதம்புத்தி வ்யவஹாரவிஷயமாய்க் கொண்டு, அஹமர்த்த வ்யதிரிக்தமாய்த் தோற்றுகையாலும்; அங்ங னன்றிக்கே. ஆத்மா அஹமர்த்தபூதனாய்க் கொண்டு தோற் றுகையாலும் என்றபடி. (இவை ஒருக்கால் தோற்றி ஒருக் கால் தோற்றாமையாலும், ஆத்மா எப்போதும் தோற்று கையாலும்). 'இவை' என்று தேஹேந்த்ரியாதிகளை பராமர் ஶிக்கிறது. தேஹம் ஒருக்கால் தோற்றி ஒருக்கால் தோற்றா மையாவது—ஜாக்ரத்தஶையில் "ஸ்தூலோஹம்; க்ருஶோ ஹம்" (ஸ்த்தூலோஹம், க்ருஶோஹம்)[1] இத்யாதிக

1. அஹம்-நான், ஸ்த்தூல:-பெருத்தவன், அஹம்-நான், க்ருச:- இளைத்தவன்.

ளாலே, அஹம் புத்திவ்யவஹாரவிஷயமாய்க் கொண்டு ஆத்மத்வேந தோற்றியிருந்ததேயாகிலும், ஸுஷுப்தி தசையில் அப்படி தோற்றுதிருக்கை.

ஆத்மா எப்போதும் தோற்றுகையாவது—"உறங்குவதுக்கு முன்பு இவையெல்லாம் அறிந்திருந்த நான் உறங்குகிறபோது என்னுடம்புமுட்பட அறிந்திலேன்" என்று ப்ரத்யபிஜ்ஞைபண்ணுகையாலே, உபயாவஸ்த்தையிலும் தேஹாதந்யனாயிருப்பானொரு ஆத்மா உண்டென்று தோற்றுகை.

அதவா, ஜந்மமரணபாக்த்வத்தாலே தேஹம் ஒருக்கால் தோற்றி ஒருக்கால் தோற்றுமையாலும், "நான் ஜந்மாந்தரத்தில் பண்ணின அதினுடைய பலமிது" என்கிற லோகவ்யவஹாரத்தாலே, ஆத்மா ஜந்மமரணநிரஹிதனாய்க் கொண்டு எப்போதும் தோற்றுகையாலும் என்னவுமாம்.

அப்படியே, சக்ஷுராதிரூபேண தோற்றியிருக்கிற இந்த்ரியங்கள், அந்தபதிராத்யவஸ்த்தைகளில் தோற்றுமையாலும்; ஸங்கல்பாதி ஹேதுத்வேந தோற்றி இருக்கிற மநஸ்ஸு, ஒரு காலவிஶேஷங்களிலே மூடமாய்க் கொண்டு ஒன்றும் தோற்றுமையாலும்; உச்வாஸநிஶ்வாஸாதிகளாலே தோற்றியிருக்கிற ப்ராணன்கள், ஒரோ மோஹதசைகளிலே நெற்றியைக் கொற்றிப்பார்க்க வேண்டும்படி தோற்றுமையாலும்; விஷயக்ரஹணவேளையில் ப்ரகாஶிக்கிற ஜ்ஞாநம் விஷயக்ரஹணாபாவதசையில் தோற்றுமையாலும்; இப்படியன்றிக்கே, "நான் கண்ணும் செவியும் முன்பு விளங்கியிருந்தேன், இப்போது அந்தனும் பதிரனுமானேன்; முன்பு என்னுடைய மநஸ்ஸு விஶதமாயிருக்கும், இப்போதொன்றும் தெரிகிறதில்லை; நானப்போது நிஷ்ப்ராணனாய்க்கிடந்தேன், இப்போது ஸப்ராணனானேன்; எனக்கப்போது ஜ்ஞாநமுண்டாயிருந்தது, இப்போது நசித்தது" என்று இவை தோற்றினபோதோடு தோற்றுதபோதோடு வாசியற ஆத்மா எப்போதும் தோற்

றுகையாலும், இவை பல்வாகையாலும், ஆத்மா ஒருவனு கையாலும் மீண்டும் இவையென்று தேஹாதிகளை பராமர்ஶிக்கிறது.

தேஹத்துக்குப் பன்மை அநேகாவயவ ஸங்காதாத்மகமாகையாலே. இந்த்ரியங்களுக்குப் பன்மை சக்ஷுஶ்ஶ்ரோத்ராதிவ்யக்திபேதத்தாலே.

மநஸ்ஸுக்குப் பன்மை மநோபுத்திசித்தாஹங்காரரூபமான பேதத்தாலே. ப்ராணனுக்குப் பன்மை, ப்ராணாபாநாதிபேதத்தாலே. புத்திக்குப்பன்மை, கடஜ்ஞாந படஜ்ஞாநாதிபேதத்தாலே. இப்படி, தேஹாதிகளோரொன்றே பலவாகையாலும்; இங்ஙனன்றிக்கே, அஹம்புத்தி வ்யவஹாரார்ஹனான ஆத்மா ஒருவனாகையாலும், ஆத்மா இவற்றில் விலக்ஷணனென்று கொள்ளவேணும். அதாவது இப்படி தேஹாதிப்ரகாரத்தையும், ஆத்மாவினுடைய ப்ரகாரத்தையும் நிரூபித்தால், ஆத்மா தேஹாதிகளானவற்றில் வேறுபட்டிருப்பானொருவனென்று அவஶ்யம் அங்கீகரிக்க வேணுமென்கை.

இப்படி யுக்தியாலே ஸாதிதமான அர்த்தத்தை ஶாஸ்த்ரபலத்தாலே த்ருடீகரிக்கிறார்;

**7. இந்த யுக்திகளுக்குக் கண்ணழிவுண்டேயாகிலும், ஶாஸ்த்ர பலத்தாலே ஆத்மா தேஹாதிவிலக்ஷணனாகக் கடவன்.**

(இந்த யுக்திகளுக்குக் கண்ணழிவுண்டே யாகிலும், ஶாஸ்த்ரபலத்தாலே ஆத்மா தேஹாதி விலக்ஷணனாகக் கடவன்) என்று. 'கண்ணழிவுண்டேயாகிலும்' என்கையாலே ஸர்வதா இதுக்குக் கண்ணழிவு சொல்ல ஒருவர்க்கும் போகாது; அதுதான் உண்டாய்த்தாகிலும் இவ்வர்த்தம் ஶ்ருதி ஸ்ம்ருத்யாதி ஸகல ஶாஸ்த்ர ஸித்தமாகையாலே, ஶாஸ்த்ர பலம் தானே இவ்வர்த்தத்தை ஸாதிக்கும் என்று கருத்து. "பஞ்சவிம்ஶோऽயம் புருஷ:" (பஞ்சவிம்சோயம் புரு

𑌷𑌃)[1] "𑌪𑌞𑍍𑌚𑌵𑌿𑌂𑌶 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌭𑌵𑌤𑌿" (பஞ்சவிம்ச ஆத்மா பவதி)[2] "𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌚 𑌕𑌵𑌰𑍍𑌗𑍇𑌣 𑌚𑌵𑌰𑍍𑌗𑍇𑌣𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌚 । 𑌟𑌵𑌰𑍍𑌗𑍇𑌣 𑌤𑌵𑌰𑍍𑌗𑍇𑌣 𑌜𑍍𑌞𑌾𑌨𑌗𑌨𑍍𑌧𑌾𑌦𑌯𑌸𑍍𑌤𑌥𑌾 ॥ 𑌮𑌨𑌃 𑌪𑌕𑌾𑌰𑍇𑌣𑍈𑌵𑍋𑌕𑍍𑌤𑌂 𑌫𑌕𑌾𑌰𑍇𑌣 𑌤𑍍𑌵𑌹𑌙𑍍𑌕𑍃𑌤𑌿𑌃 । 𑌬𑌕𑌾𑌰𑍇𑌣 𑌭𑌕𑌾𑌰𑍇𑌣 𑌮𑌹𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌰𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌤𑍁 𑌸 𑌮𑌕𑌾𑌰𑍇𑌣 𑌪𑌞𑍍𑌚𑌵𑌿𑌂𑌶𑌃 𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑍍𑌤𑌿𑌤𑌃 ।" (பூதாநி ச கவர்கேண சவர்கேணேந்த்ரியாணி ச | டவர்கேண தவர்கேண ஜ்ஞாநகந்தாதயஸ்ததா || மந: பகாரேணைவோக்தம் ஃபகாரேண த்வஹங்க்ருதி: | பகாரேண ஹகாரேண மஹாந் ப்ரக்ருதிருச்யதே || ஆத்மா து ஸ மகாரேண பஞ்சவிம்ச: ப்ரகீர்த்தித:)[3] "𑌯𑌃 𑌪𑌰𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇𑌃 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌪𑌞𑍍𑌚𑌵𑌿𑌂𑌶𑌕𑌃 । 𑌸 𑌏𑌵 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌨𑌰 𑌇𑌤𑍍𑌯𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 ॥" (ய: பர: ப்ரக்ருதே: ப்ரோக்த: புருஷ: பஞ்சவிம்சக: | ஸ ஏவ ஸர்வ பூதாத்மா நர இத்யபிதீயதே)[4] "𑌆𑌤𑍍𑌮𑌾 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑍋𑌽𑌕𑍍𑌷𑌰𑌃 𑌶𑌾𑌨𑍍𑌤𑍋 𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇𑌃 𑌪𑌰𑌃 । 𑌸 𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌯

---

1. அயம் புருஷ:-இந்த புருஷன், பஞ்சவிம்ச:-இருபத்தைந்தாவதான தத்வமாகிறான்.

2. ஆத்மா - ஆத்மா, பஞ்சவிம்ச: - இருபத்தைந்தாம் தத்வமாக, பவதி-ஆகிறான்.

3. கவர்கேண - கவர்க்கத்தாலே, பூதாநி ச ப்ருதிவ்யாதி பூதங்களும், சவர்கேண - சவர்க்கத்தாலே, இந்த்ரியாணி ச - வாகாதிந்திரியங்களும், ததா-அப்படியே, டவர்கேண - டவர்க்கத்தாலும், தவர்கேண-தவர்க்கத்தாலும், ஜ்ஞாநகந்தாதய: - ஞானேந்திரியங்களும் கந்தாதிதந்மாத்ரைகளும், பகாரேண-ப என்ற எழுத்தால், மந:-மனதும் உக்தம்-சொல்லப்பட்டது, ஃபகாரேண-ஃப என்ற எழுத்தால் அஹங்க்ருதி:-அஹங்காரமும், பகாரேண-ப என்ற எழுத்தாலும், ஹகாரேண-ஹ என்ற எழுத்தாலும், மஹாந் ப்ரக்ருதி: உச்யதே - மஹத்தும், ப்ரகிருதியும்-சொல்லப்படுகிறது, ஸ: ஆத்மா-அந்த ஆத்மாவோ மகாரேண-ம என்ற எழுத்தாலே, பஞ்சவிம்ச: ப்ரகீர்தித: - இருபத்தைந்தாவதாகச் சொல்லப்பட்டான், (பாத்மோத்தரம் 226-25, 26).

4. பஞ்சவிம்சக:-இருபத்தைந்தாமவனான, ய: புருஷ:-எந்த புருஷன், ப்ரக்ருதே: - ப்ரக்ருதியைக்காட்டிலும், பர:-வேறுபட்டவனாக, ப்ரோக்த:-சொல்லப்படுகிறானோ, ஸ ஏவ-அவனே, ஸர்வபூதாத்மா-ஸமஸ்தபதார்த்தங்களுக்கும் ஆத்மா, நர இதி-நரனென்று, அபிதீயதே-சொல்லப் படுகிறான். (பார. ஆ. 175.)

𑌚𑌯𑍌 𑌨𑌾𑌸𑍍𑌯 𑌏𑌕𑌸𑍍𑌯𑌾𑌖𑌿𑌲𑌜𑌨𑍍𑌤𑍁𑌷𑍁 ||" (ஆத்மா சுத்தோக்ஷர: சாந்த: நிர்குண: ப்ரக்ருதே: பர: | ப்ரவ்ருத்த்யபசயௌ நாஸ்த: ஏகஸ்யாகிலஜந்துஷு)[1] "𑌪𑌿𑌣𑍍𑌡𑌃 𑌪𑍃𑌥𑌗𑍍𑌯𑌤𑌃 𑌪𑍁𑌂𑌸𑌃 𑌶𑌿𑌰𑌃𑌪𑌾𑌣𑍍𑌯𑌾𑌦𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌃 | 𑌤𑌤𑍋𑌽𑌹𑌮𑌿𑌤𑌿 𑌕𑍁𑌤𑍍𑌰𑌿𑌤𑌾𑌂 𑌸𑌂𑌜𑍍𑌞𑌾𑌂 𑌰𑌾𑌜𑌨𑍍 𑌕𑌰𑍋𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ||" (பிண்ட: ப்ருதக் யத: பும்ஸ: ஶிர:பாண்யாதிலக்ஷண: | ததோஹமிதி குத்ரைதாம் ஸம்ஜ்ஞாம் ராஜந் கரோம்யஹம்)[2] "𑌕𑌿𑌂 𑌤𑍍𑌵𑌮𑍇𑌤𑌚𑍍𑌛𑌿𑌰𑌃 𑌕𑌿𑌂 𑌨𑍁 𑌶𑌿𑌰𑌸𑍍𑌤𑌵 𑌤𑌥𑍋𑌦𑌰𑌮𑍍 | 𑌕𑌿𑌮𑍁 𑌪𑌾𑌦𑌾𑌦𑌿𑌕𑌂 𑌤𑍍𑌵𑌂 𑌵𑍈 𑌤𑌵𑍈𑌤𑌤𑍍 𑌕𑌿𑌂 𑌮𑌹𑍀𑌪𑌤𑍇 || 𑌸𑌮𑌸𑍍𑌤𑌾𑌵𑌯𑌵𑍇𑌭𑍍𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌪𑍃𑌥𑌗𑍍𑌭𑍂𑌯 𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 | 𑌕𑍋𑌽𑌹𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌵 𑌨𑌿𑌪𑍁𑌣𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌚𑌿𑌨𑍍𑌤𑌯 𑌪𑌾𑌰𑍍𑌥𑌿𑌵 ||" (கிம் த்வமேதத் சிர: கிம் நு சிரஸ் தவ ததோதரம் | கிமு பாதாதிகம் த்வம் வை தவைதத் கிம் மஹீபதே || ஸமஸ்தாவயவேப்யஸ்த்வம் ப்ருதக் பூய வ்யவஸ்த்தித: | கோஹமித்யேவ நிபுண: பூத்வா சிந்தய பார்த்திவ)[3] "[illegible]

1. வி. பு. 2-13-67. ஆத்மா-ஆத்மா, சுத்த:-பரிசுத்தன், அக்ஷர:-நாசமில்லாதவன், ஶாந்த:-சாந்தன், நிர்குண:-ஸத்வாதிகுணமில்லாதவன், ப்ரக்ருதே: பர:-ப்ரக்ருதியைக் காட்டிலும் மேலானவன், அகிலஜந்துஷு-எல்லா ஜந்துக்களிலும், ஏகஸ்ய-பூர்ணனுயிருக்கிற, ஜீவனுக்கு, ப்ரவ்ருத்தி அபசயௌ ந ஸ்த:-வளருவது குறைவதில்லை.

2. வி. பு. 2-13-87. ராஜன்!-ஏ ராஜனே, யத:-எந்தக்காரணத்தினலே, சிர:பாண்யாதிலக்ஷண:-சிரசு கை முதலான லக்ஷணங்களையுடைய, பிண்ட:-சரீரம், பும்ஸ:-ஆத்மாவைக்காட்டிலும், ப்ருதக்-வேறுயிருக்கிறதோ, தத:-அக்காரணத்தால், அஹம் இதி-நான் என்கிற ஏதாம் ஸம்ஜ்ஞாம்-இந்தப் பெயரை, குத்ர-எவ்விடத்தில், அஹம் கரோமி-நான் சொல்லுவேன்.

3. வி. பு, 2-13-100. மஹீபதே! - ஏ அரசனே! கிம் த்வம் ஏதத் சிர:-நீ இந்தத் தலையா, (அல்லது) கிம் நு சிரஸ்தவ-தலை உன்னுடையதா, ததா உதரம்-அப்படியே நீ வயிறு ·அல்லது வயிறு உன்னுடையதா, கிமு பாதாதிகம் த்வம் வை-இந்த பாதம் முதலானவை நீயா, (அல்லது) தவ ஏதத் கிம்-இவை உன்னுடையதா மஹீபதே-ஏ அரசனே! ஸமஸ்தாவயவேப்ய -எல்லா அவயவங்களைக்காட்டிலும், ப்ருதக் பூய வ்யவஸ்தித:-வேறுயிருக்கிறுய், த்வம்-நீ, நிபுணோ பூத்வா-ஸமர்த்தனுய், கோஹமித்யேவ-இவைகளில் நான் எவனென, சிந்தய-யோஜி.

𑌤𑌦𑍀𑌤𑍍𑌯𑍁𑌚𑍍𑌚𑍈𑌃 𑌕𑍁𑌰𑍁𑌤𑍇 𑌕𑍁𑌮𑌤𑌿𑌰𑍍𑌮𑌤𑌿𑌮𑍍 ॥ 𑌆𑌕𑌾𑌶𑌵𑌾𑌯𑍍𑌵𑌗𑍍𑌨𑌿𑌜𑌲𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌭𑍍𑌯𑌃 𑌪𑍃𑌥𑌕𑍍 𑌸𑍍𑌥𑌿𑌤𑍇 । 𑌆𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌮𑌯𑌂 𑌭𑌾𑌵𑌂 𑌕𑌃 𑌕𑌰𑍋𑌤𑌿 𑌕𑌲𑍇𑌵𑌰𑍇 ॥" (பஞ்சபூதாத்மகே தேஹே தேஹீ மோஹதமோவ்ருத: | அஹம் மமைததித்யுச்சை: குருதே குமதிர் மதிம் || ஆகாசவாய்வக்நிஜலப்ருதிவீப்ய: ப்ருதக் ஸ்திதே | ஆத்மந்யாத்மமயம் பாவம் க: கரோதி களேபரே)[1] என்று இப்படி ஶ்ருதி ஸ்ம்ருத்யாதி ஸகல சாஸ்த்ர ப்ரதிபந்நமான ஆதமாவினுடைய தேஹாதி விலக்ஷணத்வம் ஸுப்ரஸித்தம் என்று நினைத்திறே சாஸ்த்ர பலத்தாலே ஆத்மா தேஹாதிவிலக்ஷணனாகக்கடவனென்று ஸுநிஶ்சயமாக இவரருளிச் செய்தது.

## 8. அஜடமாகையாவது - ஜ்ஞாநத்தை யொழியவும் தானே தோற்றுகை.

(அஜடம்) இத்யாதி. அஜடத்வமாவது-அநந்யாதீந ப்ரகாஶத்வம். ஸ்வயம்ப்ரகாஶத்வமென்றபடி. ஸ்வயம் ப்ரகாஶத்வமாகையாவது-தீபம் தீபாந்தர நிரபேக்ஷமாக ஸ்வவ்யவஹாரத்துக்கு ஹேதுவாகிறவோபாதி, ப்ரகாஶாந்தர நிரபேக்ஷமாக ஸ்வவ்யவஹாரத்துக்கு ஹேதுவாகை.

அத்தை அருளிச் செய்கிறார்; (ஜ்ஞாநத்தை யொழியவும் தானே தோற்றுகை) என்று. "𑌹𑍃𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑍍𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃" (ஹ்ருத்யந்தர்ஜ்யோதி: புருஷ:)[2] "𑌅𑌤𑍍𑌰𑌾𑌯𑌂

---

1. வி. பு. 6-7-12. குமதி :- கெட்ட புத்தியையுடைய, தேஹீ- ஜீவாத்மா, மோஹதமோவ்ருத: - மோஹமாகிற இருளால் சூழப் பட்டவனாய், பஞ்சபூதாத்மகே தேஹே - ஐந்து பூதங்களின் விகார மான அந்த தேஹத்தில், அஹம் ஏதத் மம இதி - நான் என்றும், இது என்னுடையதென்றும், மதிம் - புத்தியை, உச்சை: குருதே - நன்றாய்ச் செய்கிறான், ஆகாச வாய்வக்நி ஜலப்ருதிவீப்ய; - ஆகாசம், வாயு, அக்நி, ஜலம், ப்ருதிவி— என்ற ஐந்து பூதங்களைக் காட்டிலும், ஆத்மநி - ஆத்மாவானவன், ப்ருதக் ஸ்திதே - வேறாகயிருக்குமளவில், க: - எவன், களேபரே - சரீரத்தில், ஆத்மமயம் பாவம் - ஆத்மா என்ற எண்ணத்தை, கரோதி - செய்வான்.

2. ப்ரு. உப, 6-3-7. ஹ்ருதயத்திற்குள்ளே ப்ரகாசித்துக் கொண்டிருக்கிற ஆத்மா.

[Grantha text] ஸ்வயம் ஜ்யோதிர் பவதி"[1] (அத்ராயம் புருஷஸ் ஸ்வயம் ஜ்யோதிர் பவதி)[1] "[Grantha text]" (விஜ்ஞாநகந:)[2] "[Grantha text]" (ஆத்மா ஜ்ஞாநமய:)[3] "[Grantha text]" (தச்ச ஜ்ஞாநமயம் வ்யாபி ஸ்வஸம்வேத்யமநூபமம்)[4] "[Grantha text]" (ஆத்மஸம்வேத்யம் தத்ஜ்ஞாநம்)[5] என்னக் கடவதிறே.

## 9. ஆநந்தரூபமாகையாவது - ஸுகரூபமாயிருக்கை.

(ஆநந்தரூபம்) இத்யாதி. ஆநந்தரூபத்வமாவது-ஸ்வத ஏவ இஷ்டத்வம். அதாவது - ஸ்வபாவமே அநுகூலமாயிருக்கை. "[Grantha text]" (அநுகூலம் ஸுகம் து:கம் ப்ரதிகூலமிதி ஸ்திதே: | ஸ்வாத்மா ஸ்வஸ்யாநுகூலோ ஹீத்யாத்மஸாக்ஷிக ஏவ ஸ:)[6] என்கிறபடியே, தனக்குத் தானே ஸுகரூபமா யிருக்கை யென்றபடி.

---

1. ப்ரு. உப. 6-3-9 அத்ர - இவ்விடத்தில், அயம் - இந்த புருஷ: - ஆத்மா, ஸ்வயம் ஜ்யோதிர்பவதி - ஸ்வயம்ப்ரகாசகனாயிருக்கிறான்.

2. ப்ரு. உப. 4-4-12. ஜ்ஞானஸ்வரூபன்.

3. வி. பு. 6-7-22. ஆத்மா ஜ்ஞானமயன்.

4. வி. பு. 1-22-42. தச்ச ஜ்ஞாநமயம் - அந்த ஆத்மாவும் உள்ளும் புறம்பும் ஜ்ஞானமயமானவன், வ்யாபி - ஸர்வவ்யாபகன், ஸ்வஸம்வேத்யம் - தன்னைத் தானே அறிகிறவன், அநூபமம் - உபமானரகிதன்.

5. ஆத்மஸம்வேத்யம்(எது)ஆத்மாவை நன்றாக அறிகிறதோ, தத் ஜ்ஞானம் - அது ஜ்ஞானம்.

6. ஸுகம் - ஸுகம் என்பது அநுகூலம், துக்கம் - துக்கமென்பது, ப்ரதிகூலம், இதி ஸ்திதே: என்று இருக்கச் செய்தே, ஸ்வ ஆத்மா - தன்னுடைய ஆத்மா, ஸ்வஸ்ய அநுகூலோ ஹி - தனக்கு அநுகூலன் அல்லவா, ஸ: ஆத்மஸாக்ஷிக: ஏவ - அவன் தனக்குத் தானே ஸாக்ஷியாயிருக்கும்.

இப்படி ஆத்மஸ்வரூபம் ஸுகரூபமாயிருக்கும் என்னுமிதில், ஸுப்த ப்ரபுத்த ப்ரத்யபிஜ்ஞையை ப்ரமாணமாக அருளிச் செய்கிறார்;

### 10. உணர்ந்தவன் ஸுகமாக உறங்கினேனென்கையாலே ஸுகரூபமாகக் கடவது.

(உணர்ந்தவன்) என்று தொடங்கி. "ஸுகமாக உறங்கினேன் என்கிற ப்ரத்யபிஜ்ஞை தானே, இதில் ப்ரமாணம்" என்றிறே தத்வஶேகரத்திலும் இவரருளிச் செய்தது. ஸுஷுப்தி தசையில் பராகர்த்தாநுபவமில்லாமையாலும், ப்ரத்யகர்த்தஸ்ப்புரண முண்டாகையாலும், ஸுப்தோத்திதனுடைய பராம்ருஷ்டமான ஸுகம் ஸ்வரூப ஸுகமாக வேணுமிறே. "இப்போது ஸுகம் பிறக்கும்படி உறங்கினேன்" என்றன்றே "ஸுகமாக உறங்கினேன்" என்கிற விதுக்குப் பொருளென்ன வொண்ணாது; ப்ரதிபத்திஶரீரம் அப்படியன்றிக்கே "இனிதாகப் பாடினேன்" என்கிறப்போலே யிருக்கையாலே இதுதன்னை பாஷ்யத்திலே, "ஏவம் ஹி ஸுப்தோத்திதஸ்ய பராமர்ஶ:, ஸுகமஹமஸ்வாப்ஸமிதி அநேந ப்ரத்யவமர்ஶேந ததாநீமப்யஹமர்த்தஸ்யைவாத்மந: ஸுகித்வம் ஜ்ஞாத்ருத்வஞ்ச ஜ்ஞாயதே। ந ச வாச்யம், யதேதாநீம் ஸுகம் பவதி ததா ததாநீமஸ்வாப்ஸமித்யேஷா ப்ரதிபத்திரிதி, அதத்ரூபத்வாத் ப்ரதிபத்தே:" (ஏவம் ஹி ஸுப்தோத்திதஸ்ய பராமர்ஶ:, ஸுகமஹமஸ்வாப்ஸமிதி - அநேந ப்ரத்யவமர்ஶேந ததாநீமப்யஹமர்த்தஸ்யைவாத்மந: ஸுகித்வம் ஜ்ஞாத்ருத்வஞ்ச ஜ்ஞாயதே. ந ச வாச்யம், யதேதாநீம் ஸுகம் பவதி ததா ததாநீமஸ்வாப்ஸமித்யேஷா ப்ரதிபத்திரிதி, அதத்ரூபத்வாத் ப்ரதிபத்தே:)[1] என்று பாஷ்யகாரர்

---

1. ஸ்ரீபாஷ்யம் 1-1-1. ஸுப்தோத்திதஸ்ய - உறக்கத்தினின்று உணர்ந்தவனுக்கு, ஏவம் ஹி பராமர்ச: - இந்த விதமாக அன்றோ நினைவு உண்டாகிறது, ஸுகமஹம் அஸ்வாப்ஸமிதி - ஸுகமாக நான் உறங்கினேன் என்று, அநேந ப்ரத்யவமர்சநேந - இந்த விதமான பூர்வாநுபவமாகிய ஞானத்தால், ததாநீமபி - உறங்கும் போதும், அஹமர்த்தஸ்யைவ ஆத்மந: - அஹமர்த்தபூதனான ஆத்மாவுக்கே, ஸுகித்வம் - ஸுகிக்கும் தன்மையும், ஜ்ஞாத்ருத்வஞ்ச -

அருளிச்செய்தார். ஸ்வரூபம் அநுகூலமென்றாகில், ப்ரேமா ஸ்பதத்வம் கூடாது. "ஆஶ்சர்யவத்பஶ்யதி கஶ்சிதேநம்" (ஆஶ்சர்யவத்பஶ்யதி கஶ்சிதேநம்)[1] இத்யாதிகளாலும் இவ்வர்த்தம் ஸித்தம். "ஆர்த்ரம் ஜ்வலதி" (ஆர்த்ரம் ஜ்வலதி)[2] "நிர்வாணமய ஏவாயமாத்மா" (நிர்வாணமய ஏவாயமாத்மா)[3] "ஜ்ஞாநாநந்தமயஸ்த்வாத்மா" (ஜ்ஞாநாநந்தமயஸ்த்வாத்மா)[4] "ஜ்ஞாநாநந்தைகலக்ஷணம்" (ஜ்ஞாநாநந்தைகலக்ஷணம்)[5] இத்யாதி ஶ்ருதிஸ்ம்ருதிகளாலும், ஆத்மாவினுடைய ஆநந்தரூபத்வம் ஸுஸ்பஷ்டம்.

ஆக, கீழ் ப்ரக்ருதே: பரத்வம் சொல்லுகையாலே தேஹாத்மவாதம் நிரஸ்தமாய்த்து. அஜடத்வ ஆநந்தரூபத்வங்களைச் சொல்லுகையாலே ஜட ஆத்மவாதம் நிரஸ்தமாய்த்து.

## 11. நித்யமாகையாவது - எப்போதுமுண்டாகை.

(நித்யம்) இத்யாதி. நித்யத்வமாவது - ஸர்வகாலவர்த்தித்வம். அத்தை அருளிச் செய்கிறார் (எப்போதுமுண்டாகை) என்று.

---

ஜ்ஞானத்திற்கு ஆச்ரயமாயிருக்கும் தன்மையும், ஜ்ஞாயதே - அறியப்படுகிறது. ஏஷா ப்ரதிபத்தி: - இந்த ஞானமானது, யதா - எப்படி இதாநீம் - இப்போது, ஸுகம் பவதி - ஸுகமாயிருக்கிறதோ, ததா - அப்படி, ததாநீம் - அப்போது, அஸ்வாப்ஸமிதி - உறங்கினேன் என்று சொல்லுவதாக, ந ச வாச்யம் - சொல்லக்கூடாது. (ஏனெனில்) ப்ரதிபத்தே: - அந்த ஜ்ஞானத்திற்கு, அதத்ரூபத்வாத் - அந்த ப்ரகாரமில்லாமையினால்.

1. ஸ்ரீகீதை, 2-29. ஏநம் - இந்த ஆத்மாவை, - கச்சித் - ஒருவன், ஆச்சர்யவத் - ஆச்சரியமாக, பச்யதி - பார்க்கிறான்.

2. தை. உப, 2-9-40. ஆர்த்ரம் ஜ்வலதி - ஜலதத்வமானது ப்ரகாசித்துக் கொண்டிருக்கிறது.

3. அயமாத்மா நிர்வாணமய ஏவ - இந்த ஆத்மா ஆனந்த ஸ்வரூபனே.

4. ஸ்ரீபாகவதே. ஆத்மா ஜ்ஞாநாநந்தமய: - ஆத்மா ஜ்ஞாநாநந்த மயன்.

5. விஷ்வக்ஸேன ஸம்ஹிதை. ஜ்ஞாநாநந்தைக லக்ஷணம் - (ஜீவன்) ஜ்ஞாநாநந்தங்களையே ஸ்வரூபமாக வுடையவன்.

ஏதத்விரோதி ஶங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார் ;

**12. எப்போதுமுண்டாகில் ஜந்மமரணங்களுண்டாகிற படியென்? என்னில்; ஜந்மமாவது - தேஹஸம்பந்தம், மரணமாவது - தேஹவியோகம்.**

(எப்போதுமுண்டாகில்)என்று தொடங்கி. அதாவது ஆத்மா ஸர்வகாலவர்த்தியாயிருக்குமாகில், "ப்ரஜாபதிঃ ப்ரஜா அஸ்ருஜத" (ப்ரஜாபதி: ப்ரஜா அஸ்ருஜத)[1] "ஸந்மூலாஸ்ஸோம்யேமாஸ்ஸர்வாঃ ப்ரஜாঃ" (ஸந்மூலாஸ்ஸோம்யேமாஸ்ஸர்வா: ப்ரஜா:)[2] "யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே" (யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே)[3] "யதঃ ப்ரஸூதா ஜகதঃ ப்ரஸூதீ தோயேந ஜீவாந் வ்யஸஸர்ஜ பூம்யாம்" (யத: ப்ரஸூதா ஜகத: ப்ரஸூதீ தோயேந ஜீவாந் வ்யஸஸர்ஜ பூம்யாம்)[4] இத்யாதி ஶ்ருதிவாக்யங்களால் ஆத்மாவுக்குச் சொல்லப்படுகிற ஜந்மமரணங்களுண்டாகிறபடி யென்? என்னில்; அவற்றிற் சொல்லுகிற ஜந்மமாவது - தேஹஸம்பந்தம், மரணமாவது - தேஹவியோகம் என்கை.

1. யஜுஷி, 8-2. ப்ர, 2. ப்ரஜாபதி: - ப்ரஹ்மா, ப்ரஜா: - ஜனங்களை, அஸ்ருஜத - உண்டுபண்ணினான்.

2. தை, 2 ப்ருகுவல்லீ 1. ஸோம்ய! ஸோமபானம் பண்ணத் தகுந்தவனே! இமா: ஸர்வா: ப்ரஜா: - இந்த ஸர்வ பிரஜைகளும், ஸந்மூலா: - ஸச்சப்தவாச்யனான எம்பெருமானைக் காரணமாயுடையன.

3. தை, 2. ப்ரு 1. யதோ வா - எவனிடத்திலிருந்து, இமாநி பூதாநி - இந்த பூதங்களெல்லாம், ஜாயந்தே - ஸ்ருஷ்டிகாலத்தில் உண்டாகின்றனவோ.

4. தை. 2-2-1, ஜகத: - ஜகத்துக்கு, ப்ரஸூதீ - ஸ்ருஷ்டிக்காரணமாயிருக்கிற பிரகிருதியும், யத:-எந்த தபோலஸ்தனான பிரம்மத்தினிடமிருந்து, ப்ரஸூதா - உண்டானதோ, (எந்த பிரம்மம்) பூம்யாம் - பூமியிலே. தோயேந - ஜலம் முதலிய பூதங்களோடு கூட, ஜீவான் - ஆத்மாக்களை, வ்யஸஸர்ஜ - ஸ்ருஷ்டித்ததோ.

நித்யனாகில் ஸ்ருஷ்டிக்கு முன்பு ஏகத்வாவதாரணம் கூடாதென்னில்; ஏகத்வமாவது - நாமரூபவிபாகாபாவமாகையாலே கூடும். ஸம்ஹாரதஶையில் ஆத்மா இல்லையாகில், ஈஶ்வரனுக்கு உபாதாநத்வம் கூடாது. அக்ருதாப்யாகமக்ருத விப்ரணாஶங்களும் வரும். ஆகையால், ஆத்ம நித்யத்வம் கொள்ளவேணும். "𑌨 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌮𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌵𑌾 𑌵𑌿𑌪𑌶𑍍𑌚𑌿𑌤𑍍" (ந ஜாயதே ம்ரியதே வா விபஶ்சித்)[1] "𑌜𑍍𑌞𑌾𑌜𑍍𑌞𑍌 𑌦𑍍𑌵𑌾𑌵𑌜𑌾𑌵𑍀𑌶𑌨𑍀𑌶𑍌" (ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜா வீஶநீஶௌ)[2] "𑌨𑌿𑌤𑍍𑌯𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌨𑌾𑌂" (நித்யோ நித்யாநாம்)[3] "𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌚𑍈𑌵 𑌵𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌨𑌾𑌦𑍀 𑌉𑌭𑌾𑌵𑌪𑌿" (ப்ரக்ருதிம் புருஷம் சைவ வித்யநாதீ உபாவபி[4] "𑌨 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌮𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌵𑌾 𑌕𑌦𑌾𑌚𑌿𑌨𑍍𑌨𑌾𑌯𑌂 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌭𑌵𑌿𑌤𑌾 𑌵𑌾 𑌨 𑌭𑍂𑌯𑌃 । 𑌅𑌜𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌃 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑍋𑌽𑌯𑌂 𑌪𑍁𑌰𑌾𑌣𑍋 𑌨 𑌹𑌨𑍍𑌯𑌤𑍇 𑌹𑌨𑍍𑌯𑌮𑌾𑌨𑍇 𑌶𑌰𑍀𑌰𑍇" (ந ஜாயதே ம்ரியதே வா கதாசிந்நாயம் பூத்வா பவிதா வா ந பூய: | அஜோ நித்யஶ்ஶாஶ்வதோயம் புராணோ ந ஹந்யதே ஹந்யமாநே ஶரீரே)[5] என்று, ஆத்ம நித்யத்வ ப்ரதிபாதகங்களான ஶ்ருதிஸ்ம்ருதிகள் அநேகங்களிறே.

---

1. கடவல்லி. 1, 2, 18. விபச்சித் - ஜ்ஞாதாவான ஆத்மா, ந ஜாயதே - பிறக்கிறதில்லை, ந ம்ரியதே வா - மரிக்கிறதுமில்லை.

2. ச்வே. 2, 19. ஜ்ஞ - அஜ்ஞௌ - ஜ்ஞானமுடைய ஈச்வரனும், அஜ்ஞனான ஜீவனும், த்வௌ - இருவரும், ஈசநீசௌ - ஒருவன் நியாமகன் மற்றவன் நியாம்யன்.

3. ச்வே. 2- 2. 5. 13. நித்யாநாம் சேதநாநாம் - நித்யர்களான ஆத்மாக்களுக்கு, நித்ய: சேதந: - நித்யனான எம்பெருமான்.

4. ஸ்ரீகீதா. 13. 10. ப்ரக்ருதிம் புருஷஞ்சைவ உபௌ அபி - ப்ரக்ருதி புருஷன் இந்த இருவரையும், அநாதீ - அநாதியென்று, வித்தி - அறிந்துகொள்.

5. ஸ்ரீகீதா. 2, 20. அயம் - இந்த ஆத்மா. கதாசித் - ஒருபோதும், ந ஜாயதே-பிறப்பதில்லை. ந ம்ரியதே - இறப்பதில்லை, பூத்வா-பிறந்து, பூய: - மறுபடியும், நபவிதா - பிறக்கப் போகிறதில்லையென்பது இல்லை. அயம் - இது, அஜ: - பிறப்பில்லாதது, நித்ய: - நாசமில்லாதது, சாச்வத: - ப்ரளயத்திலும் நாசமில்லாதது, புராண: - அநாதி, சரீரே ஹந்யமாநே - சரீரம் அடிபட்டாலும், ந ஹந்யதே - (ஆத்மா) அடிபடுவதில்லை.

அசித்விலக்ஷணமாய், அஜடமாய், ஆநந்தரூபமாய், நித்யமாயிருந்தாலும் விபுவாயிருக்கலாமிறே, ஏவம் பூதமான ஆத்ம ஸ்வரூபம் அணு என்று அறியும்படி எங்ஙனே? என்கிற ஜிஜ்ஞாஸா ப்ரஸங்கத்தை அநுவதிக்கிறார் ;

**13. அணுவானபடி என் ? என்னில் ;**

(அணுவானபடி என் என்னில்) என்று.

அதுக்கு உத்தரம் அருளிச்செய்கிறார் ;

**14. ஹ்ருதயப்ரதேஶத்தில் நின்றும் உத்க்ரமித்துப் போவது வருவதாமென்று ஶாஸ்த்ரம் சொல்லுகையாலே, ஆத்மா அணுவாகக் கடவது.**

(ஹ்ருதயப்ரதேஶத்தில் நின்றும்) என்று தொடங்கி. அதாவது—“𑌹𑍃𑌦𑌿 𑌹𑍍𑌯𑍇𑌷 𑌆𑌤𑍍𑌮𑌾” (ஹ்ருதி ஹ்யேவாயமாத்மா)[1] என்று ஹ்ருதயஸ்திதியையும், “𑌤𑍇𑌨 𑌪𑍍𑌰𑌦𑍍𑌯𑍋𑌤𑍇𑌨𑍈𑌷 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌨𑌿𑌷𑍍𑌕𑍍𑌰𑌾𑌮𑌤𑌿 𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑍍𑌟𑍋 𑌵𑌾 𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌨𑍋 𑌵𑌾𑌽𑌨𑍍𑌯𑍇𑌭𑍍𑌯𑍋 𑌵𑌾 𑌶𑌰𑍀𑌰𑌦𑍇𑌶𑍇𑌭𑍍𑌯𑌃” (தேந ப்ரத்யோதேநைஷ ஆத்மா நிஷ்க்ராமதி சக்ஷுஷ்டோ வா மூர்த்நோ வாந்யேப்யோ வா ஶரீரதேஶேப்ய:)[2] என்று உத்க்ரமணத்தையும், “𑌯𑍇 𑌵𑍈 𑌕𑍇 𑌚𑌾𑌸𑍍𑌮𑌾𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌯𑌨𑍍𑌤𑌿 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌸𑌮𑍇𑌵 𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿” (யே வைகே சாஸ்மால்லோகாத் ப்ரயந்தி சந்த்ரமஸமேவ தே ஸர்வே கச்சந்தி)[3] என்று கமநத்தையும், “𑌤𑌸𑍍𑌮𑌾𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌤𑍍𑌪𑍁𑌨𑌰𑍈

---

1. ப்ரு-உ, 6, 4, 2. அயம் ஆத்மா - இந்த ஆத்மா, ஹ்ருதி ஹி ஏவ - ஹ்ருதயத்திலேயே இருக்கிறது.

2. கௌஷீதகி. தேந ப்ரத்யோதேந - அந்த (ஈச்வரன் காட்டுகிற) தேஜஸ்ஸாலே, ஏஷ ஆத்மா - இந்த ஆத்மா, சக்ஷுஷ்டோ வா - கண்ணிலிருந்தோ, மூர்த்நோ வா - சிரஸ்ஸிலிருந்தோ, அந்யேப்ய: சரீரதேசேப்ய: - மற்ற சரீரத்திற்குள் இதர இந்திரியங்களிலிருந்தோ, நிஷ்க்ராமதி - புறப்பட்டுப் போகிறது.

3 ப்ரு உ, 6, 4, 6. யே வை கே ச - எவர்கள், அஸ்மாத் லோகாத் - இந்த லோகத்திலிருந்து, ப்ரயந்தி - புறப்படுகிறார்களோ, தே ஸர்வே - அவர்களெல்லாரும், சந்த்ரமஸமேவ - சந்த்ரமண்டலத்தையே, கச்சந்தி - அடைகிறார்கள்.

த்யைஸ்மை லோகாய கர்மணே” (தஸ்மால்லோகாத் புந ரேத்யஸ்மை லோகாய கர்மணே)[1] என்று ஆகமனத்தை யும், நிர்தோஷப்ரமாணமான வேதாந்த ஶாஸ்த்ரம் சொல்லுகையாலே அணுவாகக்கடவதென்கை. விபுவா கில் இவையொன்றும் கூடாதிறே. ஸூத்ரகாரரும் ஆத் மாவினுடைய அணுத்வம் ஸாதிக்கிறவளவில், “உத்க்ராந்தி கத்யாகதீநாம்” (உத்க்ராந்திகத்யாகதீநாம்)[2] என்று இவற்றாலேயிறே முந்துற ஸாதித்தது. “ஏஷோऽணுராத்மா சேதஸா வேதிதவ்ய:” (ஏஷோऽணுராத்மா சேதஸா வேதிதவ்ய:)[3] வாலாக்ரஶதபாகஸ்ய ஶததா கல்பிதஸ்ய ச | பாகோ ஜீவஸ்ஸ விஜ்ஞேய:” (வாலாக்ரஶத பாகஸ்ய ஶததா கல்பிதஸ்ய ச | பாகோ ஜீவஸ்ஸ விஜ்ஞே ய:)[4] “ஆராக்ரமாத்ரோ ஹ்யவரோऽபி த்ருஷ்ட:” (ஆரா க்ரமாத்ரோ ஹ்யவரோऽபி த்ருஷ்ட:)[5] “ஸ்வரூபமணு மாத்ரம் ஸ்யாத் ஜ்ஞாநாநந்தைகலக்ஷணம் | த்ரஸரேணு ப்ரமாணாஸ்தே ரஶ்மிகோடிவிபூஷிதா:” (ஸ்வரூபமணு மாத்ரம் ஸ்யாத் ஜ்ஞாநாநந்தைக லக்ஷணம் | த்ரஸரேணு ப்ரமாணுஸ்தே ரஶ்மிகோடிவிபூஷிதா:)[6] இத்யாதி ஶ்ருதி

1. ப்ரு, 6-4-6. தஸ்மாத் லோகாத் - அந்த லோகத்திலிருந்து, புந: - மறுபடியும், அஸ்மை லோகாய - இந்த லோகத்திற்கு, கர்மணே - கர்மானுபவத்திற்காக, ஏதி - வருகிறான்.

2. ப்ரம்மஸூத்ரம், 2-3-2. உத்க்ராந்தி - தேஹத்திலிருந்து கிளம்புவது, கதி ஆகதீநாம் - போவது, வருவது இவைகளால் ஜீவன் அணு என்று ஏற்படுகிறது.

3. முண்டக-உ 3-1-9. ஏஷ: அணு: ஆத்மா - இந்த ஆத்மா அணுவென்று, சேதஸா - மனஸ்ஸாலே, வேதிதவ்ய: - அறியப்படு கிறான்.

4. ச்வே-உ. 5-9. ஶததா கல்பிதஸ்ய - நூறாகத் துண்டிக்கப் பட்ட, வாலாக்ரஶதபாகஸ்ய - செந்நெல்லின் வால்நுனியினுடைய நூற்றிலொரு பாகத்தினுடைய பாக: - பாகமாக, ஜீவ: - ஜீவாத்மா இருக்கிறான்.

5. ச்வே-உ. 5-8. ஆராக்ரமாத்ரோ அபி - ஜீவன் அரமென்று சொல்லப்படும் ஊசி நுனியைப் பார்க்கிலும், அவரோऽபி - அல்பமாக, த்ருஷ்ட: - தோற்றப்படுகிறான்.

6. விஷ்வக்ஸேநஸம்ஹிதா. ஜ்ஞாநாநந்தைகலக்ஷணம் - ஜ்ஞா நாநந்தங்களையே லக்ஷணமாக உடைய, ஸ்வரூபம் - ஆத்மஸ்வரூபம்,

ஸ்ம்ருதிகளாலும் ஆத்மாவினுடைய அணுத்வம் ஸம்ப்ரதி பந்நம்.

இப்படியிருக்குமாகில், ஸர்வஶரீரவ்யாபியான ஸுக துக்காநுபவம் கூடும்படி எங்ஙனே? என்கிற சங்கையை அநுவதிக்கிறார்;

**15. அணுவாய், ஹ்ருதயத்தளவிலே நிற்குமாகில் ஶரீரம் எங்குமொக்க ஸுகதுக்கங்களை புஜிக்கிறபடி என்? என்னில்;**

(அணுவாய்) என்று தொடங்கி. அதாவது— அணு பரிமாணமாய், ஹ்ருதயப்ரதேசமாத்ரத்திலே நின்றுவிடுமாகில், "पादे मे वेदना शिरसि मे वेदना; पादे मे सुखं शिरसि मे सुखम्" (பாதே மே வேதநா ஶிரஸி மே வேதநா; பாதே மே ஸுகம் ஶிரஸி மே ஸுகம்)[1] என்று ஆபாதசூடம் சரீரம் எங்குமொக்க ஸுகதுக்கங்களை புஜிக்கிறபடி எங்ஙனே? என்னில் என்கை.

அதுக்கு உத்தரம் அருளிச் செய்கிறார்;

**16. மணித்யுமணிதீபாதிகள் ஓரிடத்திலே இருக்க ப்ரபை எங்குமொக்க வ்யாபிக்குமாபோலே, ஜ்ஞாநம் எங்குமொக்க வ்யாபிக்கையாலே அவற்றை புஜிக்கத் தட்டில்லை.**

(மணித்யுமணி) என்று தொடங்கி. அதாவது- மணித்யுமணிதீபாதிகளாகிற ப்ரபாவத் பதார்த்தங்கள் ஏக தேஶஸ்த்தங்களாயிருக்கச் செய்தேயும், தத்ப்ரபை சுற்றெங்கும் வ்யாபிக்கிறப்போலே. ஆத்மா ஹ்ருதயப்ரதேஶத்திலே இருக்கச் செய்தே, தத் தர்மமான ஜ்ஞாநம்

1. பாதே மே வேதநா - காலில் எனக்கு நோயுண்டாகிறது. ஶிரஸி மே வேதநா - சிரஸில் எனக்கு நோயுண்டாகிறது, பாதே மே ஸுகம் - காலில் எனக்கு ஸுகமுண்டாகிறது, ஶிரஸி மே ஸுகம் - சிரஸில் எனக்கு ஸுகமுண்டாகிறது.

எங்குமொக்க வ்யாபிக்கையாலே, ஶரீரமெங்கு மொக்க ஸுகதுக்கங்களை புஜிக்கைக்கொரு ப்ரதிஹதி இல்லை என்கை.

இதுதான், "𑌗𑍁𑌣𑌾𑌦𑍍𑌵𑌾𑌲𑍋𑌕𑌵𑌤𑍍" (குணாத்வாலோகவத்)[1] என்கிற ஸூத்ரார்த்தம். "𑌵𑌾 𑌶𑌬𑍍𑌦𑍋 𑌮𑌤𑌾𑌨𑍍𑌤𑌰 𑌵𑍍𑌯𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 । 𑌆𑌤𑍍𑌮𑌾, 𑌸𑍍𑌵𑌗𑍁𑌣𑍇𑌨 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌸𑌕𑌲𑌦𑍇𑌹𑌂 𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌯𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 । 𑌆𑌲𑍋𑌕𑌵𑌤𑍍—𑌯𑌥𑌾 𑌮𑌣𑌿𑌦𑍍𑌯𑍁𑌮𑌣𑌿 𑌪𑍍𑌰𑌭𑍃𑌤𑍀𑌨𑌾𑌮𑍇𑌕𑌦𑍇𑌶𑌵𑌰𑍍𑌤𑌿𑌨𑌾𑌮𑌾𑌲𑍋𑌕𑍋𑌽𑌨𑍇𑌕𑌦𑍇𑌶𑌵𑍍𑌯𑌾𑌪𑍀 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇, 𑌤𑌦𑍍𑌵𑌦𑍍𑌧𑍃𑌦𑌯𑌸𑍍𑌥𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑍋 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌸𑌕𑌲𑌦𑍇𑌹𑌂 𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌯 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 । 𑌜𑍍𑌞𑌾𑌤𑍁𑌃 𑌪𑍍𑌰𑌭𑌾𑌸𑍍𑌥𑌾𑌨𑍀𑌯𑌸𑍍𑌯 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌸𑍍𑌵𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌦𑌨𑍍𑌯𑌤𑍍𑌰 𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌮𑌣𑌿𑌪𑍍𑌰𑌭𑌾𑌵𑌦𑍁𑌪𑌪𑌦𑍍𑌯𑌤 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌥𑌮𑌸𑍂𑌤𑍍𑌰𑍇 𑌸𑍍𑌥𑌾𑌪𑌿𑌤𑌮𑍍" (வா ஶப்தோ மதாந்தரவ்யாவ்ருத்த்யர்த்த:. ஆத்மா, ஸ்வகுணேந ஜ்ஞாநேந ஸகலதேஹம் வ்யாப்யாவஸ்தித:, ஆலோகவத் யதா மணித்யுமணிப்ரப்ருதீநாமேகதேஶவர்த்திநாமாலோகோநேகதேஶவ்யாபீ த்ருஶ்யதே, தத்வத் ஹ்ருதயஸ்தஸ்யாத்மநோ ஜ்ஞாநம் ஸகலதேஹம் வ்யாப்ய வர்த்ததே. ஜ்ஞாது: ப்ரபாஸ்தாநீயஸ்ய ஜ்ஞாநஸ்ய ஸ்வாஶ்ரயாதந்யத்ர வ்ருத்திர் மணிப்ரபாவதுபபத்யத இதி ப்ரதம ஸூத்ரே ஸ்தாபிதம்)[2] என்றிறே இதுக்கு பாஷ்யம்.

---

1 ப்ர. ஸூ. 2-3-26. ஆலோகவத் - வெளிச்சம் போலே, குணாத்வா - (தன்) குணமான ஜ்ஞானத்தினுலேயே (சுகதுக்கங்களை அனுபவிக்கிறுன்.)

2. ஸ்ரீபாஷ்யே, 2-3-26. வாசப்த: - வா என்கிற சப்தமானது, மதாந்தர வ்யாவ்ருத்யர்த்த: - வேறுமதத்தை நிரஸிப்பதற்காக, ஆத்மா - ஜீவாத்மாவானவன், ஸ்வகுணேந - தன் குணமான, ஜ்ஞாநேந - ஜ்ஞாநத்தாலே, ஸகல தேஹம் - தேஹம் முழுமையும், வ்யாப்ய அவஸ்தித: - வியாபித்திருக்கிறுன், ஆலோகவத் - ப்ரகாசத்தைப் போலே, யதா எப்படி, ஏக தேசவர்த்திநாம் - ஓரிடத்திலிருக்கிற, மணித்யுமணி ப்ரப்ருதீநாம் - மணி, சூரியன் முதலானவைகளினுடைய, ஆலோக: - தேஜஸ்ஸானது, அநேகதேசவ்யாபீ - அநேக தேசங்களிலும் வ்யாபித்திருக்கிறதாய், த்ருச்யதே - காணப்படுகிறதோ, தத்வத் - அப்படியே, ஹ்ருதயஸ்தஸ்ய - ஹிருதய ப்ரதேசத்திலிருக்கும் ஆத்மந: - ஆத்மாவினுடைய, ஜ்ஞாநம் - ஞானமானது, ஸகல தேஹம் - தேஹம் முழுமையும், வ்யாப்ய வர்த்ததே - வ்யா

இப்படி, ஜ்ஞாநவ்யாப்தியாலே ஸர்வத்தையும் புஜிக்குமென்னுமிடம் ப்ருஹதாரண்யகத்திலே சொல்லப்பட்டது. "ப்ரஜ்ஞயா வாசம் ஸமாருஹ்ய வாசா ஸர்வாணி நாமாந்யாப்நோதி, ப்ரஜ்ஞயா க்ராணம் ஸமாருஹ்ய க்ராணேந ஸர்வாந் கந்தாநாப்நோதி, ப்ரஜ்ஞயா சக்ஷு: ஸமாருஹ்ய சக்ஷுஷா ஸர்வாணி ரூபாண்யாப்நோதி, ப்ரஜ்ஞயா ஶ்ரோத்ரம் ஸமாருஹ்ய ஶ்ரோத்ரேண ஸர்வாந் ஶப்தாநாப்நோதி, ப்ரஜ்ஞயா ஜிஹ்வாம் ஸமாருஹ்ய ஜிஹ்வயா ஸர்வாந் ரஸாநாப்நோதி, ப்ரஜ்ஞயா ஹஸ்தௌ ஸமாருஹ்ய ஹஸ்தாப்யாம் ஸர்வாணி கர்மாண்யாப்நோதி, ப்ரஜ்ஞயா ஶரீரம் ஸமாருஹ்ய ஶரீரேண ஸுகது:கே ஆப்நோதி, ப்ரஜ்ஞயோபஸ்தம் ஸமாருஹ்ய உபஸ்தேநாநந்தம் ரதிம் ப்ரஜாம் சாப்நோதி, ப்ரஜ்ஞயா பாதௌ ஸமாருஹ்ய பாதாப்யாம் ஸர்வா கதீராப்நோதி, ப்ரஜ்ஞயா தியம் ஸமாருஹ்ய தியா விஜ்ஞாதவ்யம் காமாநாப்நோதி." (ப்ரஜ்ஞயா வாசம் ஸமாருஹ்ய வாசா ஸர்வாணி நாமாந்யாப்நோதி, ப்ரஜ்ஞயா க்ராணம் ஸமாருஹ்ய க்ரர்ணேந ஸர்வாந் கந்தாநாப்நோதி, ப்ரஜ்ஞயா சக்ஷுஸ்ஸமாருஹ்ய சக்ஷுஷா ஸர்வாணி ரூபாண்யாப்நோதி, ப்ரஜ்ஞயா ஶ்ரோத்ரம் ஸமாருஹ்ய ஶ்ரோத்ரேண ஸர்வாந் சப்தாநாப்நோதி, ப்ரஜ்ஞயா ஜிஹ்வாம் ஸமாருஹ்ய ஜிஹ்வயா ஸர்வாந் ரஸாநாப்நோதி, ப்ரஜ்ஞயா ஹஸ்தௌ ஸமாருஹ்ய ஹஸ்தாப்யாம் ஸர்வாணி கர்மாண்யாப்நோதி, ப்ரஜ்ஞயா ஶரீரம் ஸமாருஹ்ய ஶரீரேண ஸுகதுக்கே ஆப்நோதி, ப்ரஜ்ஞயோபஸ்தம் ஸமாருஹ்ய உபஸ்தேநாநந்தம் ரதிம் ப்ரஜாம் சாப்நோதி, ப்ரஜ்ஞயா பாதௌ ஸமாருஹ்ய பாதாப்யாம் ஸர்வா கதீராப்நோதி, ப்ரஜ்ஞயா தியம் ஸமா

---

*பித்து வர்த்திக்கிறது, ஜ்ஞாது: - ஆத்மாவினுடைய, ப்ரபாஸ்தாநீயஸ்ய - ஒளியின் ஸ்தானத்திலிருக்கிற, ஜ்ஞாநஸ்ய - ஞானத்திற்கு, ஸ்வாச்ரயாத் - தன்னுடைய ஸ்தானத்தைக் காட்டிலும், அந்யத்ர வ்ருத்தி: - வேறிடத்திலிருப்பானது, மணிப்ரபாவத் - மாணிக்கத்தினுடைய ப்ரபையைப் போல், உபபத்யதே - உபபந்நமாகலாம். இதி ப்ரதமஸூத்ரே - என்று முதல் ஸூத்திரத்தில், ஸ்தாபிதம் - ஸ்தாபிக்கப்பட்டது.*

ருஹ்ய தியா விஜ்ஞாதவ்யம் காமமாப்நோதி)[1] என்றிப் படி சொல்லுகையாலே.

ஏகஶரீரமாத்ரத்துக்கு இப்படிக் கொண்டாலும், ஒருவன் ஏககாலத்திலே அநேக தேஹங்களை பரிக்ரஹிக்கிறது ஸ்வரூபவ்யாப்தியாலே ஆகவேண்டாவோ? என்கிற சங்கையிலே அருளிச்செய்கிறார்;

**17. ஒருவன் ஏககாலத்திலே அநேக தேஹங்களை பரிக்ரஹிக்கிறதும் ஜ்ஞாநவ்யாப்தியாலே.**

(ஒருவன்) என்று தொடங்கி. ஒருவனுக்கே அநேக தேஹ பரிக்ரஹம், காலபேதத்தாலே ஸம்பவிக்குமிறே: அத்தை வ்யாவர்த்திக்கைக்காக (ஏககாலத்திலே) என்கிறது. ஏககாலே அநேகதேஹபரிக்ரஹம் ஸௌபரிப்ரப்ருதி பக்கலிலே ஸம்ப்ரதிபந்நமிறே.

**18. அவ்யக்தமாகையாவது - கடபடாதிகளை க்ரஹிக்கிற சக்ஷுராதிகளால் தோற்றுதிருக்கை.**

(அவ்யக்தமாகையாவது-கடபடாதிகளை க்ரஹிக்கிற சக்ஷுராதிகளால் தோற்றுதிருக்கை.) "சேதநாதியோக்யாநி கடபடாதீநி வஸ்தூநி யை: ப்ரமாணைர்வ்யஜ்யந்தே தைரயமாத்மா ந வ்யஜ்யதே இத்யவ்யக்த:" (சேதநாதி யோக்யாநி கடபடாதீநி வஸ்தூநி யை: ப்ரமாணைர்வ்யஜ்யந்தே, தைரயமாத்மா ந வ்யஜ்யத இத்யவ்யக்த:)[2] என்

1. கௌஷீ-உ. 3-5. ப்ரஜ்ஞயா - (ஜீவன்) ஜ்ஞாநத்தாலே, வாசம் - வாக்கை, ஸமாருஹ்ய - அடைந்து, வாசா - வாக்கினால், ஸர்வாணி - ஸமஸ்தமான, நாமாநி - பேர்களையும், ஆப்நோதி - அடைகிறான். அதாவது சொல்லுகிறான் (இவ்விதமாக ஒவ்வொரு வாக்யத்திலும் க்ரமமாக அர்த்தத்தை அறிந்துகொண்டு) விஜ்ஞாதவ்யம் - அறியத்தக்க, காமம் - இஷ்டத்தை, ஆப்நோதி - அடைகிறான்.— (என்று முடித்துக்கொள்ளவும்.)

2. ஸ்ரீகீதாபாஷ்யம், 2-25, சேதநாதி யோக்யாநி - வெட்டுகிறது முதலானவைகளுக்கு யோக்கியங்களான, கடபடாதீநி - பானை, துணி முதலான, வஸ்தூநி - வஸ்துக்கள், யை: ப்ரமாணை: - யாதொரு கண் முதலிய இந்திரியங்களாலே, வ்யஜ்யந்தே - ப்ரகாசிக்கின்றனவோ, தை: - அந்த இந்திரியங்களாலே அயமாத்மா - இந்த ஜீவாத்மா,

இப்படி ஈஶ்வர விஷயத்தில் ஆத்மாவுக்குண்டான ஶேஷத்வம்தான், "யஸ்யாஸ்மி ந தமந்தரேமி" (யஸ்யாஸ்மி ந தமந்தரேமி)[1] "பரவாநஸ்மி காகுத்ஸ்த த்வயி வர்ஷஶதம் ஸ்திதே" (பரவாநஸ்மி காகுஸ்த்த த்வயி வர்ஷஶதம் ஸ்திதே)[2] "தாஸபூதாஸ் ஸ்வதஸ் ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந: | நாந்யதா லக்ஷணம் தேஷாம் பந்தே மோக்ஷே ததைவ ச" (தாஸபூதாஸ் ஸ்வதஸ் ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந: | நாங்யதா லக்ஷணம் தேஷாம் பந்தே மோக்ஷே ததைவ ச)[3] "ஸ்வோஜ்ஜீவநேச்சா யதி தே ஸ்வஸத்தாயாம் ஸ்ப்ருஹா யதி | ஆத்மதாஸ்யம் ஹரேஸ் ஸ்வாம்யம் ஸ்வபாவஞ்ச ஸதா ஸ்மர" (ஸ்வோஜ்ஜீவநேச்சா யதி தே ஸ்வஸத்தாயாம் ஸ்ப்ருஹா யதி | ஆத்மதாஸ்யம் ஹரேஸ் ஸ்வாம்யம் ஸ்வபாவஞ்ச ஸதா ஸ்மர)[4] என்று ஶ்ருதி ஸ்ம்ருத்யாதிகளிலே சொல்லப்படாநின்றதிறே.

---

1. யஜுர்வேதம். யஸ்ய - யாதொருவனுக்கு, அஸ்மி - சேஷப்பட்டவனாயிருக்கிறேனோ, தம் - அந்த பரமாத்மாவை, நாந்தரேமி - அதிக்ரமிக்கமாட்டேன்.

2 ஸ்ரீ ரா. ஆ. 15-6. ஹே காகுத்ஸ்த - ககுஸ்தவம்சத்தில் பிறந்தவனே ! த்வயி - தேவரீர், வர்ஷசதம் - அநேகமாயிரவருஷம், ஸ்திதே (ஸதி) - இருக்கும்போதும், அஹம் - நான், பரவான் - பரதந்த்ரனுகை, அஸ்மி - இருக்கிறேன்.

3. பகவச்சாஸ்த்ரம். பரமாத்மந: - ஈச்வரனுக்கு, ஸர்வே ஆத்மந: - எல்லா ஆத்மாக்களும், ஸ்வத: ஹி - ஸ்வரூபத்திலேயே, தாஸபூதா: - சேஷபூதர்கள், தேஷாம் - அவர்களுக்கு, பந்தே - பத்தாவஸ்தையிலும், மோக்ஷே - மோக்ஷ தசையிலும், அன்யதா லக்ஷணம் - வேறு ஸ்வாதந்த்ரிய லக்ஷணமானது, ந - இல்லை.

4. விஷ்ணுதத்வம். தே - உனக்கு, ஸ்வோஜ்ஜீவநேச்சா யதி - தன்னுடைய உஜ்ஜீவனத்தில் இச்சையுண்டாகிலும், ஸ்வ ஸத்தாயாம் - தன்ஸத்தையிலே, (அழியாமல் கிடக்கவேணுமென்று) ஸ்ப்ருஹா யதி - ஆசையுண்டாகிலும், ஸ்வபாவம் - ஸ்வாபாவிகமான, ஆத்ம தாஸ்யம் - ஆத்மாவினுடைய தாஸ்யத்தையும். ஹரே: - ஹரியினுடைய, ஸ்வாம்யம் - ஸ்வாமித்வத்தையும்: ஸதா - எப்போதும், ஸ்மர - நினை.

*ஒருவனுக்கு க்ருஹக்ஷேத்ராதிகளும் ஶேஷமாய், ஸ்வ ஶரீரமும் ஶேஷமாயிருக்கச் செய்தே, க்ருஹக்ஷேத்ராதிகள்- ப்ருதக் ஸித்த்யாதிகளுக்கு அர்ஹமாய், ஶரீரம் - அவற்றுக்கு அநர்ஹமாயிருக்கக் காண்கையாலே, இவ்வாத்ம வஸ்து ஈஶ்வரனுக்கு ஶேஷமாமிடத்திலிருக்கும்படி எங்ஙனே ? என்கிற ஶங்கையிலே அருளிச் செய்கிறார் ;*

> **41.** இதுதான் க்ருஹ க்ஷேத்ர புத்ர களத்ராதிகளைப் போலே, ப்ருதக்ஸித்த்யாதிகளுக்கு யோக்யமாம்படியிருக்கையன்றிக்கே, ஶரீரம் போலே அவற்றுக்கு அயோக்யமாயிருக்கை.

*(இதுதான்) என்று தொடங்கி. இதுதானென்றது - இப்படி ஈஶ்வரஶேஷமாகச் சொல்லப்பட்ட ஆத்மவஸ்து தான் என்றபடி.*

*(க்ருஹ க்ஷேத்ர புத்ர களத்ராதிகளைப் போலே) என்கிற விடத்தில், ஆதிசப்தத்தாலே - தந தாந்ய ஆராம தாஸ தாஸீ வர்கங்களைச் சொல்லுகிறது.*

*(ப்ருதக்ஸித்த்யாதிகளுக்கு யோக்யமாம்படி இருக்கையன்றிக்கே) என்கிறவிடத்தில், ப்ருதக்ஸித்தியாவது - ஸஹோபலம்ப நியமமின்றிக்கே, ஶேஷியானவனை ஒழியவும் தான் ஸித்திக்கை.*

*ஆதிஶப்தத்தாலே, அநேக ஸாதாரணத்வத்தைச் சொல்லுகிறது. க்ருஹக்ஷேத்ர தாஸதாஸீ ப்ரப்ருதிகள், பித்ரு புத்ர ஜ்யேஷ்ட கநிஷ்டாதிகளுக்கு ஸாதாரண ஶேஷமாயிருக்கும்; புத்ரனும் மாதா பித்ரு பித்ருவ்யாதிகளுக்கு ஸாதாரண ஶேஷமாயிருக்கும்; களத்ரமும், "𑌸𑍋𑌮𑌃 𑌪𑍍𑌰𑌥𑌮𑍋 𑌵𑌿𑌵𑌿𑌦𑍇 𑌗𑌨𑍍𑌧𑌰𑍍𑌵𑍋 𑌵𑌿𑌵𑌿𑌦 𑌉𑌤𑍍𑌤𑌰𑌃 𑌤𑍃𑌤𑍀-𑌯𑍋𑌽𑌗𑍍𑌨𑌿𑌷𑍍𑌟𑍇 𑌪𑌤𑌿𑌸𑍍𑌤𑍁𑌰𑍀𑌯𑌸𑍍𑌤𑍇 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌜𑌾𑌃" (ஸோமஃ ப்ரதமோ விவிதே கந்தர்வோ விவித உத்தரஃ த்ருதீயோக்நிஷ்டேபதிஸ்துரீயஸ்தே மநுஷ்யஜாஃ)[1] என்று பாணிக்*

---

1. *மந்த்ரப்ரச்நம். 1-3. ஸோம: - சந்திரன், ப்ரதம: பதி: - முதல் பர்த்தாவாக, விவிதே - அறியக்கடவாய், கந்தர்வ: - கந்தர்வன்,*

ரஹாணாந்தரம் ஸோமாதிகளுக்கு ஶேஷமாகச் சொல்லு கையாலே, அநேக ஸாதாரணமாயிருக்கும்; இப்படியன் றிக்கே, (ஶரீரம் போலே அவற்றுக்கு அயோக்யமாயிருக் கை)யாவது — அப்ருதக்ஸித்தமாய், அநந்யஸாதாரணமான ஶரீரம்போலே, ப்ருதக்ஸித்த்யாதிகளானவற்றுக்குத் தான் அநர்ஹமாயிருக்கை.

(ப்ருதக்ஸ்தித்யாதிகளுக்கு) என்று பாடமாகில், ஆதி ஶப்தத்தாலே—ப்ருதகுபலப்தியைச் சொல்லுகிறது. அப் போதைக்கு, இதுதான் க்ருஹ க்ஷேத்ர புத்ர மித்ர களத்ரா திகளைப் போலே, பிரிந்து நிற்கைக்கும், பிரிந்து தோற்று கைக்கும் அர்ஹமாம்படியிருக்கை யன்றிக்கே, ஶரீரம் போலே ததுபயாநர்ஹமாயிருக்குமென்று பொருளாகக் கடவது.

“அயமேவாத்மஶரீரபாவ: ப்ருதக்ஸித்த்யநர்ஹாதாரா- தேயபாவ:, நியந்த்ருநியாம்யபாவ:, ஶேஷஶேஷிபாவ- ஶ்ச” (அயமேவாத்மஶரீரபாவ: ப்ருதக்ஸித்த்யநர்ஹாதாரா தேயபாவ:, நியந்த்ருநியாம்யபாவ: ஶேஷஶேஷிபாவஶ்ச)[1] என்றும், “யஸ்ய சேதநஸ்ய யத்த்ரவ்யம் ஸர்வாத்மநா ஸ்வார்- த்தே நியந்தும் தாரயிதும் ச ஶக்யம் தச்சேஷதைகஸ்- வரூபம் ச தத்தஸ்ய ஶரீரம்” (யஸ்ய சேதநஸ்ய யத் த்ரவ்யம் ஸர்வாத்மநா ஸ்வார்த்தே நியந்தும் தாரயிதும் ச

---

உத்தர: - அடுத்த பர்த்தாவாக, விவிதே - அறியக்கடவாய், அக்நி: - அக்நியானவன், தே - உனக்கு, த்ருதீய: - மூன்றுவது பர்த்தாவாக அறியக்கடவாய். மநுஷ்யஜா: - மநுஷ்யன், தே - உனக்கு, துரீய: - நான்காவது பர்த்தாவாக அறியக்கடவாய்.

1- வேதார்த்தஸங்க்ரஹம். அயமேவ - இதுதானே, (அதாவது மேற்சொல்லுகிறதுதானே,) ஆத்மசரீரபாவ: - ஆத்மாவினுடையவும் சரீரத்தினுடையவும் லக்ஷணம், (அதாவது) ப்ருதக் ஸ்தித்யநர்ஹ: - வேறாகப் பிரிக்கத்தகாததான, ஆதாராதேய பாவ: - சரீரம் ஆதாரமாயும் ஆத்மா ஆதேயமாயுமிருக்கும் தன்மையும், நியந்த்ரு நியாம்ய பாவ: - ஆத்மா நியந்தாவாயும் சரீரம் நியாம்யமாயுமிருக்கும் தன்மை யும், சேஷ சேஷிபாவச்ச - சரீரம் சேஷமாயும் ஆத்மா சேஷியாயு மிருக்கும் தன்மையும்-

ஶக்யம் தச்சேஷைதகஸ்வரூபம் ச தத்தஸ்ய ஶரீரம்)[1] என்றும் வேதார்த்த ஸங்க்ரஹத்திலும், ஸ்ரீ பாஷ்யத்திலும், ஆத்மஶரீரபாவலக்ஷணமாக பாஷ்யகாரர் அருளிச்செய்த நியந்த்ரு நியாம்யபாவம், ஆதார ஆதேயபாவம், ஶேஷ ஶேஷிபாவமாகிற மூன்றும் இவ்விடத்திலே சொல்லப்படுகையாலே. "யஸ்யாத்மா ஶரீரம் யஸ்யாக்ஷரம் ஶரீரம்" (யஸ்யாத்மா ஶரீரம் யஸ்யாக்ஷரம் ஶரீரம்)[2] என்று, இத்யாதி ஶ்ருதிஸித்தமான ஆத்மாவினுடைய பரமாத்ம ஶரீரத்வம் அர்த்தாத் உக்தமாயிற்று.

ஆக, கீழே ஆத்மஸ்வரூபத்தினுடைய ஶோதநம் பண்ணப் பட்டது.

இனி, ஏவம்பூதமான ஆத்மஸ்வரூபம், அநாத்யசித் ஸம்பந்த தத்வியோக தத் அநந்வயங்களாலே பத்த முக்த நித்யரூபேண த்ரிப்ரகாரமாயிருக்கும்படியை அருளிச் செய்கிறார்;

42. ஆத்மஸ்வரூபம்தான், பத்த முக்த நித்யரூபேண மூன்று படிப் பட்டிருக்கும்.

(ஆத்மஸ்வரூபம்தான் பத்த முக்த நித்யரூபேண மூன்று படிப் பட்டிருக்கும்) என்று.

இதில், பத்தரென்கிறது ஆரை? என்னும் ஆகாங்க்ஷையிலே அருளிச்செய்கிறார்;

---

1. வேதார்த்த ஸங்கிரஹம். யஸ்ய - யாதொரு, சேதநஸ்ய - சேதனனுக்கு, யத் - யாதொரு, த்ரவ்யம் - த்ரவ்யமானது, ஸர்வாத்மநா - ஸர்வப்ரகாரத்தாலும், ஸ்வார்த்தே - தன்னுடைய பிரயோஜனத்திற்காக, நியந்தும் - நியமிக்கைக்கும், தாரயிதும் ச - தரிப்பிக்கைக்கும் - சக்யம் - யோக்யமாயிருக்கிறதோ. தச்சேஷைதக ஸ்வரூபம் - அவனுக்கு சேஷமாயிருக்கையே ஸ்வபாவமா யுடைத்தாயிருக்கிறதோ, தத் - அதுவானது, தஸ்ய - அவனுக்கு, சரீரம் - சரீரமாகிறது.

2. யஸ்ய - யாதொரு ஈச்வரனுககு, ஆத்மா - ஜீவாத்மா, சரீரமாயிருக்கிறது, யஸ்ய - யாதொரு ஈச்வரனுக்கு, அக்ஷரம் - மூலப்ரக்ருதியானது, சரீரம் - சரீரம்.

### 43. பத்தரென்கிறது - ஸம்ஸாரிகளை.

(பத்தரென்கிறது - ஸம்ஸாரிகளை) என்று. அவர்களாகிறார் - தில தைலவத், தாரு வஹ்நிவத், துர்விவேச குணத்ரயாத்மகாநாதி பகவந் மாயா திரோஹித ஸ்வஸ்வரூபராய், அநாத்யவித்யா ஸஞ்சிதாநந்த புண்யபாபரூப கர்ம வேஷ்டிதராய், தத்தத்கர்மாநுகுண விவித விசித்ர தேவாதிரூப தேஹவிசேஷ ப்ரவிஷ்டராய், அவ்வோ தேஹங்களிலே அஹம்புத்தியையும், தேஹாநுபந்திகளிலே மமதா புத்தியையும் பண்ணி, துர்வாஸநாருசி விவசராய், ஸ்வஸ்வ கர்மாநுகுண ஸுகதுக்கபரம்பரைகளை அநுபவிக்குமவர்கள்.

இனி, முக்தரென்கிறது ஆரையென்னும் ஆகாங்க்ஷையிலே அருளிச்செய்கிறார்;

### 44. முக்தரென்கிறது - ஸம்ஸாரஸம்பந்தமற்றவர்களை.

(முக்தரென்கிறது - ஸம்ஸார ஸம்பந்தமற்றவர்களை) என்று. அவர்களாகிறார் - அநாதிகர்ம ப்ரவாஹ ப்ரயுக்தமான ஸம்ஸார ஸம்பந்தம் நடவாநிற்கச் செய்தே, மோக்ஷருசிக்கு ப்ரதிபந்தகமான கர்ம விசேஷம் அநுபவத்தாலேயாதல், ஸாமாந்யேந அநுஷ்டிக்கும் ப்ராயஶ்சித்த கர்மங்களாலேயாதல், அநபிஸம்ஹித பலமாய் அத்யுத்கடமான ப்ராமாதிக புண்யங்களாலேயாதல் க்ஷயித்து, அதடியாக ஜாயமாநதசையில் பகவத்கடாக்ஷத்தாலுண்டான ஸத்வோத்ரேகத்தாலே மோக்ஷருசி பிறந்து, ஸத்குருஸமாஶ்ரயண ஸம்ப்ராப்த வேதாந்த வேத்ய பரப்ரஹ்மஜ்ஞாநராய், தத்ப்ராப்திரூபமோக்ஷ ஸித்த்யர்த்தமாக, ஸ்வவர்ண ஸ்வாஶ்ரமோசிதமான கர்மங்களை, பல ஸங்க கர்த்ருத்வ த்யாக பூர்வகமாக அநுஷ்டித்து, "யஜ்ஞேந வாபவநுததி" (தர்மேண பாபமபநுததி)[1] என்றும், "கஷாயே கர்மபிஃ பக்வே ததோ ஜ்ஞாநம் ப்ரவர்த்ததே" (கஷாயே கர்மபிஃ

1. தை. உ. 2-6-50. தர்மேண - தான் செய்த தர்மத்தாலே பாபம் - பாபத்தை, அபநுததி - போக்கடிக்கிறான்.

பக்வே ததோ ஜ்ஞாநம் ப்ரவர்ததே)[1] என்றும் சொல்லுகிறபடியே, அந்த ஸத்கர்மாநுஷ்டாநத்தாலே ஜ்ஞாநோத்பத்தி விரோதி ப்ராசீந கர்மம் க்ஷயித்தவாறே அந்தஃகரணம் நிர்மலமாய், பகவதேகாவலம்பியான ஸம்யக்ஜ்ஞாநமுதித்து, அநந்தரம், "𑌜𑌨𑍍𑌮𑌾𑌨𑍍𑌤𑌰𑌸𑌹𑌸𑍍𑌰𑍇𑌷𑍁 𑌤𑌪𑍋𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌮𑌾𑌧𑌿𑌭𑌿𑌃 । 𑌨𑌰𑌾𑌣𑌾𑌂 𑌕𑍍𑌷𑍀𑌣𑌪𑌾𑌪𑌾𑌨𑌾𑌂 𑌕𑍃𑌷𑍍𑌣𑍇 𑌭𑌕𑍍𑌤𑌿𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾𑌯𑌤𑍇" (ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு தபோஜ்ஞாநஸமாதிபி: | நராணாம் க்ஷீணபாபாநாம் க்ருஷ்ணே பக்தி: ப்ரஜாயதே)[2] என்கிறபடியே, இப்படி பஹுதர ஜந்மஸாத்யமான கர்மஜ்ஞாநங்களாலே பிறந்த தைலதாராவதவிச்சிந்ந ஸ்ம்ருதிஸந்தாநரூப பக்திமூலமாக வரும் பகவத்ப்ரஸாதத்தாலேயாதல், அன்றிக்கே தன்னுடைய நிர்ஹேதுகஸௌஹார்த விசேஷத்தாலே யாத்ருச்சிகாதி ஸுக்ருத பரம்பரைகளைக் கல்பித்து, அதடியாக விசேஷ கடாக்ஷத்தைப் பண்ணி, அநந்தரம் அத்வேஷத்தை ஜநிப்பித்து, ஆபிமுக்யத்தை உண்டாக்கி, ஸாத்விக ஸம்பாஷணத்தை விளைத்து, அவ்வழியாலே ஸதாசார்ய ஸமாஶ்ரயணத்திலே மூட்டி, ததுபதேஶமுகேந தத்வஜ்ஞாநத்தைப் பிறப்பித்தல், தன்னுடைய விஶேஷகடாக்ஷம் தன்னாலே தத்வஜ்ஞாநத்தைப் பிறப்பித்தல் செய்து, மஹாவிஶ்வாஸ பூர்வகமாகத் தன் திருவடிகளே உபாயமென்று நிற்கும்படி பண்ணும் பகவதாகஸ்மிகக்ருபையாலே உபாயாந்தர விஷயத்தில் பிறந்த துஷ்கரத்வாதி புத்தி மூலமாக வரும் ப்ரபதநமூலமான பகவத் ப்ரஸாதத்தாலேயாதல், ஸாம்ஸாரிக ஸகலதுரிதங்களும் கழிந்து ஆவிர்பூத ஸ்வரூபராய் பகவதநுபவ கைங்கர்யைகபோகரானவர்கள்.

---

1. **கர்மபி:** - ஸத்கர்மாநுஷ்டானங்களாலே, **கஷாயே** - ஜ்ஞானோத்பத்திவிரோதியான ப்ராசீன கர்மமானது, **பக்வே** - க்ஷயித்தவளவில், **தத:** - பின்பு, **ஜ்ஞானம்** - ஜ்ஞானமானது, **ப்ரவர்ததே** - உண்டாகிறது.

2. லக்வத்ரிஸம்ருதி. **ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு** - ஆயிரம் ஜன்மங்களில், **தபோஜ்ஞானஸமாதிபி:** - தபஸினாலும், தியானத்தாலும், ஸமாதியாலும், **க்ஷீணபாபாநாம்** - நசித்த பாபத்தையுடைய, **நராணாம்** - மனிதர்களுக்கு, **க்ருஷ்ணே** - க்ருஷ்ணனிடத்தில், **பக்தி:** - பக்தியானது, **ப்ரஜாயதே** - உண்டாகிறது.

அவிசேஷேண (முக்தரென்கிறது - ஸம்ஸாரஸம்பந்த மற்றவர்களை) என்கையாலே, பகவதநுபவத்தில் ருசியின்றிக்கே, தத் ஸமாஶ்ரயணத்தைப் பண்ணி ஸம்ஸார நிவ்ருத்தியை உண்டாக்கிக் கொண்டு தேஶவிஶேஷத்திலே போய் ஸ்வஸ்வரூபாநுபவம் பண்ணியிருக்கும் கேவலரையும் சொல்லிற்றாயிற்று.

இனி, நித்யரென்கிறது ஆரை என்னும் ஆகாங்க்ஷையிலே அருளிச் செய்கிறார்;

45. நித்யரென்கிறது - ஒருநாளும் ஸம்ஸரியாத ஶேஷ ஶேஷாஶநாதிகளை.

(நித்யரென்கிறது - ஒருநாளும் ஸம்ஸரியாத ஶேஷ ஶேஷாஶநாதிகளை) என்று. ஒருநாளும் ஸம்ஸரியாத என்கையாலே—முக்தரை வ்யாவர்த்திக்கிறது.. நிவ்ருத்த ஸம்ஸாரரிறே அவர்கள்; இவர்கள் அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தரிறே. "[illegible]" (அஹ்ருதஸஹஜதாஸ்யாஸ் ஸூரயஸ்ஸ்ரஸ்தபந்தா:)[1] என்றாரிறே பட்டர். "[illegible]" (நித்யோ நித்யாநாம்)[2] என்றும், "[illegible]" (ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜாவீஶநீஶௌ)[3] என்றும் சொல்லுகிறபடியே, ஆத்மஸ்வரூபம் நித்யமாயிருக்க, "[illegible]" (அஸந்நேவ)[4] என்பது, "[illegible]" (ஸந்தமேநம்)[5] என்பதாகிறது—பகவத்விஷயஜ்ஞாநராஹித்ய ஸாஹித்யங்களாலேயிறே. ஆகையால், இவர்களை

---

1. ஸ்ரீரங்க-ஸ்த. 2-32. அஹ்ருத ஸஹஜ தாஸ்யா: - அபஹரிக்கப்படாமலிருக்கிற ஸஹஜமான கைங்கர்யத்தையுடைய, (அதாவது - ஒருவராலும் தடங்கலில்லாத நித்ய கைங்கர்யத்தை யுடையவர்களாயும்) ஸ்ரஸ்தபந்தா: - ஸம்ஸாரஸம்பந்த மற்றவர்களாயுமிருக்கிற, ஸூரய: - நித்யஸூரிகள்.

2. 26-ம் பக்கம் பார்க்க.

3. " "

4. தை. உ. 1-6-1. அஸந்நேவ - இல்லாதவனாகவே.

5. தை. உ- 1-6-4. ஏநம் ஸந்தம் - இவனை இருக்கிறவனாக.

நித்யரென்கிறதும், பகவத்ஜ்ஞாநத்துக்கு ஒருநாளும் ஸங்கோசமில்லாமையாலே என்று கொள்ளவேணும். இந்த வைபவத்தைப் பற்றவிறே, "யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்தி தேவா:" (யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்தி தேவா:)[1] என்றும், "யத்ர ருஷய: ப்ரதமஜா யே புராணா:" (யத்ர ருஷய: ப்ரதமஜா யே புராணா:)[2] என்றும் ச்ருதி இவர்களை ச்லாகிக்கிறது. பாஷ்யகாரரும் இவர்களுடைய வைபவத்தை, "ஸ்வச்சந்தாநுவ்ருத்தி" (ஸ்வச்சந்தாநுவ்ருத்தி)[3] இத்யாதியாலே ஸ்ரீகத்யத்திலே பரக்க அருளிச்செய்தார்.

ஆகையாலே, (ஒருநாளும் ஸம்ஸரியாத) என்ற போதே இவர்களுடைய வைபவமெல்லாம் சொல்லிற்றாயிற்று.

அசேஷ சேஷவ்ருத்தியிலும் அந்விதனாய், கைங்கர்யபரர்க்கெல்லாம் படிமா*வாயிருக்கையாலே-திருவநந்தாழ்வானை சேஷனென்கிறது. "நிவாஸசய்யாஸநபாதுகாம்சுகோபதாநவர்ஷாதபவாரணாதிபி: | சரீரபேதைஸ்தவ சேஷதாம் கதைர்யதோசிதம் சேஷ இதீரிதே ஜநை:" (நிவாஸசய்யாஸநபாதுகாம்சுகோபதாநவர்ஷாதபவாரணாதிபி: | சரீரபேதைஸ்தவ சேஷதாம் கதைர்யதோசிதம் சேஷ இதீரிதே ஜநை:)[4] என்றிறே ஆளவந்தாரும் அருளிச்செய்தது.

---

1. புருஷஸூ. யத்ர - யாதொரு பரமபதத்திலே, - பூர்வே - ஸாத்யா: - ப்ரதமப்ராப்யபூதர்களான, தேவா: - நித்ய ஸூரிகள், ஸந்தி - இருக்கின்றார்கள்.

2, யஜுஷி. 3-8-9. யத்ர - எந்த பரமபதத்தில், ருஷய: - எல்லாவற்றையும் ஸாக்ஷாத்கரிக்கக்கூடிய, யே - எந்த நித்யஸூரிகள், ப்ரதமஜா: - முன்பே உண்டானவர்கள், புராணா: - பழமையானவர்கள்.

3. கத்யம். ஸ்வச்சந்தாநுவ்ருத்தி - ஈச்வரனுடைய அபிப்ராயத்தைப் பின் செல்லா நின்றிருக்கிற.

* படிமா - உபமாநம்.

4. ஸ்தோத்ரரத்நம். 40. நிவாஸ - எழுந்தருளியிருக்கிற திருமாளிகையாயும், சய்யா - திருக்கண்வளர்ந்தருளுகைக்குப் படுக்கையா

மற்றுள்ள ததீயரைப் போலே அநியமமாயிராதே, ஸர்வேஶ்வரன் அமுது செய்த ஶேஷமொழிய அமுது செய்யாத நியமத்தைப் பற்ற, ஶேஷாஶநரென்று – ஸேனை முதலியாரை நிரூபிக்கிறது. "𑌤𑍍𑌵𑌦𑍀𑌯𑌭𑍁𑌕𑍍𑌤𑍋𑌜𑍍𑌝𑌿𑌤𑌶𑍇𑌷-𑌭𑍋𑌜𑌿𑌨𑌾" (த்வதீயபுக்தோஜ்ஜிதஶேஷ போஜிநா)[1] என்றுரிறே ஆளவந்தாரும். "𑌵𑌨𑌾𑌦𑍍𑌰𑌿𑌨𑌾𑌥𑌸𑍍𑌯 𑌸𑍁𑌸𑍁𑌨𑍍𑌦-𑌰𑌸𑍍𑌯 𑌵𑍈 𑌪𑍍𑌰𑌭𑍁𑌕𑍍𑌤𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌶𑍍𑌯𑌤 𑌸𑍈𑌨𑍍𑌯𑌸𑌤𑍍𑌪𑌤𑌿𑌃" (வநாத்ரிநாதஸ்ய ஸுஸுந்தரஸ்ய வை ப்ரபுக்தஶிஷ்டாஶ்யத ஸைந்யஸத்பதி:)[2] என்று ஆழ்வானும் அருளிச் செய்தார்.

ஆதிஶப்தத்தாலே – "𑌶𑍇𑌷𑌶𑍇𑌷𑌾𑌶𑌨𑌗𑌰𑍁𑌡𑌪𑍍𑌰𑌮𑍁𑌖𑌨𑌾𑌨𑌾𑌵𑌿𑌧𑌾𑌨𑌨𑍍𑌤𑌪𑌰𑌿𑌜𑌨𑌪𑌰𑌿𑌚𑌾𑌰𑌿𑌕𑌾𑌪𑌰𑌿𑌚𑌰𑌿𑌤𑌚-𑌰𑌣𑌯𑍁𑌗𑌳𑍇" (ஶேஷஶேஷாஶநகருடப்ரமுகநாநாவிதாநந்த பரிஜநபரிசாரிகாபரிசரிதசரணயுகள)[3] என்கிறபடியே, பகவத் கைங்கர்யைக போகராயிருந்துள்ள வைநதேய ப்ரமுகரான நித்யஸித்தரையெல்லாம் சொல்லுகிறது.

---

யும், ஆஸன - இருந்தால் சிங்காஸனமாயும், பாதுகா - நின்றால் மர வடியாயும், அம்சுக - திருப்பரிவட்டமாயும், உபதாந - புல்கு மணையாயும், வர்ஷாதபவாரண - மழையையும் வெய்யிலையும் தடுக்கக் கூடிய திருவெண் கொடையாயும், ஆதிபி: - இவைமுதலியவைகளாக, யதோசிதம் - உசிதப்படி, தவ - தேவரீருக்கு, சேஷதாம் - சேஷமாயிருக்கையை, கதை: - அடைந்திருக்கிற - சரீரபேதை: - சரீரபேதங்களாலே, சேஷ இதி - சேஷனென்று, ஜநை: - நித்யஸூரிகளாலே, ஈரிதே - சொல்லப்படுகிற திருவனந்தாழ்வான் மேல் ... ... ...

1. ஸ்தோ ரத். 42. த்வதீயபுக்தோஜ்ஜித சேஷபோஜிநா - தேவரீர் அமுதுசெய்துவிட்ட மிச்சத்தை அமுது செய்கிறவரான.

2. ஸு்ந்-ஸ்த 74. அத-பின்பு, ஸுஸுந்தரஸ்ய - மிகவும் ஸுந்தரமாயிருக்கிற, வநாத்ரிநாதஸ்ய - திருமாலிருஞ் சோலைமலைக்கு நாதனை பெருமாளுடைய, ப்ரபுக்த சிஷ்டாசீ - அமுது செய்த மிச்சத்தை அமுது செய்கிற, ஸைந்ய ஸத்பதி: - சேனை முதலியாரானவர்.

3. கத்யம். சேஷ - ஆதிசேஷனென்ன, சேஷாசந - ஸேனை முதலியாரென்ன, கருட - பெரிய திருவடியென்ன, ப்ரமுக - இவர்கள் முதலான, நாநாவித - நானாவிதமான, அனந்தபரிஜந - எண்ணிறந்த பரிஜனங்களென்ன, பரிசாரிகா - பரிசாரிகைகளான ஸ்திரீ

பூர்வோக்தமான ஸ்வரூப வைலக்ஷண்யத்தையுடைய ஆத்மாவுக்கு அவித்யாதிதோஷஸம்பந்தம் வந்தபடி என்? என்கிற சங்கையிலே, ஸத்ருஷ்டாந்தமாக தத்ஹேதுவை அருளிச் செய்கிறார்;

**46. ஜலத்துக்கு அக்நிஸம்ஸ்ருஷ்டஸ்த்தாலீ ஸம்ஸர்கத்தாலே ஔஷ்ண்ய ஶப்தாதிகளுண்டாகிறப்போலே, ஆத்மாவுக்கும் அசித்ஸம்பந்தத்தாலே அவித்யாகர்மவாஸநாருசிகளுண்டாகிறன.**

(ஜலத்துக்கு) என்று தொடங்கி. அதாவது - ஸ்வபாவத ஏவ நிர்விகாரமாய், ஶீதளமாயிருக்கிற ஜலத்துக்கு, அக்நியோடே ஸம்ஸ்ருஷ்டையான ஸ்தாலியோட்டை ஸம்ஸர்கத்தாலே ஔஷ்ண்யஶப்தோத்ரேக ரூபங்களான விகாரங்களுண்டாகிறப்போலே, ஸ்வத: ஜ்ஞாநாநந்தாமல ஸ்வரூபனான ஆத்மாவுக்கும் குணத்ரயாஶ்ரய அசித்ஸம்பந்தத்தாலே அவித்யா கர்ம வாஸநாருசிகளுண்டாகிறன என்கை.

இவருடைய திருத்தம்பியாரும், ஆசார்ய ஹ்ருதயத்திலே "அவித்யாகாரணமநாத்யசித்ஸம்பந்தம்" (அவித்யாகாரணமநாத்யசித்ஸம்பந்தம்)[1] என்று அருளிச்செய்தாரிறே.

இப்படி, ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலே "நிர்வாணமய ஏவாயமாத்மா ஜ்ஞாநமயோऽமல: । து:காஜ்ஞாநமலா தர்மா: ப்ரக்ருதேஸ்தே ந சாத்மந: । ஜலஸ்ய நாக்நிஸம்ஸர்க: ஸ்தாலீஸங்காத்ததாபி ஹி । ஶப்தோத்ரேகாதிகாந் தர்மாந் தத்கரோதி யதா ந்ருப । ததாத்மா ப்ரக்ருதேஸ்ஸங்காதஹம்மாநாதிதூஷித: । பஜதே ப்ராக்ருதாந் தர்மாநந்யஸ்தேப்யோऽபி ஸோऽவ்யய:" (நிர்வாணமய ஏவாயமாத்மாஜ்ஞாநமயோமல: । து:காஜ்ஞாநமலா தர்மா: ப்ரக்ருதேஸ்தே ந சாத்மந: । ஜலஸ்ய சாக்நிஸம்ஸ்ருஷ்டஸ்தாலீஸங்காத் ததாபி ஹி । ஶப்தோத்ரேகாதிகாந் தர்

களென்ன இவர்களால், பரிசரித - கைங்கரியம் பண்ணப்பட்ட, சரணயுகள - இரண்டு திருவடிகளையுடையவனே!

1. ஆசார்ய ஹ்ருதயம்

மாந் தத்கரோதி யதாமுநே | ததாத்மா ப்ரக்ருதௌ ஸங்காதஹம்மாநாதி தூஷிதஃ | பஜதே ப்ராக்ருதாந் தர்மாநந்யஸ்தேப்யோபி ஸோவ்யயஃ)[1] என்று சொல்லப்பட்டது.

அவித்யையாவது – அஜ்ஞாநம். அதுதான் ஜ்ஞாநாநுதய, அந்யதாஜ்ஞாந, விபரீதஜ்ஞாந ரூபேண அநேகவிதமாயிருக்கும்.

கர்மமாவது – கரணத்ரயக்ருதமாய், புண்யபாபாத்மகமான க்ரியாவிஶேஷம். அதில், புண்யம் – ஐஹிக ஆமுஷ்மிக நாநாவித போக ஸாதநதயா பஹுவிதமாயிருக்கும். பாபமும் – அக்ருத்யகரண க்ருத்யாகரண பகவதபசார பாகவதாபசார அஸஹ்யாபசாரரூபேண அநந்தமாயிருக்கும்.

வாஸனையாவது – முன்பு செய்து போந்தவற்றிலே மீளவும் மூளுகைக்குறுப்பான ஸம்ஸ்காரம். இதுதான், ஹேதுபேதத்தாலே பஹுவிதமாயிருக்கும்.

ருசியாவது – ரஸாந்தரத்தாலும் மீட்கவொண்ணாதபடி ஒன்றிலே செல்லுகிற விருப்பம். இதுவும், விஷயபேதத்தாலே பஹுவிதமாயிருக்கும்.

---

1. வி. பு. 6-7-22. அயம் ஆத்மா - இந்த ஜீவாத்மாவானவன் ஜ்ஞானமய: - ஜ்ஞான ஸ்வரூபனாயும், அமல: - நிர்மலனாயும், நிர்வாணமய ஏவ - ஸுகரூபனாயுமிருக்கிறான், தே து - அந்த, துக்கஜ்ஞான மலா தர்மா: - துக்கமயமாயும், அஜ்ஞானமயமாயும் தோஷமாயுமிருக்கிற அந்த தர்மங்கள், ப்ரக்ருதே: - ப்ரக்ருதியினுடைய குணங்கள், ந ஆத்மந: - ஆத்மாவினுடைய குணங்களல்ல, ஜலஸ்ய - ஜலத்திற்கு, அக்நிஸம்ஸ்ருஷ்ட ஸ்தாலீ ஸங்காத் - அக்நியோடு ஸம்பந்தப்பட்ட பாத்திரத்தினுடைய ஸம்பந்தத்தாலே, யதா - எப்படி, சப்தோத்ரேகாதிகாந் - அதிகமான சப்தம், உஷ்ணம் இவை முதலான தர்மான் - தர்மங்களை அதாவது விகாரங்களை. தத் - அந்த அக்நியானது, கரோதி - பண்ணுகிறதோ, ததாபி ஹி - அந்த ப்ரகாரம், ஆத்மா - ஜீவாத்மாவானவன், ப்ரக்ருதௌ - ப்ரக்ருதியினிடத்திலே ஸங்காத் - ஸம்பந்தத்தாலே, அஹம்மாநாதி தூஷித: - அஹங்கார மமகாரங்களால் தூஷிக்கப்பட்டவனாய்க் கொண்டு, ப்ராக்ருதான் - ப்ரக்ருதி ஸம்பந்தமான, தர்மான் - தர்மங்களை, பஜதே அடைகிறான், அவ்யய: ஸ: - நாசமற்றவனான அந்த ஆத்மா, தேப்ய: - ப்ராக்ருத தர்மங்களைக் காட்டிலும், அந்ய: - விலக்ஷணன்.

அவித்யாகர்மவாஸநாருசிகளுண்டாயிற்றன என்றுதே, உண்டாகிறன என்கையாலே - இவற்றினுடைய ப்ரவாஹரூபத்வம் சொல்லப்பட்டது.

இப்படி, ஆத்மாவுக்கு வந்தேறியான அவித்யாதிகள் தானே எவ்வவஸ்தையிலே கழிவது? என்னும் ஆகாங்க்ஷையிலே அருளிச்செய்கிறார்;

## 47. அசித்து கழிந்தவாறே அவித்யாதிகள் கழியுமென்பர்கள்.

(அசித்து கழிந்தவாறே அவித்யாதிகள் கழியுமென்பர்கள்) என்று. அதாவது - காரணநிவ்ருத்த்யா கார்ய நிவ்ருத்தியாகையாலே, அசித்ஸம்பந்த நிபந்தநமாக வந்த இவையும், தத் ஸம்பந்தம் கழிந்தவாறே கழியுமென்று தத்வவித்துக்கள் சொல்லுவர்களென்றபடி.

"என்பர்கள்" என்றவித்தை பரமதமாக்கி *மயர்வற மதிநலமருளப் பெற்றவர்களுக்கு பகவத்ப்ரஸாதவிஶேஷத்தாலே, அசித்துக் கழியும் முன்னே அவித்யாதிகள் கழியக் காண்கையாலே அந்த நியமமில்லை என்று இவருக்குக் கருத்து- என்று சொல்லுவாருமுண்டு. அது முக்யமன்று; அவர்கள் திருமேனியோடே இருக்கச் செய்தே, பரமபக்தி பர்யந்தமாகப் பிறந்ததேயாகிலும் "வினைப்படலம் விள்ள விழித்துன்னை மெய்யுற்றுலுள்ளவுலகளவும் யானுமுளனாவனென்கொலோ"[1] என்கையாலே "ஸர்வம் ஹ பஶ்ய: பஶ்யதி" (ஸர்வம் ஹ பஶ்ய: பஶ்யதி)[2] என்கிற முக்தாவஸ்தையில் வைஶத்யம் அசித்து கழிவதற்கு முன்பில்லாமையாலே.

ஆக, கீழ்ச் செய்ததாயிற்றது - ஆத்மஸ்வரூபம் பத்த முக்த நித்யரூபேண மூன்றுபடிப்பட்டிருக்குமென்றும், அதில் பத்தசேதநர்க்கு அவித்யாத்யுத்பத்திமூலமும், தந்நிவ்ருத்திக்ரமமும் சொல்லிநின்றது.

---

1. பெ. தி. அந். 76.

2. சாந்: 7-26-2. பச்ய: - ப்ரஹ்ம தர்சியானவன், ஸர்வம் - ஸமஸ்த பதார்த்தங்களையும், பச்யதி - பார்க்கிறான்.

இப்படி உக்தமான த்ரிவிதாத்மவர்கமும், இத்தனை சேதநரென்று ஸங்க்யேயமாயிருக்குமோ? என்கிற சங்கை யிலே அருளிச்செய்கிறார்;

**48. இம்மூன்றும் தனித்தனியே அநந்தமாயிருக்கும்.**

(இம்மூன்றும் தனித்தனியே அநந்தமாயிருக்கும்) என்று. இம்மூன்றும் அநந்தமாயிருக்குமென்றால்—வர்க த்ரயமுமாக அநந்தமென்று தோற்றுமென்று நினைத்து, தனித்தனியே என்று விசேஷிக்கிறார். அநந்தமாயிருக்கு மென்றது – அஸங்க்யேயமாயிருக்குமென்றபடி.

உக்தமான ஜீவாநந்த்யத்துக்கு விரோதியான ஐகாத்ம்யவாதத்தை நிராகரிக்கிறார் மேல்;

**49. சிலர், ஆத்மபேதமில்லை; ஏகாத்மாவே உள்ள தென்றார்கள்.**

(சிலர் ஆத்மபேதமில்லை, ஏகாத்மாவே யுள்ளதென்றார் கள்) என்று தொடங்கி. சிலரென்று - அநாதரோக்தி யாலே அருளிச் செய்கிறார்.

இப்படிசொல்லுமவர்கள் தாங்கள் ஆரோ? என்னில்; ஜீவாத்வைத ப்ரதிபாதக சாஸ்த்ரத்தில் குத்ருஷ்டிகள். அதாவது - ப்ரஹ்மாத்வைதமென்றும், ஜீவாத்வைதமென் றும் சாஸ்த்ரப்ரதிபாத்யமான அத்வைதம் த்விவிதமாயி ருக்கும். அதில், ப்ரஹ்மாத்வைதமாவது - ப்ரகார்யத்வை தம். ஜீவாத்வைதமாவது – ப்ரகாராத்வைதம். இதுக்கு நியாமகமேது? என்னில்; ப்ரஹ்மப்ரகரணங்களிலே "𑌸𑌰𑍍𑌵𑌂 𑌖𑌲𑍍𑌵𑌿𑌦𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮" (ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம)[1] "𑌐𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌮𑌿𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂" (ஐததாத்ம்யமிதம் ஸர்வம்)[2]

---

1. சா. உப. 3-16. ஸர்வம் கலு இதம் ப்ரஹ்ம - காணப்படுகிற இவை எல்லாம் ப்ரஹ்மமே.

2. சா-உப. 6-7-8. இதம் ஸர்வம் - காண்கிற இந்த ஸமஸ்த ப்ரபஞ்சமும், ஐததாத்ம்யம் - அந்த பரமாத்மாவையே ஆத்மாவாக வுடையது.

"வுருஷ ஏவெஜம் ஸவஜம்" (புருஷ ஏவேதம் ஸர்வம்)[1] என்று ஸாமாநாதிகரண்யத்தாலே ப்ரஹ்மாத்வைதத்தை ப்ரதிபாதிக்கையாலும், ஸாமாநாதிகரண்யம் ப்ரகாரபேத விஶிஷ்ட ப்ரகார்யேகத்வ பரமாகையாலும், "ஏகஸ்ஸந் வஹுயா விவாரஃ" (ஏகஸ்ஸந் பஹுதா விசாரஃ)[2] என்று ப்ரகாரபஹுத்வம் கண்டோக்தமாகையாலும், ஐக்யவிதிக்கு ஶேஷமான "நேஹ நாநாஸ்தி" (நேஹ நாநாஸ்தி)[3] இத்யாதி பேதநிஷேதம் விஹிதைக்ய விரோதிபேதவிஷயமாகையாலும், ஸாமான்யநிஷேதம் விஹித வ்யதிரிக்த விஷயமாகையாலே ப்ரகாரி பஹுத்வ நிஷேத பரமாகையாலும், "ந தத்ஸமஶ்சாப்யதிகஶ்ச த்ருஶ்யதே" (ந தத் ஸமஶ்சாப்யதிகஶ்ச த்ருஶ்யதே)[4] என்று ப்ரஹ்ம துல்யப்ரகார்யந்தர நிஷேத கண்டோக்தியாலும் ப்ரகார்ய த்வைதமே ப்ரஹ்மாத்வைதம்.

ஜீவபஹுத்வம் ஶ்ருதிஸித்தமாகையாலும், அல்லாத போது பத்த முக்த வ்யவஸ்தாநுபபத்தியாலும், உபதேசாநுபபத்தியாலும், ஸுகாதிவ்யவஸ்தாநுபபத்தியாலும், "புமாந் ந தேவோ ந நரோ ந பஶுர் ந ச பாதபஃ। சதுர்விதோ விபேதோயம் மித்யாஜ்ஞாநநிபந்தநஃ॥ தேவாதிபேதேபத்வஸ்தே" (புமாந் ந தேவோ ந நரோ ந பஶுர் ந ச பாதபஃ। சதுர்விதோ விபேதோயம் மித்யா ஜ்ஞாநநிபந்தநஃ। தேவாதிபேதேபத்வஸ்தே)[5] இத்யாதி

1. புருஷஸூக்தம். இதம் ஸர்வம் - காண்கிற இந்த ஸமஸ்த ப்ரபஞ்சங்களும், புருஷ ஏவ - பரம புருஷனே.

2. யஜுஷி. ஏகஸ்ஸன் - ஒன்றுயிரானின்றுகொண்டு, பஹுதா - பஹுப்ரகாரமாக, விசார: - வ்யாபிக்கிறது.

3. கட-உப. இஹ - இந்த ப்ரபஞ்சத்தில், நாநா - அப்ரஹ்மாத்மகமான அநேக பதார்த்தமானவை, கிஞ்சந - ஒன்றும், நாஸ்தி - இல்லை.

4. ச்வே. உ. தத்ஸமச்ச - அவனுக்கு ஸமமானதும், அப்யதிகச்ச - மேலானதும், ந த்ருச்யதே - காணப்படவில்லை.

5. வி. பு. 2-13-98. புமான் - ஜீவாத்மாவானவன், ந தேவ: - தேவனல்லன், ந நர; - மனுஷ்யனுமல்லன், ந பசு: - பசுவுமல்லன், ந ச பாதப: - விருக்ஷமுமல்லன், அயம் - கீழ்ச் சொன்ன, சதுர்வித: -

களாலே, தேவாதி ஶரீரபேத விஶேஷநிஷேதம் கண்டோக்தமாகையாலும், முக்தாத்மாக்களுக்கு ஸாம்யத்தை ச்ருதி சொல்லுகையாலும் ஜீவாத்வைதம் ப்ரகாராத்வைதமே.

இதுதான் ஶ்ருதப்ரகாஶிகையிலே, ஆதிபரத சதுஶ்ஶ்லோகீ வ்யாக்யாநோபக்ரமத்திலே "ப்ரஹ்மாத்வைதம் ஜீவாத்வைதஞ்சேத்யத்வைதம் த்விவிதம் ஶாஸ்த்ரப்ரதிபாத்யம்"

(ப்ரஹ்மாத்வைதம் ஜீவாத்வைதஞ்சேத்யத்வைதம் த்விவிதம் ஶாஸ்த்ர ப்ரதிபாத்யம்)[1] என்று தொடங்கி, ஸ்ரீவேதவ்யாஸபட்டராலே விஸ்தரேண ப்ரதிபாதிக்கப்பட்டது.

இப்படி, ஶாஸ்த்ரத்தில் சொல்லப்படுகிற ஜீவாத்வைதத்துக்கு ஹ்ருதயமறியாதே, ஆத்மபேதமில்லை; ஏகாத்மாவே உள்ளதென்று, சில குத்ருஷ்டிகள் சொன்னார்களென்கை.

அது அயுக்தமென்னுமிடம் ஸாதிக்கிறார்;

**50. அந்த பக்ஷத்தில், ஒருவன் ஸுகிக்கிற காலத்திலே வேறே ஒருவன் துக்கிக்கக் கூடாது.**

(அந்த பக்ஷத்தில்) இத்யாதியாலே. அதாவது – அப்படி ஆத்மபேதமில்லாத பக்ஷத்தில், "அஹம் ஸுகீ" (அஹம் ஸுகீ) என்று ஒருவன் ஸுகோத்தரனாயிருக்கிற காலத்திலே, வேறே ஒருவன் "அஹம் து:கீ" (அஹம் துக்கீ) என்று துக்கோத்தரனாயிருக்கிற இந்த ஸுகதுக்க வ்யவஸ்தை கூடாதென்கை. ஸுக துக்கங்களிரண்டும் ஏகாஶ்ரயகதமாகில் உபயப்ரதிஸந்தாநமும் ஒருவனுக்கே உண்டாகவேணுமிறே. ஆகையால், ஸுகதுக்கங்கள் நியதங்களாகையாலே, ஆத்மபேதமுண்டாகவேணுமென்று கருத்து.

---

நான்குவிதமான, விபேத: : பேதமானது, மித்யாஜ்ஞாந நிபந்தந - மித்யாஜ்ஞானத்தாலே உண்டாகிறது, தேவாதிபேதே - தேவாதி பேதமானது, அபத்வஸ்தே - போயிருந்தவளவில்,

1. ச்ருதப்ரகாசிகை. ப்ரஹ்மாத்வைதம் - ப்ரம்ஹாத்வைதமென்றும், ஜீவாத்வைதம் - ஜீவாத்வைதம் என்றும், அத்வைதம் - அத்வைதமானது, த்விவிதம் - இரண்டுவிதமென்று, சாஸ்த்ரப்ரதிபாத்யம் - சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது.

அந்த ஸுகதுக்கவ்யவஸ்தைக்கு ஹேது தேஹபேதம் என்கிறவர்களுக்கியை அநுவதிக்கிறார்;

51. அது தேஹபேதத்தாலே என்னில்.

(அது தேஹபேதத்தாலே என்னில்) என்று. அதுக்கு அநுபபத்தி சொல்லுகிறார்;

52. ஸௌபரிஶரீரத்திலும் அது காணவேணும்.

(ஸௌபரிஶரீரத்திலும் அது காணவேணும்) என்று. அதாவது – தேஹபேதம் ஸுகதுக்கநியமத்துக்கு ஹேது வாகில், அநேக தேஹ பரிக்ரஹம் பண்ணின ஸௌபரிஶரீ திலும் அந்த நியமம் காணவேணுமென்கை.

தேஹபேதம் ஸுகதுக்க நியமத்துக்கு ஹேதுவன்றாகில், ஜந்மாந்தராநுபவத்தை இஜ்ஜந்மத்திலே ஸ்மரிக்க வேண்டாவோ? என்னில்; ஸ்மரியாதொழிகிறது ஸம்ஸ்காரத்தினுடைய அநுத்பவத்தாலேயாதல், நாஶத்தாலே யாதல். ஶரீராந்தரத்தில் ஸுகதுக்க ஸ்ம்ருத்யாதிகளின் றிக்கே ஒழிகிறதும் இரண்டத்தொன்றாலே யென்னில்; ஒரு ஶரீரம் தன்னிலும் ஸ்ம்ருதிகூடாதொழியவேணும். ஆகையால், ஸுகதுக்கநியமத்துக்கு ஹேது – தேஹபேதம் என்ன வொண்ணாது.

இப்படி, ஸுகதுக்க வ்யவஸ்தாநுபபத்தியேயன்று; ஏகாத்மாவென்னும் பக்ஷத்தில்; பத்த முக்த வ்யவஸ்தா நுபபத்தியும், ஶிஷ்யாசார்ய வ்யவஸ்தாநுபபத்தியும் உண்டென்கிறார் மேல்;

53. ஒருவன் ஸம்ஸரிக்கையும், ஒருவன் முக்தனுகையும், ஒருவன் ஶிஷ்யனுகையும், ஒருவன் ஆசார்யனுகையும் கூடாது.

(ஒருவன் ஸம்ஸரிக்கையும்) என்று தொடங்கி. அதாவது – ஏகாத்மாவாகில், "அநேகஜந்மஸாஹஸ்ரீம் ஸம்ஸாரபதவீம் வ்ரஜந் । மோஹஶ்ரமம் ப்ரயாதோஸௌ வாஸநாரேணுகுண்டித:" (அநேகஜந்மஸாஹஸ்ரீம் ஸம்ஸாரபதவீம் வ்ரஜந் । மோஹஶ்ரமம் ப்ரயாதோஸௌ

வாஸநாரேணுகுண்டித꞉)[1] என்கிறபடியே, ஒருவன் ஸம்ஸரிக்கையும், "𑌶𑍁𑌕𑍋 𑌮𑍁𑌕𑍍𑌤𑍋 𑌵𑌾𑌮𑌦𑍇𑌵𑍋 𑌮𑍁𑌕𑍍𑌤𑌃" (ஶுகோ முக்தோ வாமதேவோ முக்த꞉)[2] என்கிறபடியே, ஒருவன் முக்தனாகையும், "𑌤𑌦𑍍𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌰𑍍𑌥𑌂 𑌸 𑌗𑍁𑌰𑍁𑌮𑍇𑌵𑌾𑌭𑌿𑌗𑌚𑍍𑌛𑍇𑌤𑍍 𑌸𑌮𑌿𑌤𑍍𑌪𑌾𑌣𑌿𑌃 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌿𑌯𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑌿𑌷𑍍𑌠𑌮𑍍 । 𑌤𑌸𑍍𑌮𑍈 𑌸 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍁𑌪𑌸𑌨𑍍𑌨𑌾𑌯 𑌸𑌮𑍍𑌯𑌕𑍍𑌪𑍍𑌰𑌶𑌾𑌨𑍍𑌤𑌚𑌿𑌤𑍍𑌤𑌾𑌯 𑌯𑍇𑌨𑌾𑌕𑍍𑌷𑌰𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌵𑍇𑌦 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑍋𑌵𑌾𑌚 𑌤𑌾𑌂 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌂 ॥" (தத்விஜ்ஞாநார்த்தம் ஸ குருமேவாபிகச்சேத் ஸமித்பாணிஶ் ஶ்ரோத்ரியம் ப்ரஹ்மநிஷ்டம், தஸ்மை ஸ வித்வாநுபஸந்நாய ஸம்யக் ப்ரஶாந்த சித்தாய யேநாக்ஷரம் புருஷம் வேத ஸத்யம் ப்ரோவாச தாம் தத்வதோ ப்ரஹ்மவித்யாம்)[3] என்கிறபடியே, ஒருவன் ஶிஷ்யனாய் வந்து உபஸத்திபண்ண, ஒருவன் ஆசார்யனாயிருந்து அவனுக்கு உபதேஶிக்கையும் கூடாதென்கை.

இன்னமும் ஓர் அநுபபத்தி சொல்லுகிறார் ;

---

1. வி. பு. 6-7-19. அநேக ஜன்மஸாஹஸ்ரீம் - அநேக ஆயிர ஜன்மங்களில், ஸம்ஸார பதவீம் - ஸம்ஸாரமாகிற மார்கத்தை, வ்ரஜன் - அடைந்து கொண்டு, அஸௌ - இந்த ஜீவன், வாஸநாரேணுகுண்டித: - கர்ம வாஸனைகளாலே தடுக்கப் பட்டவனாய்க் கொண்டு, மோஹச்ரமம் - அஜ்ஞானத்தாலுண்டான துக்கத்தை, ப்ரயாத: - அடைந்தவனாகிறான்.

2. சுகன் முக்தனானான் ; வாமதேவன் முக்தனானான்.

2. மு. உப. 1-2-12, 13. ஸ: ஸமித்பாணி: - அச்சிஷ்யன் ஸமித்தைக் கையிலுடையவனாய், ச்ரோத்ரியம் - வேதாந்தங்களை அறிந்தவனும், ப்ரஹ்மநிஷ்டம் - ப்ரஹ்மத்தினிடத்தில் நிஷ்டையுடையவனுமான, குரும் ஏவ - ஆசாரியனையே, தத்விஜ்ஞாநார்த்தம் - அந்த பரமபுருஷனைத் தெரிந்துகொள்வதற்காக, அபிகச்சேத் - அடையவேண்டும், ஸ: - அந்த குருவானவர், உபஸந்நாய - கிட்டினவனும், ஸம்யக் - நன்றாய், ப்ரசாந்த சித்தாய - சாந்தமான மனதையுடையவனும், சமாந்விதாய தஸ்மை - பாஹ்யேந்திரியங்களை நிக்ரஹித்தவனுமான அந்த சிஷ்யன் பொருட்டு, யேந - எந்த வித்யையினாலே, ஸத்யம் - ஸத்யமான, அக்ஷரம் - நாசமில்லாத, புருஷம் - பரம புருஷனை, வேத - தெரிந்து கொள்வானோ, தாம் - அப்படிப்பட்ட, ப்ரஹ்மவித்யாம் - ப்ரஹ்மவித்யையை, தத்வத: - யதார்த்தமாக, ப்ரோவாச - உபதேசிக்கக்கடவன்.

## 54. விஷமஸ்ருஷ்டியும் கூடாது.

(விஷமஸ்ருஷ்டியும் கூடாது) என்று. அதாவது - ஏகாத்மாவாகில் தேவதிர்யகாதிரூபேண, சில ஸுகோத்தரமாகவும் சில துக்கோத்தரமாகவும், சில ஸுகதுக்கமிஶ்ரமாகவும், இப்படி லோகத்தில் பதார்த்தங்களை விஷமமாக ஸர்வேஶ்வரன் ஸ்ருஷ்டிக்கக் கூடாதென்கை. ஜீவபேதமும், கர்மதாரதம்யமுமிறே விஷமஸ்ருஷ்டிக்கு ஹேது.

இப்படி யுக்தியாலே அநேக விரோதங்களை தர்ஶிப்பித்தார் கீழ். இவ்வளவேயன்று; இப்பக்ஷத்துக்கு ஶ்ருதி விரோதமுமுண்டென்கிறார்;

## 55. ஆத்மபேதம் சொல்லுகிற ஶ்ருதியோடும் விரோதிக்கும்.

(ஆத்மபேதம் சொல்லுகிற ஶ்ருதியோடும் விரோதிக்கும்) என்று. அதாவது - ஏகாத்மா என்கிற பக்ஷம், "நித்யோ நித்யாநாம் சேதநஶ்சேதநாநாமேகோ பஹூநாம் யோ விததாதி காமாந்" (நித்யோ நித்யாநாம் சேதநஶ் சேதநாநாமேகோ பஹூநாம் யோ விததாதி காமாந்)[1] என்று, ஆத்மபேதத்தைச் சொல்லுகிற ஶ்ருதிக்கும் சேராதென்றபடி.

இந்த ஶ்ருதி ஆத்மபேதத்தைச் சொல்லுகிறதென்னில்; "போக்தா போக்யம்" (போக்தா போக்யம்)[2] என்றும், "ப்ருதகாத்மாநம்" (ப்ருதகாத்மாநம்)[3] என்றும், "ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜாவீஶநீஶௌ" (ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜாவீஶநீஶௌ)[4] என்றும், "அந்யோऽந்தர ஆத்மா விஜ்ஞாநமய:" (அந்யோந்தர ஆத்மா விஜ்ஞாந

---

1. கட. உப. 2-5-13. நித்ய: - நித்யனுன, ஏக: சேதந: - ஒரு சேதனனுன ஸர்வேசுவரன், நித்யாநாம் - நித்யர்களாய், பஹூநாம் - அனேகவிதங்களாயிருக்கிற, சேதநாநாம் - ஜீவன்களுக்கு, காமாந் விததாதி - இஷ்டங்களைக் கொடுக்கிருன்.

2. 8-ம் பக்கம் பார்க்க. 3. 9-ம் பக்கம் பார்க்க.

4. 26-ம் பக்கம் பார்க்க.

மய:)[1] என்றும், ஜீவைகத்வ ப்ரதிபாதிகைகளான அநேக ஶ்ருதிகளோடும் விரோதிக்கும். ஆகையால், இது ஔபாதிக பேதத்தைச் சொல்லுகிறதென்றிறே அவர்கள் சொல்லுவது. அத்தை நிஷேதிக்கிறார்;

## 56. ஶ்ருதி, ஔபாதிகபேதத்தைச் சொல்லுகிறதென்னவொண்ணாது.

(ஶ்ருதி, ஔபாதிகபேதத்தைச் சொல்லுகிறதென்னவொண்ணாது) என்று. ஔபாதிகபேதமாவது – தேவ மநுஷ்யாதி பேதமும், காமக்ரோதாதி பேதமும்.

ஔபாதிகபேதமென்னவொண்ணாமைக்கு வேறு துறை அருளிச்செய்கிறார்;

## 57. மோக்ஷதசையிலும் பேதமுண்டாகையாலே.

(மோக்ஷதசையிலும் பேதமுண்டாகையாலே) என்று. அதாவது – "ஸஉா வஶ்யந்தி" (ஸதா பஶ்யந்தி)[2] "ஐஐ ஸா யஜ்ஸ்ரூமாமதாஃ" (மம ஸாதர்ம்யமாகதாஃ)[3] "ஊக்தாநாம் வரமா மதிஃ" (முக்தாநாம் பரமாகதிஃ)[4] "ஸாயூஜ்ய ப்ரதிவநா யெ" (ஸாயுஜ்யம் ப்ரதிபந்நா யே)[5] "யஸ்மிந் நெ விராஜநெ ஊக்தா ஸம்ஸாரவாஸநெஃ" (யஸ்மிந்

---

1. தை - உப - 4-8, அந்தர: அந்ய: ஆத்மா விஜ்ஞானமய: - மநோமயனைக் காட்டிலும் வேறான அவனுக்குள்ளிருக்கும் ஜ்ஞானஸ்வரூபனான ஜீவன் கீழ்ச்சொன்ன ஆத்மா.

2. புருஷஸூக்தம். ஸதா - ஸர்வகாலத்திலும், ஸூரய: - நித்யஸூரிகள், பச்யந்தி - பரமாத்மாவை அனுபவிக்கிறார்கள்.

3. கீதை. 14-2. மம - எனக்கு. ஸாதர்ம்யம் - ஸமமான தர்மத்தை, ஆகதா: - அடைந்தவர்கள். (அதாவது என்னைப்போலொத்த தர்மத்தை அடைந்தவர்கள்.)

4. பா - ஆநு - 150 - 16. முக்தாநாம் - முக்தாத்மாக்களுக்கு. பரமா - உத்க்ருஷ்டமான, கதி: - ப்ராப்யமாகிறான்.

5. ச்வே - உப. யே - யாதொரு முக்தர்கள், ஸாயுஜ்யம் - ஸாயுஜ்யத்தை அதாவது எம்பெருமானோடு ஸமமான யோகக்ஷேமங்களை, ப்ரதிபந்நா: - அடைந்திருக்கிறார்களோ,

பதே விராஜந்தே முக்தாஸ் ஸம்ஸாரபந்தநை:)[1] என்று, மோக்ஷதசையிலும் ஆத்மபேதத்தை ஶ்ருதி ஸ்ம்ருதிகள் சொல்லுகையாலே அப்படி சொல்லவொண்ணாதென்கை.

மோக்ஷதசையாவது - ஸர்வோபாதி விநிர்முக்ததசை யிறே. அந்த தசையிலும் ஆத்மபேதம் ஶ்ருதி ஸித்தமா கையாலே, " நித்யோ நித்யாநாம் " (நித்யோ நித்யாநாம்) என்கிற ஶ்ருதியும் ஆத்மபேதத்தைச் சொல்லுகிறதென்ற தாயிற்று.

ஆனால், ஆத்மபேதப்ரதிபத்திக்கு ஹேதுவாய், ஔபா திகமாயிருந்துள்ள தேவமநுஷ்யாதிபேதமும், காமக்ரோ தாதி பேதமும் கழிந்து ஆத்மாக்களுடைய ஸ்வரூபம் அத் யந்தம் ஸமமாய், ஒரு ப்ரகாரத்தாலும் பேதகதநத்துக்கு யோக்யதையில்லாதபடியிறே மோக்ஷதசையிருப்பது ; அவ் விடத்தில், ஆத்மபேதம் ஸித்திக்கிறபடி எங்ஙனே? என் கிற வாதிப்ரஶ்நத்தை அநுவதிக்கிறார் ;

58. அப்போது தேவமநுஷ்யாதிபேதமும், காமக்ரோ தாதிபேதமும் கழிந்து, ஆத்மாக்கள் ஸ்வரூபம் அத்யந்தம் ஸமமாய், ஒருபடியாலும் பேதம் சொல்லவொண்ணாதபடி இருந்ததேயாகிலும் ;

(அப்போது) என்று தொடங்கி (ஒருபடியாலும் பேதம் சொல்லவொண்ணாதபடி யிருந்ததேயாகிலும்) என்று.

திருஷ்டாந்தமுகேந பேதத்தை ஸாதிக்கிறார் ;

59. பரிமாணமும், எடையும், ஆகாரமுமொத்திருக்கிற பொற்குடங்கள், ரத்நங்கள், வ்ரீஹிகள் தொடக்க மானவற்றுக்கு பேதமுண்டாகிறாப் போலே ஸ்வரூ பபேதமும் ஸித்தம்.

---

1. கட. உ. 2-5-18. ஸம்ஸாரபந்தநை: - ஸம்ஸாரமாகிற கட்டு களால், முக்தா: - விடுபட்டவர்கள், யஸ்மின் - யாதொரு, பதே - பரமபதத்திலே, விராஜந்தே - ப்ரகாசிக்கிறார்கள்.

(பரிமாணமும்) என்று தொடங்கி. அதாவது - அளவும், தூக்கமும், வடிவுமொத்திருக்கிற பொற்குடங்கள், ரத்நங்கள், வ்ரீஹிகள் முதலான பதார்த்தங்களுக்கு பேதகமாயிருப்பதொரு லக்ஷணமில்லையேயாகிலும் அதிலே நாநாத்வம் காண்கிறப்போலே, ஒருபடியாலும் பேதம் சொல்ல வொண்ணுதபடி ஏகாகாரரான முக்தாத்மாக்களுக்கும் ஸ்வரூபபேதம் ஸித்திக்குமென்றபடி.

**60. ஆகையால், ஆத்மபேதம் கொள்ளவேணும்.**

கீழ்ச்சொன்னவற்றையெல்லாம் அநுபாஷித்துக் கொண்டு, (ஆகையால் ஆத்மபேதம் கொள்ளவேணும்) என்று நிகமிக்கிறார்.

ஆக கீழ்ச் செய்ததாயிற்று– "சிலர் ஆத்மபேதமில்லை; ஏகாத்மாவே உள்ளதென்றார்கள்" என்று தொடங்கி, இவ்வளவாக, முன்பு தாமருளிச்செய்த ஜீவாநந்த்ய ப்ரதிபடமான ஏகாத்மவாதத்தை உத்க்ஷேபித்து, யுக்தியாலும், ஶாஸ்த்ரத்தாலும் பஹுமுகமாக அத்தை தூஷித்து, ஆத்மபேதத்தை ஸாதித்தாராயிற்று.

கீழே ஆத்மஸ்வரூபலக்ஷணத்தை விஸ்தரேண அருளிச்செய்தார். அதில், அசித்விலக்ஷணத்வம், அஜடத்வம், ஆநந்தரூபத்வம், அவ்யக்தத்வம், அசிந்த்யத்வம், நிரவயவத்வம், நிர்விகாரத்வம், ஜ்ஞாநாஶ்ரயத்வமாகிற இவை ஜீவேஶ்வர ஸாதாரணம். நியாம்யத்வாதிகள் மூன்றும் சிதசித்ஸாதாரணம். நித்யத்வம் தத்வத்ரய ஸாதாரணம். அணுத்வமும் அசித்பரமாணு ஜீவஸாதாரணம். இவையித்தனையும் சேரக்கூடி, ஆத்மஸ்வரூபத்துக்கு அசிதீஶ்வர வ்யாவ்ருத்தியை ஸித்திப்பிக்கையாலே இவற்றை லக்ஷணமென்னக் குறையில்லை.

அப்படியின்றிக்கே, ஸங்க்ரஹமாக ஒரு லக்ஷணம் அருளிச் செய்கிறார் ;

**61. இப்போது இவர்களுக்கு லக்ஷணம்–ஶேஷத்வத்தோடே கூடின ஜ்ஞாத்ருத்வம்.**

(இப்போது இவர்களுக்கு லக்ஷணம் – ஶேஷத்வத்தோடே கூடின ஜ்ஞாத்ருத்வம்) என்று. இவர்களென்கிறது - த்ரிவிதசேதநரையும். லக்ஷணமாவது — அஸாதாரணதர்மமிறே. ஆகையால், ஶேஷத்வமாத்ரத்தைச் சொல்லில் அசித்வ்யாவ்ருத்தி ஸித்தியாமையாலும், ஜ்ஞாத்ருத்வமாத்ரத்தைச் சொல்லில் ஈஶ்வரவ்யாவ்ருத்தி ஸித்தியாமையாலும், ஶேஷத்வே ஸதி ஜ்ஞாத்ருத்வமே லக்ஷணமென்கிறார்.

இப்படி, ஜ்ஞாதாவான ஆத்மாவினுடைய ஜ்ஞானத்துக்கும் ஸ்வரூபத்துக்குமுண்டான ஸாதர்ம்ய வைதர்ம்யங்களை அருளிச் செய்கிறார் மேல்;

62. இவர்களுடைய ஜ்ஞாநம்தான் – ஸ்வரூபம் போலே நித்யத்ரவ்யமாய், அஜடமாய், ஆநந்த ரூபமாயிருக்கும்.

(இவர்களுடைய ஜ்ஞாநம்தான்) என்று தொடங்கி, (ஸ்வரூபம் போலே நித்யத்ரவ்யமாய், அஜடமாய், ஆநந்த ரூபமாயிருக்கும்.) இத்தால்—நித்யத்வ த்ரவ்யத்வ அஜடத்வ ஆநந்தரூபத்வங்கள், ஸ்வரூபத்தோபாதி ஜ்ஞாநத்துக்குமுண்டு என்றபடி.

நித்யத்வாதிகளை உபபாதித்து வைதர்ம்யத்தைச்சொல்லுமளவில் அநேகக்ரந்த வ்யவஹிதமாமென்று நினைத்து, ஸாதர்ம்யம் சொன்னவநந்தரம், வைதர்ம்யத்தையும் சொல்லுவதாக தஜ்ஜிஜ்ஞாஸா ப்ரஶ்நத்தை அநுவதிக்கிறார்;

63. ஆனல், ஜ்ஞானத்துக்கும் ஸ்வரூபத்துக்கும் வாசி என்? என்னில்;

(ஆனல், ஜ்ஞாநத்துக்கும் ஸ்வரூபத்துக்கும் வாசி என்? என்னில்) என்று.

வைதர்ம்யம் தன்னை அருளிச் செய்கிறார்;

64. ஸ்வரூபம் – தர்மியாய், ஸங்கோச விகாஸங்களுக்கு அயோக்யமாய், தன்னையொழிந்த வற்றை ப்ரகாஶிப்பியாமலே தனக்குத்தான் ப்ர

காஶிக்கக் கடவதாய், அணுவாயிருக்கும். ஜ்ஞாநம்-தர்மமாய், ஸங்கோச விகாஸங்களுக்கு யோக்யமாய், தன்னையொழிந்தவற்றை ப்ரகாஶிப்பிக்கக்கடவதாய், தனக்குத்தான் ப்ரகாஶியாதே ஆத்மாவுக்கு ப்ரகாஶிக்கக் கடவதாய், விபுவாயிருக்கும்.

(ஸ்வரூபம் தர்மியாய்) என்று தொடங்கி. அதாவது—தர்மித்வம் - ஸங்கோச விகாஸாயோக்யத்வம், ஸ்வவ்யதிரிக்தார்த்தாப்ரகாஶகத்வம், ஸ்வஸ்மை ஸ்வயம்ப்ரகாஶத்வம், அணுத்வம் இவை ஸ்வரூபத்துக்கு விஶேஷம்.

தர்மத்வம் - ஸங்கோசவிகாஸயோக்யத்வம், ஸ்வவ்யதிரிக்தார்த்த ப்ரகாஶகத்வம், ஸ்வஸ்மை ஸ்வயம்ப்ரகாஶ ரஹிதத்வம், ஸ்வாஶ்ரயஸ்ய ஸ்வப்ரகாஶத்வம், விபுத்வம் இவை ஜ்ஞாநத்துக்கு விஶேஷமென்றபடி.

(விபுவாயிருக்கும்) என்று ஜ்ஞாநத்தினுடைய ஸ்வாபாவிக வேஷத்தை அருளிச்செய்தாரித்தனையிறே.

ஸகல சேதநருடைய ஜ்ஞாநமும் இப்படி இராதொழிவானென்? என்கிற சங்கையிலே ஸங்கோசாஸங்கோச நிபந்தநமான தாரதம்யத்தை அருளிச்செய்கிறார்;

65. அதில், சிலருடைய ஜ்ஞாநம் எப்போதும் விபுவாயிருக்கும்; சிலருடைய ஜ்ஞாநம் எப்போதும்

கால் விபுவாய் ஒருக்கால் அவிபுவாயிருக்கும்.

(அதில் சிலருடைய ஜ்ஞாநம்) என்று தொடங்கி. அதாவது- "அயர்வறுமமரர்கள்"[1] என்கிறபடியே, பகவத்ஜ்ஞாநத்துக்கு ஒருநாளும் ஸங்கோசமின்றிக்கே தத்ஸ்வரூபகுணவிபூதிகளை ஸதாநுபவம் பண்ணுகிற நித்யஸூரிகளுடைய ஜ்ஞாநம், எப்போதும் விபுவாயிருக்கும். *பொய்நின்றஞானமும் பொல்லாவொழுக்குமழுக்குடம்புமாயிருக்கிற பத்தருடைய ஜ்ஞாநம், கர்மாநுகுணமாக

1. திரு. வா. 1-1-1.

ஸங்கோசவிகாஸங்களோடே கூடிக்கொண்டு எப்போதும் அவிபுவாயிருக்கும். "கரைகண்டோர்"[1] என்கிறபடியே, பகவத்ப்ரஸாதத்தாலே ஸம்ஸாரஸாகரத்தைக் கடந்து அக்கரைப்பட்ட முக்தருடைய ஜ்ஞாநம், பூர்வாவஸ்தையில் அவிபுவாய் உத்தராவஸ்தையில் "ஸவஹ ஹ வஶ்யஃ வஶ்யதி" (ஸர்வம் ஹ பஶ்யஃ பஶ்யதி)[2] என்கிறபடியே விபுவாயிருக்குமென்கை.

இனிமேல், ஜ்ஞாநத்துக்குச் சொன்ன நித்யத்வாதிகளை உபபாதிக்கிறார்.

அதில் ப்ரதமத்திலே, "எனக்கிப்போது ஜ்ஞாநம் பிறந்தது, எனக்கிப்போது ஜ்ஞாநம் நஶித்தது" என்று உத்பத்தி விநாஶவத்தாகச் சொல்லப்படுகிற ஜ்ஞாநத்துக்கு நித்யத்வம் கூடும்படி எங்ஙனே? என்கிற சங்கையை பரிஹரிக்கைக்காக தஜ்ஜிஜ்ஞாஸா ப்ரஶ்நத்தை அநுவதிக்கிறார்;

66. ஜ்ஞாநம் நித்யமாகில் "எனக்கு ஜ்ஞாநம் பிறந்தது, நஶித்தது" என்கிறபடியென்? என்னில்;

(ஜ்ஞாநம் நித்யமாகில் "எனக்கு ஜ்ஞாநம் பிறந்தது நஶித்தது" என்கிறபடியென்? என்னில்) என்று.

அதுக்கு உத்தரமருளிச்செய்கிறார்;

67. இந்த்ரியத்வாரா ப்ரஸரித்து, விஷயங்களை க்ரஹிப்பது மீளுவதாகையாலே, அப்படி சொல்லக் குறையில்லை.

(இந்த்ரியத்வாரா ப்ரஸரித்து விஷயங்களை க்ரஹிப்பது மீளுவது ஆகையாலே அப்படி சொல்லக் குறையில்லை) என்று. அதாவது- "ஸவஹ ஹ வஶ்யஃ வஶ்யதி" (ஸர்வம் ஹ பஶ்யஃ பஶ்யதி)[2] "ஸ வா நந்த்யாய கலூதே"

---

3. திரு- வா. 8-3-10.

2. 72-ம் பக்கம் பார்க்க.

(ஸ சாநந்த்யாய கல்பதே)[1] என்று, முக்த தசையில் ஸர்வ விஷயமாகச் சொல்லுகையாலே ஸர்வத்தையும் ஸாக்ஷாத் கரிக்கைக்கு யோக்யமாயிருக்கச் செய்தேயும், யயா க்ஷேத்ரஜ்ஞஶக்திஸ்ஸா வேஷ்டிதா ந்ருப ஸர்வகா" (யயா க்ஷேத்ரஜ்ஞஶக்திஸ்ஸா வேஷ்டிதா ந்ருப ஸர்வகா)[2] என்கிறபடியே கர்மத்தாலே ஸங்குசிதமாய், "தயா திரோஹிதத்வாச்ச ஶக்திః க்ஷேத்ரஜ்ஞஸம்ஜ்ஞிதா | ஸர்வபூதேஷு பூபால தாரதம்யேந வர்த்ததே | அப்ராணிமத்ஸு ஸ்வல்பா ஸா ஸ்தாவரேஷு ததோऽதிகா" (தயா திரோஹிதத்வாச்ச ஶக்திః க்ஷேத்ரஜ்ஞஸம்ஜ்ஞிதா | ஸர்வபூதேஷு பூபால தாரதம்யேந வர்த்ததே | அப்ராணிமத்ஸு ஸ்வல்பா ஸா ஸ்தாவரேஷு ததோதிகா)[3] என்கிறபடியே, கர்மாநுகுணமான தாரதம்யத்தையுடைத்தாய்க் கொண்டு, "இந்த்ரியாணாம் ஹி ஸர்வேஷாம் யத்யேகம் க்ஷரதீந்த்ரியம் | தேநாஸ்ய க்ஷரதி ப்ரஜ்ஞா த்ருதேః பாத்ராதிவோதகம்" (இந்த்ரியாணும் ஹி ஸர்வேஷாம் யத்யேகம் க்ஷரதீந்த்ரியம் | தேநாஸ்ய க்ஷரதி ப்ரஜ்ஞா த்ருதேః

---

1. ச்வே. உப, 5-9. ஸ ச - அந்த முக்தியை அடைந்தவனும், ஆநந்த்யாய - ஸர்வத்தையும் ஸாக்ஷாத்கரிக்கைக்கு யோக்யனுயிருக்கும் பொருட்டு, கல்பதே - ஸமர்த்தனுகிருன்.

2. ந்ருப ! - அரசனே ! ஸர்வகா - ஸர்வசரீரத்தையுமடைந்திருக்கிற, ஸா - அந்த, க்ஷேத்ரஜ்ஞ சக்தி: - ஜீவனுகிற சக்தியானது, யயா - யாதொரு அஜ்ஞானத்தாலே, வேஷ்டிதா - சூழப்பட்டிருக்கிறதோ.

3. வி. பு. 6-7-43 பூபால ! - அரசனே ! தயா திரோஹிதத்வாத் - அந்த அஜ்ஞானத்தாலே மறைக்கப்பட்டிருப்பதாலே, க்ஷேத்ரஜ்ஞ ஸம்ஜ்ஞிதா - க்ஷேத்ரஜ்ஞன் என்கிற பெயரையுடைய, சக்தி: - சக்தியானது, ஸர்வபூதேஷு - ஸமஸ்த பூதங்களிடத்திலேயும், தாரதம்யேந - ஏற்றக்குறைச்சலாக, வர்ததே - இருக்கிறது, அப்ராணிமத்ஸு - ப்ராணனில்லாமலிருக்கிற பூதங்களிடத்திலே, ஸா - ஜீவசக்தியானது, ஸ்வல்பா - ஸ்வல்பமாயிருக்கிறது. ஸ்தாவரேஷு - ஸ்தாவர பூதங்களிடத்திலே, தத:-ப்ராணனில்லாத பூதங்களைக் காட்டிலும் அதிகா (ஜீவசக்தியானது,) அதிகமாயிருக்கிறது

பாதாதிவோதகம்)[1] என்கிறபடியே இந்த்ரியத்வாரா புறப் பட்டு விஷயங்களை க்ரஹிப்பது மீளுவதாகையாலே, தாத்ருசமான விகாஸத்தாலும் ஸங்கோசத்தாலும் வந்த ப்ரகாஸாப்ரகாஸங்களைக்கொண்டுபிறந்தது, நஸித்தது-என்னக் குறையில்லை என்கை.

இப்படி, இந்த்ரியத்வாரா ப்ரஸரிக்கிற ஜ்ஞாநம் ஏகமாயிருக்கச் செய்தே, விஷயக்ரஹணவேளையில் ப்ரகாஸிக்கும் போது தர்ஸந ஸ்ரவணாதி ஸம்ஜ்ஞாபேதத்தை உடைத்தாய்க் கொண்டு, அநேகத்வேந ப்ரகாஸிக்கிறபடி எங்ஙனே? என்கிற சங்கையிலே அருளிச் செய்கிறார்;

**68. இதுதான் ஏகமாயிருக்கச் செய்தே நாநாவாய்த் தோற்றுகிறது ப்ரஸரணபேதத்தாலே.**

(இதுதான் ஏகமாயிருக்கச்செய்தே நாநாவாய்த் தோற்றுகிறது ப்ரஸரணபேதத்தாலே) என்று. அதாவது—ஏகரூபமாக ப்ரஸரிக்கை யன்றிக்கே, சக்ஷுஸ்ஸ்ரோத்ராத்யநேகேந்த்ரியத்வாரா ப்ரஸரித்து, ரூபஸப்தாத்யநேக விஷயங்களை க்ரஹிக்கிறவிதுக்கு தர்ஸந ஸ்ரவணாதி ஸம்ஜ்ஞா பேதேந தோற்றுகிற நாநாத்வம் - ப்ரஸரணபேத நிபந்தநமென்கை.

இத்தால்-நித்யமான ஜ்ஞானத்துக்கு உத்பத்தி விநாஸ வ்யவஹார ஹேது இன்னதென்று சொன்ன அநந்தரத்திலே, ப்ராஸங்கிகமாக அதினுடைய நாநாத்வேந ப்ரகாஸந ஹேதுவும் சொல்லப்பட்டதாயிற்று.

ஆத்மாவினுடைய தர்மபூதஜ்ஞாந நித்யத்வம், "ந ஹி விஜ்ஞாதுர்விஜ்ஞாதேர்விபரிலோபோ வித்யதே, ந ஹி த்ரஷ்டுர்த்ருஷ்டேர்விபரிலோபோ வித்யதே" (ந ஹி விஜ்

---

1. மாநவம். 2. 99. ஸர்வேஷாம் - ஸமஸ்தமான, இந்திரியாணாம் - இந்திரியங்களுக்குள்ளே, ஏகம் இந்திரியம் - ஒரு இந்திரியமானது, க்ஷரதி இதி யத் - (விஷயங்களைக் குறித்து) போகின்றது என்கிறது யாதொன்று, தேந - அதன் மூலமாக, த்ருதே: - துருத்தியினுடைய, பாதாத் - கால்வழியாக (சிறிய துவாரத்திலிருந்து) உதகம் இவ - ஜலமானது போல, அஸ்ய - இச் சேதனனுடைய, ப்ரஜ்ஞா - ஜ்ஞானமானது, க்ஷரதி - வெளியில் போகிறது.

ஞாதுர் விஜ்ஞாதேர் விபரிலோபோ வித்யதே, ந ஹி த்ருஷ் டேர் விபரிலோபோ வித்யதே)[1] 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌂 𑌧𑌰𑍍𑌮𑌶𑍍𑌚 𑌮𑌨𑍁𑌜𑍇𑌶𑍍𑌵𑌰 | 𑌆𑌤𑍍𑌮𑌨𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑍂𑌤𑌸𑍍𑌯 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍇𑌤𑌚𑍍𑌚𑌤𑍁𑌷𑍍𑌟𑌯𑌮𑍍 | 𑌯𑌥𑍋𑌦𑌪𑌾𑌨𑌕𑌰𑌣𑌾𑌤𑍍 𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌨 𑌜𑌲𑌾𑌮𑍍𑌬𑌰𑌮𑍍 | 𑌸𑌦𑍇𑌵 𑌨𑍀𑌯𑌤𑍇 𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌿𑌮𑌸𑌤𑌸𑍍𑌸𑌂𑌭𑌵𑌃 𑌕𑍁𑌤𑌃 | 𑌤𑌥𑌾 𑌹𑍇𑌯𑌗𑍁𑌣𑌧𑍍𑌵𑌂𑌸𑌾𑌦𑌵𑌬𑍋𑌧𑌾𑌦𑌯𑍋 𑌗𑍁𑌣𑌾𑌃 | 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌨 𑌜𑌨𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾 𑌏𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑍋 𑌹𑌿 𑌤𑍇" (ஜ்ஞாநம் வைராக்யமைஶ்வர்யம் தர்மஶ்ச மநுஜேஶ்வர | ஆத்மநோ ப்ரஹ்மபூதஸ்ய நித்யமேதச் சதுஷ்டயம் | யதோதபாநகரணாத் க்ரியதே ந ஜலாம்பரம் | ஸதேவ நீயதே வ்யக்திமஸதஸ் ஸம்பவஃ குதஃ | ததா ஹேயகுணத்வம்ஸாதவபோதாதயோ குணாஃ | ப்ரகாஶ்யந்தே ந ஜந்யந்தே நித்யா ஏவாத்மநோ ஹி தே)[2] என்று ஶ்ருதி ஸ்ம்ருத்யாதிகளில் சொல்லப்பட்டதிறே.

இப்படியிருந்துள்ள ஜ்ஞானநித்யத்வத்தை அருளிச் செய்தாராய் நின்றார் கீழ்; இனி, இதினுடைய த்ரவ்யத்

2. பிரு. உப. 6-3-23. விஜ்ஞாது: - அறிகிறவனுக்கும், விஜ்ஞாதே: - ஜ்ஞானத்திற்கும், விபரிலோப: - நாசமானது, ந வித்யதே ஹி - இல்லையன்றோ! (ஏனென்றால் நித்யமானபடியாலே.) த்ருஷ்டே: - பார்க்கிற ஞானத்திற்கு, விபரிலோபோ ந வித்யதே - நாசமில்லை.

4. வைஷ்ணவேதர்மே, ஹே மநுஜேச்வர! ஓ அரசனே, ஜ்ஞாநம் - ஜ்ஞானமும், வைராக்யம் - வைராக்யமும், ஐச்வர்யம் - ஐச்வர்யமும், தர்மச்ச - தர்மமும், ப்ரஹ்மபூதஸ்ய - ப்ரஹ்மத்தோடு ஸாம்யத்தை அடைந்த, ஆத்மந: - ஆத்மாவுக்கு (முக்தனுக்கு) ஏதத் - இந்த, சதுஷ்டயம் - நாலும், நித்யம் - நித்யமாயிருக்கிறது, யதா - எப்படி என்றால், உதபாநகரணாத் - கிணறு வெட்டுகிறதாலே, ஜலாம்பரம் - ஜலாகாசமானது (ஜலமானது) ந க்ரியதே - உண்டு பண்ணப்படுகிறதில்லை, ஸதேவ - இருக்கிறதே (அதாவது உள்ள ஜலமே) வ்யக்திம் - ப்ரகாசத்தை, நீயதே - அடைவிக்கப்படுகிறது. அஸத: - இல்லாததிற்கு (அதாவது ஜலமில்லாதபக்ஷத்தில்,) குத: எப்படி, ஸம்பவ: - உத்பத்தியாகும். ததா - அப்படியே, ஹேய குணத்வம்ஸாத்-ஹேயமான குணத்தைப் போக்கடிக்கிறதாலே, அவ போதாதயோ குணா: - அறிவு முதலான குணங்கள், ப்ரகாசந்தே - ப்ரகாசிக்கின்றன, ந ஜந்யந்தே - உண்டுபண்ணப்படுகிறதில்லை, தே - அந்த அறிவு முதலிய குணங்கள், ஆத்மந: - ஆத்மாவுக்கு, நித்யா ஏவ ஹி - நித்யங்களன்றோ!

வத்தை உபபாதிப்பதாக தஜ்ஜிஜ்ஞாஸா ப்ரஶ்நத்தை அநுவதிக்கிறார்.

**69. த்ரவ்யமானபடி என் என்னில்?**

(த்ரவ்யமானபடியென்? என்னில்;) என்று.

தத்ஹேதுக்களை அருளிச் செய்து த்ரவ்யத்வத்தை ஸாதிக்கிறார்;

**70. க்ரியாகுணங்களுக்கு ஆஶ்ரயமாய், அஜடமாயிருக்கையாலே த்ரவ்யமாகக் கடவது.**

(க்ரியா குணங்களுக்கு ஆஶ்ரயமாய் அஜடமாயிருக்கையாலே த்ரவ்யமாகக் கடவது) என்று.

க்ரியையாவது – ஸங்கோசவிகாஸங்கள். குணமாவது-ஸம்யோக வியோகங்கள் அஜடத்வமாவது-ஸ்வயம் ப்ரகாஶத்வம். "க்ரியாஶ்ரயோ த்ரவ்யம், குணாஶ்ரயோ த்ரவ்யம்" (க்ரியாஶ்ரயோ த்ரவ்யம். குணாஶ்ரயோ த்ரவ்யம்)[1] என்று, த்ரவ்யலக்ஷணம் சொல்லப்படுகையாலே, க்ரியாஶ்ரயத்வமும் குணாஶ்ரயத்வமும் ஓரோன்றே த்ரவ்யத்வ ஸாதகம். இவற்றோடே அஜடத்வத்தையும் சொல்லுகையாலே அதுவும் த்ரவ்யத்வஸாதகமென்று இவர்க்குக் கருத்து. எங்ஙனே? என்னில்; ஜடவஸ்துக்களிலே த்ரவ்யாத்ரவ்யங்களிரண்டுமுண்டு; அஜடவஸ்துக்களிலே அத்ரவ்யமாயிருப்பதொன்றில்லையிறே. ஆகையால், "ஜ்ஞாநம் த்ரவ்யம்; அஜடத்வாத்| யதஜடம் தத் த்ரவ்யம்; யதா ஆத்மாதி|" (ஜ்ஞாநம் த்ரவ்யம்; அஜடத்வாத், யதஜடம், தத் த்ரவ்யம், யதா ஆத்மாதி)– என்று அஜடத்வந்தன்னைக் கொண்டே த்ரவ்யத்வம் ஸாதிக்கலாமிறே. ஆகையிறே "இது தான் அஜடமுமாய், ஸங்கோசா விகாஸங்களுக்கும் ஸம்யோகவியோகாதிகளுக்கும் ஆஶ்ரயமுமாயிருக்கையாலே த்ரவ்யம்"[2] என்று தத்வஶேகரத்திலும் இவரருளிச்செய்தது.

---

2, க்ரியாச்ரய: - க்ரியைக்கு ஆச்ரயமாயிருக்கிறது, த்ரவ்யம் - த்ரவ்யத்திற்கு லக்ஷணம், குணாச்ரய: - குணத்திற்கு ஆச்ரயமாயிருக்கிறது, த்ரவ்யம் - த்ரவ்யத்திற்கு லக்ஷணம்.

2. தத்வசேகரம். 3-ப்ர.

இப்படி த்ரவ்யமாயிருக்குமாகில், இதுக்கு ஆத்ம குணத்வம் கூடும்படி என்? என்னில்; நித்ய ததாஶ்ரயத்வத்தாலே கூடும். "𑌆𑌶𑍍𑌰𑌯𑌾𑌦𑌨𑍍𑌯𑌤𑍋 𑌵𑍃𑌤𑍍𑌤𑍇𑌰𑌾𑌶𑍍𑌰𑌯𑍇𑌣 𑌸𑌮𑌨𑍍𑌵𑌯𑌾𑌤𑍍 । 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌤𑍍𑌵𑌂 𑌚 𑌗𑍁𑌣𑌤𑍍𑌵𑌂 𑌚 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯𑍈𑌵𑍋𑌪𑌪𑌦𑍍𑌯𑌤𑍇" (ஆஶ்ரயாதந்யதோ வ்ருத்தேராஶ்ரயேண ஸமந்வயாத் | த்ரவ்யத்வம் ச குணத்வம் ச ஜ்ஞானஸ்யைவோபபத்யதே)[1] என்றிறே ஆளவந்தார் அருளிச்செய்தது. ஆஶ்ரயாதந்யதோ வ்ருத்தித்வம், க்ரியாஶ்ரயத்வம் சொன்னபோதே சொல்லிற்றாயிற்று.

இதுதான் ஜ்ஞாநத்துக்கேயன்றிறே; தீபாதிதேஜஃபதார்த்தப்ரபைகளுக்கும் ஒக்குமிறே. ஆகையால், த்ரவ்யத்வ குணத்வங்களிரண்டும் ஜ்ஞாநத்துக்கு உபபந்நம்.

கீழ் ஜ்ஞாநத்துக்குத் தாம் அருளிச்செய்த அஜடத்வ விஷயமான ஜிஜ்ஞாஸாப்ரஶ்நத்தை அநுவதிக்கிறார்;

71. அஜடமாகில் ஸுஷுப்திமூர்ச்சாதிகளில் தோற்ற வேண்டாவோ? என்னில்;

(அஜடமாகில் ஸுஷுப்திமூர்ச்சாதிகளில் தோற்ற வேண்டாவோ? என்னில்) என்று. அதாவது,— ஜ்ஞாநம் ஸ்வயம்ப்ரகாஶமாயிருக்குமாகில் எப்போதும் ப்ரகாஶிக்க வேண்டாவோ; ஸுஷுப்த்யாத்யவஸ்தைகளில் ப்ரகாஶியாதொழிவானென்? என்கை.

அதுக்கு உத்தரம் அருளிச்செய்கிறார்;

72. ப்ரஸரணமில்லாமையாலே தோன்றாது.

(ப்ரஸரணமில்லாமையாலே தோன்றாது) என்று. அதாவது - ஜ்ஞானம் ஸ்வாஶ்ரயத்துக்கு ஸ்வயமேவ ப்ரகாஶிப்

---

1. ஸித்தித்ரயம். ஆச்ரயாத் - ஆச்ரயத்தைக் காட்டிலும், அந்யத: - வேறிடத்திலே, வ்ருத்தே: - இருக்கிறபடியினாலேயும், ஆச்ரயேண - ஆச்ரயத்தோடு, ஸமந்வயாத் - கூடிக்கொண்டிருப்பதினாலும், த்ரவ்யத்வஞ்ச - த்ரவ்யமாயிருக்கும் தன்மையும், குணத்வஞ்ச - குணமாயிருக்கும் தன்மையும், ஜ்ஞாநஸ்ய ஏவ - தர்மபூத ஞாநத்திற்கே, உபபத்யதே - கூடுகிறது.

பது தான் விஷயக்ரஹணவேளையிலிறே. ஸௌஷுப்த்யாதி அவஸ்தைகளில் தமோகுணத்யபிபவத்தாலே ஸங்குசிதமாய், திரோஹிதங்களான மணிப்ரகாஶாதிகளைப் போலே, ப்ரஸரணமில்லாமையாலே ப்ரகாஶியாதென்கை.

இனி மேல், இதினுடைய ஆநந்தரூபத்வத்தை உபபாதிக்கிறார்;

**73. ஆநந்தரூபமாகையாவது - ஜ்ஞாநம் ப்ரகாஶிக்கும் போது அநுகூலமாயிருக்கை.**

(ஆநந்தரூபமாகையாவது) என்று தொடங்கி. ஜ்ஞாநம் ப்ரகாஶிக்கும் போதாவது – ஸ்வாஶ்ரயத்துக்கு விஷயங்களை தர்ஶிப்பிக்கும்போது. அப்போதிறே இதுதான் ப்ரகாஶிப்பது. அவ்வவஸ்தையில் அநுகூலமாயிருக்கையாவது - அவ்வோ விஷயங்களெல்லாம் அநுகூலமாய்த் தோற்றுகையாலே, அவற்றை விஷயீகரித்த இந்த ஜ்ஞாநம் ஸ்வாஶ்ரயத்துக்கு ஸுகரூபமாயிருக்கை.

ஆனால், விஷஶஸ்த்ராதிகளை தர்ஶிப்பிக்கும்போது அவற்றை விஷயீகரித்த ஜ்ஞாநம் ப்ரதிகூலமாயிருப்பானேன்? என்கிற சங்கையை உட்கொண்டு அருளிச்செய்கிறார்;

**74. விஷஶஸ்த்ராதிகளைக் காட்டும் போது ப்ரதிகூலமாயிருக்கைக்கடி தேஹாத்ம ப்ரமாதிகள்.**

(விஷஶஸ்த்ராதிகள்) என்று தொடங்கி. அதாவது- அவற்றை தர்ஶிப்பிக்கும் போது, அவற்றை விஷயீகரித்த ஜ்ஞாநம் துக்கரூபமாயிருக்கைக்குக் காரணம், அவற்றில் பாதகத்வபுத்திக்கு மூலமான தேஹாத்மப்ரமமும், கர்மமும், ஈஶ்வராத்மகத்வஜ்ஞாநராஹித்யமும் என்கை.

இவை தனக்கு ஸ்வாபாவிக வேஷமேது? என்கிற சங்கையிலே அருளிச் செய்கிறார்;

**75. ஈஶ்வராத்மகமாகையாலே எல்லா பதார்த்தங்களுக்கும் ஆநுகூல்யமே ஸ்வபாவம்; ப்ராதிகூல்யம் வந்தேறி.**

(ஈச்வராத்மகமாகையாலே) என்று தொடங்கி. அதாவது - "ஜகத்ஸர்வம் சரீரம் தே" (ஜகத் ஸர்வம் சரீரம் தே)[1] "தாநி ஸர்வாணி தத்வபு:" (தாநி ஸர்வாணி தத்வபு:)[2] "தத்ஸர்வம் வை ஹரேஸ்தநு:" (தத்ஸர்வம் வை ஹரேஸ்தநு:)[3] என்று ஸகலபதார்த்தங்களும் பகவச்சரீரமென்று சாஸ்த்ரங்களிலே சொல்லப்படாநின்றதிறே. அப்படி பகவதாத்மகமாகக் காணும்போது, ஸகலமும் அநுகூலமாய்க்கொண்டு தோற்றுகையாலே எல்லா பதார்த்தங்களுக்கும் ஆநுகூல்யமே ஸ்வபாவம்; இவற்றில் தோற்றுகிற ப்ராதிகூல்யம், தேஹாத்மப்ரமாதிமூலமாகையாலே வந்தேறி என்கை.

இப்படி, ஈச்வராத்மகமாகையாலே ஸகலபதார்த்தங்களுக்கும் ஆநுகூல்யமே ஸ்வபாவமென்பானேன்? சந்தந குஸுமாதிகளிலுண்டான ஆநுகூல்யம் ஸ்வாபாவிகமன்றோ? என்கிற சங்கையின் மேலே அருளிச்செய்கிறார்;

76. மற்றையாநுகூல்யம் ஸ்வாபாவிகமாகில், ஒருவனுக்கு ஒருக்கால் ஓரிடத்திலே அநுகூலங்களான சந்தந குஸுமாதிகள், தேசாந்தரே, காலாந்தரே இவன்றனக்கும், அத்தேசத்திலே அக்காலத்திலே வேறே ஒருவனுக்கும் ப்ரதிகூலங்களாகக் கூடாது.

(மற்றையாநுகூல்யம் ஸ்வாபாவிகமாகில்) என்று தொடங்கி. மற்றையாநுகூல்யம் என்கிறது - தாமருளிச்செய்த பகவதாத்மகத்வத்தால் வந்த ஆநுகூல்யத்தை ஒழிய, சந்தந குஸுமாதி பதார்த்தங்களில் தோற்றுகிற ஆநுகூல்யத்தை. அது அவற்றுக்கு ஸ்வாபாவிகமாகில்,

---

1. ரா - யு - 120 -126. தே - உனக்கு ஸர்வம் ஜகத் - ஸமஸ்த லோகங்களும், சரீரம் - சரீரமாயிருக்கிறது.

2. வி - பு - 1 - 22 - 86. தாநி ஸர்வாணி - அவையெல்லாம், தத்வபு: - அவனுக்குச்சரீரம்.

3. வி - பு - 1 - 22 - 78. ஹரே: - ஹரிக்கு, தநு: - சரீரம், தத்ஸர்வம் வை - அவையெல்லாமல்லவா!

போக்தாவாயிருப்பானொருவனுக்கு ஒரு காலத்திலே ஒரு தேசத்திலே அநுகூலங்களாயிருந்தவை, காலாந்தரத்திலேயாதல், தேசாந்தரத்திலேயாதல், இவன்றனக்கே ப்ரதிகூலங்களாவது; இவனுக்கு அநுகூலங்களாயிருக்கிற தேசகாலங்கள் தன்னிலே வேறே ஒருவனுக்கு ப்ரதிகூலங்களாவதாகை கூடாது. இப்படி, ப்ரதிகூலங்களாய்த் தோற்றக் காணா நின்றோமிறே. ஆகையால், பகவதாத்மகத்வ நிபந்தநமான ஆநுகூல்யமே ஸ்வாபாவிகம்; மற்றையாநுகூல்யம் ஸ்வாபாவிகமன்றென்கை.

"வஸ்த்வேகமேவ து:காய ஸுகாயேர்ஷ்யாகமாய ச। கோபாய ச யதஸ்தஸ்மாத் வஸ்து வஸ்த்வாத்மகம் குத:। ததேவ ப்ரீதயே பூத்வா புநர் து:காய ஜாயதே। ததேவ கோபாய யத: ப்ரஸாதாய ச ஜாயதே। தஸ்மாத் து:காத்மகம் நாஸ்தி ந ச கிஞ்சித் ஸுகாத்மகம்" (வஸ்த்வேகமேவ து:காய ஸுகாயேர்ஷ்யாகமாய ச । கோபாய ச யதஸ்தஸ்மாத் வஸ்து வஸ்த்வாத்மகம் குத: । ததேவ ப்ரீதயே பூத்வா புநர் து:காய ஜாயதே । ததேவ கோபாய யத: ப்ரஸாதாய ச ஜாயதே । தஸ்மாத் து:காத்மகம் நாஸ்தி ந ச கிஞ்சித் ஸுகாத்மகம்)[1] என்று இவ்வர்த்தம் ஸ்ரீபராஸர பகவானாலே விஸதமாகச் சொல்லப்பட்டதிறே.

இத்தால் சொல்லிற்றாயிற்றதென்? என்னில்; விஷஸஸ்த்ராதிகள் ப்ரதிகூலங்களாயும், சந்தநகுஸுமாதிகள் அநுகூலங்களாயும் தோற்றுகிறது தேஹாத்மப்ரமாதி

1. யத: - எந்தக் காரணத்தாலே, வஸ்து ஏக மேவ - ஒரு வஸ்துவே, துக்காய - துக்கத்திற்கும், ஸுகாய - ஸுகத்திற்கும், ஈர்ஷ்யாகமாய ச - அஸூயை உண்டாவதற்கும், கோபாய ச - கோபத்திற்கும் ஆகின்றதோ, தஸ்மாத் - ஆகையாலே, வஸ்து - அந்த வஸ்து, வஸ்த்வாத்மகம் குத: - ஓரேவிதமாய் எப்படியிருக்கும்? யத் - யாதொரு காரணத்தால், ததேவ - அதுவே, ப்ரீதயே பூத்வா - ப்ரீதியின் பொருட்டு ஆகி, புந: - மறுபடியும், துக்காய - துக்கத்தின் பொருட்டும், ஜாயதே - ஆகின்றதோ, ததேவ - அதுவே, கோபாய - கோபத்தின் பொருட்டும், ப்ரஸாதாய ச - தெளிவுண்டாவதற்கும், ஜாயதே - ஆகின்றதோ, தஸ்மாத் - அந்தக் காரணத்தாலே, கிஞ்சித் - ஒன்றும், துக்காத்மகம் நாஸ்தி - துக்கரூபமாயுமில்லை, ந ச ஸுகாத்மகம் - ஸுகரூபமாயுமில்லை.

களாலே. ஈஶ்வராத்மகமாகையாலே எல்லா பதார்த்தங்களுக்கும் ஆநுகூல்யமே ஸ்வபாவம். ஆகையால் அவ்வாகாரத்தாலே காணும்போது, ஸர்வவிஷய ப்ரகாஶநதசையிலும் ஜ்ஞாநம் - ஆத்மரூபமாயிருக்கும் என்றதாயிற்று.

ஆக, கீழ்ச்செய்ததாயிற்றது – (சித்தென்கிறது ஆத்மாவை) என்று முதலிலே சிச்சப்தவாச்யமான ஆத்மவஸ்துவை உத்தேசித்து; அநந்தரம் (தேஹாதிவிலக்ஷணமாய்) என்று தொடங்கி (ஶேஷமாயிருக்கும்) என்னுமளவாக தத்ஸ்வரூப லக்ஷணத்தை விஸ்தரேண சொல்லி, (தேஹாதிவிலக்ஷணமானபடியென்? என்னில்) என்று தொடங்கி (ஶேஷமாகையாவது) என்னுமளவாக உக்த லக்ஷணத்தை பரீக்ஷித்து, அநந்தரம், ஏவம்பூதமான ஆத்மஸ்வரூபம் பத்த முக்த நித்யரூபேண த்ரிப்ரகாரமாயிருக்கும்படியையும், பத்தாத்மாக்களுக்கு அவித்யாதிகளுண்டாகைக்கு ஹேதுவையும், தந்நிவ்ருத்தி க்ரமத்தையும், த்ரிவிதாத்மவர்கமும் தனித்தனியே அநந்தமாயிருக்கும்படியையும் சொல்லி, அந்த ஜீவாநந்த்யப்ரதிபடமான ஏகாத்மவாதத்தை யுக்தி ஶாஸ்த்ரங்களாலே நிரஸித்து, ஆத்மபேதத்தை ஸாதித்து, முன்பு விஸ்தரேண சொன்னபடியன்றிக்கே ஸங்க்ரஹமாக த்ரிவித ஆத்மாக்களுக்குமுண்டான லக்ஷணத்தை தர்ஶிப்பித்து, அநந்தரம் ஜ்ஞாநத்துக்கும் ஸ்வரூபத்துக்குமுண்டான ஸாதர்ம்ய வைதர்ம்யங்களைச் சொல்லி, ஜ்ஞாந விபுத்வ ப்ரஸங்கத்திலே த்ரிவித சேதநருடைய ஜ்ஞாநத்துக்குமுண்டான விஶேஷத்தைச் சொல்லி, முன்பு ஜ்ஞாநத்துக்குச் சொன்ன நித்யத்வ த்ரவ்யத்வ அஜடத்வ ஆநந்தரூபத்வங்களை அடைவே உபபாதித்து, இப்படி சித்-தத்வத்தினுடைய வேஷத்தை அருளிச்செய்து தலைக்கட்டினார்.

**பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.**

**ஜீயர் திருவடிகளேஶரணம்.**

**சித் ப்ரகரணம் முற்றிற்று.**

ஸ்ரீ:

# அசித் ப்ரகரணம்.

தத்வத்ரயமாவது - சித்தும், அசித்தும், ஈச்வரனும் என்று உத்தேசித்த க்ரமத்திலே, ப்ரதமம் சிச்சப்தவாச்யனான ஆத்மாவினுடைய ஸ்வரூப ஸ்வபாவ விசேஷங்களை ஸ்புடமாக அருளிச்செய்தார் கீழ்; அநந்தரம், அசித்வஸ்துவினுடைய ஸ்வரூப ஸ்வபாவ விசேஷங்களை அதிஸ்புடமாக அருளிச்செய்கிறார்.

அதில் ப்ரதமத்திலே அசில்லக்ஷணத்தை அருளிச்செய்கிறார்;

**1. அசித்து - ஜ்ஞாநசூந்யமாய், விகாராஸ்பதமாயிருக்கும்.**

(அசித்து – ஜ்ஞாநசூந்யமாய், விகாராஸ்பதமா யிருக்கும்) என்று. அசித்தாகிறது – சைதந்ய அநாதாரமான வஸ்துவிறே. அதுதன்னை அருளிச் செய்கிறார்; (ஜ்ஞாநசூந்யமாய்) என்று. அத்தைப்பற்றவிறே ஸ்ருதி, போக்யசப்தத்தாலே அசித்தைச் சொல்லிற்று. விகாராஸ்பதமாகையாவது – விகாரத்துக்கு இருப்பிடமாயிருக்கை. விகாரமாவது - அவஸ்தாந்தராபத்தி; அதாவது – சித்ஸ்வரூபம் போலே ஸதைகரூபமாயிராதொழிகை.

இப்படி இதினுடைய லக்ஷணத்தை அருளிச்செய்தவநந்தரம், இவ்வசித் தத்வந்தான் – ஸத்வைகாதாரமாயும், ஸத்வாதிகுணத்ரயாதாரமாயும், ஸத்வாதிகுணசூந்யமாயும் மூன்று வகைப் பட்டிருக்கும்படியை அருளிச்செய்கிறார்;

**2. இது, சுத்தஸத்வமென்றும், மிஸ்ரஸத்வமென்றும், ஸத்வசூந்யமென்றும் த்ரிவிதம்.**

(இது, சுத்தஸத்வமென்றும், மிஸ்ரஸத்வமென்றும், ஸத்வசூந்யமென்றும் த்ரிவிதம்) என்று.

உத்தேசித்த க்ரமத்திலே, அசித் த்ரயத்தினுடையவும் ஸ்வரூப ஸ்வபாவ விசேஷங்களை ப்ரதிபாதிப்பதாக நினைத்து, ப்ரதமம் சுத்தஸத்வத்தின் படியை அருளிச்செய்கிறார் :

**3. இதில் சுத்தஸத்வமாவது - ரஜஸ்தமஸ்ஸுக்கள் கலசாதே கேவலஸத்வமாய், நித்யமாய், ஜ்ஞாநாநந்தஜநகமாய், கர்மத்தாலன்றிக்கே கேவல பகவதிச்சையாலே விமாந கோபுர மண்டப ப்ராஸாதாதி ரூபேண பரிணமிக்கக் கடவதாய், நிரவதிகதேஜோ ரூபமாய், நித்யமுக்தராலும் ஈச்வரனாலும் பரிச்சேதிக்க அரிதாய், அத்யத்புதமாயிருப்பதொன்று.**

(இதில் சுத்தஸத்வமாவது) என்று தொடங்கி. - சுத்த ஸத்வமென்றது - குணாந்தரம் கலசாத ஸத்வகுணத்தை யுடையதென்றபடி. அத்தை அருளிச்செய்கிறார்; (ரஜஸ் தமஸ்ஸுக்கள் கலசாதே கேவலஸத்வமாய்) என்று. "க்ஷயந்தமஸ்ய ரஜஸ: பராகே" (க்ஷயந்தமஸ்ய ரஜஸ: பராகே)[1] "தமஸஸ்து பாரே" (தமஸஸ்து பாரே)[2] "தமஸ: பரஸ்தாத்" (தமஸ: பரஸ்தாத்)[3] "பஞ்சசக்திமயே திவ்யே சுத்தஸத்வே ஸுகாகரே" (பஞ்சசக்திமயே திவ்யே சுத்தஸத்வே ஸுகாகரே)[4] என்று ச்ருதிஸ்ம்ருதிகளிலே இப்படி சொல்லாநின்றதிறே.

---

1. யஜுஷி. கா. 2. ப்ர. 2. ரஜஸ: பராகே - ரஜோமயமான பிரபஞ்சத்திற்கு மேலான பரமபதத்திலே, க்ஷயந்தம் - நித்தியர்களுடனும் எழுந்தருளியிருக்கிற.

2. புருஷஸூக்தம். தமஸஸ்து பாரே - ப்ரக்ருதியைக் காட்டிலும் மேல்பாகத்தில்.

3. புருஷஸூக்தம், தமஸ: பரஸ்தாத் - ப்ரக்ருதியைக் காட்டிலும் அப்பாலே யிருக்கிற,

4. தை. உ. 2-12. பஞ்சசக்திமயே - பரமேஷ்டி, புருஷன் அல்லது புமான், விச்வ, நிவ்ருத்தி, ஸர்வ, என்கிற பஞ்சசக்திகளை ஸ்வரூபமாக உடையதும், ஸுகாகரே - ஸுகத்திற்கு இருப்பிடமானதும் திவ்யே - திவ்யமான, சுத்த ஸத்வே - சுத்த ஸத்வத்தில் (பரமபதத்தில்).

(நித்யமாய்) அதாவது — அநாதிநிதநமாயிருக்கை. "𑌤𑌦𑌕𑍍𑌷𑌰𑍇 𑌪𑌰𑌮𑍇 𑌵𑍍𑌯𑍋𑌮𑌨𑍍" (தத³க்ஷரே பரமே வ்யோமந்)[1] "𑌕𑌾𑌲𑌾𑌤𑍀𑌤𑌮𑌨𑌾𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑌮𑌪𑍍𑌰𑌾𑌕𑍃𑌤𑌮𑌚𑌞𑍍𑌚𑌲𑌮𑍍 । 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌮𑌰𑍍𑌚𑌿𑌃 𑌪𑌥𑌾 𑌸𑌦𑍍𑌭𑌿𑌰𑍍 𑌮𑌯𑌿 𑌸𑌨𑍍𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌮𑌾𑌨𑌸𑍈𑌃" (காலாதீதமநாத்யந்தமப்ராக்ருதமசஞ்சலம் | ப்ராப்யமர்ச்சி꞉ பதாத் ஸத்பிர் மயி ஸந்யஸ்தமாநஸை꞉)[2] "𑌯𑌤𑍍 𑌤𑌤𑍍 𑌪𑍁𑌰𑌾𑌣𑌮𑌾𑌕𑌾𑌶𑌂 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌪𑌰𑌮𑌂 𑌧𑍍𑌰𑍁𑌵𑌮𑍍 । 𑌯𑌤𑍍𑌪𑌦𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌜𑍍𑌞𑌾 𑌮𑍁𑌚𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌕𑌿𑌲𑍍𑌬𑌿𑌷𑍈𑌃" (யத் தத் புராணமாகாஶம் ஸர்வஸ்மாத் பரமம் த்ருவம் | யத் பதம் ப்ராப்ய தத்வஜ்ஞா முச்யந்தே ஸர்வ கில்பிஷை꞉)[3] என்று இதினுடைய நித்யத்வமும் ஶ்ருதிஸ்ம்ருதிகளிலே சொல்லப்பட்டது.

(ஜ்ஞாநாநந்தஜநகமாய்) சுத்த ஸத்வமாகையாலே ஜ்ஞாநாநந்தஜநகமாயிருக்குமிறே. ஸத்வம் — ஜ்ஞாந ஸுகாவஹமாயிறே இருப்பது. ஆகையிறே "𑌶𑍁𑌦𑍍𑌧𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑍇" (ஶுத்தஸத்வே) என்ற அநந்தரத்திலே, "𑌸𑍁𑌖𑌾𑌕𑌰𑍇" (ஸுகாகரே) என்றது.

(கர்மத்தாலன்றிக்கே கேவலபகவதிச்சையாலே, விமாநகோபுர மண்டபப்ராஸாதாதிரூபேண பரிணமிக்கக்

---

1. தை - உப. 2-12. தத் - அது, அக்ஷரே - நாசமில்லாத, பரமே வ்யோமன் - பரமாகாசத்தில்.

2. யத் - யாதொரு பரமபதமாகிற ஸ்தானமானது, காலாதீதம் - முக்காலத்தைக் கடந்ததாயும். அநாத்யந்தம் - ஆதியந்தமில்லாததாயும், அப்ராக்ருதம் - அப்ராக்ருதமாயும், அசஞ்சலம் - சலியாததாயும், மயி - என்னிடத்தில், ஸந்யஸ்தமானஸை: - வைக்கப்பட்டிருக்கிற மனதையுடைய, ஸத்பி: - ஸத்புருஷர்களாலே அர்ச்சி:பதாத் - அர்ச்சிராதிமார்க்கத்தாலே, ப்ராப்யம் - அடையத் தகுந்ததாயுமிருக்கிறதோ.

3. யத் தத் - யாதொரு ப்ரஸித்தமான அந்த பரமபதமாகிற ஸ்தானமானது, புராணம் - அநாதியாயும், ஆகாசம் - பரமாகாசபதவாச்யமாயும், ஸர்வஸ்மாத் - எல்லாவற்றைக்காட்டிலும், பரமம் - உயர்ந்ததாயும், த்ருவம் - நித்யமாயுமிருக்கிறதோ, யத்பதம் - யாதொரு பரமபதமாகிற ஸ்தானத்தை, ப்ராப்ய - அடைந்து, தத்வஜ்ஞா: - தத்வத்தை அறிந்தவர்கள். ஸர்வகில்பிஷை: - ஸமஸ்த பாபங்களினுலே, முச்யந்தே - விடப்படுகிறார்களோ.

கடவதாய்) அதாவது – சேதநன் கர்மாநுகுணமாக இச்சிக்க, அந்த இச்சாநுகுணமாக பகவத்ஸங்கல்பத்தாலே சதுர்விம்ஶதித்த்வமாய்க்கொண்டு பரிணமித்து, சேதநர்க்கு போக்ய போகோபகரண போகஸ்தாநங்களாகிற ப்ரக்ருதி தத்வம்போலன்றிக்கே, ஸ்வபோகார்த்தமாக உண்டான பகவதிச்சையாலே விமாந கோபுராதிரூபேண பரிணமியா நிற்குமென்கை.

"𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌪𑍂𑌰𑌯𑍋𑌧𑍍𑌯𑌾 । 𑌤𑌸𑍍𑌯𑌾𑌂 𑌹𑌿𑌰𑌣𑍍𑌮𑌯𑌃 𑌕𑍋𑌶𑌃 । 𑌯𑍋 𑌵𑍈 𑌤𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌵𑍇𑌦 । 𑌅𑌮𑍃𑌤𑍇𑌨𑌾𑌵𑍃𑌤𑌾𑌂 𑌪𑍁𑌰𑍀𑌮𑍍" (தேவாநாம் பூரயோத்யா। தஸ்யாம் ஹிரண்மயஃ கோஶஃ | யோ வை தாம் ப்ரஹ்மணோ வேத அம்ருதேநாவ்ருதாம் புரீம்)[1] "𑌅𑌪𑌰𑌾𑌜𑌿𑌤𑌾 𑌪𑍂𑌰𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌃" (அபராஜிதா பூர் ப்ரஹ்மணஃ)[2] "𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑍇𑌸𑍍𑌸𑌭𑌾𑌂 𑌵𑍇𑌶𑍍𑌮 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇" (ப்ரஜாபதேஸ் ஸபாம் வேஶ்ம ப்ரபத்யே)[3] என்று ஶ்ருதியிலேயும் ஸங்க்ரஹேண நித்ய விபூதியிலுண்டான திவ்யநகர திவ்யாயதநாதிகள் சொல்லப்பட்டது

இதுதன்னை பாஷ்யகாரர் ஸ்ரீவைகுண்ட கத்யத்திலே "𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌵𑌰𑌣𑌶𑌤𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌵𑍃𑌤𑍇, 𑌦𑌿𑌵𑍍𑌯𑌕𑌲𑍍𑌪𑌕𑌤𑌰𑍂𑌪𑌶𑍋𑌭𑌿𑌤𑍇, 𑌦𑌿𑌵𑍍𑌯𑍋𑌦𑍍𑌯𑌾𑌨𑌶𑌤𑌸𑌹𑌸𑍍𑌰𑌕𑍋𑌟𑌿𑌭𑌿𑌰𑌾-

---

1. ஆரணே 1. தேவாநாம் - தேவர்களுடைய, பூ: - பட்டணமானது, அயோத்யா - அயோத்தி என்று பெயருடையது. தஸ்யாம் - அப்பட்டணத்திலே. ஹிரண்மய: - ஸ்வர்ணமயமான, கோச:- பொக்கிஷமானது இருக்கிறது. யோ வை - யாதொரு முக்தன், ப்ரஹ்மண: - பரப்ரஹ்மத்தினுடைய, அம்ருதேந - அம்ருதத்தாலே. ஆவ்ருதாம் - சூழப்பட்டிருக்கிற, தாம் புரீம் - அந்தப் பட்டணத்தை, வேத - அறிகிருனோ.

2, ப்ரஹ்மண: - பரப்ரஹ்மத்தினுடைய, பூ: - பட்டணமானது, அபராஜிதா - ஜயிக்கப்படாதது. (ஸ்ரீவைகுண்டம் அபராஜிதா என்று பெயருடையது).

3. சா. உப. 8-14-1. ஸ: - அந்த உபாஸகனானவன், ப்ரஜாபதே: - பரப்ரஹ்மத்தினுடைய, ஸபாம் - ஸபாரூபமான, வேச்ம - க்ருஹத்தில், ப்ரபத்யே - ப்ரவேசிக்கிறேன்.

[illegible] (திவ்யாவரணஶத ஸஹஸ்ராவ்ருதே. திவ்யகல்பகதருபஶோபிதே. திவ்யோத்யாநஶத ஸஹஸ்ரகோடிபிராவ்ருதேதிப்ரமாணே, திவ்யாயதநே கஸ்மிம்ஶ்சித் விசித்ரதிவ்யரத்நமய திவ்யாஸ்தாந மண்டபே)[1] என்று தொடங்கி விஸ்தரேண அருளிச்செய்தாரிறே.

(நிரவதிகதேஜோரூபமாய்). அதாவது – அக்நி ஆதித்யாதி தேஜஃபதார்த்தங்களையும் கத்யோதகல்பமாக்கும்படி அளவிறந்த தேஜஸ்ஸே வடிவாயிருக்கை. "[illegible]" (ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ர தாரகம் நேமா வித்யுதோ பாந்தி குதோயமக்நி:)[2] "[illegible]" (அத்யர்காநலதீப்தம் தத் ஸ்தாநம் விஷ்ணோர் மஹாத்மந: | ஸ்வயைவ ப்ரபயா ராஜந் துஷ்ப்ரேக்ஷ்யம் தேவதாநவை:)[3] என்னக்கடவதிறே. "சுடரொளியாய் நின்று

1. வைகுண்ட கத்யம். திவ்யாவரண சதஸஹஸ்ராவ்ருதே - திவ்யமான நூறுயிரம் மதிள்களாலே சூழப்பட்டும், திவ்யகல்பகதருப சோபிதே - திவ்யமான கல்பகவிருக்ஷத்தாலே ப்ரகாசிக்கப்பெற்றும், திவ்யோத்யானசதஸஹஸ்ரகோடிபிராவ்ருதே - திவ்யமான நூறுயிரம்கோடி உத்யாநவனங்களால் சூழப்பட்டும், அதிப்ரமாணே - ப்ரமாணத்தைக்காட்டிலும் அதிகமாயும், கஸ்மிம்ச்சித் - ஒரு, திவ்யாயதனே - திவ்யமான ஸ்தானத்தில், விசித்ர திவ்ய ரத்நமய திவ்யாஸ்தாந மண்டபே - விசித்திரமாய் திவ்யரத்னமயமான திவ்ய ஆஸ்தானமண்டபத்திலே.

2. கட. உப. 2. தத்ர - அந்த ப்ரம்மத்தினிடத்தில், ஸூர்ய:- சூரியன், ந பாதி - பிரகாசிக்கிறுனில்லை, ந சந்த்ரதாரகம் பாதி - சந்த்ரன், நக்ஷத்திரங்கள் பிரகாசிக்கவில்லை. இமா வித்யுத: ந - இந்த மின்னல்கள் பிரகாசிக்கிறதில்லை, அயம் அக்நி: - இந்த அக்நியானவன், குத: - எங்கே பிரகாசிப்பான்? (இத்தால் ஜ்யோதிஸ்ஸுக்களை யெல்லாம் மறைக்கிறவன் என்றவாறு.)

3. பார. ஆ. ராஜந்! - மஹாராஜரே! அத்யர்க்காநல தீப்தம் - சூர்யசந்திராக்நிகளிற் காட்டிலும் கோடிசூர்யன்போல விளங்கு

தன்னுடைச்சோதி"[1] "கழிபட்டோடும் சுடர்ச்சோதி வெள்ளம்"[2] "விளங்குஞ்சுடர்ச்சோதி"[3] என்று ஆழ்வாரும், இதினுடைய நிரவதிக தேஜோரூபத்தைப் பலவிடங்களிலும் அருளிச்செய்தாரிறே.

(நித்யமுக்தராலும் ஈச்வரனாலும் பரிச்சேதிக்க அரிதாய்). அதாவது-இதினுடைய பரிமாணாதிகள் ஒருவராலுமளவிடவொண்ணாதபடியிருக்குமாயிற்று. "𑌤𑍇𑌷𑌾𑌮𑌪𑌿 𑌇𑌯𑌤𑍍𑌪𑌰𑌿𑌮𑌾𑌣𑌂 𑌇𑌯𑌦𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌂, 𑌈𑌦𑍃𑌶𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌮𑌿𑌤𑌿 𑌪𑌰𑌿𑌚𑍍𑌛𑍇𑌤𑍍𑌤𑍁𑌮𑌯𑍋𑌗𑍍𑌯𑍇" (தேஷாமபி இயத் பரிமாணம் இயதைச்வர்யம், ஈத்ருசஸ்வபாவமிதி பரிச்சேத்துமயோக்யே)[4] என்று நித்யரால் பரிச்சேதிக்கவொண்ணாதென்று ஸ்ரீவைகுண்டகத்யத்திலே பாஷ்யகாரர் அருளிச்செய்தவிது முக்தருக்குமொக்குமிறே. ஈச்வரஜ்ஞாநத்தோபாதி இவர்களுடையஜ்ஞாநத்துக்கும் ஸர்வதர்சித்வமுண்டாகையாலே; அவனால் பரிச்சேதிக்கலாமாகில், இவர்களாலும் பரிச்சேதிக்கலாமிறே. ஆகையால் அவனுக்குமரிதுஎன்கை.

ஆனால், இவர்களுடைய ஸர்வஜ்ஞதைக்குக் கொத்தை வாராதோ? என்னில்; வாராது. ஸர்வஜ்ஞதையாவது - ஸர்வத்தையுமுள்ளபடியறிகையிறே. பரிச்சேத்யமாகில் பரிச்சேதித்தறிகையும், அபரிச்சேத்யமாகில் அப்படியறிகையுமிறே உள்ளது. ஸீமையில்லாததொன்றுக்கு ஸீமையறியாமை ஸர்வஜ்ஞதைக்கு அநுகுணமென்னுமிடம், "[illegible] ஜ்ஞாயதே

கிற, மஹாத்மந: - மஹாத்மாவான, விஷ்ணோ: - ஸ்ரீமந்நாராயணனுடைய, தத் - அந்த, ஸ்தாநம் - ஸ்ரீவைகுண்டமானது, ஸ்வயா - தன்னுடையதான, ப்ரபயா ஏவ - காந்தியினாலேயே, தேவதாநவை:- தேவாஸுராதிகளாலும், துஷ்ப்ரேக்ஷம் - காணற்கரிதாகி விளங்குகின்றது.

1. தி. வா. 3-10-5. 2. தி. வா. 8-10-5. 3. திருவா. 6-4-6.

4. வைகுண்டகத்யம். தேஷாமபி - அந்த நித்யஸூரிகளுக்கும், இயத் பரிமாணம் - இவ்வளவு பரிமாணமுள்ளது, இயத் ஐச்வர்யம் - இவ்வளவு ஐச்வர்யமுள்ளது, ஈத்ருச ஸ்வபாவமிதி - இப்படிப்பட்ட ஸ்வபாவமுடையதென்று, பரிச்சேத்தும் அயோக்யே - பரிச்சேதிக்கவொண்ணாததான.

ஹீயதே | யஞாவெ்வ தஜ்ஞதாநுகுணாம் ஸவ ஜ்ஞதா யா விதுவெர்வாஹொஜநெஞயா கிம விது ஹாநெஞாயிதூவுதெ" (தேவி த்வந்மஹிமாவதிர் ந ஹரிணா நாபி த்வயா ஜ்ஞாயதே யத்யப்யேவமதாபி நைவ யுவயோஸ் ஸர்வஜ்ஞதா ஹீயதே | யந்நாஸ்த்யேவ ததஜ்ஞதாமநுகுணாம் ஸர்வஜ்ஞதாயா விதுர் வ்யோமாம்போஜமிதந்தயா கில விதந் ப்ராந்தோயமித்யுச்யதே)[1] என்று ஸ்ரீஸ்துதியிலே ஆழ்வானருளிச்செய்தார்.

இங்ஙனன்றாகில், "தனக்குந்தன்றன்மையறிவரியான்"[2] என்கிறவிதுவும் ஸர்வஜ்ஞதையோடு விரோதிக்கும். ஆகையால், நித்யமுக்தஈஶ்வரர்களால் அபரிச்சேத்யமென்றவிதில் குறையில்லை. இத்தால், இதினுடைய வைபவம் சொன்னபடி.

(அத்யத்புதமாயிருப்பதொன்று). அதி அத்புதத்வமாவது—அநுக்ஷணம் அபூர்வ ஆஶ்சர்யாவஹத்வம். "அநந்தாஶ்சர்ய நந்தமஹாவிபவ" (அநந்தாஶ்சர்யாநந்தமஹாவிபவ)[3] என்றுரிறே பாஷ்யகாரர். ஆக சுத்தஸத்வமாவது – இப்படி யிருப்பதொன்றென்றதாயிற்று.

---

1. ஸ்ரீஸ்தவம் 8. தேவி! - ஏதேவியே! த்வன் மஹிமா அவதி:- தேவரீருடைய மாஹாத்ம்யத்தின் எல்லையானது, ஹரிணா - விஷ்ணுவாலேயும், ந ஜ்ஞாயதே - அறியப்படவில்லை, த்வயாபி - உம்மாலும், ந ஜ்ஞாயதே - அறியப்படவில்லை. ஏவம் யத்யபி - இப்படியிருந்த போதிலும், அதாபி - ஆனபோதிலும், யுவயோ: - உங்களுக்கு, ஸர்வஜ்ஞதா - ஸர்வஜ்ஞத்வமானது, ந ஹீயதே - குறைந்ததாகவே இருக்கிறதில்லை, யத் - யாதொன்று, நாஸ்த்யேவ - இல்லையோ, தத் - அதினுடைய, அஜ்ஞதாம் - அஜ்ஞாநத்தை, ஸர்வஜ்ஞதாயா: - ஸர்வஜ்ஞதைக்கு, அநுகுணாம் - தகுந்ததாக, விது: - அறிகிறார்கள், வ்யோமாம்போஜம் - ஆகாசத்தாமரையை அதாவது இல்லாததை, இதந்தயா - முன்பிருக்கிறதாக, விதந் - அறிகிறவன், ப்ராந்த: - ப்ராந்தன், அயம் - இவன், இதி - என்று, உச்யதே கில - சொல்லப்படுகிறானல்லவா ?

2. தி. வா, 8-4-6.

3. கத்யே அனந்தாச்சர்ய - அளவிறந்த ஆச்சரியாவஹமான, அனந்த மஹாவிபவ - அளவற்ற மஹத்தான விபவத்தையுடையதான,

**4. இத்தைச் சிலர் ஜடமென்றார்கள்; சிலர் அஜட மென்றார்கள்.**

(இத்தைச் சிலர் ஜடமென்றார்கள்; சிலர் அஜடமென் றார்கள்). அதாவது – இந்த சுத்தஸத்வம் தன்னை, இந்த தர்மநஸ்தர் தங்களிலே சிலர் ஜடமென்று சொன்னார்கள்; அங்ஙனமின்றிக்கே, சிலர் அஜடமென்று சொன்னார்கள். என்கை. "இஹ ஜடாமாதிமாம் கேசிதாஹு:" (இஹ ஜடாமாதிமாம் கேசிதாஹு:)[1] என்றிறே அபியுக்தரும் சொல்லிற்று.

ஜடமாகையாவது – ஸ்வயம்ப்ரகாசமன்றிக்கேயிருக் கை; அஜடமாகையாவது – ஸ்வயம்ப்ரகாசமாயிருக்கை. அத்தை அருளிச்செய்கிறார்;

**5. அஜடமானபோது, நித்யர்க்கும் முக்தர்க்கும் ஈச் வரனுக்கும் ஜ்ஞாநத்தையொழியவும் தோற்றும்.**

(அஜடமானபோது, நித்யர்க்கும் முக்தர்க்கும் ஈச்வர னுக்கும் ஜ்ஞானத்தையொழியவும் தோற்றும்) என்று. அஜடமானபோது என்றது – ஜடமென்றும் ஒருபக்ஷம் சொல்லுகையாலே அப்படியன்றிக்கே இப்படியான போது என்றபடி. அந்த பக்ஷத்தை விட்டு இத்தை உப பாதிக்கையாலே, இவர் தமக்கு இதுவே திருவுள்ளமென்று தோற்றுநின்றதிறே. ஜ்ஞானத்தையொழியவும் தோற்று மென்றது – ஜ்ஞானத்தாலே தன்னையறியவேண்டாதபடி தானே ப்ரகாசிக்கும் என்றபடி.

இப்படி ஸ்வயம்ப்ரகாசமாயிருக்குமாகில், ஸம்ஸாரி களுக்கு ஜ்ஞாநவேத்யமாக வேண்டாதே தானே தோற்ற வேண்டாவோ? என்கிற சங்கையிலே அருளிச்செய் கிறார்;

**6. ஸம்ஸாரிகளுக்குத் தோற்றாது.**

---

1. தத்வமுக்தாகலாபம். இஹ - இங்கு, ஆதிமாம் - முதலான சுத்த ஸத்வத்தை, ஜடாம் - ஜடமாக, கேசித் - சிலபேர்கள், ஆஹு: - சொல்லுகிறார்கள்.

(ஸம்ஸாரிகளுக்குத்தோற்றாது) என்று. இதுதான், அபியுக்தராலே விஸ்தரேண ப்ரதிபாதிக்கப்பட்டது. எங்ஙனே? என்னில்; "த்ரிவித அசேதநங்கள்" என்றெடுத்து, "அவற்றில், ப்ரக்ருதியும் காலமும் ஜடங்கள்; சுத்த ஸத்வமான த்ரவ்யத்தையும் ஜடமென்று சிலர் சொல்லுவர்கள். ஜடத்வமாவது – ஸ்வயம்ப்ரகாஶமன்றிக்கேயிருக்கை. பகவச்சாஸ்த்ராதி பராமர்ஶம் பண்ணினவர்கள், ஜ்ஞாநாத்மகமாக ஶாஸ்த்ரஸித்தமாகையாலே, சுத்த ஸத்வத்ரவ்யத்தை ஸ்வயம்ப்ரகாஶமென்பர்கள். இப்படி ஸ்வயம்ப்ரகாஶமாகில், ஸம்ஸாரிகளுக்கு சாஸ்த்ரவேத்யமாக வேண்டாதே, தானே தோற்றவேண்டாவோ? என்னில்; ஸர்வாத்மாக்களுடையவும் ஸ்வரூபமும், தர்மபூத ஜ்ஞாநமும் ஸ்வயம்ப்ரகாஶமாயிருக்க, ஸ்வரூபம் தனக்கே ஸ்வயம்ப்ரகாஶமாய், வேறெல்லார்க்கும் ஜ்ஞாநாந்தரவேத்யமானாப்போலவும், தர்மபூதஜ்ஞாநமும் ஸ்வாஶ்ரயத்துக்கே ஸ்வயம்ப்ரகாஶமாய், இதரர்க்கு ஸ்வயம்ப்ரகாஶமல்லாதாப் போலவும், இதுவும் நியதவிஷயமாக ஸ்வயம்ப்ரகாஶமானால் விரோதமில்லை. "𑌯𑍋 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌯𑍁𑌗𑌪𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑍇𑌣 𑌸𑌦𑌾 𑌸𑍍𑌵𑌤𑌃 । 𑌤𑌂 𑌪𑍍𑌰𑌣𑌮𑍍𑌯 𑌹𑌰𑌿𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌨𑍍𑌯𑌾𑌯𑌤𑌤𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌚𑌕𑍍𑌷𑍍𑌮𑌹𑍇" (யோ வேத்தி யுகபத் ஸர்வம் ப்ரத்யக்ஷேண ஸதா ஸ்வத꞉ | தம் ப்ரணம்ய ஹரிம் ஶாஸ்த்ரம் ந்யாயதத்வம் ப்ரசக்ஷ்மஹே)[1] என்கிறபடியே, தர்மபூதஜ்ஞாநத்தாலே ஸர்வத்தையும் ஸாக்ஷாத்கரித்துக் கொண்டிருக்கிற ஈஶ்வரனுக்கு சுத்தஸத்வத்ரவ்யம் ஸ்வயம்ப்ரகாஶமாயிருக்கிறபடி எங்ஙனே? என்னில்; இவனுடைய தர்மபூதஜ்ஞாநம், திவ்யாத்மஸ்வரூபம்முதலாக ஸர்வத்தையும் விஷயீகரியா நிற்க, திவ்யாத்மஸ்வரூபம் – ஸ்வயம்ப்ரகாஶமாயிருக்கிறாப்போலே இதுவும் ஸ்வயம்

1. ந்யாயதத்வம். ய꞉ - யாதொரு ஸர்வேச்வரன், யுகபத் - ஏக காலத்தில், ஸர்வம் - ஸமஸ்தத்தையும், ப்ரத்யக்ஷேண - ப்ரத்யக்ஷமாக, ஸதா - ஸர்வகாலத்திலும், ஸ்வத꞉ - ஸ்வயமாகவே, வேத்தி - அறிகிறானோ, தம் - அந்த, ஹரிம் - எம்பெருமானை, ப்ரணம்ய - வணங்கி, ந்யாயதத்வம் சாஸ்த்ரம் - ந்யாய தத்வம் என்னும் சாஸ்த்ரத்தை, ப்ரசக்ஷ்மஹே - சொல்லுகிறேன்.

ப்ரகாஶமாயிருக்கலாம். இப்படி நித்யர்க்கும் துல்யம். விஷயப்ரகாஶநகாலத்திலே தர்மபூதஜ்ஞாநம் ஸ்வாஶ்ரய மாத்ரத்துக்கே ஸ்வயம்ப்ரகாஶமானுப் போலே, முக்தர்க்கும் அவ்வவஸ்தையிலே இது ஸ்வயம்ப்ரகாஶமானுல் விரோதமில்லை. தர்மபூதஜ்ஞாநத்தினுடைய ஸ்வாத்ம ப்ரகாஶநஶக்தியானது விஷயப்ரகாஶநமில்லாதகாலத்தில் கர்மவிஶேஷங்களாலே ப்ரதிபத்தையானுப்போலே, சுத்த ஸத்வத்தினுடைய ஸ்வாத்மப்ரகாஶநஶக்தியும் பத்ததசையில் ப்ரதிபத்தையாகையாலே, சுத்தஸத்வம் பத்தர்க்கு ப்ரகாஶியாதொழிகிறது. "𑌧𑌿𑌯𑌸𑍍𑌸𑍍𑌵𑌯𑌂𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌤𑍍𑌵𑌂 𑌮𑍌𑌕𑍍𑌤𑍌 𑌸𑍍𑌵𑌾𑌭𑌾𑌵𑌿𑌕𑌂 𑌯𑌥𑌾 । 𑌬𑌦𑍍𑌧𑍇 𑌕𑌦𑌾𑌚𑌿𑌤𑍍 𑌸𑌂𑌵𑍃𑌤𑍍𑌤𑌂 𑌤𑌥𑌾𑌽𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 𑌨𑌿𑌯𑌮𑍍𑌯𑌤𑍇" (தியஸ் ஸ்வயம்ப்ரகாஶத்வம் முக்தௌ ஸ்வாபாவிகம் யதா | பத்தே கதாசித் ஸம்ருத்தம் ததாऽத்ராபி நியம்யதே)[1] இவ்வளவு அவஸ்தாந்தராபத்தி, விகாரித்ரவ்யத்துக்கு விருத்தமன்று. ஆகையால், ப்ரமாணப்ரதிபந்நார்த்தத்துக்கு யுக்திவிரோதம் சொல்ல வழியில்லை." என்றிப்படி, ரஹஸ்யத்ரயஸாரத்திலே ப்ரதிபாதிக்கையாலே.

கீழே, ஆத்மாவும் அஜடமாய் ஜ்ஞாநமும் அஜடமாயிருக்கச் செய்தே, அந்யோந்யம் பின்னமென்னுமித்தை தர்ஶிப்பித்தாப் போலே சுத்தஸத்வமும் அஜடமாயிருக்கச் செய்தே, இவையிரண்டிலும் பின்னமாயிருக்கும்படியை தர்ஶிப்பிக்கைக்காக தஜ்ஜிஜ்ஞாஸா ப்ரஶ்நத்தை அநுவதிக்கிறார்;

### 7. ஆத்மாவிலும் ஜ்ஞாநத்திலும் பின்னமானபடி யென்? என்னில்;

---

1. ஸ்ரீரஹஸ்யத்ரயஸாரம். முக்தௌ - முக்தி அவஸ்தையில், திய: - தர்மபூத ஜ்ஞானத்தினுடைய, ஸ்வாபாவிகம் - ஸ்வபாவத்தாலேயே ஏற்பட்டதான, ஸ்வயம் ப்ரகாசத்வம் - ஸ்வாத்ம ப்ரகாசத்வமானது, பத்தே - பத்தாவஸ்தையில், கதாசித் - ஒரு காலத்தில், யதா ஸம்ருத்தம் - எப்படித் தடுக்கப்பட்டிருக்கிறதோ, ததா - அப்படியே, அத்ராபி - இவ்விடத்திலேயும், நியம்யதே - நியமிக்கப்படுகிறது. அதாவது சுத்த ஸத்வம் பத்தருக்குப் பிரகாசிக்கிறதில்லை.

(ஆத்மாவிலும் ஜ்ஞாநத்திலும் பின்னமானபடி யென்? என்னில்) என்று.

அநேக ஹேதுக்களாலே அது தன்னை தர்ஶிப்பிக்கிறார்;

8. நானென்று தோற்றுமையாலும், ஶரீரங்களாய் பரிணமிக்கையாலும், விஷயங்களையொழியவும் தானே தோற்றுகையாலும், ஶப்தஸ்பர்ஶாதிகளுண்டாகையாலும் பின்னமாகக் கடவது.

(நானென்று தோற்றுமையாலும்) என்று தொடங்கி. அதாவது – ஆத்மவஸ்து ப்ரத்யக்காகையாலே அஹமென்று ப்ரகாஶியா நிற்கும்; இது பராக்காகையாலே இதமென்றிறே ப்ரகாசிப்பது. இத்தாலே, ஆத்மாவில் பின்னமென்றபடி. ஶரீராதிகளாய் பரிணமிக்கையாலே, ஆத்மாவிலும் ஜ்ஞாநத்திலும் இரண்டிலும் பின்னமென்றபடி. ஏகரூபனுகையாலே ஆத்மாவுக்கு பரிணமமில்லையிறே. ஜ்ஞாநத்துக்கு பரிணமமுண்டேயாகிலும் சரீராதிகளாய் பரிணமியாதிறே. விஷயநிரபேக்ஷமாக ப்ரகாஶிக்கையாலும் ஶப்தஸ்பர்ஶாதிகளுக்கு ஆஶ்ரயமாகையாலும் விஷயஸந்நிதியிலொழிய ப்ரகாஶிப்பதும் செய்யாதே, ஶப்தாத்யாஶ்ரயமன்றிக்கே தத்க்ராஹகமாயிருக்கிற ஜ்ஞாநத்தில் பின்னமென்றபடி.

ஆகவிப்படி, சுத்தஸத்வத்தினுடைய ப்ரகாரத்தை அருளிச்செய்தாராய் நின்றார் கீழ்; அநந்தரம், மிஶ்ரஸத்வ ப்ரகாரத்தை அருளிச்செய்வதாக (மிஶ்ரஸத்வமாவது). என்று தொடங்குகிறார்;

9. மிஶ்ரஸத்வமாவது – ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்கள் மூன்றோடுங்கூடி பத்தசேதநருடைய ஜ்ஞாநாநந்தங்களுக்கு திரோதாயகமாய், விபரீத ஜ்ஞாநஜநகமாய், நித்யமாய், ஈஶ்வரனுக்கு க்ரீடாபரிகரமாய், ப்ரதேஶபேதத்தாலும், காலபேதத்தாலும் ஸத்ருஶமாயும், விஸத்ருஶமாயுமிருக்கும் விகாரங்களை யுண்டாக்கக் கடவதாய், ப்ரக்ருதி, அவித்யை,

மாயை என்கிற பேர்களையுடைத்தாயிருக்கும் அசித்விசேஷம்.

(மிச்ர ஸத்வமாவது)–ரஜஸ்தமஸ்ஸுக்களோடே கூடின ஸத்வகுணத்தையுடைத்தானது. அத்தை அருளிச் செய்கிறார் (ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்கள் மூன்றோடுங் கூடி) என்று. "த்ரிகுணம் தஜ்ஜகத்யோநிரநாதிப்ரபவாப்யயம்" (த்ரிகுணம் தஜ்ஜகத்யோநிரநாதிப்ரபவாப்யயம்)[1] "த்ரிகுணம் கர்மிணாம் க்ஷேத்ரம் ப்ரக்ருதே ரூபமுச்யதே" (த்ரிகுணம் கர்மிணாம் க்ஷேத்ரம் ப்ரக்ருதே ரூபமுச்யதே)[2] "ஸத்வம் ரஜஸ்தம இதி குணா: ப்ரக்ருதிஸம்பவா:" (ஸத்வம் ரஜஸ்தம இதி குணா: ப்ரக்ருதிஸம்பவா:)[3] என்னக்கடவதிறே.

(பத்தசேதநருடைய ஜ்ஞாநாநந்தங்களுக்கு திரோதாயகமாய்), அதாவது – குணத்ரயாத்மகமாயிருக்கையாலே, ரஜஸ்தமோம்சத்தாலே ஜ்ஞாநாதிகளுக்கு திரோதாநத்தைப் பண்ணுமென்கை. சேதநருடைய ஜ்ஞாநாநந்தங்களுக்கு திரோதாயகமாயென்று ஸாமாந்யேந சொல்லாதே (பத்தசேதநருடைய) என்று விசேஷிக்கையாலே, கர்மஸம்ஸ்ருஷ்டரான சேதநருடைய ஜ்ஞாநாதிகளுக்கே அது திரோதாயகமென்றபடி. அல்லது, ஐச்சிகமாக ப்ராக்ருத சரீரபரிக்ரஹம் பண்ணுகிற நித்யமுக்தருடைய

---

1. வி. பு. 1-2-23. அநாதிப்ரபவ அப்யயம் - அநாதியாயும் உத்பத்தி நாசமில்லாததும், த்ரிகுணம் - ஸத்வரஜஸ் தமஸ்ஸு என்கிற மூக்குணங்களுடன் கூடின, தத் - அப்பிரகிருதியானது, ஜகத்யோநி: - ஜகத்துக்கெல்லாம் காரணமாயிருக்கிறது.

2. பரமஸம்ஹிதை. த்ரிகுணம் - மூக்குணங்களையுடையது (பிரகிருதி) கர்மிணாம்-புண்யபாபரூப கர்மங்களைச் செய்தவர்களுக்கு, க்ஷேத்ரம் - அதின் பலன்களாகிய ஸுக துக்கங்கள் உண்டாகும் இடம் (என்று) பிரகிருதே: ரூபம் உச்யதே - பிரகிருதியின் ரூபம் சொல்லப்படுகிறது.

1. ஸ்ரீகீதை. 14-5. ஸத்வம் ரஜ: தம இதி குணா: - ஸத்வம் ரஜஸ்ஸு, தமஸ்ஸு என்கிற மூக்குணங்களும், பிரகிருதி ஸம்பவா:- பிரகிருதியினின்றுமுண்டானவைகள்.

ஜ்ஞாநாதிகளுக்கும் இது ஸங்கோசத்தைப் பண்ணவேண்டி வருமிறே. ஆகையாலே, "𑌅𑌹𑍃𑌤𑌸𑌹𑌜𑌦𑌾𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌸𑍂𑌰𑌯𑌸𑍍𑌸𑍍𑌰𑌸𑍍𑌤𑌬𑌨𑍍𑌧𑌾 𑌵𑌿𑌮𑌲𑌚𑌰𑌮𑌦𑍇𑌹𑌾 𑌇𑌤𑍍𑌯𑌮𑍀 𑌰𑌙𑍍𑌗𑌧𑌾𑌮 । 𑌮𑌹𑌿𑌤𑌮𑌨𑍁𑌜𑌤𑌿𑌰𑍍𑌯𑌕𑍍𑌸𑍍𑌥𑌾𑌵𑌰𑌤𑍍𑌵𑌾𑌶𑍍𑌶𑍍𑌰𑌯𑌨𑍍𑌤𑍇" (அஹ்ருதஸஹஜதாஸ்யாஸ்ஸூரயஸ்ஸ்ரஸ்தபந்தா விமலசரமதேஹா இத்யமீ ரங்கதாம | மஹிதமநுஜதிர்யக்ஸ்தாவரத்வாஶ்ரயந்தே)[1] என்கிறபடியே, நித்யமுக்தரும் இங்கே வந்து ப்ராக்ருத தேஹங்களைப் பரிக்ரஹித்து, மோஹிக்கு அதிசயத்தைப் பண்ணுமளவில் அவர்களுக்கிது ஸங்கோசத்தைப் பண்ணுமையாலே, பத்தசேதநருடைய ஜ்ஞாநாதிகளுக்கே இது திரோதாயகமென்னுமிடம் ஸித்தம். "𑌅𑌨𑍀𑌶𑌯𑌾 𑌶𑍋𑌚𑌤𑌿 𑌮𑍁𑌹𑍍𑌯𑌮𑌾𑌨𑌃" (அநீஶயா ஶோசதி முஹ்யமாநஃ)[2] "𑌅𑌨𑌾𑌦𑌿𑌮𑌾𑌯𑌯𑌾 𑌸𑍁𑌪𑍍𑌤𑌃" (அநாதிமாயயா ஸுப்தஃ)[3] "𑌭𑌗𑌵𑌨𑍍𑌮𑌾𑌯𑌾𑌤𑌿𑌰𑍋𑌹𑌿𑌤𑌸𑍍𑌵𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌃" (பகவந்மாயாதிரோஹித ஸ்வப்ரகாஶஃ)[4] என்னக்கடவதிறே.

(விபரீதஜ்ஞாநஜநகமாய்). விபரீதஜ்ஞாநமாவது - அதஸ்மிந் தத்புத்திஃ. அதாவது — அநாத்மாவான தேஹத்தில் ஆத்மபுத்தியும், அஸ்வதந்த்ரமான ஆத்மவஸ்துவில் ஸ்வதந்த்ரபுத்தியும், அநந்யசேஷமான வஸ்துதன்னில் அந்யஶேஷ

---

1. ஸ்ரீரங்கராஜஸ்தவம். 1 - 33. அஹ்ருதஸஹஜதாஸ்யா: - தடங்கலில்லாமலும், ஸ்வதஸ்ஸித்தமாயுமிருக்கிற பகவத்கைங்கரியத்தையுடைய, ஸூரய: - நித்யஸூரிகளும், ஸ்ரஸ்தபந்தா: - நழுவியிருக்கிற கர்ம ஸம்பந்தத்தையுடைய முக்தர்களும், விமலசரமதேஹா: - நிர்மலமாயும் கடைசியான தேஹத்தையுமுடைய முமுக்ஷுக்களும், இத்யமீ - என்று சொல்லப்பட்ட இவர்கள், மஹித மநுஜ திர்யக்ஸ்தாவரத்வா: - பூஜிக்கப்பட்ட மநுஷ்யனென்ன, திர்யக்கென்ன, ஸ்தாவரமென்ன இவைகளையுடையவர்களாய்க் கொண்டு, ச்ரயந்தே - (ஸ்ரீரங்கஸ்தானத்தை ஆச்ரயிக்கிறார்கள் )

2. மு, உப. 3-1-2. அநீசயா - போக்யபூதமான பிரக்ருதியிலே, முஹ்யமாந: - மறைக்கப்பட்டவனாய், சோசதி - துக்கிக்கிறான்.

3. மா. உ.. 2-21. 1-ம் பக்கம் பார்க்க.

4. கத்யம். பகவந்மாயாதிரோஹிதஸ்வப்ரகாச: - பகவானுடைய மாயையான ப்ரக்ருதியின் ஸம்பந்தத்தாலே மறைக்கப்பட்டிருக்கிற தன்னுடைய ப்ரகாசத்தையுடைய.

த்வபுத்தியும், அநீஶ்வரரானவர்கள் பக்கல் ஈஶ்வரத்வபுத்தியும், அபுருஷார்த்தமான ஐஶ்வர்யாதிகளிலே புருஷார்த்தத்வபுத்தியும், அநுபாயங்களானவற்றில் உபாயத்வ புத்தியும் தொடக்கமானவை. யதாஜ்ஞாநத்தை மறைக்குமளவன்றிக்கே, இப்படியிருந்துள்ள விபரீதஜ்ஞாநங்களையும் பத்தசேதநர்க்கு உண்டாக்காநிற்குமாயிற்று. "ஹ்ம-வஜூப-ஷுவதிரொயாநகரீ॰ விவரீதஜூாநஜநநீ॰" (பகவத்ஸ்வரூபதிரோதாநகரீம் விபரீதஜ்ஞாநஜநநீம்)[1] என்று இது தன்னை பாஷ்யகாரர் அருளிச்செய்தாரிறே.

(நித்யமாய்). அதாவது - உத்பத்திவிநாஶரஹிதமாயிருக்கை. "அஜாமெகா॰" (அஜாமேகாம்)[2] "மௌரநா-ஜுவதீ ஸா ஜநித்ரீ ஹூதஸாவிநீ" (கௌரநாத்யந்தவதி ஸா ஜநித்ரீ பூதபாவிநீ)[3] "அவெதநா வராமா-ா வ நிதூா ஸததவிகிூயா" (அசேதநா பரார்த்தா ச நித்யா ஸததவிக்ரியா)[4] "விகாரஜநநீஜூாஷூ-ரூவாஜா॰ யூவா॰" (விகாரஜநநீமஜ்ஞாமஷ்டரூபாமஜாம் த்ருவாம்)[5] என்னக்கடவதிறே.

(ஈஶ்வரனுக்கு க்ரீடாபரிகரமாய்). அதாவது - ஸர்வேஶ்வரனுடைய ஜகத்ஸ்ருஷ்ட்யாதி லீலைக்கு உபகரணமா

---

1. கத்யம். பகவத் ஸ்வரூபதிரோதாநகரீம் - பகவானுடைய ஸ்வரூபத்தை மறைக்கிறதாயும், விபரீதஜ்ஞாந ஜநநீம - விபரீதஜ்ஞானத்தை உண்டுபண்ணுகிறதாயுமிருக்கிற ப்ரக்ருதியை.

2. தை. உப. 2. அஜாம் ஏகாம் - பிறப்பில்லாததும் ஒன்றுமான (பிரகிருதியை)

3. மந்த்ரிகோபநிஷத். கௌ: அநாத்யந்தவதீ - ப்ரக்ருதி ஆத்யந்தங்களில்லாதது, ஸா ஜநித்ரீ - அது ஸமஷ்டி ஸ்ருஷ்டி செய்கிறது, பூதபாவிநீ - வியஷ்டி ஸ்ருஷ்டி செய்கிறது.

4, பரமஸம்ஹிதா. அசேதநா - அசேதநமாயும், பரார்த்தா ச - பிறருக்காகவே ஏற்பட்டதாயும், நித்யா - நித்யமாயும், ஸததவிக்ரியா - ஸர்வகாலத்திலும் விகாரத்தையுடையதாயுமிருக்கிறது,

5. மந்த்ரிகோபநிஷத். விகாரஜநநீம் - விகாராஸ்பதமாயும், அஜ்ஞாம் - ஜ்ஞான சூன்யமாயும், அஷ்டரூபாம் - எட்டுருபத்தை யுடையதாயும், அஜாம் - நித்யமாயும், த்ருவாம் - நிலைபெற்றதாயுமிருக்கிறது.

யிருக்கை. 'க்ரீடதோ பாலகஸ்யேவ சேஷ்டாம் தஸ்ய நிசாமய" (க்ரீடதோ பாலகஸ்யேவ சேஷ்டாம் தஸ்ய நிசாமய)[1] "அப்ரமேயோऽநியோஜ்யச்ச யத்ர காமகமோ வசீ | மோததே பகவாந் பூதைர் பால: க்ரீடநகைரிவ" (அப்ரமேயோऽநியோஜ்யச்ச யத்ர காமகமோ வசீ | மோததே பகவாந் பூதைர் பால: க்ரீடநகைரிவ)[2] "த்வம் ந்யஞ்சத்பிருதஞ்சத்பி: கர்மஸூத்ரோபபாதிதை: | ஹரே விஹரஸி க்ரீடாகந்துகைரிவ ஜந்துபி:" (த்வம் ந்யஞ்சத்பிருதஞ்சத்பி: கர்மஸூத்ரோபபாதிதை: | ஹரே விஹரஸி க்ரீடாகந்துகைரிவ ஜந்துபி:)[3] என்று சொல்லப்படுகிற, ஸர்வேச்வரனுடைய லீலைக்கு குணத்ரயாத்மிகையான ப்ரக்ருதியிறே ப்ரதாநோபகரணம். "ஸிதாஸிதா ச ரக்தா ச ஸர்வகாமதுகா விபோ:" (ஸிதாஸிதா ச ரக்தா ச ஸர்வகாமதுகா விபோ:)[4] என்னக் கடவதிறே "தைவீ ஹ்யேஷா குணமயீ" (தைவீ ஹ்யேஷா குணமயீ)[5] என்று தானே அருளிச்செய்தானிறே.

---

1. வி. பு, 1-2-18. க்ரீடத: - விளையாடுகிற, பாலகஸ்யேவ - குழந்தைக்குப் போல, தஸ்ய - அந்த விஷ்ணுவினுடைய, சேஷ்டாம் - சேஷ்டையை, நிசாமய - பார். (இத்தால் ஜகத்ஸ்ருஷ்டியாதிகள் அவனுக்கு லீலை).

2. வி. பு. 1-2-20. அப்ரமேய: - அளவிடக்கூடாதவராயும், காமகம: - அவாப்த ஸமஸ்தகாமனுயும், வசீ - ஸர்வத்தையும் வசீகரிக்கிற, பகவாந் - பகவான், யத்ர - யாதொரு லீலா விபூதியிலே, பூதை: - பூதகணங்களாலே. க்ரீடனகை: - க்ரீடைக்கு ஸாதகமான பந்து முதலியவைகளாலே, பால இவ - குழந்தை போல, மோததே - ஸந்தோஷிக்கிறுன்.

3. விஷ்ணுதர்மம். ஹரே! - ஓ விஷ்ணுவே! த்வம் - தேவரீர், ந்யஞ்சத்பி: - தாழ்ந்தும், உதஞ்சத்பி: - உயரக்கிளம்பிகின்றும், கர்மஸூத்ரோபபாதிதை: - கர்மாகிற ஸூத்ரத்தாலே கட்டப்பட்டுமிருக்கிற, க்ரீடா கந்துகை: இவ விளையாட்டுக்காக இருக்கிற பந்துகளினுலேபோல், ஜந்துபி: - ஜந்துக்களினுலே, விஹரஸி - விளையாடுகிறீர்.

5. ஸிதா - வெளுத்தும், அஸிதாச - கறுத்தும், ரக்தாச - ரக்தவர்ணமாயும், விபோ: - பகவானுக்கு, ஸர்வகாமதுகா - ஸமஸ்த காமங்களை உண்டுபண்ணுகிறதாயுமிருக்கிறது.

5. ஸ்ரீகீதை. 7-14 மம - என்னுடைய, ஏஷா - இந்த, குணமயீ - முக்குணரூபையான, மாயா - ப்ரக்ருதியானது, ஹி - யாதொரு

(ப்ரதேசபேதத்தாலும், காலபேதத்தாலும் ஸத்ருஶமாயும், விஸத்ருஶமாயுமிருக்கும் விகாரங்களை யுண்டாக்கக்கடவதாய்). ப்ரதேசபேதமாவது-குணவைஷம்யமுள்ள ப்ரதேசமும். இது தனக்கு குணவைஷம்யமுள்ளது, கார்யோந்முகமான ஸ்தூலத்திலேயிறே. அல்லாதவிடமெல்லாம் குணஸாம்யாபந்நமாயிருக்குமித்தனை. அதில், குணவைஷம்யமில்லாதவிடம் ஸத்ருஶவிகாரமாயிருக்கும். வைஷம்ய முள்ளவிடம் விஸத்ருஶ விகாரமாயிருக்கும். ஸத்ருஶவிகாரமாவது - நாமரூபவிபாகநிர்தேஶாநர்ஹமாயிருக்கும் ஸூக்ஷ்மவிகாரம். விஸத்ருஶவிகாரமாவது - நாமரூபவிபாகநிர்தேஶயோக்யமாயிருக்கும் ஸ்தூல விகாரம். "குணஸாம்யமநுத்ரிக்தமந்யூநம்" (குணஸாம்யமநுத்ரிக்தமந்யூநம்)[1] என்கையாலே, அவ்யக்தாவஸ்தையிலுள்ள விகாரமெல்லாம் ஸத்ருஶமாயிருக்கும்; மஹதாதி, விஸத்ருஶவிகாரமாயிருக்கும்.

இனி, காலபேதமாவது – ஸம்ஹாரகாலமும், ஸ்ருஷ்டிகாலமும். ஸம்ஹாரகாலத்தில் இது அவிபக்த தமஸ்ஸாய்க் கிடக்கையாலே, ஓரிடத்திலும் குணவைஷம்யமில்லாமையால் எங்குமொக்க ஸத்ருஶவிகாரமா யிருக்கும். ஸ்ருஷ்டிகாலத்திலே பகவததிஷ்டான விஶேஷத்தாலே விபக்தமாய், கார்யோந்முகமாய், குணவைஷம்யம் பிறந்தவாறே விஸத்ருஶவிகாரத்தை யுடைத்தாகா நிற்கும். ஸததவிகாராஸ்பதமாயிருக்கையாலே, இதுக்கு ஸத்தாப்ரயுக்தமிறே விகாரம். அதினுடைய ஸௌக்ஷ்ம்யாஸௌக்ஷ்ம்ய நிபந்தந

---

காரணத்தால், தைவீ - க்ரீடையில் ப்ரவர்த்தித்த என்னால் உண்டு பண்ணப்பட்டதோ (அக்காரணத்தால்) - துரத்யயா - தாண்டக் கூடாதது. மாமேவ - ஸத்யஸங்கல்பத்வாதிகுண விசிஷ்டனான என்னையே, யே - எவர்கள், ப்ரபத்யந்தே - சரணமடைகிறார்களோ; தே - அவர்கள், ஏதாம் மாயாம் - இந்த மாயையை, தரந்தி - தாண்டுகிறார்கள்.

1. குணஸாம்யம் - அவ்யக்தாவஸ்தையில் குணம் ஸமமாயும், அநுத்ரிக்தம் - அதிகமாயிராமலும், அந்யூநம் - குறைவில்லாமலும் இருக்கும்.

மான விபாகநிர்தேசமிறே உள்ளது. அல்லது, நிர்விகார மாயிருப்பதோரவஸ்தையும் இல்லையிறே.

(ப்ரக்ருதி, அவித்யை, மாயை என்கிற பேர்களை உடைத்தாயிருக்கும் அசித்விஶேஷம்.) மிஶ்ரஸத்வமாவது. இப்படி இருப்பதோர் அசித்விஶேஷமென்று வாக்யார்த்தம்.

ப்ரக்ருத்யாதிநாமபேதங்கள் இதினுடைய ஸ்வபாவங்களைப்பற்ற வந்ததென்கிறார்;

**10. ப்ரக்ருதியென்கிறது - விகாரங்களைப்பிறப்பிக்கையாலே; அவித்யையென்கிறது - ஜ்ஞாநவிரோதியாகையாலே; மாயையென்கிறது - விசித்ர ஸ்ருஷ்டியைப் பண்ணுகையாலே.**

(ப்ரக்ருதியென்கிறது) என்று தொடங்கி. அதாவது- “𑌮𑍂𑌲𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌰𑌵𑌿𑌕𑍃𑌤𑌿𑌃” (மூலப்ரக்ருதிரவிக்ருதி:)[1] இத்யாதிகளிலே, ப்ரக்ருதி ஶப்தம் காரணவாசியாகச் சொல்லப்பட்டதிறே. இதுதான் உபாதாந காரணத்துக்கே வாசகம். ஆகையிறே, ப்ரஹ்மத்தினுடைய ஜகதுபாதாநத்வத்தைச் சொல்லுகிற ஸூத்ரகாரர், “𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌤𑌿𑌜𑍍𑌞𑌾𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌨𑍍𑌤𑌾𑌨𑍁𑌪𑌰𑍋𑌧𑌾𑌤𑍍” (ப்ரக்ருதிஶ்ச ப்ரதிஜ்ஞாத்ருஷ்டாந்தாநுபரோதாத்)[2] என்று, ப்ரக்ருதிஶப்தத்தாலே சொல்லிற்று. ஆகையால், இத்தை ப்ரக்ருதியென்கிறது – மஹதாதிவிகாரங்களைத் தன்பக்கலில் நின்றும் ஜநிப்பிக்கையாலே. அவித்யாஶப்தம், வித்யாபாவத்துக்கும், வித்யேதரத்துக்கும், வித்யாவிரோதிக்கும் வாசகமாயிருந்ததேயாகிலும், விஷயாநுகுணமாயிறே ப்ரயோக

1. மூலப்ரக்ருதி: - மூலப்ரக்ருதியானது, அவிக்ருதி: - விகாரமற்றது.

2. பிரம்மஸூ. 1-4-23. ப்ரக்ருதிச்ச - உபாதான காரணமும், (ப்ரம்மம்தான்) என்று அங்கீகரிக்கவேணும், (குத: - எப்படியென்றால்), ப்ரதிஜ்ஞாத்ருஷ்டாந்தாநுபரோதாத்-(ஏகவிஜ்ஞாநேந ஸர்வ விஜ்ஞாந) ப்ரதிஜ்ஞைக்கும் திருஷ்டாந்தத்திற்கும் விரோதம் வாராமைக்காக.

மிருப்பது. ஆகையால், இத்தை அவித்யை என்கிறது — ஜ்ஞாந விரோதியாகையாலே. (ஜ்ஞாநாநந்தங்களுக்குத் திரோதாயகமாய்) என்று, இதினுடைய ஜ்ஞாந விரோதித்வம்தான் கீழே சொல்லப்பட்டதிறே. ஆஸுரராக்ஷஸாதி க்ரியைகளை, ஆஶ்சர்யகரத்வத்தைப் பற்ற மாயாஶப்தத்தாலே சொல்லுகிறுப்போலே, இத்தையும் மாயை என்கிறது — விசித்ர ஸ்ருஷ்டியைப் பண்ணுகையாலே. அதாவது — ஒன்றுபோலொன்றன்றிக்கே, விஸ்மயநீயங்களான கார்யங்களை ஜநிப்பிக்கை.

ஏவம்பூதமான அசித்துதான், கார்யகாரணரூபேண அநேகதத்வமாயிருக்கும்படியை அருளிச்செய்கிறார்;

**11. இதுதான் "பொங்கைம்புலனும் பொறியைந்தும் கருமேந்திரியமைம்பூதமிங்கிவ் வுயிரேய் பிரகிருதி மானங்கார மனங்கள்"[1] என்கிறபடியே, இருபத்துநாலு தத்வமாயிருக்கும்.**

(இதுதான் பொங்கைம்புலன்) என்று தொடங்கி. ஐம்புலன் — ஶப்தாதிகள் பொங்குதலால், சேதநரை விக்ருதராம்படிபண்ணுகைக்கிடான இவற்றினுடைய உத்ரேகம் சொல்லுகிறது. இவ்விடத்தில் விஶேஷ்யமாத்ரமே அபேக்ஷிதம். பொறியைந்தாவன — ஶ்ரோத்ராதிகள். கருமேந்திரியம் — வாகாதிகள். ஐம்பூதம் - ககநாதிகள். இங்கிவ்வுயிரேய்பிரகிருதி என்றது - ஸம்ஸாரதஶையில் இவ்வாத்மாவோடே அத்யந்த ஸம்ஸ்ருஷ்டையாய்க் கிடக்கிற ப்ரக்ருதியென்றபடி. இங்கும் விஶேஷ்யமாத்ரமிறே தத்வஸங்க்யைக்கு வேண்டுவது. மானங்காரமநங்களாவன — மஹானும், அஹங்காரமும், மநஸ்ஸும். இப்படி இருபத்துநாலு தத்வத்தையும் அருளிச்செய்கிற ஆழ்வார், தந்மாத்ரங்களை அருளிச்செய்யாதே, ஶப்தாதிகளை அருளிச்செய்தது - தந்மாத்ரங்களுக்கு பூதங்களோடு ஸ்வரூபபேதமின்றியிலே, அவஸ்தாபேதமாத்ரமாகையாலே. தந்மாத்ரங்களான பூதங்கள் பத்தையும் அஞ்சு தத்வமாக்கி, ஶப்,

1. திரு வாய். 10-7-10.

தாதிகளைந்தையும் ஐந்து தத்வங்களாகக் கொண்டு இவை யும், ஏகாதசேந்த்ரியங்களும், ப்ரக்ருதி, மஹதஹங்காரங் களுமாக சதுர்விம்சதி தத்வமென்று கொள்ளுவதும் ஒரு பக்ஷமுண்டாகையாலே, உபயபக்ஷத்திலும் தத்வஸங்க்யை யில் ந்யூநாதிரேகமில்லையிறே. ஆகையால், இப்பாட்டிற் சொன்னபடியே இருபத்துநாலு தத்வமாயிருக்குமென்ற தாயிற்று.

இப்பாட்டில் தத்வங்களைச் சொன்ன வித்தனை யொழிய, இவற்றினுடைய க்ரம கதநம் பண்ணிற்றில்லை யிறே. ஆகையால், இதில் ப்ரதமதத்வமேது? என்னு மாகாங்க்ஷையிலே அருளிச்செய்கிறார்;

## 12. இதில் ப்ரதமதத்வம் ப்ரக்ருதி.

(இதில் ப்ரதமதத்வம் ப்ரக்ருதி) என்று. ப்ரக்ருதி யென்றும், ப்ரதாநமென்றும், அவ்யக்தமென்றும் ப்ரதம தத்வத்துக்குப் பேர். ப்ரக்ருதி என்று சொல்லுகைக்கடி முன்னே சொல்லப்பட்டது; ப்ரதாநமென்கிறது - எம் பெருமானுடைய லீலைக்கு ப்ரதாநமான உபகரணமாகை யாலே. அவ்யக்தமென்கிறது – அநபிவ்யக்தகுணவிபாக மாகையாலே.

இப்படி, ப்ரதம தத்வமான ப்ரக்ருதிக்குண்டான அவஸ்தா விசேஷங்களை அருளிச்செய்கிறார்;

## 13. இது, அவிபக்ததமஸ்ஸென்றும், விபக்ததமஸ் ஸென்றும் [illegible]

(இது அவிபக்ததமஸ்ஸு) என்று தொடங்கி. அதாவது- ‘‘அவ்யக்தமக்ஷரே லீயதே, அக்ஷரம் தமஸி லீயதே, தம: பரே தேவ ஏகீபவதி’’ (அவ்யக்தமக்ஷரே லீயதே, அக்ஷரம் தமஸி லீயதே, தம:பரே தேவ ஏகீபவதி)[1] என்கிற

1. ஸுபால உப. அவ்யக்தம் - ஸம்ஹார ஸமயத்தில் அவ்யக்தா வஸ்தையானது, அக்ஷரே லீயதே - அக்ஷராவஸ்தையாய் லயித்திருக் கிறது, அக்ஷரம் தமஸி லீயதே - அது தானும் குலைந்து அதி ஸூக்ஷ்ம

படியே. ஸம்ஹ்ருதிஸமயத்தில் அவ்யக்தாவஸ்தை குலைந்து அக்ஷராவஸ்தமாய், அது தானும் குலைந்து அதிஸூக்ஷ்ம மாய், தமஶ்ஶப்தவாச்யமாய், அதுதானும் நாமரூப விபாக அநர்ஹமாம்படி ஸர்வேஶ்வரன் பக்கலிலே ஏகீபவித்து நிற்கையாலே அவிபக்த தமஸ்ஸென்றும்; ஸர்ககாலம் வந்தவாறே "ப்ராது⁴ராஸீத் தமோநுத³:" (ப்ராதுராஸீத் தமோநுத:)[1] என்கிறபடியே, அவனாலே ப்ரேரிதமாய்க் கொண்டு நாமரூப விபாக யோக்யமாம்படி அவன் பக்கல் நின்றும் விபக்தமாய், கார்யோந்முகமாகையாலே விபக்த தமஸ்ஸென்றும்; அநந்தரம், தத்ஸங்கல்பவிஶேஷத்தாலே புருஷ ஸமஷ்டிகர்பமான அசேதநமென்று விவேகிக்கைக் கும் அபதமாம்படியான தமோவஸ்தை குலைந்து புருஷ ஸமஷ்டி கர்பத்வம் தோன்றும்படியான அவஸ்தையை ப்ராபித்து நிற்கையாலே அக்ஷரமென்றும், இங்ஙனே சில அவஸ்தைகளை உடைத்தாயிருக்குமென்கை. ஆகையால், இது அவிபக்ததமஸ்ஸாகையாவது - அவ்யக்த அக்ஷராவஸ் தைகள் குலைந்து தமஶ்ஶப்தவாச்யமாய், நாமரூப விபாக அநர்ஹமாம்படி ஸர்வேஶ்வரன் பக்கலிலே ஏகீபவித்து நிற் கை. விபக்த தமஸ்ஸாவது – நாம ரூப விபாக அர்ஹமாம் படி விபக்தமாய், கார்யோந்முகமாகை. அக்ஷரமாகையா வது - இது அசித்தென்றும், இதினுள்ளே புருஷஸமஷ்டி கிடக்கிறதென்றும். விவேகிக்கவொண்ணாதபடி அதிஸூ க்ஷ்மமாயிருக்கிற தமோவஸ்தை குலைந்து புருஷஸமஷ்டி கர்பத்வம் தோன்றும்படியான அவஸ்தையை பஜிக்கை என்றதாயிற்று.

"கு³ணத்ரயவைஷம்யவத³ஹங்காரவத³வஸ்தா²வஸ்து— கு³ணஸாம்ய, கு³ணஸாம்யலக்ஷணமவ்யக்தம்" । "அவ்யக்த- லக்ஷணே லீயதே" இதி । யதா²வஸ்தா²யாம் கு³ணஸாம்ய

---

மாய் தமச்சப்தவாச்யமாய் லயிக்கிறது, தம: பரே தேவே ஏகீபவதி- அது தானும் நாமரூபவிபாகாநர்ஹமாம்படி ஸர்வேச்வரன் பக்கலிலே ஏகீபவித்து நிற்கிறது.

1. தமோநுத: - தமோவஸ்தையைப் போக்கடித்துக்கொண்டு, ப்ராதுராஸீத் - விபக்தமாய் கார்யோன்முகமாகிறது.

𑌸𑍍𑌫𑍁𑌟𑌂, 𑌤𑌦𑌵𑌸𑍍𑌥𑌂 𑌚𑍇𑌤𑌨𑌸𑌂𑌸𑍃𑌷𑍍𑌟𑌿𑌗𑌰𑍍𑌭𑌂 𑌤𑌦𑌕𑍍𑌷𑌰-
𑌶𑌬𑍍𑌦𑍇𑌨𑍋𑌚𑍍𑌯𑌤𑍇। 𑌨 𑌤𑍁 𑌚𑍇𑌤𑌨𑌮𑌾𑌤𑍍𑌰𑌂, 𑌤𑌸𑍍𑌯𑌾𑌵𑍍𑌯𑌕𑍍𑌤-
𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌤𑍍𑌵 𑌤𑌮𑍋𑌵𑌿𑌕𑍃𑌤𑌿𑌤𑍍𑌵𑌾𑌯𑍋𑌗𑌾𑌤𑍍। 𑌅𑌤𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌂
𑌤𑌜𑍍𑌜𑌾𑌤𑌂 𑌚𑌿𑌦𑌚𑌿𑌦𑌾𑌤𑍍𑌮𑌕𑌂 𑌮𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑍍। "𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌾𑌦𑌿𑌵𑌿𑌶𑍇-
𑌷𑌾𑌨𑍍𑌤𑌂 𑌚𑍇𑌤𑌨𑌾𑌚𑍇𑌤𑌨𑌾𑌤𑍍𑌮𑌕𑌮𑍍" 𑌇𑌤𑌿 𑌪𑌰𑌾𑌶𑌰𑌵𑌚𑌨𑌾𑌤𑍍।
𑌅𑌤𑍍𑌰 𑌤𑍁 𑌚𑌿𑌦𑍍𑌗𑌰𑍍𑌭𑌵𑌸𑍍𑌤𑍁𑌨𑍍𑌯𑌕𑍍𑌷𑌰𑌶𑌬𑍍𑌦 𑌉𑌪𑌚𑌰𑌿𑌤𑌃, 𑌪𑍍𑌰-
𑌯𑍋𑌗𑍇𑌨𑍍𑌯𑌥𑌾𑌸𑌿𑌦𑍍𑌧𑍇 𑌶𑌕𑍍𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑌕𑌲𑍍𑌪𑌨𑌾𑌯𑍋𑌗𑌾𑌤𑍍। "𑌅-
𑌕𑍍𑌷𑌰𑌂 𑌤𑌮𑌸𑌿 𑌲𑍀𑌯𑌤𑍇" 𑌇𑌤𑌿। 𑌚𑌿𑌦𑍍𑌗𑌰𑍍𑌭𑌤𑍍𑌵𑌮𑌚𑌿𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌪𑌿
𑌯𑌤𑍍𑌰 𑌵𑌿𑌵𑍇𑌕𑍍𑌤𑍁𑌮𑌶𑌕𑍍𑌯𑌂 𑌤𑌦𑌵𑌸𑍍𑌥𑌮𑌤𑌿𑌸𑍂𑌕𑍍𑌷𑌮𑌂 𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌂
𑌤𑌮𑌶𑍍𑌶𑌬𑍍𑌦𑍇𑌨𑌾𑌭𑌿𑌧𑍇𑌯𑌮𑍍। 𑌅𑌕𑍍𑌷𑌰𑌾𑌦𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌾 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍍𑌯𑍌-
𑌨𑍍𑌮𑍁𑌖𑍍𑌯𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌂 𑌤𑌦𑍇𑌵 𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌂 𑌤𑌮𑌃, 𑌤𑌦𑍌𑌨𑍍𑌮𑍁𑌖𑍍𑌯𑌰𑌹𑌿-
𑌤𑌮𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌂 𑌤𑌮𑌃, 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌶𑌰𑍀𑌰𑌤𑌯𑌾𑌽𑌪𑌿 𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌿𑌤𑍁-
𑌮𑌶𑌕𑍍𑌯𑌮𑍍। 𑌸𑌲𑌿𑌲𑌵𑌿𑌲𑍀𑌨𑌲𑌵𑌣 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌕𑌾𑌨𑍍𑌤𑌸𑍍𑌥𑌸𑌲𑌿𑌲 𑌸𑍂-
𑌰𑍍𑌯𑌕𑌾𑌨𑍍𑌤𑌸𑍍𑌥𑌵𑌹𑍍𑌨𑌿𑌕𑌲𑍍𑌪𑌂 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍈𑌕𑌵𑍇𑌦𑍍𑌯𑌮𑌵-
𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑍇। 𑌸𑌤𑍍𑌤𑌯𑌾𑌪𑌿 𑌨𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌬𑍀𑌜𑌸𑍍𑌥𑌾𑌨𑍀𑌯𑌮𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌂 𑌤𑌮𑌃,
𑌉𑌚𑍍𑌛𑍍𑌵𑌸𑌿𑌤𑌬𑍀𑌜𑌵𑌦𑍍𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌂 𑌤𑌮𑌃, 𑌸𑌲𑌿𑌲𑌸𑌂𑌸𑌕𑍍𑌤𑌾𑌰𑍍𑌦𑍍𑌰-
𑌶𑌿𑌥𑌿𑌲𑌾𑌵𑌯𑌵𑌬𑍀𑌜𑌤𑍁𑌲𑍍𑌯𑌮𑌕𑍍𑌷𑌰𑌂, 𑌉𑌦𑍍𑌭𑌿𑌨𑍍𑌨𑌬𑍀𑌜𑌸𑌮𑌾𑌨-
𑌮𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌂, 𑌅𑌙𑍍𑌕𑍁𑌰𑌸𑍍𑌥𑌾𑌨𑍀𑌯𑍋 𑌮𑌹𑌾𑌨𑍍 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌵𑍇𑌕𑌃" (குண
த்ரயவைஷம்யஸ்யாநந்தரபூர்வாவஸ்தா குணஸாம்யம்,
குணஸாம்யலக்ஷணமவ்யக்தம். "அவ்யக்தமக்ஷரே லீயதே"
இதி | யஸ்யாமவஸ்தாயாம் குணஸாம்யமப்யஸ்புடம், தத-
வஸ்தம் சேதநஸம்ஸ்ருஷ்டி கர்பம் ததக்ஷரஶப்தேநோச்யதே.
ந து சேதநமாத்ரம், தஸ்யாவ்யக்தப்ரக்ருதித்வ தமோவிக்ரு
தித்வாயோகாத். அதஸ்ஸர்வம் தஜ்ஜாதம் சிதசிதாத்
மகம் மந்தவ்யம். "ப்ரதாநாதி விஶேஷாந்தம் சேதநாசேத
நாத்மகம் |" இதி பராஶரவசநாத். அத்ர து சித்கர்ப வஸ்
துந்யக்ஷரஶப்த உபசரிதஃ, ப்ரயோகேந்யதாஸித்தே ஶக்த்
யந்தரகல்பநாயோகாத். "அக்ஷரம் தமஸி லீயதே" இதி.
சித்கர்பத்வம் அசித்த்வமபி யத்ர விவேக்துமஶக்யம் தத
வஸ்தமதிஸூக்ஷ்மம் ப்ரதாநம் தமஶ்ஶப்தேநாபிதேயம்.
அக்ஷராத்யவஸ்தா ப்ராப்த்யௌந்முக்யவிஶிஷ்டம் ததேவ
விபக்தம் தமஃ, ததௌந்முக்யரஹிதம் அவிபக்தம் தமஃ பர
மாத்மஶரீரதயாபி சிந்தயிதுமஶக்யம். ஸலிலவிலீநலவண
சந்த்ரகாந்தஸ்தஸலில ஸூர்யகாந்தஸ்தவஹ்நிகல்பம் ஸர்வ

ஜ்ஞுபரமாத்மைக வேத்யமவதிஷ்டதே. பூதலவிநிஹித பீஜஸ்தாநீயமவிபக்தம் தம:, ம்ருந்நிஸ்ஸ்ருதபீஜவத் விபக்தம் தம:. ஸலிலஸம்ஸ்ருஷ்டார்த்ரஸிதிலாவயவ பீஜ துல்யமக்ஷரம், உச்சூநபீஜஸமாநமவ்யக்தம், அங்குரஸ்தாநீயோ மஹாந் இதி விவேக:)[1] என்று, ஸுபாலோபநிஷத் வ்யாக்யாநத்திலே ஸ்ருதப்ரகாஸிகாகாரர், இதினுடைய அவஸ்தா விசேஷங்களை ஸுஸ்பஷ்டமாக அருளிச் செய்தார்.

---

ச்ருதப்ரகாசிகாசாரியரின் ஸுபாலோபநிஷத் வ்யாக்யாநம்.

1. குணத்ரய வைஷம்யஸ்ய - மூன்று குணவைஷம்யமுடைய அவஸ்தைக்கு, அநந்தரபூர்வாவஸ்தா குணஸாம்யம் - அனந்தரம் முந்தின அவஸ்தை குணஸாம்யமெனப்படும். குணஸாம்யலக்ஷணம் அவ்யக்தம் - ஸாம்யமாயிருப்பது அவ்யக்தாவஸ்தை. யஸ்யாமவஸ்தாயாம் குணஸாம்யவைஷம்யம் அபி அஸ்புடம் - எந்த அவஸ்தையில் குணஸாம்ய வைஷம்யங்களிரண்டும் வ்யக்தமாகக் காணப்படாதோ, ததவஸ்தம் சேதந ஸமஷ்டி கர்பத்வம் - அப்படிப்பட்ட அவஸ்தையை அடைந்திருக்கிற சேதந ஸமூஹம் அடங்கியிருப்பது, தத் அக்ஷர சப்தேந - அது அக்ஷர சப்தத்தினாலே, உச்யதே - சொல்லப்படுகிறது. ந து சேதநமாத்ரம், தஸ்ய அவ்யக்த ப்ரக்ருதித்வ தமோவிக்ருதித்வ அயோகாத் - ஏனென்றால் ஜீவன் மாத்ரம் (அக்ஷரசப்தவாச்யன்) அல்ல, அதற்கு அவ்யக்தத்திற்குக் காரணமாயும் தமஸுக்குக் காரியமாயும் உண்டாகாததினாலே, அத: ஸர்வம் தத்வஜாதம் சித் அசிதாத்மகம் மந்தவ்யம் - ஆகையால், ப்ரக்ருதிதத்வம் முதல், ப்ருதிவீ தத்வம் வரையில் உள்ள தத்வங்களெல்லாம் சேதநாசேதந ஸ்வரூபங்களாக நினைக்கத் தக்கவை. ப்ரதாநாதி - ப்ரதானம் அதாவது மூலப்ரக்ருதி முதலாக, விசேஷாந்தம் - விசேஷ முடிவான வஸ்துக்கள், சேதநாசேதநாத்மகம் - சேதனமாயும் அசேதனமாயுமிருக்கின்றன. இதி பராசரவசநாத் - என்கிற பராசர வசனத்தினால். அத்ர து சித்கர்பே வஸ்துநி அக்ஷரசப்த: உபசரித: - இவ்விடத்திலோ சேதந ஸமஷ்டி கர்பமான வஸ்துவில் அக்ஷர சப்தமானது உபசாரமாகச் சொல்லுகிறது, ப்ரயோகே அந்யதா ஸித்தே சக்த்யந்தரகல்பநாயோகாத் - சப்தத்தின் பிரயோகமானது அந்யதாஸித்தமாயிருக்க, வேறு சக்தி கல்பிக்கக்கூடாது, இதி - என்று. சித்கர்பத்வம் - சேதனனை கர்பத்திலுடைத்தாயிருக்கும் பிரகாரமும், அசித்வமபி யத்ர விவேக்தும் அசக்யம் - அசித்தினுடைய தன்மையும் எந்த அவஸ்தையில் வேறுபடுத்தி அறிவதற்கு சக்யமாகாதோ, அதி ஸூக்ஷ்மம் ததவஸ்தம் - அப்படிப்பட்ட அதி ஸூக்ஷ்மமான அவஸ்தை, ப்ரதானம் தம: சப்தேந அபிலப்யம் - ப்ரதாநம் தமஸ் சப்தத்

இத்தால், அக்ஷரமும், தமஸ்ஸும், குஸுமத்தினுடைய முகுள கோரக அவஸ்தைகள்போலே. இதினுடைய ஸங்கோசதசையாகையாலே, மஹதாதிகளைப் போலே தத்வாந்தரமன்றென்னுமிடம் ஸித்தம்.

இனி, இந்த ப்ரக்ருதியில் நின்றும் மஹதாதிவிகாரங்கள் ஜநிக்கைக்கு மூலம் இன்னதென்கிறார் ;

**14. இதில் நின்றும், குணவைஷம்யத்தாலே மஹதாதி விகாரங்கள் பிறக்கும்.**

(இதில் நின்றும், குணவைஷம்யத்தாலே மஹதாதி விகாரங்கள் பிறக்கும்) என்று. குணங்களுக்கு வைஷம்யமாவது – பரஸ்பர உத்ரேகம்.

**15. குணங்களாகிறன - ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்கள்.**

அப்படியிருக்கிற குணங்கள்தானவை? என்னும் ஆகாங்க்ஷையிலே (குணங்களாகிறன – ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்கள்) என்கிறார்.

---

தாலே சொல்லப்படத் தகுந்தது, அக்ஷராத்யவஸ்தா ப்ராப்தி ஔன்முக்ய விசிஷ்டம் தத் ஏவ விபக்தம் தம: - அக்ஷர அவஸ்தையை அடைவதற்கு எதிர்முகத்தோடு கூடியிருக்கும் அதுவே விபக்த தமஸு என்னப்படுகிறது, ததௌந்முக்யரஹிதம் அவிபக்தம் தம: - அப்படி உன்முகமல்லாத அவிபக்த தமஸ்ஸு என்னப்படும் (அது) பரமாத்ம சரீரதயாபி சிந்தயிதும் அசக்யம் - பரமாத்மாவுக்குச் சரீரமென்று நினைக்க சக்யமல்லாததாயும், ஸலிலவிலீநலவண - நீரில் கலந்த உப்பு, சந்த்ரகாந்தஸ்த ஸலில - சந்திரகாந்தக் கல்லிலுள்ள நீர், ஸூர்யகாந்தஸ்த வஹ்நிகல்பம் - ஸூரியகாந்தக் கல்லிலுள்ள அக்நி இவைகளைப் போல இருப்பதாயும், ஸர்வஜ்ஞபரமாத்மைகவேத்யம் - ஸர்வஜ்ஞனை பரமாத்மா ஒருவனுக்கே அறியத்தகுந்ததாயும், அவதிஷ்டதே - இருக்கிறது. பூதலவிநிஹித பீஜஸ்தாநீயம் - பூமியில் விதைக்கப்பட்ட விதையைப் போன்றது, அவிபக்தம் தம: - அவிபக்த தமஸ்ஸு, ம்ருந்நிஸ்ருதபீஜவத் விபக்தம் தம: - மண்ணிலிருந்து கிளம்பின விரையைப் போன்றது விபக்த தமஸ்ஸு, ஸலில ஸம்ஸ்ருஷ்டார்த்ரசிதிலாவயவ பீஜதுல்யமக்ஷரம் - நீருடன் கலந்து ஊறி சிதில அவயவமான விதைக்கு ஸமானமானது அக்ஷரம், உச்சூனபீஜஸமாநம் அவ்யக்தம் - பருத்து வெடித்த விதைக்கு ஸமானமானது அவிபக்தம், அங்குரஸ்தாநீயோ மஹாந் - முளையைப் போன்றது மஹான், இதி விவேக: - என்று அறியத்தகுந்தது.

இவைதானிருக்கும்படி எங்ஙனே? என்கிற சங்கை யிலே அருளிச்செய்கிறார்;

**16. இவை, ப்ரக்ருதிக்கு ஸ்வரூபாநுபந்திகளான ஸ்வ பாவங்களாய், ப்ரக்ருத்யவஸ்தையிலநுத்பூதங் களாய், விகாரதசையிலுத்பூதங்களாயிருக்கும்.**

(இவை ப்ரக்ருதிக்கு) என்று தொடங்கி. இவை ப்ரக்ருதிக்கு ஸ்வரூப அநுபந்திகளான ஸ்வபாவங்களாய்). [illegible] (ஸத்வம் ரஜஸ்தம இதி குணா: ப்ரக்ருதிஸம்பவா:)[1] "[illegible]" (ப்ரக்ருதே: க்ரியமாணாநி குணை: கர்மாணி ஸர்வஶ:)[2] [illegible]" (ஸத்வம் ரஜஸ் தம இதி ப்ரக்ருதேர் குணா:)[3] என்னக்கடவதிறே. ஸ்வரூபாநுபந்திகளென்றது-ஆகந்துகங்களன்றிக்கே ஸத் தாப்ரயுக்தங்களாகையாலே, இவற்றை யொழிந்திருப்ப தோரவஸ்தையும் இல்லையென்கை. இவற்றை ஸ்வபாவங் களென்றும், ப்ரக்ருதிக்கு ஸ்வரூபாநுபந்திகளென்றும் சொல்லுகையாலே, [illegible] (மூலப்ர க்ருதிர்நாம - ஸுகது:கமோஹாத்மகாநி லாகவப்ரகாஶசல நோபஷ்டம்பநகௌரவாவரணகார்யாண்யத்யந்தாதீந்த்ரி யாணி கார்யைகநிரூபணவிவேகாநி அந்யூநாநதிரேகாணி

1, 105-ம் பக்கம் பார்க்க.

2. ஸ்ரீகீதை. 3-27. ப்ரக்ருதே: - ப்ரக்ருதியினுடைய, குணை: ஸர்வஶ: - ஸத்வம் முதலான குணங்களாலே அநேகவிதமாக, க்ரிய மாணாநி - அநுகுணமாகப் பண்ணப்பட்டிருக்கிற, கர்மாணி - கர்மங் களை (நான் செய்கிற கர்தா என்று நினைக்கிறான்.)

3. ஸ்ரீபாகவதம். ஸத்வம், ரஜஸ்ஸு, தமஸ்ஸு, என்பன - பிருகிருதியினின்றும் உண்டான முக்குணங்கள்.

ஸமதாரூபேதாநி ஸத்வரஜஸ்தமாம்ஸி த்ரவ்யாணி)[1] என்று, இவற்றை த்ரவ்யங்களாகவும், இவைதானே ப்ரக்ருதிக்கு ஸ்வரூபமாகவும் கொள்ளுகிற ஸாங்க்யமதம் நிரஸ்தமாயிற்று.

இந்த மத நிராகரணார்த்தமாகவிறே ஆளவந்தார், “ஶுணாஃ வுயாநு” (குணாஃ ப்ரதாநம்)[2] என்று, பிரித்தருளிச் செய்தது.

(ப்ரக்ருத்யவஸ்தையில் அநுத்பூதங்களாய், விகாரதசையில் உத்பூதங்களாயிருக்கும்). அதாவது – ஸாம்யாபந்நங்களாயிருக்கையாலே, ப்ரக்ருத்யவஸ்தையில் இவற்றினுடைய ஸ்வரூபபாகம் தோற்றாது. வைஷம்யாபத்தியாலே விக்ருத்யவஸ்தையில் இவற்றினுடைய ஸ்வரூபவிபாகம் தோற்றியிருக்குமென்கை. “ஸத்வரஜஸ்தமாம்ஸி த்ரயோ ஶுணாஃ, வுக்ருதெஃ ஸ்வரூபாநுபந்திநஃ ஸ்வபாவவிஶேஷாஃ வுகாஶாதி கார்யைக நிரூபணீயாஃ வுக்ருத்யவஸ்தாயாமநுத்பூதாஸ் தத்விகாரேஷு மஹதாதிஷ்த்பூதாஃ” (ஸத்வரஜஸ்தமாம்ஸி த்ரயோ குணாஃ, ப்ரக்ருதேஸ் ஸ்வரூபாநுபந்திநஸ் ஸ்வபாவவிஶேஷாஃ ப்ரகாசாதி கார்யைகநிரூபணீயாஃ ப்ரக்ருத்யவஸ்தாயாமநுத்பூதாஸ் தத்விகாரேஷு மஹதாதிஷூத்பூதாஃ)[3] என்றிறே பாஷ்யகாரரும் அருளிச்செய்தது.

---

1. 43-ம் பக்கம் பார்க்க.

2. ஸ்தோ. ர. 17. ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் குணங்களும், ப்ரக்ருதியும்.

3. கீதாபாஷ்யம். 14.5. ஸத்வரஜஸ்தமாம்ஸி - ஸத்வரஜஸ்தமஸ்ஸாயிருக்கிற, த்ரயோகுணா; - மூக்குணங்கள், ப்ரக்ருதே: - ப்ரக்ருதியினுடைய, ஸ்வரூபாநுபந்திந: - ஸ்வரூபத்தைப்பற்றியிருக்கின்றன, ஸ்வபாவவிசேஷா: - ஸ்வபாவவிசேஷங்கள், கார்யைக நிரூபணீயா: - காரியத்தாலேயே நிச்சயிக்கத்தகுந்தவைகளாய், ப்ரக்ருத்யவஸ்தாயாம் - ப்ரக்ருதி என்னும் அவஸ்தையில், அநுத்பூதா: - ப்ரகாசிக்காமல், தத்விகாரேஷு - அந்த ப்ரக்ருதியினுடைய விகாரமான, மஹதாதிஷு உத்பூதா: - மஹதாதிகளிலே பிரகாசிக்கின்றன.

விகாரதசையில் இவைதான் கார்யைகநிரூபணீயங் களாகையாலே; கார்யகதநமுகத்தாலே இவற்றினுடைய ஸ்வரூபங்களை தர்ஶிப்பிக்கிறார்;

**17. ஸத்வம் - ஜ்ஞாநஸுகங்களையும், உபயஸங்கத் தையும் பிறப்பிக்கும்.**

(ஸத்வம் - ஜ்ஞாநஸுகங்களையும், உபயஸங்கத்தை யும் பிறப்பிக்கும்). அதாவது – ஸத்வகுணம் நிர்மலமாகை யாலே, ஜ்ஞாநஸுகாவரணமன்றிக்கே அவற்றுக்கு ஜநக முமாய், அவற்றினுடைய பேற்றுக்கு ப்ரவர்த்திக்கும்படி அவையிரண்டிலும் ஸங்கத்தையுமுண்டாக்குமென்கை. "தத்ர ஸத்த்வம் நிர்மலத்வாத்ப்ரகாஶகமநாமயம் | ஸுகஸங்கேந பத்நாதி ஜ்ஞாநஸங்கேந சாநக" (தத்ர ஸத் வம் நிர்மலத்வாத் ப்ரகாஶகமநாமயம் | ஸுகஸங்கேந பத் நாதி ஜ்ஞாநஸங்கேந சாநக)[2] என்னக்கடவதிறே.

**18. ரஜஸ்ஸு – ராகத்ருஷ்ணாஸங்கங்களையும், கர்ம ஸங்கத்தையும் பிறப்பிக்கும்.**

(ரஜஸ்ஸு - ராகத்ருஷ்ணா ஸங்கங்களையும், கர்மஸங் கத்தையும் பிறப்பிக்கும்). "ரஜோ ராகாத்மகம் வித்தி த்ருஷ்ணாஸங்கஸமுத்பவம் | தந்நிபத்நாதி கௌந்தேய கர்ம ஸங்கேந தேஹிநம்" (ரஜோ ராகாத்மகம் வித்தி த்ரு ஷ்ணாஸங்கஸமுத்பவம் | தந்நிபத்நாதி கௌந்தேய கர்ம ஸங்கேந தேஹிநம்)[2] என்னக்கடவதிறே. ராகமாவது-

---

1, ஸ்ரீகீதை. 14-6. ஹே அநக! - ஓ பாபமற்றவனே! தத்ர - அந்த ஸத்வரஜஸ்தமோகுணங்களுக்குள், நிர்மலத்வாத் - நிர்மலமா யிருக்கையினாலே, ப்ரகாசகம் - ப்ரகாசமாயும், அநாமயம் - வியாதி யற்றதாயுமிருக்கிற, ஸத்வம் - ஸத்வகுணமானது, ஸுகஸங்கேந - ஸுகத்தினுடைய ஸம்பந்தத்தாலும், ஜ்ஞாநஸங்கேந ச - ஜ்ஞானத் தினுடைய ஸம்பந்தத்தாலும், பத்நாதி - கட்டுகிறது.

2. ஸ்ரீகீதை. 14-7. கௌந்தேய! - குந்தீபுத்ரனான அர்ஜுநா! ரஜ: - ரஜோகுணத்தை, ராகாத்மகம் - ராகத்திற்கு ஹேதுவாயும், த்ருஷ்ணா ஸங்கஸமுத்பவம் - ஆசையையும், பந்துக் களிடத்தில் ஸங்கத்தையும் உண்டுபண்ணுகிறதாகவும். வித்தி - அறி

யோஷித்புருஷர்களுக்கு அந்யோந்யமுண்டான ஸ்ப்ருஹை. த்ருஷ்ணையாவது - ஶப்தாதி ஸர்வவிஷயஸ்ப்ருஹை. ஸங்கமாவது - புத்ரமித்ராதிகளளவில் ஸம்ச்லேஷ ஸ்ப்ருஹை. கர்மஸங்கமாவது – க்ரியைகளில் ஸ்ப்ருஹை.

**19. தமஸ்ஸு - விபரீதஜ்ஞாநத்தையும், அநவதாநத்தையும், ஆலஸ்யத்தையும், நித்ரையையும் பிறப்பிக்கும்.**

(தமஸ்ஸு - விபரீதஜ்ஞாநத்தையும், அநவதாநத்தையும், ஆலஸ்யத்தையும், நித்ரையையும் பிறப்பிக்கும்). "தம ஸ்த்வஜ்ஞாநஜம் வித்தி மோஹநம் ஸர்வதேஹிநாம் । ப்ரமாதாலஸ்யநித்ராபிஸ் தந்நிபத்நாதி பாரத" (தமஸ்த்வஜ்ஞாநஜம் வித்தி மோஹநம் ஸர்வதேஹிநாம் | ப்ரமாதாலஸ்ய நித்ராபிஸ்தந்நிபத்நாதி பாரத)[1] என்னக்கடவதிறே. விபரீதஜ்ஞாநமாவது – வஸ்துயாதாத்ம்ய விபரீத விஷயமான ஜ்ஞாநம். அநவதாநமாவது - செய்யுமதொன்றில் குறிக்கோளில்லாமை. ஆலஸ்யமாவது - ஒரு கார்யத்திலும் ஆரம்பமற்றிருக்கும் சோம்பல். நித்திரையாவது - புருஷனுக்கு இந்த்ரியப்ரவர்த்தந ஶ்ராந்தியடியாக வருகிற ஸர்வேந்த்ரியப்ரவர்த்தநோபரதி.

இனி இக்குணங்களினுடைய ஸமதசையிலும், விஷமதசையிலும், ப்ரக்ருதியினுடைய விகாரங்களிருக்கும்படியை அருளிச்செய்கிறார்;

---

யக்கடவாய், தத் - அந்த ரஜோகுணமானது, தேஹிநாம் - தேஹத்தையுடைய ஆத்மாக்களை, கர்மஸங்கேந பத்நாதி - கர்மத்தாலே கட்டுகிறது.

1. ஸ்ரீகீதை. 14-8. பாரத! - பரதவம்சோத்பவனான அர்ஜுன! தமஸ்து - தமோகுணமோ, அஜ்ஞாநஜம் - விபரீத ஜ்ஞாநத்தால் உண்டானதாயும், ஸர்வதேஹிநாம் - ஸமஸ்தப்ராணிகளுக்கும், மோஹநம் - அந்யதா ஜ்ஞானத்திற்கு ஹேதுவாயும், வித்தி - அறியக்கடவாய், ப்ரமாத ஆலஸ்ய நித்ராபி: - அஜாக்ரதை, சோம்பல், நித்திரை இவைகளாலே, நிபத்நாதி - கட்டுகிறது. அதாவது இவைகளை உண்டுபண்ணுகிறது.

20. இவை, ஸமங்களானபோது விகாரங்கள் ஸமங்களுமாய், அஸ்பஷ்டங்களுமாயிருக்கும். விஷமங்களானபோது, விகாரங்கள் விஷமங்களுமாய், ஸ்பஷ்டங்களுமாயிருக்கும்.

(இவை ஸமங்களானபோது) என்று தொடங்கி. அதாவது - இக்குணங்கள் பரஸ்பர உத்ரேகமாதல், க்ருத்ஸ்ந உத்ரேகமாதலன்றிக்கே ஸாம்யாபந்நங்களாயிருந்தபோது, ப்ரக்ருதியினுடைய விகாரங்கள் நாமரூபவிசேஷ ராஹித்யத்தாலே தன்னில் ஸமங்களுமாய், ப்ரமாணங்களால் தர்மிக்கப்போகாதபடி ஸ்பஷ்டங்களுமன்றிக்கே இருக்கும். இக்குணங்கள் உத்ரேகித்து விஷமங்களானபோது, ப்ரக்ருதியினுடைய விகாரங்களும் நாமரூபவிசேஷ ஸாஹித்யத்தாலே தன்னில் விஷமங்களுமாய், ப்ரமாணங்களாலே தர்மிக்கலாம்படி ஸ்பஷ்டங்களுமா யிருக்குமென்கை.

ப்ரதேசபேதத்தாலும், காலபேதத்தாலும் என்று கீழ்ச்சொன்னதுக்கும், இந்த குணஸாம்ய வைஷம்யங்களேயிறே ஹேது. அது இங்கே விசதமாயிற்று.

21. விஷமவிகாரங்களில் ப்ரதமவிகாரம் மஹான்.

இந்த குணவைஷம்யப்ரயுக்தமான விஷமவிகாரங்களில் ப்ரதமவிகாரமேது? என்னுமாகாங்க்ஷையிலே (விஷமவிகாரங்களில் ப்ரதமவிகாரம் மஹான்) என்கிறார்.

“गुणसाम्यात्ततस्तस्मात् क्षेत्रज्ञाधिष्ठितान्मुने। गुणव्यञ्जनसम्भूतिः सर्गकाले द्विजोत्तम॥” (குணஸாம்யாத் ததஸ் தஸ்மாத் க்ஷேத்ரஜ்ஞாதிஷ்டிதாந் முநே। குணவ்யஞ்ஜநஸம்பூதிஸ் ஸர்ககாலே த்விஜோத்தம)[1] என்னக்கடவதிறே. அதாவது – குணஸாம்

1. வி, பு. 1-2-36, முநே! - மனனசீலனுன மைத்ரேய! ததः - பின்பு, ஸர்ககாலே - ஸ்ருஷ்டிகாலத்திலே, குணஸாம்யாத் - குணஸாம்யத்தை யுடைத்தாயிருப்பதும், க்ஷேத்ரஜ்ஞாதிஷ்டிதாத் - க்ஷேத்ரஜ்ஞனை ஆத்மாவாலே அதிஷ்டித்திருப்பதுமான, தஸ்மாத்-

யத்தையுடைத்தாய், க்ஷேத்ரஜ்ஞனை பத்தசேதநனாலே அதிஷ்டிதமான அவ்யக்தத்தில் நின்றும் வ்யக்தகுணோத்ரேக ஹேதுவாகையாலே. குணவ்யஞ்ஜகமென்று பேரான மஹத் தத்வம் உத்பந்நமாமென்றபடி.

இதினுடைய ஸ்வரூபமிருக்கும்படி எங்ஙனே? என்னும் ஆகாங்க்ஷையிலே அருளிச்செய்கிறார்;

**22. இது, ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்று த்ரிவிதமாய், அத்யவஸாயஜநகமாயிருக்கும்.**

(இது ஸாத்விகம்) என்று தொடங்கி. அதாவது – இந்த மஹத் தத்வம், "ஸாத்விகோ ராஜஸஶ்சைவ தாமஸஶ்ச த்ரிதா மஹாந்" (ஸாத்விகோ ராஜஸஶ்சைவ தாமஸஶ்ச த்ரிதா மஹாந்)[1] என்று, ப்ரகாஶ ப்ரவ்ருத்தி மோஹஹேதுவான ஸத்வ ரஜஸ் தமோ ரூப குணத்ரயத்தாலே, ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்று த்ரிவிதமாய், "மஹாந் வை புத்திலக்ஷண:" (மஹாந் வை புத்திலக்ஷண:)[2] என்று புத்திலக்ஷணமாகையாலே அத்யவஸாய ஜநகமாயிருக்கும் என்கை.

அதில், ஸாத்விகபுத்தியாவது – "ப்ரவ்ருத்திஂ ச நிவ்ருத்திஂ ச கார்யாகார்யே பயாபயே | பந்தம் மோக்ஷஂ ச யா வேத்தி புத்திஸ் ஸா பார்த்த ஸாத்விகீ" (ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச கார்யாகார்யே பயாபயே | பந்தம் மோக்ஷம் ச யா வேத்தி புத்திஸ் ஸா பார்த்த ஸாத்விகீ)[3] என்று, ப்ரவ்

---

அந்தப்பிரகிருதியிலிருந்து, குணவிஜ்ஞாந ஸம்பூதி: - பிரகாசமாயுள்ள குணங்களின் விருத்திக்கு ஹேதுவான மஹத் தத்வமானது

1. வி. பு. 1-2-36 மஹத் தத்வமானது ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்று மூன்றுவிதம்.

2. மஹாந் - மஹத் தத்வமானது, புத்தி லக்ஷண: - புத்தியை லக்ஷணமாக உடையது.

3. ஸ்ரீகீதை. 18-30. பார்த்த! - ஹே அர்ஜுந! ப்ரவ்ருத்திஞ்ச - தர்மத்தில் ப்ரவ்ருத்தியையும், நிவ்ருத்திஞ்ச - மோக்ஷஸாதநபூதமான நிவ்ருத்தி தர்மத்தையும், கார்யாகார்யே - பிரவிருத்தி தர்மங்களிலோ நிவ்ருத்தி தர்மங்களிலோ இருப்பவர்களுக்கு தேசகாலா

ருத்தி நிவ்ருத்திகளுடையவும், கார்யாகார்யங்களினுடைய வும், பயாபயங்களினுடையவும், பந்த மோக்ஷங்களினுடை யவும் யதாவத்வ்யவஸாயமென்றும் ; ராஜஸபுத்தியாவது- "யயா ധൎമ്മമധൎമ്മം ച കാൎയ്യം ചാകാൎയ്യമേവ ച | அயதாவத்ப்ரஜாநாதி ബുദ്ധിஸ്ஸா பார்த்த ராஜஸீ" (யயா தர்ம மதர்மம் ச கார்யம் சாகார்யமேவ ச | அயதாவத்ப்ரஜாநாதி புத்திஸ் ஸா பார்த்த ராஜஸீ)[1] என்று, தர்மாதர்மங்களை யும், கார்யாகார்யங்களையும் அந்யதாவாக அறுதியிடுகை யென்றும் ; தாமஸபுத்தியாவது – "அധൎമ്മം ധൎമ്മമിதி யா மந்யதே தமஸாவ்ருதா | ஸர்வார்த்தாந் விபரீதாம்ஶ்ச புத்திஸ்ஸா பார்த்த தாமஸீ" (அதர்மம் தர்மமிதி யா மந்யதே தமஸாவ்ருதா | ஸர்வார்த்தாந் விபரீதாம்ஶ்ச புத்திஸ்ஸா பார்த்த தாமஸீ)[2] என்று, அதர்மத்தை தர்மமாகவும், தர் மத்தை அதர்மமாகவும் இப்படி ஸர்வார்த்தங்களையும், விபரீதமாகவும் நிஶ்சயிக்கையென்றும், பகவான் தானே கீதோபநிஷத்திலே அருளிச்செய்தான்.

ஆக, ப்ரக்ருதியினுடைய விஷயவிகாரங்களில் ப்ரதம விகாரமின்னதென்றும், அதினுடைய ஸ்வரூபமிருக்கும் படியும், அதினுடைய க்ருத்யமும் சொல்லிற்றாயிற்று.

---

வஸ்தைகளில் எது செய்யத்தகுந்தது, எது செய்யத்தகாதது என்ப தையும், பயாபயே - சாஸ்திரத்தைத் தாண்டுவது பயமென்பதையும் சாஸ்திரத்திற்கு ஒத்து நடப்பது அபயமென்பதையும், பந்தம் மோ க்ஷஞ்ச - ஸம்ஸாரபந்தத்தையும், மோக்ஷத்தையும், யா - யாதொரு, புத்தி: - புத்தியானது, வேத்தி - உண்மையாக அறிகிறதோ, ஸா - அந்த புத்தியானது, ஸாத்விகீ - ஸாத்விகீ என்று சொல்லப்படுகிறது.

1. ஸ்ரீகீதை, 18-31. பார்த்த! - ஹே அர்ஜுந! யயா - யா தொருபுத்தியினாலே, தர்மம் - ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி ரூபமான தர்மத் தையும், அதர்மம் ச - அதர்மத்தையும் கார்யஞ்ச - செய்யத்தகுந்த தையும், அகார்யமேவ ச - செய்யத்தகாததையும், அயதாவத் - உள்ளபடியில்லாமல், ப்ரஜாநாதி - அறிகிறதோ, ஸா - அந்த, புத்தி: - புத்தியானது, ராஜஸீ - ராஜஸமென்று சொல்லப்படுகிறது.

2. ஸ்ரீகீதை. 18-32. பார்த்த! - ஹே அர்ஜுந! யா - யா தொரு புத்தியானது, தமஸா - அஜ்ஞானத்தாலே, ஆவ்ருதா - சூழப் பட்டதாய்க்கொண்டு, அதர்மம் - அதர்மத்தை, தர்மமிதி - தர்ம மென்றும், ஸர்வார்த்தாந் - ஸகல பதார்த்தங்களையும், விபரீதாந் ச -

இனி, மற்றுமுண்டான விகாரங்களும் க்ரமத்திலே சொல்லப்படுகிறது ;

**23. இதில் நின்றும், வைகாரிகம், தைஜஸம், பூதாதி யென்று த்ரிவிதமான அஹங்காரம் பிறக்கும்.**

(இதில் நின்றும்) இத்யாதி. அதாவது - இந்த மஹானில் நின்றும். "வைகாரிகஸ்தைஜஸஶ்ச பூதாதிஶ்சைவ தாமஸ꞉ । த்ரிவிதோऽயமஹங்காரோ மஹத்தத்வாதஜாயத" (வைகாரிகஸ்தைஜஸஶ்ச பூதாதிஶ்சைவ தாமஸ꞉ । த்ரிவிதோயமஹங்காரோ மஹத் தத்வாதஜாயத)[1] என்கிறபடியே. ஸாத்விக ராஜஸ தாமஸரூபபேதத்தாலே வைகாரிகமென்றும், தைஜஸமென்றும், பூதாதியென்றும் த்ரிவிதமான அஹங்காரமும் பிறக்குமென்கை. இத்தால் - த்ரிகுணாத்மிகையான மூலப்ரக்ருதியில் நின்றும் பிறந்ததாகையாலே, மஹானும் த்ரிகுணாத்மகமாயிருக்கும் ; அப்படியே த்ரிகுணாத்மகமான மஹானில் நின்றும் பிறந்ததாகையாலே, அஹங்காரமும் த்ரிகுணமாயிருக்கும் என்கை.

**24. அஹங்காரம் அபிமாநஹேதுவாயிருக்கும்,**

(அஹங்காரம் அபிமாநஹேதுவாயிருக்கும்). அதாவது - தேஹாத்மாபிமாநாதிகளை ஜநிப்பிக்கை. இத்தால் - இதினுடைய க்ருத்யம் சொல்லப்பட்டது.

**25. இதில், வைகாரிகத்தில் நின்றும் ஶ்ரோத்ர த்வக் சக்ஷுர் ஜிஹ்வா க்ராணங்களென்கிற ஜ்ஞாநேந்த்ரியங்களைந்தும், வாக்பாணிபாதபாயூபஸ்த்தங்**

---

விபரீதங்களாகவும், மந்யதே - அறிகிறதோ, ஸா - அந்த, புத்தி: - புத்தியானது, தாமஸீ - தாமஸமென்று சொல்லப்படுகிறது.

1. வி. பு. 1-2-37. வைகாரிக: - வைகாரிக மென்றும், அதாவது ஸாத்விக அஹங்காரமென்றும், தைஜஸச்ச - தைஜஸமென்றும், அதாவது ராஜஸ அஹங்காரமென்றும், தாமஸ: - தாமஸாஹங்காரமான, பூதாதி: ச - பூதாதியென்றும், அயம் - இந்த, த்ரிவித: - மூன்று விதமான, அஹங்கார: - அஹங்காரமானது, மஹத் தத்வாத் - மஹத் தத்வத்தில் நின்றும், அஜாயத - உண்டாயிற்று.

களென்கிற கர்மேந்த்ரியங்களைந்தும், மநஸ்ஸு
மாகிற பதினோரிந்த்ரியங்களும் பிறக்கும்.

*(இதில், வைகாரிகத்தில் நின்றும்) இத்யாதி. அதா வது - இப்படி த்ரிவிதமான அஹங்காரத்தில் வைகாரிகமா வது – ஸாத்விக அஹங்காரமாகையாலே, இதில் நின்றும், ஸத்வகார்யமான லகுத்வ ப்ரகாசத்வங்களை யுடைத்தான இந்த்ரியங்கள் பதினொன்றும் பிறக்கும் என்கை.*

*வைகாரிகத்தில் நின்றும் ஏகாதசேந்த்ரியங்களும் பிறக்குமென்று சொல்லிவிடாதே, (ச்ரோத்ர த்வக் சக்ஷுர் ஜிஹ்வ ஆக்ராணங்களென்கிற ஜ்ஞானேந்த்ரியங்களைந் தும். வாக் பாணி பாத பாயு உபஸ்த்தங்களென்கிற கர்மேந் த்ரியங்களைந்தும், மநஸ்ஸும் ஆகிற பதினோரிந்த்ரியங் களும்) என்று இப்படி அருளிச் செய்தது - இவற்றி னுடைய கார்யபேதத்தையும், ஸம்ஜ்ஞாபேதத்தையு மொழிய, இவற்றினுடைய ஸ்வரூபபேதமும், வ்யவஹார பேதமும் தோற்றுகைக்கென்று. மநஸ்ஸுக்கு கார்யம் உபய ஸஹகாரித்வம். அதுதான் இவ்விடத்தில் சொல்லாதொ ழிந்தது, மேலே இதைதன்னை விஸ்தரேண சொல்லுகிற விடத்திலே சொல்லுகிறோமென்று. இந்த்ரியங்கள் ஸாத் விக அஹங்காரகார்யமென்று அருளிச்செய்கையாலே, இவற்றை ராஜஸ அஹங்காரகார்யமென்கிற பக்ஷம் ப்ரதிக்ஷிப்தம்.*

" 𑍈𑌤𑌜𑌸𑌾𑌨𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑍍𑌯𑌾𑌹𑍁𑌰𑍍𑌦𑍇𑌵𑌾 𑌵𑍈𑌕𑌾𑌰𑌿𑌕𑌾 𑌦𑌶 । 𑌏𑌕𑌾𑌦𑌶𑌂 𑌮𑌨𑌶𑍍𑌚𑌾𑌤𑍍𑌰 𑌦𑍇𑌵𑌾 𑌵𑍈𑌕𑌾𑌰𑌿𑌕𑌾𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌾𑌃 " *(தைஜஸாநீந்த்ரியாண்யாஹுர் தேவா வைகா ரிகா தச | ஏகாதசம் மநச்சாத்ர தேவா வைகாரிகா ஸ்ம் ருதா:)*[1] என்றும், " [illegible] |

1. வி. பு. 1-2-48. *தச - பத்தாயிருக்கிற, இந்திரியாணி - இந்தி ரியங்கள், தைஜஸாநி - ராஜஸ அஹங்கார கார்யமென்று சிலர் சொல் லுகிறார்கள், தேவா: - தேவாதிஷ்டானமான இந்த்ரியங்கள், வைகாரி கா: - ஸாத்விகாஹங்கார கார்யமென சிலர் சொல்லுகிறார்கள், தத்ர - அவைகளுக்குள், ஏகாதசம் - பதினொன்றாவதான, மநச்ச - மனஸ் ஸும், தேவா: - தேவதைகளாலே அதிஷ்டிக்கப்பட்டதால், தேவசப்*

[illegible — Sanskrit passage in Grantha script, 7 lines] ” (அக்நிர் வாக் பூத்வா முகம் ப்ராவிஶத் | வாயுர் க்ராணோ பூத்வா நாஸிகே ப்ராவிஶத் | ஆதித்யஶ்சக்ஷுர் பூத்வா அக்ஷிணீ ப்ராவிஶத் | திஶஶ்ரோத்ரம் பூத்வா கர்ணௌ ப்ராவிஶத் | ஓஷதீ வநஸ்பதயோ லோமாநி பூத்வா த்வசம் ப்ராவிஶந் | சந்த்ரமா மநோ பூத்வா ஹ்ருதயம் ப்ராவிஶத் | ம்ருத்யுரபாநோ பூத்வா நாபிம் ப்ராவிஶத் | ஆபோ ரேதோ பூத்வா ஶிஶ்நம் ப்ராவிஶத்)[1] என்கிறபடியே, தேவாதிஷ்டிதங்களாகையாலே, தேவசப்தவாச்யங்களான இந்த்ரியங்கள் பதினொன்றும் ராஜஸ அஹங்காரகார்யமென்பார்கள் சிலர், ஸாத்விக அஹங்கார கார்யமென்பர்கள் சிலர் என்று சொல்லி, அதில், ஸாத்விகாஹங்காரகார்யமென்கிறதே ஸ்வபக்ஷமாக ஸ்ரீபராஶர பகவான் நிஶ்சயித்

---

தத்தால் சொல்லத்தகுந்த இந்த்ரியங்களும், வைகாரிகா: - ஸாத்விகாஹங்காரகார்யங்களென்று, ஸ்ம்ருதா: - சொல்லப்பட்டன.

1. ஐத. உ. 2-1-4. அக்நி: - அக்நியானவன், வாக் - வாக்காக, பூத்வா - ஆகி, முகம் - முகத்தை, ப்ராவிசத் - ப்ரவேசித்தான், வாயு:- வாயுவானவன், க்ராண: - க்ராணேந்திரியமாக, பூத்வா - ஆகி நாஸிகே - மூக்கை, ப்ராவிசத் - ப்ரவேசித்தான், ஆதித்ய: - ஸூர்யனானவன், சக்ஷு: - கண்ணாக, பூத்வா - ஆகி, அக்ஷிணீ - கண்களை, ப்ராவிசத் - ப்ரவேசித்தான், திச: - திக்குக்கு அபிமானியான தேவதையானவன், ச்ரோத்ரம் - காதாக, பூத்வா - ஆகி, கர்ணௌ - காதுகளை, ப்ராவிசத் - ப்ரவேசித்தான், ஓஷதீ: - கொடிகளும் அதாவது அபிமானி தேவதைகளும், வநஸ்பதய: - விருக்ஷங்களும் அதாவது அபிமானி தேவதைகளும், லோமானி - மயிர்களாக, பூத்வா - ஆகி, த்வசம், த்வகிந்திரியத்தை, ப்ராவிசந் - ப்ரவேசித்தன, சந்த்ரமா: - சந்திரனானவன், மந: - மநஸ்ஸாக, பூத்வா - ஆகி, ஹ்ருதயம் - ஹ்ருதயத்தை, ப்ராவிசத் - ப்ரவேசித்தான். ம்ருத்யு: - ம்ருத்யுவானவன், அபாந: - அபாநமாக, பூத்வா - ஆகி, நாபிம் - நாபியை, ப்ராவிசத் - ப்ரவேசித்தான், ஆப: - ஜலாபிமானியான தேவதை, ரேத: - ரேதஸ்ஸாக, பூத்வா - ஆகி, சிச்நம் - ஆண்குறியை, ப்ராவிசத் - ப்ரவேசித்தான்.

கையாலே, இவர்க்கு இப்படி அருளிச் செய்யக் குறை யில்லையிறே.

இந்த்ரியங்கள் பதினொன்று என்கிற நியமமும் வ்யஷ்டி விஷயமன்று, ஸமஷ்டி விஷயம்; "தேஷாந்த்வவயவாந் ஸூக்ஷ்மாந் ஷண்ணாமப்யமிதௌஜஸாம் | ஸந்நிவேஶ்யாத்மமாத்ராஸு ஸர்வபூதாநி நிர்மமே" (தேஷாந்த்வவயவாந் ஸூக்ஷ்மாந் ஷண்ணாமப்யமிதௌஜஸாம் | ஸந்நிவேஶ்யாத்மமாத்ராஸு ஸர்வபூதாநி நிர்மமே)[1] என்று அணுக்களாகையாலே, ஸூக்ஷ்மங்களான இந்த்ரியங்களினுடைய அம்சங்களை ஆத்மமாத்ரைகளிலே ப்ரவேஶிப்பித்து ஸர்வ பூதங்களையும் ஈஶ்வரன் ஸ்ருஷ்டித்தானென்று மநுவசநமுண்டாகையாலே. இதில் "ஸூக்ஷ்மாந்" (ஸூக்ஷ்மாந்) என்கையாலே "அணவஶ்ச" (அணவஶ்ச)[2] என்கிற ஸூத்ரமர்யாதையாலே, இந்த்ரியங்கள் அணுவென்றும், "அவயவாந்" (அவயவாந்) என்கையாலே, இந்த்ரியங்கள் தோறும் வ்யக்திபாஹுள்யமுண்டென்றும், ஆத்மமாத்ரைகளிலே கூட்டினான் என்கையாலே, அடியிலே கொடுத்த இந்த்ரியங்களே யாவத்ஸம்ஸாரம் அநுவர்த்திக்குமென்றும், "ஶரீரம் யதவாப்நோதி யச்சாப்யுத்க்ராமதீஶ்வர: | க்ருஹீத்வைதாநி ஸம்யாதி வாயுர்கந்தாநிவாஶயாத்" (ஶரீரம் யதவாப்நோதி யச்சாப்யுத்க்ராமதீஶ்வர: | க்ருஹீத்வைதாநி ஸம்யாதி வாயுர் கந்தாநிவாஶயாத்)[3] என்கிறபடியே, ஶரீரத்தைவிட்டு ஶரீராந்தரத்தை ப்ரவேஶிக்கும்போது இந்த்ரியங்களை க்ரஹித்துக்கொண்டு

1. மநுஸ்ம்ருதி. 1-16. அமிதௌஜஸாம் - அதிகமான தேஜஸ்ஸையுடைய, தேஷாம் - அந்த, ஷண்ணாமபி - ஆறு இந்திரியங்களுடையவும், ஸூக்ஷ்மாந் - ஸூக்ஷ்மமான, அவயவாந் - அவயவங்களை, ஆத்மமாத்ராஸு - ஆத்ம மாத்ரைகளிலே, ஸந்நிவேச்ய - சேர்த்து, ஸர்வபூதாநி - ஸமஸ்தபூதங்களையும், நிர்மமே - ஸ்ருஷ்டித்தான்.

2. ப்ர. ஸூ. 2-4-6. (இந்த்ரியம்) அணுவாயிருக்கும்.

3. ஸ்ரீகீதை. 15-8. ஈச்வர: - இந்திரியங்களுக்கு நியாமகனான ஜீவன், யத் - யாதொரு, சரீரம் - சரீரத்தை, அவாப்நோதி - அடைகிறானோ, யத் சாபி - யாதொரு சரீரத்தில் நின்றும், உத்க்ராமதி -

போமென்றும் தோற்றுகிறது, “ஷண்ணாடு” (ஷண்ணும்) என்றும், “உநஷஷ்டாநி” (மநஷ்ஷஷ்டாநி) என்றும் சொல்லுகிற ஸங்க்யாநிர்தேஶத்தில் நிர்பந்தமில்லை; இந்த்ரியாந்தரங்களும் கூடிப் போகையாலே.

இனிமேல், “ஹூதத நாத்ரஸர்கோऽயமஹங்காராத்து தாமஸாத்” (பூததந்மாத்ரஸர்கோயமஹங்காராத்து தாமஸாத்)[1] என்கிறபடியே, பூதாதிஶப்தவாச்யமான தாமஸாஹங்காரத்தில் நின்றும் தந்மாத்ரபஞ்சகமும், தத்விஶேஷமான ஆகாஶாதி பஞ்சபூதங்களும் உத்பந்நங்களாம் க்ரமம் அருளிச்செய்கிறார்;

26. பூதாதியில் நின்றும் ஶப்ததந்மாத்ரை பிறக்கும், இதில் நின்றும் ஆகாஶமும் ஸ்பர்ஶதந்மாத்ரையும் பிறக்கும், இதில் நின்றும் வாயுவும் ரூபதந்மாத்ரையும் பிறக்கும், இதில் நின்றும் தேஜஸ்ஸும் ரஸதந்மாத்ரையும் பிறக்கும், இதில் நின்றும் அப்பும் கந்ததந்மாத்ரையும் பிறக்கும், இதில் நின்றும் ப்ருத்வீ பிறக்கும்.

(பூதாதியில் நின்றும் ஶப்ததந்மாத்ரை பிறக்கும்) என்று தொடங்கி. அதாவது - பூதாதிஸம்ஜ்ஞிகமான தாமஸ அஹங்காரத்தில் நின்றும் ஆகாசத்தினுடைய ஸூக்ஷ்மாவஸ்தையான ஶப்ததந்மாத்ரை பிறக்கும்; இந்த ஶப்ததந்மாத்ரையில் நின்றும், இதினுடைய ஸ்தூலாவஸ்தையாய் வ்யக்தஶப்த குணகமான ஆகாசமும், வாயுவினுடைய ஸூக்ஷ்மாவஸ்தையான ஸ்பர்ஶதந்மாத்ரையும் பிறக்கும்; இந்த ஸ்பர்ஶதந்மாத்ரையில் நின்றும்,

வெளிப்படுகின்றனே; அப்போது, வாயு: - வாயுவானவன், ஆசயாத் கந்தான் இவ - ஸ்ரக்சந்தனாதிகள் இருக்கிற ஸ்தானத்திலிருந்து பரிமளங்களை எப்படி க்ரஹித்துக்கொண்டு போகிறதோ அதுபோல், ஏதாநி க்ருஹீத்வா ஸம்யாதி - இந்த இந்திரியங்களை ஸூக்ஷ்மங்களோடு கூட க்ரஹித்துக்கொண்டு போகிறான்.

1. வி. பு. 1-2-48. அயம் பூததந்மாத்ர ஸர்க: - இந்த பூதங்களினுடையவும், தந்மாத்ரங்களினுடையவும் ஸ்ருஷ்டி, தாமஸாத் அஹங்காராத் - தாமஸ அஹங்காரத்திலிருந்துண்டாயிற்று.

இதினுடைய ஸ்தூலாவஸ்தையாய் ஸ்பர்ஶகுணகமான வாயுவும், தேஜஸ்ஸினுடைய ஸூக்ஷ்மமான ரூபதந்மாத்ரையும் பிறக்கும்; இந்த ரூபதந்மாத்ரையில் நின்றும், இதினுடைய ஸ்தூலாவஸ்தையாய் ரூபகுணகமான தேஜஸ்ஸும், அப்பினுடைய ஸூக்ஷ்மமான ரஸதந்மாத்ரையும் பிறக்கும்; இந்த ரஸதந்மாத்ரையில் நின்றும், இதினுடைய ஸ்தூலாவஸ்தையாய் ரஸகுணியான அப்பும், ப்ருதிவியினுடைய ஸூக்ஷ்மமான கந்ததந்மாத்ரையும் பிறக்கும்; இந்த கந்ததந்மாத்ரையில் நின்றும், இதினுடைய ஸ்தூலாவஸ்தையாய், கந்த குணியான ப்ருதிவீ பிறக்கும் என்கை.

ஆகாஶமும் ஸ்பர்ஶதந்மாத்ரையும் பிறக்கும், வாயுவும் ரூப தந்மாத்ரையும் பிறக்கும் என்று உத்பத்திசொல்லுகிறவளவில், பூதத்தை முற்படச் சொல்லி தந்மாத்ரையைப் பிற்படச் சொல்லிக் கொண்டு வந்தது - பூதோத்பத்திக்கு அநந்தரம் தந்மாத்ரோத்பத்தியென்கிற க்ரமம் தோற்றுகைக்காக. இந்த தந்மாத்ராத் தந்மாத்ரோத்பத்திக்ரமம் நம்மாசார்யர்களுக்கு மிகவும் ஆதரணீயமாய்ப் போரும்; அதுக்கடி – "அஷ்டௌ ப்ரக்ருதயஷ்ஷோடஶ விகாரா:" (அஷ்டௌ ப்ரக்ருதய: ஷோடஶ விகாரா:)[1] என்கிற ஶ்ருதிக்கு ஸ்வரஸார்த்தம் ஸித்திக்கையாலே,

"ஸம்ஸ்வாத ப்ரக்ருதிவாஶாஷௌ, ப்ரக்ருதேர்மஹாநு, உஹங்காரமஹங்காராத் ஶப்த தந்மாத்ரம், ஶப்த-தந்மாத்ராதாகாஶம் ஸ்பர்ஶதந்மாத்ரஞ்ச, ஸ்பர்ஶதந்மாத்ராத்-வாயு: ரூபதந்மாத்ரஞ்ச, ரூபதந்மாத்ராத்தேஜ

1. கர்போபநிஷத். எட்டு ப்ரக்ருதிகள், அதாவது - பிரகிருதி மஹத், அஹங்காரம், ஐந்து தந்மாத்ரை - இவைகாரணம், பதினறு விகாரங்கள், அதாவது - சப்தாதி குணங்கள் ஐந்து, பதினென்று இந்திரியங்கள், இவை விகாரங்கள்.

𑌰𑌸𑌤𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌞𑍍𑌚, 𑌰𑌸𑌤𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌦𑌾𑌪𑍋 𑌗𑌨𑍍𑌧𑌤𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌞𑍍𑌚, 𑌗𑌨𑍍𑌧𑌤𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌤𑍍𑌪𑍃𑌥𑌿𑌵𑍀" (ஈஶ்வராத் ப்ரக்ருதி புருஷௌ, ப்ரக்ருதேர் மஹாந், மஹதோஹங்காரோஹங்காராச்சப்த தந்மாத்ரம் ஶப்ததந்மாத்ராதாகாஶம் ஸ்பர்ஶ தந்மாத்ரஞ்ச, ஸ்பர்ஶதந்மாத்ராத் வாயூ ரூபதந்மாத்ரஞ்ச, ரூபதந்மாத்ராத் தேஜோ ரஸதந்மாத்ரஞ்ச, ரஸதந்மாத்ராதாபோ கந்ததந்மாத்ரஞ்ச, கந்ததந்மாத்ராத் ப்ருதிவீ)[1] என்று, இந்த க்ரமத்தை யாதவப்ரகாஶாதிகளும் ஆதரித்துக்கொண்டு போந்தார்கள்.

இனி, பூதாத் தந்மாத்ரோத்பத்தி க்ரமமும் ஶாஸ்த்ர ஸித்தமாகையாலே, அத்தையும் ஸங்க்ரஹேண அருளிச் செய்கிறார்;

27. ஸ்பர்ஶதந்மாத்ரை தொடக்கமான நாலு தந்மாத்ரைகளும், ஆகாஶம் தொடக்கமான நாலு பூதங்களுக்கும் கார்யமாய், வாயுதொடக்கமான நாலு பூதங்களுக்கும் காரணமாயிருக்குமென்றும் சொல்லுவர்கள்.

(ஸ்பர்ஶதந்மாத்ரை தொடக்கமான நாலுதந்மாத்ரைகளும்) என்று தொடங்கி. அதாவது — பூதாதியில் நின்றும் ஶப்ததந்மாத்ரை பிறக்கும், ஶப்ததந்மாத்ரையில் நின்றும் ஆகாஶம் பிறக்கும். ஆகாஶத்தில் நின்றும் ஸ்பர்ஶ தந்மாத்ரை பிறக்கும். ஸ்பர்ஶதந்மாத்ரையில் நின்றும் வாயு பிறக்கும், வாயுவில் நின்றும் ரூபதந்மாத்ரை பிறக்கும். ரூபதந்மாத்ரையில் நின்றும் தேஜஸ்ஸு பிறக்கும். தேஜஸ்ஸில் நின்றும் ரஸதந்மாத்ரை பிறக்கும். ரஸதந்மாத்ரையில் நின்றும் ஜலம் பிறக்கும். ஜலத்தில் நின்றும் கந்ததந்மாத்ரை பிறக்கும். கந்ததந்மாத்ரையில் நின்றும் ப்ருதிவீ பிறக்கும் என்றபடி.

1. ஈச்வராத் - ஈச்வரனிடத்திலிருந்து, ப்ரக்ருதி புருஷௌ - ப்ரக்ருதிபுருஷர்கள், ப்ரக்ருதே: - ப்ரக்ருதியிலிருந்து, மஹத் - மஹத் உண்டாகிறது. இப்படியே மேலும் கண்டுகொள்வது.

இந்த க்ரமம் ஸ்ரீ விஷ்ணுபுராணஸித்தம்; பூர்வக்ரமம் புராணாந்தர ஸித்தமென்று சொல்லுவர்கள்; அது சொல்லவொண்ணாதிறே. "𑌅𑌷𑍍𑌟𑍌 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌯𑌷𑍍𑌷𑍋𑌡𑌶 𑌵𑌿𑌕𑌾𑌰𑌾𑌃" (அஷ்டௌ ப்ரக்ருதயஷ்ஷோடஶ விகாராঃ) என்று ஆகாஶாதி பூதங்களைந்தையும், இந்த்ரியங்களோபாதி கேவலம் விக்ருதிகளாக ஶ்ருதி சொல்லுகையாலே. ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலே "𑌆𑌕𑌾𑌶𑌸𑍍𑌤𑍁 𑌵𑌿𑌕𑍁𑌰𑍍𑌵𑌾𑌣𑌃 𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌮𑌾𑌤𑍍𑌰𑌂 𑌸𑌸𑌰𑍍𑌜 𑌹" (ஆகாஶஸ்து விகுர்வாணঃ ஸ்பர்ஶமாத்ரம் ஸஸர்ஜ ஹ)[1] என்று தொடங்கி, ஸ்பர்ஶ தந்மாத்ராதிகளுக்குக் காரணமாகச் சொன்ன ஆகாஶாதி பதார்த்தங்களையும், தந்மாத்ர லக்ஷணமான பூதங்களாக ஸ்ரீபராஶரபகவானுக்கு விவக்ஷிதமென்று நினைத்து வ்யாக்யாதாக்கள் வ்யாக்யாநம் பண்ணி வைக்கையாலே. ஆகையால், ஸ்ரீ விஷ்ணுபுராணத்திலும் பூதாத் தந்மாத்ர உத்பத்தி ஶாப்தமாய்த் தோற்றியிருந்ததேயாகிலும், வ்யாக்யாநப்ரக்ரியையைப் பார்த்தால் தந்மாத்ராத் தந்மாத்ரோத்பத்தி என்றே கொள்ளவேணும். பூதாத் தந்மாத்ரோத்பத்தி பக்ஷத்திலும், "𑌅𑌷𑍍𑌟𑍌 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌯𑌷𑍍𑌷𑍋𑌡𑌶 𑌵𑌿𑌕𑌾𑌰𑌾𑌃" (அஷ்டௌ ப்ரக்ருதயঃ ஷோடச விகாராঃ) என்று சொல்லுகிற ஷோடஶ விகாரங்களாகிறது - பூதங்களையொழிய ஏகாதஶேந்த்ரியங்களும் ஶப்தாதிகளைந்தும் என்று தந்மாத்ரங்களுக்கு பூதங்களோடு ஸ்வரூபபேதமின்றியிலே அவஸ்தாபேதமாத்ரமாகையாலே. "𑌅𑌷𑍍𑌟𑍌 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌯𑌃" (அஷ்டௌ ப்ரக்ருதயঃ) என்று, ப்ரக்ருதி மஹதஹங்காரங்களையும், ஆகாஶாதிகளைந்தையுஞ் சொல்லுகிறதென்றும் ஶ்ருத்யவிரோதம் நிர்வஹிப்பர்கள். இதுதான், ஸ்ரீவேதவ்யாஸ பகவானாலே, "𑌅𑌷𑍍𑌟𑍌 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌯𑌃 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾 𑌵𑌿𑌕𑌾𑌰𑌾𑌶𑍍𑌚𑌾𑌪𑌿 𑌷𑍋𑌡𑌶 । 𑌅𑌥 𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌨𑌿 𑌸𑌪𑍍𑌤𑍈𑌵 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌰𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌚𑌿𑌨𑍍𑌤𑌕𑌾𑌃 ॥ 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌞𑍍𑌚 𑌮𑌹𑌾𑌂𑌶𑍍𑌚𑍈𑌵 𑌤𑌥𑌾𑌽𑌹𑌙𑍍𑌕𑌾𑌰 𑌏𑌵 𑌚 । 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀 𑌵𑌾𑌯𑍁𑌰𑌾𑌕𑌾𑌶𑌮𑌾𑌪𑍋 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌶𑍍𑌚 𑌪𑌞𑍍𑌚𑌮𑌮𑍍 ॥ 𑌏𑌤𑌾𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌷𑍍𑌟𑍌

---

1. வி. பு. 1-2-41. ஆகாசஸ்து - ஆகாசமானது, விகுர்வாண: - விகாரிக்கப்பட்டதாய், ஸ்பர்சமாத்ரம் - ஸ்பர்சதன்மாத்ரையை, ஸஸர்ஜஹ - ஸ்ருஷ்டித்தது.

𑌵𑌿𑌕𑌾𑌰𑌾𑌨𑌪𑌿 𑌷𑍋𑌡𑌶 । 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌂 𑌤𑍍𑌵𑌕𑍍𑌚𑍈𑌵 𑌚𑌕𑍍𑌷𑍁-
𑌶𑍍𑌚 𑌜𑌿𑌹𑍍𑌵𑌾 𑌘𑍍𑌰𑌾𑌣𑌞𑍍𑌚 𑌪𑌞𑍍𑌚𑌮𑌮𑍍 ॥ 𑌵𑌾𑌕𑍍𑌚 𑌹𑌸𑍍𑌤𑍌 𑌚 𑌪𑌾𑌦𑍌
𑌚 𑌪𑌾𑌯𑍁𑌰𑍍𑌮𑍇𑌢𑍍𑌰𑌂 𑌤𑌥𑍈𑌵 𑌚 । 𑌶𑌬𑍍𑌦𑌃 𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑍌 𑌚 𑌰𑍂𑌪𑌂-
𑌚 𑌰𑌸𑍋 𑌗𑌨𑍍𑌧𑌸𑍍𑌤𑌥𑍈𑌵 𑌚 ॥ 𑌏𑌤𑍇 𑌵𑌿𑌶𑍇𑌷𑌾 𑌰𑌾𑌜𑍇-
𑌨𑍍𑌦𑍍𑌰 𑌮𑌹𑌾𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌪𑌞𑍍𑌚𑌸𑍁 । 𑌦𑌶𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑍍𑌯𑌥𑍈𑌤𑌾-
𑌨𑌿 𑌸𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌣𑌿 𑌮𑍈𑌥𑌿𑌲 ॥ 𑌮𑌨𑌃 𑌷𑍋𑌡𑌶𑌕𑌂 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁-
𑌰𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌗𑌤𑌿𑌚𑌿𑌨𑍍𑌤𑌕𑌾𑌃" (அஷ்டௌ ப்ரக்ருதய: ப்ரோக்தா விகாராஶ்சாபி ஷோடச | அத வ்யக்தாநி ஸப்தைவ ப்ராஹுரத்யாத்மசிந்தகா: || அவ்யக்தஞ்ச மஹாம்ஶ்சைவ ததாஹங்கார ஏவ ச | ப்ருதிவீ வாயுராகாஶமாபோ ஜ்யோதிஶ்ச பஞ்சமம் || ஏதா: ப்ரக்ருதயஸ்த்வஷ்டௌ விகாராநபி மே ஶ்ருணு | ஶ்ரோத்ரம் த்வக்சைவ சக்ஷுஶ்ச ஜிஹ்வா க்ராணஞ்ச பஞ்சமம் || வாக் ச ஹஸ்தௌ ச பாதௌ ச பாயுர் மேட்ரம் ததைவச | ஶப்தஸ்பர்ஶௌ ச ரூபஞ்ச ரஸோ கந்தஸ்ததைவச || ஏதே விசேஷா ராஜேந்த்ர மஹாபூதேஷு பஞ்சஸு | தஶேந்த்ரியாண்யதைதாநி ஸவிஶேஷாணி மைதில || மந:ஷோடஶமித்யாஹுரத்யாத்மகதிசிந்தகா:)[1] என்று, மோக்ஷதர்மத்திலே யாஜ்ஞவல்க்யஜநக ஸம்வாதத்திலே சொல்லப்பட்டது.

---

1. மோக்ஷதர்மம் 112-6. ப்ரக்ருதய: - ப்ரக்ருதிகள், அஷ்டௌ - எட்டு என்று, ப்ரோக்தா: - சொல்லப்பட்டன, விகாராச்சாபி - விகாரங்களும், ஷோடச - பதினாறு என்றும், அத - பின்பு, ஸப்தைவ - ஏழே, வ்யக்தாநி - வ்யக்தங்களென்று, அத்யாத்மசிந்தகா: - மோக்ஷசாஸ்த்ரத்தைக் கற்றவர்கள், ஆஹு: - சொல்லுகிறார்கள், அவ்யக்தம் ச - பிரக்ருதியும், மஹாந் சைவ - மஹானும், ததா - அந்தப்ரகாரம், அஹங்கார ஏவ ச - அஹங்காரமும், ப்ருதிவீ - ப்ருதிவியென்ன, வாயு: - வாயுவென்ன, ஆகாச: - ஆகாசமென்ன, ஜ்யோதிச்ச - தேஜஸ் என்ன, பஞ்சமம் - இந்த ஐந்தும், ஏதா: - இந்த அஷ்டௌ - எட்டும், ப்ரக்ருதய: - ப்ரக்ருதிகள் அதாவது ஒன்றுக்குக் காரணங்கள், விகாராநபி - விகாரங்களையும், மே - என்னிடத்தில் நின்றும், ச்ருணு - கேள். ச்ரோத்ரம் - ச்ரோத்ரேந்திரியமும் (காது) த்வக் சைவ - த்வகிந்திரியமும் (தோல்) சக்ஷுச்ச - சக்ஷுரிந்திரியமும் (கண்) ஜிஹ்வா - ரஸநேந்திரியமும் (நாக்கு) பஞ்சமம் - ஐந்தாவதான, க்ராணஞ்ச - க்ராணேந்திரியமும் (மூக்கு) (இந்த ஜ்ஞானேந்திரியங்களைந்தும்) வாக் ச - வாக்கும், ஹஸ்தௌ ச - கைகளும், பாதௌ ச - கால்களும், பாயு: - மலவிஸர்ஜனம் பண்ணுகிற ஸ்தா

அப்படியே யமஸ்ம்ருதியிலும் "𑌮𑌨𑍋𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌖𑌾𑌨𑌿𑌲𑌾𑌗𑍍𑌨𑌿𑌜𑌲𑌾𑌨𑌿 𑌭𑍂𑌃। 𑌏𑌤𑌾𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌷𑍍𑌟𑍌 𑌵𑌿𑌕𑌾𑌰𑌾𑌷𑍍𑌷𑍋𑌡𑌶𑌾𑌪𑌰𑍇। 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑌿𑌰𑌸𑌨𑌾𑌘𑍍𑌰𑌾𑌣𑌤𑍍𑌵𑌕𑍍 𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪 𑌏𑌵 𑌚। 𑌶𑌬𑍍𑌦𑌰𑍂𑌪𑌰𑌸𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌗𑌨𑍍𑌧𑌵𑌾𑌕𑍍𑌪𑌾𑌣𑌿𑌪𑌾𑌯𑌵𑌃। 𑌉𑌪𑌸𑍍𑌥𑌪𑌾𑌦𑌾𑌵𑌿𑌤𑌿 𑌚 𑌵𑌿𑌕𑌾𑌰𑌾𑌷𑍍𑌷𑍋𑌡𑌶𑌸𑍍𑌮𑍃𑌤𑌾𑌃" (மநோ புத்திரஹங்காரகாநிலாக்நிஜலாநி பூ:। ஏதா: ப்ரக்ருதயஸ் த்வஷ்டௌ விகாராஷ் ஷோடசாபரே। ஶ்ரோத்ராக்ஷிரஸநாக்ராணத்வக் ச ஸங்கல்ப ஏவ ச। ஶப்தரூபரஸஸ்பர்ஶகந்த த்வக்பாணிபாயவ:। உபஸ்தபாதாவிதி ச விகாராஷ்ஷோடச ஸ்ம்ருதா:)[1] என்று சொல்லப்பட்டது. இந்த ஸ்ம்ருதியில் ப்ரக்ருதிகளிலே பரிகணிக்கையாலும், ப்ரதமத்திலே எடுக்கையாலும், மந்தவ்யதையாலே மநஸ்ஸென்று ப்ரதாநதத்வம் சொல்லப்படுகிறது.

---

னமும், ததைவ ச - அந்தப்ரகாரமே, மேட்ரம் - ஆண்குறியும், சப்த ஸ்பர்சௌ ச - சப்த ஸ்பர்சங்களும், ரூபஞ்ச - ரூபமும், ததைவச - அந்தப்ரகாரமே, ரஸ: - ரஸமும், கந்த: - கந்தமும், ஏதே - இந்த, விசேஷா: - விசேஷங்கள். ராஜேந்த்ர! - அரசர்களுக்குள் சிறந்தவனே, மைதில - மிதிலாதிபதியான ஜனகனே!, பஞ்சஸு - ஐந்தாயிருக்கிற, மஹாபூதேஷு - மஹாபூதங்களிலிருக்கிறது, அத - பின்பு, ஸவிசேஷாணி - விசேஷங்களோடு கூடிக்கொண்டிருக்கிற, ஏதாநி - இந்த பூதங்களும், தச இந்திரியாணி - பத்து இந்திரியங்களும், அத்யாத்மகதிசிந்தகா: - மோக்ஷகதியைக் குறித்துச் சிந்திக்கிறவர்கள், ஷோடச - பதினாருவதாக, மந: - மனஸ்ஸும் (என்று) ஆஹு: - சொல்லுகிறார்கள்.

1. யமஸ்மிருதி:. மந: - மஸ்ஸும், புத்தி: - புத்தியும், அஹங்கார: - அஹங்காரமும், க - ஆகாசமும், அநில - வாயுவும், அக்நி - அக்னியும், ஜலாநி - ஜலங்களும், பூ - பூமியும், ஏதா: - இந்த, அஷ்டௌ - எட்டும், ப்ரக்ருதய: - ப்ரக்ருதிகள். அபரே - மற்றவைகளான, விகாரா: - விகாரங்கள், ஷோடச - பதினாறு (அதாவது) ச்ரோத்ராக்ஷி ரஸநா க்ராண த்வக் ச ஸங்கல்ப ஏவ - ச்ரோத்ர, சக்ஷு:, ரஸநா க்ராண, த்வக் - இந்திரியங்களும் மனஸ்ஸும், சப்த ரூப ரஸ ஸ்பர்ச கந்த வாக்பாணி பாயவ: - சப்தம், ரூபம், ரஸம், ஸ்பர்சம், கந்தம், வாக்கு, கை, மல விஸர்ஜன ஸ்தானங்கள், உபஸ்தபாதாவிதி ச - ஸுகிக்கிற ஸ்தானம், கால்கள் (என்கிற) விகாரா: - விகாரங்கள், ஷோடச - பதினாறு என்று, ஸ்ம்ருதா: - சொல்லப்பட்டன.

ஸங்கல்பஶப்தத்தாலே தத்காரணமான மநஸ்ஸு லக்ஷிக்கப்படுகிறதென்று ஸுபாலோபநிஷத் வ்யாக்யாநத்திலே ஶ்ருதப்ரகாஶிகாசார்யராலே வ்யாக்க்யாதமாயிற்று.

இப்படி இதிஹாஸாதிகளிலே சொல்லப்படுகையாலே, "𑌅𑌷𑍍𑌟𑍌 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌯𑌃" (அஷ்டௌ ப்ரக்ருதய:) என்கிற ஶ்ருதிக்கு, பூதாத் தந்மாத்ர உத்பத்திபக்ஷத்தில் விரோதாபாவம் ஸுஸ்பஷ்டம்.

"𑌤𑍍𑌵𑌚𑌾 𑌬𑍀𑌜𑌮𑌿𑌵𑌾𑌵𑍃𑌤𑌮𑍍" (த்வசா பீஜமிவாவ்ருதம்)[1] என்கிற த்ருஷ்டாந்த பலத்தாலே த்வக்கில்லாத பீஜத்துக்கு அங்குரஶக்தியில்லாதவோபாதி, ஆவாரகத்தை யொழிந்த போது உத்தரகார்யஶக்தியில்லையென்று தோற்றுகையாலும், காரணகுணத்தையொழிய உத்தரோத்தரவிஶேஷங்களில் "𑌆𑌦𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌗𑍁𑌣𑌾𑌨𑍇𑌤𑌾𑌨𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌚 𑌪𑌰𑌃 𑌪𑌰𑌃" (ஆத்யாத்யஸ்ய குணாநேதாநாப்நோதி ச பர: பர:)[2] என்று, ஸ்வவிஶேஷத்துக்குச் சொல்லுகிற குணநியமம் கூடாமையாலும், "𑌆𑌕𑌾𑌶𑌂 𑌶𑌬𑍍𑌦𑌮𑌾𑌤𑍍𑌰𑌂𑌤𑍁 𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌮𑌾𑌤𑍍𑌰𑌂 𑌸𑌮𑌾𑌵𑌿𑌶𑌤𑍍 । 𑌰𑍂𑌪𑌂 𑌤𑌥𑍈𑌵𑌾𑌵𑌿𑌶𑌤𑌶𑍍𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌗𑍁𑌣𑌾𑌵𑍁𑌭𑍌 । 𑌶𑌬𑍍𑌦𑌃 𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌶𑍍𑌚 𑌰𑍂𑌪𑌞𑍍𑌚 𑌰𑌸𑌮𑌾𑌤𑍍𑌰𑌂 𑌸𑌮𑌾𑌵𑌿𑌶𑌨𑍍 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌚𑍍𑌚𑌤𑍁𑌰𑍍𑌗𑍁𑌣𑌾 𑌹𑍍𑌯𑌾𑌪𑍋 𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌶𑍍𑌚𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍍𑌰𑌹𑌾𑌃" (ஆகாஶம் ஶப்தமாத்ரந்து ஸ்பர்ஶமாத்ரம் ஸமாவிஶத் | ரூபம் ததைவாவிஶதஶ் ஶப்தஸ்பர்ஶகுணாவுபௌ | ஶப்த: ஸ்பர்ஶஶ்ச ரூபஞ்ச ரஸமாத்ரம் ஸமாவிஶந் | தஸ்மாத் சதுர்குணா ஹ்யாபோ விஶேஷாஶ்சேந்த்ரியக்ரஹா:)[3] என்கிற புராணவசநங்களினுடைய

---

1. வி. பு. 1-2-37. த்வசா - தோலாலே, ஆவ்ருதம் - சூழப்பட்ட, பீஜமிவ - விரையானது போல் (மஹத் தத்வமானது வ்யாபரித்திருக்கிறது).

2. மநுஸ்ம்ருதி. 1-20. ஆத்யாத்யஸ்ய - முன்னிருக்கிற தத்வங்களுடைய, ஏதாந் குணாந் - இந்த குணங்களை, பர: பர: - பிந்தியிருக்கிற தத்வங்கள், அவாப்நோதி - அடைகின்றன.

3. ஆகாசம் - ஆகாசமானது, (தனக்குக் காரணமான) சப்தமாத்ரந்து - சப்த தன்மாத்ரையையும், (வாயுவுக்கு காரணமான) ஸ்பர்சமாத்ரம் - ஸ்பர்சதன்மாத்ரையையும், ஸமாவிசத் -

ஆநுகுண்யத்துக்காகவும், "𑌤𑍇𑌭𑍍𑌯𑌸𑍍𑌤𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑍇𑌭𑍍𑌯𑍋 𑌯𑌥𑌾 𑌸𑌂𑌖𑍍𑌯𑌮𑍇𑌕 𑌦𑍍𑌵𑌿 𑌤𑍍𑌰𑌿 𑌚𑌤𑍁𑌃𑌪𑌞𑍍𑌚𑍇𑌭𑍍𑌯𑍋 𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌯𑌾𑌕𑌾𑌶𑌾𑌨𑌿𑌲𑌾𑌨𑌲𑌸𑌲𑌿𑌲𑌾𑌵𑌨𑌿𑌰𑍂𑌪𑌾𑌣𑌿 𑌪𑌞𑍍𑌚 𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇" (தேப்யஸ்தந்மாத்ரேப்யோ யதாஸங்க்யமேகத்வித்ரி சதுஃ பஞ்சேப்யோ பூதாந்யாகாசாநிலாநலஸலிலாவநிரூபாணி பஞ்ச ஜாயந்தே)[1] என்று, இதில் அதிக்ருதனை ஸாங்க்ய வாசஸ்பதி சொல்லுகையாலும், "கார்யோத்பாதகங்களான தத்வங்கள் ஸ்வஸ்வகாரணாவ்ருதங்களாய்க் கொண்டே உத்பாதிக்கிறதென்று சொல்லவேணும்" என்று, தத்வத்ரய விவரணத்திலே ஆச்சான்பிள்ளை அருளிச் செய்கையாலும், "𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑍁𑌦𑍍𑌭𑍂𑌤𑌂 𑌮𑌹𑌾𑌨𑍍𑌤𑌂 𑌤𑌤𑍍𑌸𑌮𑌾𑌵𑍃𑌣𑍋𑌤𑍍" (ப்ரதாநதத்வ முத்பூதம் மஹாந்தம் தத் ஸமாவ்ருணோத்)[2] "𑌯𑌥𑌾 𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑍇𑌨 𑌮𑌹𑌾𑌨𑍍𑌮𑌹𑌤𑌾 𑌸 𑌤𑌥𑌾𑌵𑍃𑌤𑌃" (யதா ப்ரதாநேந மஹாந் மஹதா ஸ ததாவ்ருதஃ)[3] "𑌶𑌬𑍍𑌦𑌮𑌾𑌤𑍍𑌰𑌂 𑌤𑌥𑌾𑌕𑌾𑌶𑌂 𑌭𑍂𑌤𑌾𑌦𑌿𑌸𑍍𑌸 𑌸𑌮𑌾-

---

ப்ரவேசித்திருக்கிறது, ததைவ - அந்தப்பிரகாரமே, உபௌ - இரண்டாயிருக்கிற- சப்த ஸ்பர்சகுணௌ - சப்த ஸ்பர்ச குணங்கள், ரூபம் - அக்நிக்குக் காரணமான ரூப தன்மாத்திரத்தை, ஆவிசத் - அடைகிறது, சப்த: ஸ்பர்சச்ச ரூபஞ்ச - சப்தமென்ன: ஸ்பர்சமென்ன, ரூபமென்ன இவைகள், ரஸமாத்ரம் - ஜலத்திற்குக் காரணமான ரஸ தன்மாத்ரையை, ஸமாவிசத் - அடைகிறது. தஸ்மாத் - ஆகையினாலே, இந்திரியக்ரஹா: - இந்திரியங்களாலே க்ரஹிக்கத் தகுந்தவைகளாயும், விசேஷா: - விசேஷங்களையுடைய, ஆப: - ஜலமானது, சதுர்குணா: - நான்கு குணத்தை உடையவைகளாயிருக்கின்றன.

1. ஏகத்வித்ரிசது பஞ்சேப்ய - ஒன்று இரண்டு மூன்று நான்கு ஐந்தான, தேப்ய: - இந்த, தன்மாத்ரேப்ய: - தன்மாத்ரைகளில் நின்றும், யதா ஸங்க்யம் - கணக்கை அதிக்ரமியாமல், (வரிசையாய்) ஆகாசாநிலாநலஸலிலாவநி ரூபாணி - ஆகாசம், வாயு, அக்நி, ஜலம், பூமி இந்த ரூபங்களான, பஞ்ச பூதாநி - ஐந்து பூதங்கள், ஜாயந்தே - உண்டாகின்றன.

2. வி. பு. 1-2-32. உத்பூதம் - உண்டாயிருக்கிற, தத் ப்ரதாந தத்வம் - அந்த ப்ரதான தத்வமானது, அதாவது ப்ரக்ருதியானது, மஹாந்தம் - மஹத் தத்வத்தை, ஸமாவ்ருணோத் - வ்யாபித்திருக்

3. வி. பு. 1-2-36. யதா - எப்படி, மஹதா - பெரிதான ப்ரதானத்தாலே, (ப்ரக்ருதியாலே) மஹான் - அந்த மஹத் தத்வ

வ்ருணோத:" (ஶப்தமாத்ரம் ததாகாஶம் பூதாதிஸ் ஸமா வ்ருணோத்)[1] "ஆகாஶம் ஶப்தமாத்ரஞ்ச ஸ்பர்ஶமாத்ரம் ஸமாவ்ருணோத்" (ஆகாஶம் ஶப்தமாத்ரந்து ஸ்பர்ஶமாத்ரம் ஸமாவ்ருணோத்)[2] "ஸ்பர்ஶமாத்ரஸ்து வை வாயூ ரூபமாத்ரம் ஸமாவ்ருணோத்" (ஸ்பர்ஶமாத்ரஸ்து வை வாயுரூபமாத்ரம் ஸமாவ்ருணோத்)[3] "ரஸமாத்ராணி சாம்பாம்ஸி ரூபமாத்ரம் ஸமாவ்ருணோத்" (ரஸமாத்ராணி சாம்பாம்ஸி ரூபமாத்ரம் ஸமாவ்ருணோத்)[4] என்று ஸ்ரீ பராசர பகவானாலே உக்தமாகையாலும், "முன்புத்தை தந்மாத்ரைகளோடுகூடிக்கொண்டு உத்தரோத்தர தந்மாத்ரைகள் ஸ்வவிஶேஷங்களைப் பிறப்பிக்கையாலே" என்று இவர் தாம் மேலே அருளிச் செய்கையாலும் ஆவரண க்ரமங்கொள்ளவேணும்.

அப்படியே, பூர்வபாவநியமத்தைப்பற்ற ஸ்பர்ஶதந்மாத்ராதிகளுக்கு ஸ்வஸ்வ விஶேஷங்களை உத்பாதிக்குமளவில், ஸ்வஸ்வபூர்வபூதஸஹாயத்வமும் கொள்ளவேணும். அதாவது - பூதாதியில் நின்றும் ஶப்ததந்மாத்ரை பிறக்கும், ஶப்ததந்மாத்ரையை பூதாதி ஆவரிக்கும், இதில் நின்றும்

---

மானது, ஆவ்ருத: - வியாபரிக்கப்பட்டிருக்கிறதோ, ததா - அப்படியே, ஸ: - அந்த அஹங்காரமும், மஹதா - மஹத் தத்வத்தால் வியாபரிக்கப்பட்டிருக்கிறது.

1. வி. பு. 2-42. சப்தமாத்ரம் - சப்த தன்மாத்ரத்தையும், ததா ஆகாசம் - அந்தப்ரகாரம் ஆகாசத்தையும், ஸ: - அந்த, பூதாதி: - தாமஸாஹங்காரமானது, ஸமாவ்ருணோத் - வியாபரித்திருக்

2. வி. பு. 2-42. ஆகாசம் - ஆகாசமானது, சப்தமாத்ரந்து - சப்த தன்மாத்ரையையும், ஸ்பர்சமாத்ரம்ச - ஸ்பர்ச தந்மாத்ரையையும், ஸமாவ்ருணோத் - வ்யாபரித்திருக்கிறது.

3. வி. பு. 1-2-43. வாயு: - வாயுவானது, ஸ்பர்சமாத்ரம் - ஸ்பர்ச தந்மாத்ரையையும், ரூபமாத்ரம் - ரூப தன்மாத்ரையையும், - வ்யாபர்

4. வி. பு. 2-45. அம்பாம்ஸி - ஜலங்கள், ரஸதந்மாத்ராணி ச - ரஸதன்மாத்ரையையும், ரூபமாத்ரம் - ரூபதன்மாத்ரையையும், ஸமாவ்ருணோத் - வ்யாபரித்திருக்கின்றன.

ஆகாஶம் பிறக்கும். அனந்தரம் இந்த சப்ததந்மாத்ரையில் நின்றும் ஸ்பர்ஶதந்மாத்ரை பிறக்கும்; ஸ்பர்ஶதந்மாத்ரை யை ஶப்ததந்மாத்ரை ஆவரிக்கும்; இப்படி ஶப்ததந்மாத்ராவ்ருதையாய், ஆகாஶத்தை ஸஹாயமாகவுடைத்தான ஸ்பர்ஶதந்மாத்ரையில் நின்றும் வாயுபிறக்கும். இந்த ஸ்பர்ஶதந்மாத்ரையில் நின்றும் ரூபதந்மாத்ரை பிறக்கும்; ரூபதந்மாத்ரையை ஸ்பர்ஶதந்மாத்ரையாவரிக்கும்; இப்படி ஸ்பர்ஶதந்மாத்ராவ்ருதையாய், வாயுவை ஸஹாயமாகவுடைத்தான ரூபதந்மாத்ரையில் நின்றும் தேஜஸ்ஸு பிறக்கும். இந்த ரூபதந்மாத்ரையில் நின்றும் ரஸதந்மாத்ரை பிறக்கும்; ரஸதந்மாத்ரையை ரூபதந்மாத்ரையாவரிக்கும்; இப்படி ரூபதந்மாத்ராவ்ருதையாய், தேஜஸ்ஸை ஸஹாயமாகவுடைத்தான ரஸதந்மாத்ரையில் நின்றும் அப்பு பிறக்கும். இந்த ரஸதந்மாத்ரையில் நின்றும் கந்ததந்மாத்ரை பிறக்கும்; கந்ததந்மாத்ரையை ரஸதந்மாத்ரையாவரிக்கும்; இப்படி ரஸதந்மாத்ராவ்ருதையாய், அப்பை ஸஹாயமாகவுடைத்தான கந்ததந்மாத்ரையில் நின்றும் ப்ருதிவி பிறக்கும் என்கை. ஶப்ததந்மாத்ராவ்ருதமாய், ஆகாஶத்தை ஸஹாயமாகவுடைத்தான ஸ்பர்ஶதந்மாத்ரத்தில் நின்றும் வாயுபிறக்குமென்று தொடங்கிச் சொன்ன விஶேஷம் உத்பத்தியில் க்ரமம். பூதாத் தந்மாத்ர உத்பத்திபக்ஷத்துக்கும் ஒக்கும்; பூர்வபூர்வபூதத்தில் நின்றும் உத்தர உத்தர தந்மாத்ர உத்பத்தியாகிறவிது விஶேஷம். இது தத்வத்ரயவிவரணத்தில் ஆச்சான்பிள்ளை அருளிச்செய்த க்ரமம்.

இங்ஙனன்றிக்கே, தத்வநிரூபணத்திலே ஜீயரருளிச் செய்ததும் ஒரு க்ரமமுண்டு. அதாவது - "பூதாதியில் நின்றும் ஶப்ததந்மாத்ரை பிறக்கும்; ஶப்ததந்மாத்ரையில் நின்றும், அதினுடைய ஸ்தூலாவஸ்தையான ஆகாஶம் பிறக்கும்; ஶப்ததந்மாத்ரத்தையும், ஆகாஶத்தையும் பூதாதி ஆவரிக்கும்; இப்படி பூதாத்யாவ்ருதமாய், ஸ்தூல ஆகாஶ ஸஹக்ருதமாய்க்கொண்டு விக்ருதமான ஶப்ததந்மாத்ரத்தில் நின்றும் ஸ்பர்ஶதந்மாத்ரம்பிறக்கும்; அதில் நின்றும்

ஸ்பர்ஶகுணகமான வாயு பிறக்கும்; அவையிரண்டையும், காரணமான ஶப்ததந்மாத்ரையாவரிக்கும்; ஶப்ததந்மாத்ராவ்ருதமாய், வாயு ஸஹக்ருதமாய் விகரித்த ஸ்பர்ஶதந்மாத்ரத்தில் நின்றும் ரூபதந்மாத்ரை பிறக்கும்; அதில் நின்றும் ரூபகுணகமானதேஜஸ்ஸு பிறக்கும்; அவையிரண்டையும், காரணமான ஸ்பர்ஶதந்மாத்ரை ஆவரிக்கும்; இத்தாலே ஆவ்ருதமாய், தேஜஸ்ஸஹக்ருதமாய் விகரித்த ரூபதந்மாத்ரத்தில் நின்றும் ரஸதந்மாத்ரை பிறக்கும்; அதில் நின்றும் ரஸகுணமான ஜலம் பிறக்கும்; அவையிரண்டையும் காரணமான ரூபதந்மாத்ரம் ஆவரிக்கும்; இத்தாலே ஆவ்ருதமாய், அம்பஸ்ஸஹக்ருதமாய்க்கொண்டு விகரித்த ரஸதந்மாத்ரத்தில் நின்றும் கந்ததந்மாத்ரம் பிறக்கும்; அதில் நின்றும் கந்தகுணையான ப்ருதிவீ பிறக்கும்; அவையிரண்டையும், காரணமான ரஸதந்மாத்ரம் ஆவரிக்கும்" என்கை. இதில் முற்பட்ட க்ரமத்திலே, ஸ்பர்ஶதந்மாத்ராதி சதுஷ்டயத்துக்கு ஸ்வஸ்வவிஶேஷ உத்பாதநத்தில் பூர்வபூர்வபூத ஸாஹாய்யம் சொல்லப்பட்டது; பிற்பட்ட க்ரமத்தில், பூர்வ பூர்வதந்மாத்ரத்துக்கு உத்தரோத்தர தந்மாத்ர உத்பாதநத்தில் ஸ்வஸ்வவிஶேஷ ஸாஹாய்யம் சொல்லப்பட்டது. ஆகையால், அந்யோந்ய விரோதமில்லை.

ஓரொன்றில் இரண்டும் அநுக்தமேயாகிலும், இரண்டும் அபேக்ஷிதமாகையாலே. ஆவரணகதநத்திலும் "பூர்வ பூர்வதந்மாத்ரம் – உத்தரோத்தர தந்மாத்ரத்தையும், தத்விஶேஷத்தையும், ஆவரிக்கும்" என்று ஜீயரருளிச் செய்கையாலும், ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலே, "ஶப்தமாத்ரம் ததாகாஶம் பூதாதிஸ்ஸ ஸமாவ்ருணோத்" (ஶப்தமாத்ரம் ததாகாஶம் பூதாதிஸ்ஸ ஸமாவ்ருணோத்) என்ற விதுக்கு – "ஶப்தமாத்ரம் - ஶப்ததந்மாத்ரம், ததாகாஶம் - ஸ்தூலாகாஶஞ்ச ஸ பூதாதிராவ்ருணோத், அநேந ஸர்வத்ர பூர்வ தந்மாத்ரம் உத்தரோத்தர தந்மாத்ரம் தத்விஶேஷஞ்சாவ்ருணோதிதி ஸூசிதம்" (ஶப்தமாத்ரம் – ஶப்ததந்மாத்ரம், ததாகாஶம் – ஸ்தூலாகாஶஞ்ச ஸ பூதாதிராவ்ருணோத்.

ஏதேந பூர்வ பூர்வதந்மாத்ரமுத்தரோத்தரதந்மாத்ரம் தத் விஶேஷஞ்சாவ்ருணோதிதிதர்ஶிதம்)[1] என்று பிள்ளை எங்க ளாழ்வான் வ்யாக்யானம் பண்ணுகையாலும், தத்வத்ரய விவரணத்தில், தந்மாத்ரத்துக்கு ஆவரணம் சொன்னவோ பாதி தத்விஶேஷத்துக்கு ஆவரணம் சொல்லிற்றில்லையே யாகிலும் அது உபலக்ஷணமாயித்தனை. அல்லாதபோது, அவ்விடம் தன்னில் பூதாத் தந்மாத்ரோத்பத்தி சொல் லவும் போகாது. ஆகையாலிரண்டும் கொள்ளவேணும்.

தத்வநிரூபணத்தில், தந்மாத்ர தத்விஶேஷங்களிரண் டுக்கும் ஆவரணம் சொல்லுகிறவளவில் இரண்டையும் சேர்த்துப் பிடித்துச் சொல்லப்பட்டதேயாகிலும், விஶேஷ உத்பத்திக்கு முன்பே தந்மாத்ரத்துக்கு ஆவரணம் கொள் ளவேணும். த்வக்கில்லாத பீஜத்துக்கு அங்குரஶக்தியில் லாதாப் போலே, ஆவாரகத்தை யொழிந்தபோது உத்தர கார்யஶக்தியில்லையென்னுமிடம் கீழே சொல்லப்பட்ட திறே. இப்படி பூததந்மாத்ர ஸ்ருஷ்டி சொல்லுகிறவிடத் திலே ஆவரணக்ரமம் — வக்தவ்யமாயிருக்கச் செய்தேயும், அருளிச்செய்யாதொழிந்தது அபேக்ஷிதமல்லாமையன்று; ஸங்கோசேந உத்பத்திக்ரமத்தை அருளிச்செய்தாரித்தனை.

பெரியவாச்சான்பிள்ளையும் இப்படியிறே அருளிச் செய்தது,

ஆக. பூததந்மாத்ர உத்பத்திக்ரமம் அருளிச்செய்தார் கீழ்; அதில் தந்மாத்ரங்கள்தான் எவை? என்கிற சங்கை யிலே அருளிச்செய்கிறார் :

---

1. வி. பு. விஷ்ணுசித்தீயே. 1-2-40. சப்தமாத்ரம் - சப்த தன் மாத்ரத்தையும், ததா - அந்த ப்ரகாரம், ஆகாசஞ்ச - ஸ்தூலாகாசத் தையும், ஸ: பூதாதி: - அந்த பூதாதியானது, ஆவ்ருணோத் - வ்யா பித்திருக்கிறது. சப்தமாத்ரம் - சப்ததந்மாத்ரம் — சப்த தன்மாத்ரையையும், ததாகாசம், ஸ்தூலாகாசஞ்ச - ஸ்தூல ஆகாசத்தையும், ஸ: பூதாதி ஆவ்ருணோத் - அந்த பூதாதி ஆவரித் திருக்கிறது. ஏதேந - இப்படிச் சொன்னபடியினாலே, பூர்வபூர்வதந் மாத்ரம் - முன்முன் இருக்கிற தன்மாத்ரையானது, உத்தரோத்தர தந்மாத்ரம் - பின் பின் இருக்கிற தந்மாத்ரையையும் தத்விசேஷ

27. தந்மாத்ரங்களாவன - பூதங்களினுடைய ஸூக்ஷ்மாவஸ்தைகள்.

(தந்மாத்ரங்களாவன — பூதங்களினுடைய ஸூக்ஷ்ம அவஸ்தைகள்) என்று. அதாவது — "தஸ்மிம்ஸ்தஸ்மிம்ஸ்து தந்மாத்ரம் தேந தந்மாத்ரதா ஸ்ம்ருதா। தந்மாத்ராண்யவிசேஷாணி அவிசேஷாஸ் ததோ ஹி தே। ந சாந்தா நாபி கோராஸ்தே ந மூடாஸ்சாவிசேஷிணஃ" (தஸ்மிம்ஸ்தஸ்மிம்ஸ்து தந்மாத்ரம் தேந தந்மாத்ரதா ஸ்ம்ருதா। தந்மாத்ராண்யவிசேஷாணி அவிசேஷாஸ் ததோ ஹி தே। ந சாந்தா நாபி கோராஸ்தே ந மூடாஸ்சாவிசேஷிணஃ)[1] என்று, சாந்தத்வ கோரத்வ மூடத்வ லக்ஷணமான விசேஷங்களை யுடைத்தல்லாத சப்தாதிமாத்ரத்தை குணமாகவுடைத்தாயிருக்கிற ஆகாசாதிபூதஸூக்ஷ்மங்கள்.

சாந்தத்வமாவது - அநுகூலவேதநீயத்வம்; கோரத்வமாவது - ப்ரதிகூலவேதநீயத்வம்; மூடத்வமாவது — உதாஸீநவேதநீயத்வம். அதில் ஸ்வபாவமே சாந்தங்களாயிருக்கும் பூமியும் ஜலமும்; கோரங்களாயிருக்கும் தேஜஸ்ஸும் வாயுவும்; மூடமாயிருக்கும் ஆகாசம். மேளநத்தாலே எல்லா பூதங்களும், சாந்தத்வ, கோரத்வ, மூடத்வங்களை உடையனவாயிருக்கும். தந்மாத்ரங்களுக்கு இந்த

---

ஞ்ச - அதினுடைய விசேஷத்தையும், ஆவ்ருணோத் - மறைக்கிறது, இதி தர்சிதம் - என்று காண்பிக்கப்பட்டது.

1. வி. பு. 1-2-46, 47. தஸ்மிந் தஸ்மிந் து தந்மாத்ரம் - அந்தந்த ஆகாசாதிபூதங்களிலே விசேஷரஹிதமான சப்தஸ்பர்சாதி குணமாத்ரம் இருக்கிறதோ, தேந - அந்தக்காரணத்தாலே, தஸ்மின் - அந்த தத்வத்திலே, தன்மாத்ரதா - தன்மாத்ரத்தையுடைத்தாயிருக்கையானது, ஸ்ம்ருதா - ஸ்மரிக்கப்பட்டது, தந்மாத்ராணி அவிசேஷாணி - தந்மாத்ரங்கள் அவிசேஷங்களென்று சொல்லப்படுகிறது, தத: - ஆகையாலே, தே - அந்த சப்தாதிகள், அவிசேஷா: ஹி - அவிசேஷங்கள், (எந்தக்காரணத்தால்) ந சாந்தா: - சாந்தமான ஸாத்விக குணமில்லாதனவோ, நாபி கோரா: - கோரமான ராஜஸகுணமில்லாதனவோ, ந மூடா: - தாமஸகுணமில்லாதனவோ, (ஆதலால்) அவிசேஷிண: - முக்குணத்தினாலுண்டாகிய விசேஷமில்லாமையால் அவிசேஷமென்று சொல்லப்படுகிறது.

ஶாந்தத்வாதி விஶேஷமில்லாமையாலே, அவை அவிஶேஷங்களென்று சொல்லப்படுகிறன. ஆகையாலே, தந்மாத்ரங்களென்றும், அவிஶேஷங்களென்றும் பர்யாயம். அதில் அபியுக்தரான யாதவப்ரகாஶாதிகளும், "தந்மாத்ராண்யவிஶேஷா இத்யநர்த்தாந்தரம், ஶாந்தத்வகோரத்வமூடத்வமிதி த்ரயோ விஶேஷாஸ்த்ரைகுண்யாத்மாநஸ்தேஷாமநுத்பவாத் ஸூக்ஷ்மமாகாஶமவிஶேஷலக்ஷணம் பவதி, தேந ஶப்ததந்மாத்ரமுச்யதே। ஏவம் ஸூக்ஷ்மோ வாயுஸ்ஸூக்ஷ்மம் தேஜஸ்ஸூக்ஷ்மா ஆபஸ்ஸூக்ஷ்மா ப்ருதிவீ" (தந்மாத்ராண்யவிஶேஷா இத்யநர்த்தாந்தரம், ஶாந்தத்வ கோரத்வ மூடத்வமிதி த்ரயோ விஶேஷாஸ்த்ரைகுண்யாத்மாநஸ் தேஷாமநுத்பவாத் ஸூக்ஷ்மமாகாஶவிஶேஷலக்ஷணம் பவதி, தேந ஶப்தேந தந்மாத்ரமுச்யதே. ஏவம் ஸூக்ஷ்மோ வாயுஸ் ஸூக்ஷ்மம் தேஜஸ் ஸூக்ஷ்மா ஆபஸ் ஸூக்ஷ்மா ப்ருதிவீ)[1] என்று சொல்லிவைத்தார்கள்.

ஆக, த்ரிவித அஹங்காரத்திலும் வைத்துக்கொண்டு, ஸாத்விக அஹங்காரத்தில் நின்றும் ஏகாதஶ இந்த்ரியங்களும், தாமஸ அஹங்காரத்தில் நின்றும் பூததந்மாத்ரங்களும் உத்பந்நமாம் க்ரமம் சொல்லி நின்றது.

இனி, ராஜஸ அஹங்காரத்தினுடைய கார்யம் சொல்லுகிறது;

1. தந்மாத்ராணி - தந்மாத்ரங்களென்றும், அவிசேஷா: இதி - அவிசேஷங்களென்றும், அநர்த்தாந்தரம் - ஒரே அர்த்தத்தைச் சொல்லுகிறது, சாந்தத்வ கோரத்வ மூடத்வம் இதி த்ரைகுண்யாத்மாந: த்ரயோ விசேஷா: - சாந்தத்வம் கோரத்வம் மூடத்வம் என்று முக்குணத்தை ஸ்வரூபமாக உடைய மூன்று விசேஷங்கள், தேஷாம் - அந்த தன்மாத்ரைகளுக்கு, அநுத்பவாத் - உண்டாகாமையாலே, ஸூக்ஷ்மம் - ஸூக்ஷ்மமான, ஆகாசம் - ஆகாசம், அவிசேஷலக்ஷணம் பவதி - அவிசேஷலக்ஷணத்தை யுடையதாகயிருக்கிறது, தேந சப்தேந - அந்த சப்தத்தாலே, தன்மாத்ரம் உச்யதே - தன்மாத்ரையானது சொல்லப்படுகிறது. ஏவம் - இந்த ப்ரகாரமாக, ஸூக்ஷ்மம் வாயு:, ஸூக்ஷ்மம் தேஜ:, ஸூக்ஷ்மா ஆப:: ஸூக்ஷ்மா ப்ருதிவீ - (என்று சொன்னார்கள்).

29. மற்றை இரண்டஹங்காரமும் ஸ்வகார்யங்களைப் பிறப்பிக்கும்போது, ராஜஸாஹங்காரம் ஸஹகாரியாயிருக்கும்.

(மற்றையிரண்டு அஹங்காரமும்) என்று தொடங்கி. அதாவது - ஸாத்விக தாமஸ அஹங்காரங்களிரண்டும் ஸ்வகார்யங்களை உத்பாதிக்கும் போது, பீஜத்தினுடைய அங்குரத்துக்கு ஜலம் போலவும், அக்நியினுடைய ஜ்வலநத்துக்கு வாயு போலவும், ராஜஸ அஹங்காரம் ஸஹகாரியாயிருக்குமென்கை.

இது ஸஹகாரிக்கையாவது – "ரஜஃ ப்ரவர்த்தகம் தத்ர" (ரஜஃ ப்ரவர்த்தகம் தத்ர)[1] என்கிறபடியே, இவற்றில் இந்த்ரிய ஹேதுவான ஸத்வ அம்ஶத்துக்கும், பூதஹேதுவான தமோம்ஶத்துக்கும் சலஸ்வபாவமான ரஜஸ்ஸு - ப்ரேரகமாய்க் கொண்டு ப்ரவர்த்திப்பிக்கை.

இப்படி, ஸாத்விக தாமஸ அஹங்காரங்களுக்கு ஸாதாரண ஸஹகாரியை அருளிச்செய்தார் கீழ்; அநந்தரம், ஸாத்விக அஹங்காரத்துக்கு அஸாதாரணமாயிருப்பன சில ஸஹகாரிவிஶேஷங்களை அருளிச்செய்கிறார்;

30. ஸாத்விகாஹங்காரம் – ஶப்ததந்மாத்ராதிபஞ்சகத்தையும் அடைவே ஸஹகாரியாய்க் கொண்டு ஶ்ரோத்ராதி ஜ்ஞாநேந்த்ரியங்களைந்தையும் ஸ்ருஷ்டிக்கும், தத்ஸஹக்ருதமாய்க்கொண்டு வாகாதி கர்மேந்த்ரியங்களைந்தையும் ஸ்ருஷ்டிக்கும். இவற்றையொழியத் தானே மநஸ்ஸை ஸ்ருஷ்டிக்குமென்றும் சொல்லுவர்கள்.

(ஸாத்விக அஹங்காரம்) என்று தொடங்கி. அதாவது - ஸாத்விக அஹங்காரம் - இந்த்ரியங்களை ஸ்ருஷ்டிக்குமளவில், இவற்றினுடைய விஷயப்ரதிநியமத்துக்காக

1. தத்ர - அந்த ப்ரவ்ருத்திப்பிக்கிற விஷயத்திலே, ரஜ: - ரஜஸ்ஸானது, ப்ரவர்த்தகம் - ப்ரேரகமாய்க் கொண்டு ப்ரவ்ருத்திப்பிக்கிறது.

ஶப்ததந்மாத்ரத்தை ஸஹகாரியாகக் கொண்டு ஶ்ரோத்ரத்தையும், ஸ்பர்ஶதந்மாத்ரத்தை ஸஹகாரியாகக் கொண்டு த்வக் - இந்த்ரியத்தையும், ரூபதந்மாத்ரத்தை ஸஹகாரியாகக் கொண்டு சக்ஷுஸ்ஸையும், ரஸதந்மாத்ரத்தை ஸஹகாரியாகக்கொண்டு ஜிஹ்வையையும், கந்ததந்மாத்ரத்தை ஸஹகாரியாகக் கொண்டு க்ராணேந்த்ரியத்தையும் ஸ்ருஷ்டிக்கும்; இப்படி ஶப்ததந்மாத்ராதி பஞ்சகத்தையும் அடைவே ஸஹகாரியாகக் கொண்டு ஶ்ரோத்ராதி ஜ்ஞாநேந்த்ரியங்களைந்தையும் ஸ்ருஷ்டித்தவநந்தரம், ஶ்ரோத்ர க்ராஹ்யமான ஶப்தவிஷயமாயும், த்வகிந்த்ரிய க்ராஹ்யமான ஸ்பர்ஶவிஷயமாயும், சக்ஷுர் க்ராஹ்யமான ரூபத்தில் ப்ரவ்ருத்திஹேதுவாயும், ரஸநாவிஷயரஸ ஆஶ்ரயமான ஜலத்தினுடைய நிஸ்ஸரணஹேதுவாயும், க்ராண விஷய கந்தாஶ்ரய ப்ருதிவி அம்ஶமான அந்நாதிகளில் ருஜீஷோத்ஸர்ஜநஹேதுவாயும், இப்படி ஜ்ஞாநேந்த்ரிய பஞ்சகஶேஷமாய்க்கொண்டு ஶப்தாதிபஞ்சகத்தையும் ஒட்டியிருக்கும். "கர்மேந்த்ரியபஞ்சகத்தை ஸ்ருஷ்டிக்குமளவில், ஶ்ரோத்ரஸஹக்ருதமாய்க்கொண்டு வாக்கையும், த்வக் ஸஹக்ருதமாய்க் கொண்டு பாணியையும், சக்ஷுஸ்ஸஹக்ருதமாய்க்கொண்டு பாதத்தையும், ஜிஹ்வா ஸஹக்ருதமாய்க்கொண்டு உபஸ்தத்தையும், க்ராணஸஹக்ருதமாய்க் கொண்டு பாயுவையும் ஸ்ருஷ்டித்து, ஜ்ஞாநேந்த்ரியங்களுக்கும் கர்மேந்த்ரியங்களுக்கும் ஸஹகாரியாய், உபயாத்மகமான மநஸ்ஸை ஸஹகாரி நிரபேக்ஷமாகத் தானே ஸ்ருஷ்டிக்குமென்று தத்வவித்துக்கள் சொல்லுவர்கள்" என்கை.

இதுதன்னை ஸ்ரீவிஷ்ணுபுராண வ்யாக்யாநத்திலே, "𑌅𑌯𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌸𑍃𑌷𑍍𑌟𑌿𑌕𑍍𑌰𑌮𑌃 𑌵𑍈𑌕𑌾𑌰𑌿𑌕𑌾𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌾𑌤𑍍 𑌕𑍍𑌰𑌮𑍇𑌣 𑌶𑌬𑍍𑌦𑌤𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌦𑌿𑌵𑌰𑍍𑌗𑌸𑌙𑍍𑌘𑌾𑌤𑌾𑌤𑍍 𑌕𑍍𑌰𑌮𑍇𑌣 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌪𑌞𑍍𑌚𑌕𑌸𑍍𑌯 𑌸𑍃𑌷𑍍𑌟𑌿𑌃, 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍇𑌵 𑌤𑍈𑌜𑌸𑌾𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌾𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌪𑌞𑍍𑌚𑌕𑌸𑍍𑌯; 𑌸𑌙𑍍𑌘𑌾𑌤𑌾𑌚𑍍𑌚 𑌤𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌮𑌨𑌸𑌸𑍍𑌸𑍃𑌷𑍍𑌟𑌿𑌰𑌿𑌤𑌿" (அயமிந்த்ரியஸ்ருஷ்டி க்ரமஃ வைகாரிகாஹங்காராத் க்ரமேண ஶப்ததந்மாத்ராதி

பஞ்சகஸஹாயாத் க்ரமேண ஶ்ரோத்ராதி ஜ்ஞாநேந்த்ரிய பஞ்சகஸ்ய ஸ்ருஷ்டி:, தஸ்மாதேவ தத்ஸஹாயாத் வாகாதி கர்மேந்த்ரிய பஞ்சகஸ்ய; அஸஹாயாத்து தஸ்மாந் மநஸ: ஸ்ருஷ்டிரிதி)[1] என்று, பிள்ளை எங்களாழ்வானுமருளிச் செய்தார்.

அநந்தரம், இப்படி தாமருளிச்செய்த இந்த்ரிய உத்பத்தி க்ரமத்துக்கு விரோதிபக்ஷத்தை நிரஸிக்கைக்காக அத்தையுத்க்ஷேபிக்கிறார்;

31. சிலர், இந்த்ரியங்களிலே சிலவற்றை பூதகார்யமென்றார்கள்.

(சிலர், இந்த்ரியங்களிலே சிலவற்றை பூதகார்யமென்றார்கள்) என்று. அவர்களாகிறார் – க்ராணாதிகளான இந்த்ரியங்களை ப்ருதிவ்யாதி பூதகார்யமாகவே கொள்ளும் நையாயிகாதிகள். அவர்கள் தாம் ஆநுமாநிகராகையாலே அநுமாநத்தாலேயிறே அர்த்தத்தை ஸாதிப்பது.

அத்தை காலாத்யயாபதேஶத்தாலே தூஷிக்கிறார்;

32. அது ஶாஸ்த்ர விருத்தம்.

(அது ஶாஸ்த்ரவிருத்தம்) என்று. அதாவது – இந்த்ரியங்களை பூதகார்யமென்று சொல்லுவது – இவற்றை

---

1. வி. பு. வியாக்கியானம். 1.2-46. அயம் அத்ர - இது இங்கு இந்திரிய ஸ்ருஷ்டிக்ரம: - இந்திரியங்களுடைய ஸ்ருஷ்டிக்ரமங்கள், வைகாரிகாஹங்காராத் - ஸாத்விகாஹங்காரத்தில் நின்றும், க்ரமேண - க்ரமமாக, சப்தாதிதந்மாத்ரபஞ்சக ஸஹாயாத் - சப்தம் முதலான தந்மாத்ரைகள் ஐந்துகளுடைய ஸஹாயத்தாலே, க்ரமேண - க்ரமமாக, ச்ரோத்ராதி ஜ்ஞாநேந்திரிய பஞ்சக ஸ்ருஷ்டி: - ச்ரோத்ரம் முதலான ஐந்து ஜ்ஞாநேந்திரியங்களுடைய ஸ்ருஷ்டியானது உண்டாகிறது, தஸ்மாத் தத்ஸஹாயாத் ஏவ - அந்த ஜ்ஞானேந்திரியங்களுடைய ஸஹாயத்தாலே, வாகாதி கர்மேந்திரிய பஞ்சகஸ்ய - வாக்கு முதலான ஐந்து கர்மேந்திரியங்களுடைய ஸ்ருஷ்டியானது உண்டாகிறது, அஸஹாயாத் - ஒன்றினுடைய ஸஹாயமில்லாமல், தஸ்மாத் - ஸாத்விகாஹங்காரத்தினின்றும், மநஸ: ஸ்ருஷ்டி: இதி - மனதின் ஸ்ருஷ்டி என்று சொல்லப்பட்டது.

அஹங்காரிகங்களாகச் சொல்லுகிற இதிஹாஸ புராணாதி களுக்கு விருத்தமென்கை.

அதுவென்? மோக்ஷதர்மத்திலே, "𑌶𑌬𑍍𑌦𑌃 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌂 𑌤𑌥𑌾 𑌖𑌾𑌦𑌿 𑌤𑍍𑌰𑌯𑌮𑌾𑌕𑌾𑌶𑌸𑌂𑌭𑌵𑌮𑍍 । 𑌵𑌾𑌯𑍋𑌃 𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌂 𑌤𑌥𑌾 𑌚𑍇𑌷𑍍𑌟𑌾 𑌤𑍍𑌵𑌕𑍍𑌚𑍈𑌵 𑌤𑍍𑌰𑌿𑌤𑌯𑌂 𑌸𑍍𑌮𑍃𑌤𑌮𑍍 ॥ 𑌰𑍂𑌪𑌂 𑌚𑌕𑍍𑌷𑍁𑌸𑍍𑌤𑌥𑌾 𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌿𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌤𑌯𑌂 𑌤𑍈𑌜𑌸 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌰𑌸𑌃 𑌕𑍍𑌲𑍇𑌦𑌶𑍍𑌚 𑌜𑌿𑌹𑍍𑌵𑌾 𑌚 𑌤𑍍𑌰𑌯𑍋 𑌜𑌲𑌗𑍁𑌣𑌾𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌾𑌃 । 𑌘𑍍𑌰𑌾𑌣𑌂 𑌘𑍍𑌰𑍇𑌯𑌂 𑌶𑌰𑍀𑌰𑌞𑍍𑌚 𑌤𑍇 𑌤𑍁 𑌭𑍂𑌮𑌿𑌗𑍁𑌣𑌾𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌾𑌃" (சப்த: ச்ரோத்ரம் ததா காதித்ரயமாகாச ஸம்பவம் | வாயோ: ஸ்பர்சம் ததா சேஷ்டா த்வக் சைவ த்ரிதயம் ஸ்ம்ருதம் || ரூபம் சக்ஷுஸ் ததா வ்யக்திஸ்த்ரிதயம் தைஜ உச்யதே | ரஸ: க்லேதச்ச ஜிஹ்வா ச த்ரயோ ஜலகுணா: ஸ்ம்ருதா: | க்ராணம் க்ரேயம் சரீரஞ்ச தே து பூமிகுணா: ஸ்ம்ருதா:)[1] என்று சொல்லுகையாலே இதிஹாஸாதிகள் தன்னிலேயும் இந்த்ரியங்களுக்கு பௌதிகத்வம் சொல்லப்படுகையால், பூதங்கள் இவற்றுக்குக் காரணமாகவேணுமே என்ன;

## 33. பூதங்கள் ஆப்யாயகங்களித்தனை.

(பூதங்கள் ஆப்யாயங்களித்தனை) என்கிறார். அதாவது - இதிஹாஸாதிகள் இந்த்ரியங்களுக்குச் சொன்ன பௌதிகத்வம் — பூதங்களாலுண்டான ஆப்யாயநமாத்ரத்

---

1. பார. மோக்ஷதர்மம். சப்த: ச்ரோத்ரம் - சப்தமும் ச்ரோத்ரமும், ததா - அந்த ப்ரகாரம், காதி - பக்ஷிகளுக்கு வாஸஸ்தானமான ஆகாசம்முதலிய, த்ரயம் - மூன்றும், ஆகாசஸம்பவம் - ஆகாசத்தினின்றும் உண்டாயிற்று, ஸ்பர்ச: - ஸ்பர்சமும், ததா - அப்படியே, சேஷ்டா - சேஷ்டையும், த்வக் சைவ - த்வக்கும், த்ரிதயம் - இந்த மூன்றும், வாயோ: - வாயுவினிடத்தில் நின்றும், ஸ்மிருதம் - உண்டானதாகச் சொல்லப்பட்டது. ரூபம் - ரூபமும், சக்ஷு: - கண்ணும், ததா - அப்படியே, வ்யக்தி: - ப்ரகாசமும், த்ரிதயம் - இந்த மூன்றும், தேஜ: உச்யதே - தேஜஸ்ஸினிடத்தில் உண்டானதாகச் சொல்லப்படுகிறது. ரஸ: - ரஸமும், க்லேதச்ச - நனைப்பதும், ஜிஹ்வா ச - ஜிஹ்வையும், த்ரய: - மூன்றும், ஜலகுணா: - ஜலகுணங்கள் என்று, ஸ்ம்ருதா: - சொல்லப்படுகின்றன, க்ராணம் - மூக்கும், க்ரேயம்ச - முகரும்படியான பதார்த்தமும், சரீரஞ்ச - சரீரமும் ஆகிய, தே து - அவைகள்

தைப் பற்றவாகையாலே, இந்த்ரியங்களுக்கு பூதங்கள் ஆப்யாயகங்களித்தனை ; காரணங்களன்றென்கை.

ஆப்யாயகத்வமாவது – போஷகத்வம். இன்னமும், அஹங்காரத்தை இந்த்ரியங்களுக்கு நிமித்தகாரணமாகவும், பூதங்களை இவற்றுக்கு உபாதாநகாரணமாகவும் சொல்லுகிறதொரு குத்ருஷ்டிமதமுண்டிறே. "[illegible]" (அஹங்காரஸ்யேந்த்ரியாணி ப்ரதிநிமித்தத்வமேவாபாதாநத்வம். "அந்நமயம் ஹி ஸௌம்ய மந: ஆபோமய: ப்ராணஸ்தேஜோமயீ வாக்" இதி ஶ்ருதேரிதி கேசிதாஹு:, ததயுக்தம் அஹங்காரஸ்யைவோபாதாநத்வேऽபி பூதாநாமாப்யாயகத்வேநாபி ததா நிர்தேஶோபபத்தே:)[1] என்று, பிள்ளை எங்களாழ்வானெடுத்துக் கழித்தது. அதுவும், (இந்த்ரியங்களிலே சிலவற்றை) என்று தொடங்கி

---

பூமிகுணா: - பூமியினுடைய குணங்களாக, ஸ்ம்ருதா: - சொல்லப்பட்டன.

1. வி. பு- வியாக்கியாநம். 21-2-48. அஹங்காரஸ்ய - அஹங்காரத்திற்கு, இந்திரியாணி ப்ரதி - இந்திரியங்களைக் குறித்து, நிமித்தத்வமேவ - நிமித்தகாரணமாத்ரமே, பூதாநாமேவ - பூதங்களுக்கே, உபாதானத்வம் - உபாதான காரணத்வமுள்ளது. ஸௌம்ய ! ஸோமபானுர்ஹனை ச்வேத கேதுவே ! மந: - மனஸ்ஸானது, அந்நமயம் - அன்னமயம் அதாவது ப்ரதிவீமயம் என்றும், ப்ராண: - பிராணனானது, ஆபோமய: - ஜலமயமென்றும், வாக் - வாக்கானது, தேஜோமயீஹி - தேஜோமயமென்றும் ப்ரஸித்தம், இதி ச்ருதே: - இப்படி ச்ருதியிருப்பதால், பூதங்களே - உபாதானம், இதி கேசித் ஆஹு: என்று சிலர் சொல்லுகிறார்கள், தத் அயுக்தம் - அது யுக்தமன்று, அஹங்காரஸ்ய - அஹங்காரத்திற்கு, உபாதானத்வே அபி - உபாதான காரணமாயிருக்கையிலும், பூதாநாம் - பூதங்களுக்கு, ஆப்யாயகத்வேநாபி - ஆப்யாயகத்வமாயிருக்கையிலும், ததா - அப்படி, நிர்தேசோபபத்தே: - சொல்லுகிறது தகுந்ததாயிருப்பதால் பூதங்கள் உபாதானமாகமாட்டாது.

இவரருளிச் செய்த க்ரமந்தன்னாலே ப்ரதிக்ஷிப்தம். அப் போதைக்கு (அது ஶாஸ்த்ர விருத்தம்) என்றது -"ஏகா- தஶம் மநஶ்சாத்ர தேவா வைகாரிகா: ஸ்ம்ருதா:" (ஏகா தஶம் மநஶ்சாத்ர தேவா வைகாரிகா ஸ்ம்ருதா:)[1] இத்யா திகளாலே இவற்றை ஸாத்விக அஹங்கார கார்யமாகவே சொல்லுகிற புராணாதிகளுக்கு விருத்தமென்கை.

புராணாதிகளைப் பற்ற, "அந்நமயம் ஹி ஸௌம்ய மந:" (அந்நமயம் ஹி ஸௌம்ய மந:) இத்யாதி ஶ்ருதிக்கு ப்ரா பல்யமுண்டேயாகிலும், "இதிஹாஸபுராணாப்யாம் வேதம் ஸமுபப்ரும்ஹயேத்" (இதிஹாஸபுராணப்யாம் வேதம் ஸமுபப்ருஹ்மயேத்)[2] என்கையாலே, உபப்ருஹ் மணாநுகூலமாக அதுக்கு அர்த்தம் கொள்ளவேணுமென்று கருத்து.

ஆனால், உபப்ரும்ஹணங்கள் தன்னிலேயும் பௌதிக த்வம் சொல்லுகையாலே, இவற்றுக்கு பூதங்கள் காரண மாயன்றோ தோற்றுகிறது என்ன; (பூதங்கள் ஆப்யாய கங்களித்தனை) என்று நிர்வாஹம்.

க்ராணாதிகளான இந்த்ரியங்களுக்கு ப்ருதிவ்யாதி பூதங்களாலுண்டான ஆப்யாயநம் ஶ்ருதிஸ்ம்ருதிகளிலே ப்ரஸித்தம். இதுதான் ஸுபாலோபநிஷத் வ்யாக்யாநத் திலே, "க்ராணாதீநாமிந்த்ரியாணாம் ப்ருதிவ்யாதிபிராப்யாயநம் ஶ்ருதிஸ்ம்ருதிஷு ப்ரஸித்தம்", "அந்நமயம் ஹி ஸௌம்ய மந: ஆபோமய: ப்ராணஸ்தேஜோமயீ வாக்", "ஶ்ரோத்ரம் நபோ க்ராணமதோ ப்ருதிவ்யா:" இத்யாதிஷு, "வாயுராத்மகம் ஸ்பர்ஶநசஞ்சு நபோ ஶ்ரோத்ரஞ்ச

1. 125-ம் பக்கம் பார்க்க.

2 பார ஆதி. இதிஹாஸ புராணப்யாம் வேதம் ஸமுபப்ருஹ் மயேத், பிபேத்யல்பச்ருதாத் வேதோ மாமயம் ப்ரதரிஷ்யதி.—

இதிஹாஸபுராணப்யாம் - இதிஹாஸங்களாலும், புராணங்களா லும், வேதம் - வேதத்தை, ஸமுபப்ருஹ்மயேத் - விஸ்தரிக்கவேண்டி யது, (வேதார்த்தம் தெரிந்துகொள்ளவேணும்) வேத: - வேதமா னது, அல்பச்ருதாத் - கொஞ்சம் தெரிந்தவனிடமிருந்து, அயம் - இவன், மாம் - என்னை, ப்ரதரிஷ்யதி - வஞ்சிப்பானென்று பிபேதி - பயப்படுகிறது.

தநயஃ” ஊத்யாதிஷு” (க்ராணேந்த்ரியாணாம் ஷ் ப்ருதிவ்யாதிபூதைராப்யாயநம் ஶ்ருதிஸ்ம்ருதிஷு ப்ரஸித்தம், “அந்நமயம் ஹி ஸௌம்ய மநஃ ஆபோமயஃ ப்ராணஃ தேஜோமயீ வாக்” “ஶ்ரோத்ரம் நபோ க்ராணமுக்தம் ப்ருதிவ்யாஃ” இத்யாரப்ய “வாய்வாத்மகம் ஸ்பர்ஶநமாமநந்தி நபோ ஶ்ரோத்ரஞ்ச தந்மயம்” இத்யாதிஷு)[1] என்று ஶ்ருதப்ரகாஶிகாகாரராலே அபிஹிதமாயிற்று.

இப்படி, இந்த்ரியங்களுக்கு பூதங்கள் எப்போதும் ஆப்யாயகங்களாயிருக்கு மென்னுமிடம் மோக்ஷதர்மத்திலே ப்ருகு பரத்வாஜ ஸம்வாதத்திலே, “ஆப்யாயந்தே ச தே நித்யம் தாதவஸ்தைஸ்து பஞ்சபிஃ” (ஆப்யாயந்தே ச தே நித்யம் தாதவஸ்தைஸ்து பஞ்சபிஃ)[2] என்று ஸவ்யக்தமாகச் சொல்லப்பட்டது. ஆகையால், பூதங்கள் இந்த்ரியங்களுக்கு ஆப்யாயகங்களித்தனை; காரணங்களென்று என்றதாயிற்று.

ஆக, இப்படி மஹதாதிபதார்த்தங்களினுடைய உத்பத்திக்ரமம் அருளிச்செய்தாராய் நின்றார் கீழ்; இவற்றைக் கொண்டு, ஈஶ்வரன் அண்டஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணும் படியை அருளிச்செய்கிறார் மேல்;

---

1. ஸுபால உபநிஷத் வியாக்கியாநம். க்ராணேந்த்ரியாணாம் - க்ராணம் முதலான, இந்திரியாணாம் - இந்திரியாதிகளுக்கு, ப்ருதிவ்யாதிபூதைஃ - ப்ரதிவ்யாதி பூதங்களாலே, ஆப்யாயநம் - ஆப்யாயனமானது அதாவது வ்ருத்திபண்ணுகிறதானது, ச்ருதிஸ்ம்ருதிஷு - ச்ருதிஸ்மிருதிகளில், ப்ரஸித்தம் - ப்ரஸித்தம். (அந்ந ...வாக். 146-ம் பக்கம் பார்க்க.) நப: - ஆகாசத்தில் நின்றும், ச்ரோத்ரம் - ச்ரோத்ரேந்திரியமும், ப்ருதிவ்யா: - ப்ருதிவியினிடத்தில் நின்றும், க்ராணம் - க்ராணேந்திரியமும். உக்தம் - சொல்லப்பட்டது, இதி ஆரப்ய - என்று தொடங்கி, ஸ்பர்சனம் - ஸ்பர்சத்தை, வாய்வாத்மகம் - வாய்வாத்மகமாயும், ச்ரோத்ரஞ்ச - ச்ரோத்ரேந்திரியத்தை, நப: தந்மயம் - ஆகாசாத்மகமாயும், ஆமநந்தி - சொல்லுகிறார்கள்.

2. மோக்ஷதர்மம். 184-54. பஞ்சபி: - ஐந்துகளாயிருக்கிற. தை: - அந்த பூதங்களாலே, தே தாதவ: - அந்த தாதுக்கள், நித்யம் - ஸர்வகாலத்திலும், ஆப்யாயந்தே - விருத்திபண்ணப்படுகின்றன.

34. இவை கூடினாலல்லது கார்யகரமல்லாமையாலே, மண்ணையும், மணலையும், நீரையும் சேர்த்தொரு த்ரவ்யமாக்கிச் சுவரிடுவாரைப் போலே, ஈஶ்வர னிவற்றையெல்லாம் தன்னிலே சேர்த்தோரண்ட மாக்கி, அதுக்குள்ளே சதுர்முகனை ஸ்ருஷ்டித் தருளும்.

(இவை கூடினாலல்லது கார்யகரமல்லாமையாலே) என்று. அதாவது — "நாநாவீர்யா: ப்ருதக்பூதாஸ்ததஸ்தே ஸம்ஹதிம் விநா । நாஶக்நுவந் ப்ரஜா: ஸ்ரஷ்டுமஸமாகம்ய க்ருத்ஸ்நஶ:" (நாநாவீர்யா: ப்ருதக்பூதாஸ் ததஸ் தே ஸம்ஹதிம் விநா । நாஶக்நுவந் ப்ரஜாஸ் ஸ்ரஷ்டுமஸமாகம்ய க்ருத்ஸ்நஶ:)[1] என்கிறபடியே, ஶாந்தத்வ கோரத்வ மூடத்வங்களாலே நாநாஶக்தியுக்தங்களாய், ப்ருதக்பூதங்களா யிருக்கிற இம்மஹதாதிபதார்த்தங்கள் பரஸ்பர ஸங்கதமா னாலல்லது அண்டரூபமான கார்யத்தை உத்பாதிக்கமாட் டாமையாலே என்கை.

(மண்ணையும், மணலையும், நீரையும் சேர்த்து ஒருத்ரவ் யமாக்கிச் சுவரிடுவாரைப் போலே) அதாவது — ப்ருதக் வீர்யங்களாய், ப்ருதக்ஸ்த்திதங்களாயிருக்கிற ம்ருத் ஸிகதா ஸலிலங்களை அந்யோந்யம் சேர்த்து தத்ஸமுதாயாத்மக மானதொரு த்ரவ்யமாக்கி, பித்திரூபமானதொரு கார்யத் தை நிர்மிப்பாரைப் போலே என்கை.

(ஈஶ்வரன் இவற்றையெல்லாம் தன்னிலே சேர்த்து ஓரண்டமாக்கி) அதாவது — ஜகத்ஸ்ருஷ்டாவான ஈஶ்வரன், "ஸமேத்யாந்யோந்யஸம்யோகம் பரஸ்பரஸமாஶ்ரயா: ।

---

2. வி. பு. 1-2-52. தத: - பிறகு, நாநாவீர்யா: - த்ரவத்வம் கடினத்வம் முதலான பல வீர்யங்களையுடைத்தாயும், ப்ருதக் பூதா: - வெவ்வேறாகயிருக்கிற, தே - அந்த மஹதாதிகள், ஸம்ஹதிம் விநா - ஒன்றாகச்சேர்ந்தாலல்லது, ப்ரஜா: - ஜனங்களை, ஸ்ரஷ்டும் - ஸ்ருஷ்டிக்கைக்கு, க்ருத்ஸ்நஶ: - முழுமையும், அஸமாகம்ய - ஒன்றாகச் சேராமல், நாஶக்நுவந் - ஸமர்த்தமாகிறதில்லை.

𑌏𑌕𑌸𑌂𑌘𑌾𑌤𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌶𑍍𑌚 𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑍈𑌕𑍍𑌯𑌮𑌶𑍇𑌷𑌤𑌃। 𑌮𑌹𑌦𑌾𑌦𑍍𑌯𑌾 𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌨𑍍𑌤𑌾 𑌹𑍍𑌯𑌣𑍍𑌡𑌮𑍁𑌤𑍍𑌪𑌾𑌦𑌯𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇" (ஸமேத்யாந்யோந்யஸம்யோகம் பரஸ்பரஸமாஶ்ரயா:| ஏக ஸங்காதலக்ஷ்யாஶ்ச ஸம்ப்ராப்யைக்யமஶேஷத:| மஹதா தயோ விஶேஷாந்தா ஹ்யண்டமுத்பாதயந்தி தே)[1] என்கிறபடியே, இவற்றையெல்லாம் அந்யோந்யம் ஸங்கதமாக்கி இவற்றாலே அண்டஸ்ருஷ்டியைப் பண்ணியென்கை. இவ்வண்டத்துக்குள்ளே மஹதாதிகார்யங்களையடையக் காண்கையாலே, மஹதாதிபதார்த்தங்களெல்லாவற்றையும் சேர்த்து அண்டஸ்ருஷ்டியைப் பண்ணினானென்னுமிடம் ஸூவ்யக்தம். ஆகையாலே, "𑌭𑍂𑌤𑍇𑌭𑍍𑌯𑍋𑌽𑌣𑍍𑌡𑌂 𑌮𑌹𑌾𑌬𑍁𑌦𑍍𑌧𑍇 𑌬𑍃𑌹𑌤𑍍𑌤𑌦𑍁𑌦𑌕𑍇𑌶𑌯𑌮𑍍" (பூதேப்யோண்டம் மஹாபுத்தே ப்ருஹத் ததுகேஶயம்)[2] என்று, பூதங்களில் நின்றும் அண்டம் உத்பந்நமாம்; அது உதகத்திலே கிடக்குமென்று சொன்னதும் உபலக்ஷணம். "𑌅𑌪 𑌏𑌵 𑌸𑌸𑌰𑍍𑌜𑌾𑌦𑍌 𑌤𑌾𑌸𑍁 𑌵𑍀𑌰𑍍𑌯𑌮𑌵𑌾𑌸𑍃𑌜𑌤𑍍। 𑌤𑌦𑌣𑍍𑌡𑌮𑌭𑌵𑌦𑍍𑌧𑍈𑌮𑌂 𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌂𑌶𑍁𑌸𑌮𑌪𑍍𑌰𑌭𑌮𑍍" (அப ஏவ ஸஸர்ஜாதௌ தாஸு வீர்யமபாஸ்ருஜத் | ததண்டமபவத்தைமம் ஸஹஸ்ராம்ஶுஸமப்ரபம்)[3] என்று அப்புக்களில் நின்றும் அண்டம் உத்பந்நமாமென்று மநுபகவான் சொன்ன

---

1. வி. பு. 1-2-53. பரஸ்பர ஸமாச்ரயா: - ஒன்றுக்கொன்று ஆச்ரயித்தவைகளாய் அந்யோந்ய ஸம்யோகம் - ஒன்றுக்கொன்று ஸம்பந்தத்தை, ஸமேத்ய - அடைந்து, அசேஷத: - ஸமஸ்தமும், ஐக்யம் - ஐக்கியத்தை, ஸம்ப்ராப்ய - அடைந்து. ஏக ஸங்காதலக்ஷ்யாச்ச - ஒரே கும்பலாகப் பார்க்கத் தகுந்தவைகளாய்க்கொண்டு, மஹதாதயோ விசேஷாந்தா: - மஹத்து முதல் விசேஷம் வரைக்குமுள்ள, தே அண்டம் உத்பாதயந்தி - அவைகள் அண்டத்தை உண்டாக்குகின்றன.

2. வி. பு. 1-2-55. மஹாபுத்தே - மஹாபுத்திமானே! பூதேப்ய: - பூதங்களிடத்தில் நின்றும், அண்டம் - அண்டமானது உண்டாகின்றது, ப்ருஹத் தத் - பெரிதான அந்த அண்டமானது, உதகே சயம் - ஜலத்திலே கிடக்கின்றது.

3. மநுஸ்மிருதி. 1-7-9. ஆதௌ - ஸ்ருஷ்டிகாலத்திலே, அப ஏவ - ஜலத்தையே, ஸஸர்ஜ - ஸ்ருஷ்டித்தான், தாஸு - அந்த ஜலத்திலே, வீர்யம் - வீர்யத்தை, அபாஸ்ருஜத் - ஸ்ருஷ்டித்தான், தத்

தும் பூதாந்தரத்துக்கும் உபலக்ஷணம். அதாவது - பூர்வ பூதாம்ஶங்களோடே ஸம்ஸ்ருஷ்டமுமாய், ப்ருதிவியும் தனக்குள்ளே கரைந்துகிடக்கிற ஜலத்தில் நின்றும் உத்பந்நமாய் அதிலே கிடக்குமென்றபடி.

இப்படி, அண்டஸ்ருஷ்டியைப் பண்ணும்படியை அருளிச் செய்து, அநந்தரம், இந்த பாஹ்யமான பூதங்கள் ஆந்தரமான ஆகாஶாதிகளாய் பரிணமித்த பின்பு அவற்றைக் கொண்டு லோகவிபாகங்களைப் பண்ணுகைக்காகவும், அந்த லோகங்களில் தேவாதிஜீவவிபாகங்களைப் பண்ணுகைக்காகவும் இவ்வண்டத்துக்குள்ளே பத்தாத்ம ஸமஷ்டிபூதனான ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்தருளும்படியை அருளிச்செய்கிறார்.

(அதுக்குள்ளே சதுர்முகனை ஸ்ருஷ்டித்தருளும்) என்று. சதுர்முகனுக்கு பத்தாத்ம ஸமஷ்டிபாவமாவது — இவ்வண்டத்துக்கு வேண்டும் கர்மவஶ்யசேதனர் இவன் ஶரீரத்திலே உண்டாய்க் கிடக்கை. இப்படி சதுர்முகனை ஸ்ருஷ்டித்தது, இனிமேலுண்டான ஸ்ருஷ்டியெல்லாம் ஸத்வாரகமாக நின்று செய்வதாகவிறே.

அதுதன்னை தர்ஶிப்பிக்கைக்காக ஸமஷ்டிஸ்ருஷ்டியிலும், வ்யஷ்டிஸ்ருஷ்டியிலும் ஸர்வேஶ்வரன் செய்யும் க்ரமத்தை அருளிச்செய்கிறார் மேல்;

35. அண்டத்தையும், அண்டகாரணங்களையும் தானே யுண்டாக்கும்; அண்டத்துக்குட்பட்ட வஸ்துக்களை, சேதநர்க்கந்தர்யாமியாய் நின்றுண்டாக்கும்.

(அண்டத்தையும், அண்டகாரணங்களையும் தானே யுண்டாக்கும்). அதாவது — ஸமுதாயகார்யமான அண்டத்தையும், தத்காரணமான மஹதாதி பதார்த்தங்களையும், ஸத்யஸங்கல்பனான தன்னுடைய அவ்யவஹிதஸங்

அண்டம் - அந்த அண்டமானது, ஹைமம் - ஸுவர்ணமயமாகவும், ஸஹஸ்ராம்சு ஸமப்ரபம் - ஸூர்யனோடு ஸமானமான காந்தியையுடையதாகவும், அபவத் - ஆயிற்று.

கல்பத்தாலே உண்டாக்கும் என்கை. "ஸோऽபிஜ்யாய ஶரீராத் ஸ்வாத் ஸிஸ்ருக்ஷுர் விவிதா: ப்ரஜா: । அப ஏவ ஸஸர்ஜாதௌ தாஸு வீர்யமவாஸ்ருஜத் । ததண்டமபவத்தைமம் ஸஹஸ்ராம்ஶுஸமப்ரபம்" (ஸோபித்த்யாய ஶரீராத் ஸ்வாத் ஸிஸ்ருக்ஷுர் விவிதா: ப்ரஜா: । அப ஏவ ஸஸர்ஜாதௌ தாஸு வீர்யமபாஸ்ருஜத் । ததண்டமபவத்தைமம் ஸஹஸ்ராம்ஶுஸமப்ரபம்)[1] என்னக்கடவதிறே.

(அண்டத்துக்கு உட்பட்ட வஸ்துக்களை சேதநர்க்கு அந்தர்யாமியாய் நின்று உண்டாக்கும்). அதாவது – சதுர்முகாதி சேதநருடைய ஹ்ருதயங்களிலேயிருந்து, "ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்டோ மத்த: ஸ்ம்ருதிர்ஜ்ஞாநமபோஹநஞ்ச" (ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்டோ மத்த: ஸ்ம்ருதிர்ஜ்ஞாநமபோஹநஞ்ச)[2] என்று, ஸங்கல்ப்ஜ்ஞாநாதிகளை ஜநிப்பித்துக்கொண்டு. அண்டாந்தர்வர்த்திகளான ஸகலபதார்த்தங்களையும் ஸ்ருஷ்டிக்குமென்கை. "யத்கிஞ்சித் ஸ்ருஜ்யதே யேந ஸத்த்வஜாதேந வை த்விஜ । தஸ்ய ஸ்ருஜ்யஸ்ய ஸம்பூதௌ தத்ஸர்வம் வை ஹரேஸ்தநு:" (யத்கிஞ்சித் ஸ்ருஜ்யதே யேந ஸத்வஜாதேந வை த்விஜ । தஸ்ய ஸ்ருஜ்யஸ்ய ஸம்பூதௌ தத் ஸர்வம் வை ஹரேஸ் தநு:)[3] என்று, ஈஶ்வரன் ஸகலகர்த்ரு

---

1. மநுஸ்ம்ருதி. 1-8-9. ஸ: - அந்த பரமாத்மாவானவன், அபித்யாய - த்யானம் பண்ணி, அதாவது ஸங்கல்பித்து, ஸ்வாத் சரீராத் - தன்னுடைய சரீரத்தில் நின்றும், விவிதா: - நாநாவிதங்களான ப்ரஜா: - ஜனங்களை, ஸிஸ்ருக்ஷு: - ஸ்ருஷ்டிக்கவேணுமென்று இச்சித்தவராய்க்கொண்டு. (மற்றதை கீழ் ச்லோகத்தில் பார்க்கவும்.)

2. ஸ்ரீகீதை. 15-15. அஹம் - நான், ஸர்வஸ்யச - எல்லாவற்றினுடையவும், ஹ்ருதி - மனதில், ஸந்நிவிஷ்ட: - இருக்கிறேன். மத்த: - என்னிடமிருந்து. ஸ்ம்ருதி: - ஸ்ம்ருதியும், ஜ்ஞானம் - ஜ்ஞானமும், அபோஹநம் ச - மறப்பதும் அல்லது ஊஹிப்பதும்,

3. வி. பு. 1-12-38. த்விஜ! – மைத்ரேயரே! யேந ஸத்வஜாதேந - யாதொரு ஸத்வ ஸமூகத்தாலே அதாவது ப்ரஹ்மாதிகளாலே, யத் கிஞ்சித் - யாதொரு வஸ்துவானது, ஸ்ருஜ்யதே - ஸ்ருஷ்டிக்கப்படுகிறதோ, தஸ்ய ஸ்ருஜ்யஸ்ய - அந்த ஸ்ருஷ்டிக்கப்

ஶரீரியாகக்கொண்டு ஸகலகார்யங்களையும் ஸ்ருஷ்டிக்கும் என்னக்கட வதிறே.

(ஈஶ்வரன் இவற்றையெல்லாம் தன்னிலே சேர்த்து ஓரண்டமாக்கி) என்று. ஸர்வேஶ்வரன், மஹதாதிபதார்த்தங்களைச் சேர்த்து அண்டஸ்ருஷ்டியைப் பண்ணுமென்னும் இவ்வளவிறே கீழருளிச் செய்தது; இப்போது, அந்த அண்ட பஹுத்வத்தையும், அவற்றினுடைய கட்டளையிருக்கும்படியையும், அவைதான் ஸர்வேஶ்வரனுக்கு இன்ன விநியோகத்துக்கு உறுப்பென்னுமத்தையும், அவற்றினுடைய பரிணாமப்ரகாரத்தையும் அருளிச்செய்கிறார்;

36. அண்டங்கள்தான் அநேகங்களாய், பதிநாலு லோகங்களோடேகூடி, ஒன்றுக்கொன்று பதித்து மடங்கான ஏழாவரணங்களாலும் சூழப்பட்டு, ஈஶ்வரனுக்கு க்ரீடாகந்துக ஸ்த்தாநீயங்களாய், ஜலபுத்புதம்போலே ஏககாலத்திலே ஸ்ருஷ்டங்களாயிருக்கும்.

(அண்டங்கள்தான்) என்றுதொடங்கி. (அண்டங்கள்தான் அநேகங்களாய்). "அண்டாநாம் து ஸஹஸ்ராணாம் ஸஹஸ்ராண்யயுதாநி ச । ஈத்ருஶாநாம் ததா தத்ர கோடிகோடிஶதாநி ச" (அண்டாநாம் து ஸஹஸ்ராணாம் ஸஹஸ்ராண்யயுதாநி ச । ஈத்ருஶாநாம் ததா தத்ர கோடி கோடிஶதாநி ச)[1] என்னக்கடவதிறே. (பதிநாலு லோகங்களோடே கூடி). பதிநாலுலோகங்களாவன-கீழ்

பட்ட வஸ்துவினுடைய, ஸம்பூதௌ - உத்பத்தியிலே, ஈச்வரன் காரணமாயிருக்கிறான், தத் - ஆகையினாலே ஸர்வம் . ஸ்ருஷ்டிக்கப் பட்ட ஸமஸ்த பதார்த்தங்களும், ஹரே: தநு: வை - விஷ்ணுவினுடைய சரீரம் இது ப்ரஸித்தம்.

1. வி. பு. 2-7-27. தத்ர - அந்த பிரகிருதியில், ஸஹஸ்ராணாம் அண்டாநாம் - ஆயிரமண்டங்களுடைய, ஸஹஸ்ராணி - ஆயிரங்களும், அயுதாநி ச - பதினாயிரங்களும், ஈத்ருசாநாம் - இப்படிப்பட்ட அண்டங்களுடைய, கோடிகோடிசதாநி ச - அனேகம் கோடிகளும் (இருக்கின்றன).

அண்டகபாலத்துக்குமேல் எண்பத்துமூன்று நூறாயிரத்தைம்பதினாயிரம் யோஜநம் உயர்த்தியுடைத்தான கர்ப்போதகத்தின்மேலே, "[illegible]" (ஸப்ததிஸ்து ஸஹஸ்ராணாம் த்விஜோச்ச்ராயோபி கத்யதே | தஸஸாஹஸ்ரமேகைகம் பாதாளம் முநிஸத்தம | அதலம் விதலஞ்சைவ நிதலஞ்ச கபஸ்திமத் | மஹாக்க்யம் ஸுதலஞ்சாக்ரியம் பாதாளஞ் சைவ ஸப்தமம்)[1] என்கிறபடியே, ஓரொன்று பதினாயிரம் யோஜநத்தளவு உயர்த்தியையும் பரப்பையுமுடைத்தாய், தைத்ய தாநவ பந்நக ஸுபர்ணாதிகள் வர்த்திக்கும் தேசமாய் "[illegible]" (ஶுக்லக்ருஷ்ணாருணாஃ பீதாஶ் ஶர்க்கராஶ் ஶைலகாஞ்சநாஃ | பூமயோ யத்ர மைத்ரேய வரப்ராஸாத ஶோபிதாஃ)[2] என்கிறபடியே, ஶுக்லங்களாயும், க்ருஷ்ணங்களாயும்,

1. வி. பு. 2-5-1, 2. த்விஜ! - ப்ராஹ்மணனான மைத்ரேயரே! உச்ச்ராயோபி - (பூமியினுடைய) உயரமும், ஸப்ததிஸ்து ஸஹஸ்ராணாம் - எழுபதினாயிரம் யோஜனை (என்று), கத்யதே - சொல்லப்பட்டது, முநிஸத்தம - முனிச்ரேஷ்டரான மைத்ரேயரே! பாதாளம் - பாதாளலோகமானது, ஏகைகம் - ஒவ்வொன்றும், தச ஸாஹஸ்ரம் - பதினாயிரம்யோஜனை உயரமும் அகலமும் உடைத்தாயிருக்கும், அதலம் - அதலமென்றும், விதலஞ்சைவ - விதலமென்றும், கபஸ்திமத் - கபஸ்திமத்தென்றும், நிதலஞ்ச - நிதலமென்றும், மஹாக்க்யம் - மஹாதலமென்றும் பெயரையுடையதும், ஸுதலஞ் ச - ஸுதலமென்றும், அக்ரியம் - ச்லாக்யமான, ஸப்தமம் பாதாளஞ்சைவ - பாதாளமென்றும் சொல்லப்பட்ட அதோ லோகங்கள் ஏழும் இருக்கிறதுகள்.

2. வி. பு. 2-5-3. மைத்ரேய - மைத்ரேயரே! யத்ர - யாதொரு லோகங்களிலே, வரப்ராஸாத சோபிதா: விலக்ஷணங்களான மாளிகைகளாலே விளங்காநின்ற, பூமய: - பூமிகள், சுக்லக்ருஷ்ண - வெளுத்தவைகளாயும், கருத்தவைகளாயும், அருணா: - சிவந்தவைகளாயும், பீதா: - பீதங்களாயும், சர்க்கரா: -பருக்காங்கற்களை உடையவைகளாயும், சைலகாஞ்சநா: - பர்வதமயமாயும் ஸ்வர்ணமயமாயும் இருக்கும்.

அருணங்களாயும், பீதங்களாயும், வாலுகாமயமான ஶர்க்கராரூபங்களாயும், ஶைலரூபமாயும், பொன்னுயுமிருக்கிற ஸ்தலவிசேஷங்களை யுடையவையாய், விலக்ஷணமான மாளிகைகளாலேயும், ப்ராஸாததோரணங்களாலேயும் அலங்க்ருதமாய், ஸ்வர்காதிகளிலுங் காட்டில் நிரதிஶய போக்யமாய். அதலமென்றும், விதலமென்றும், நிதலமென்றும், கபஸ்திமத்தென்று சொல்லப்பட்ட தலாதலமென்றும், மஹாதலமென்றும், ஸுதலமென்றும், பாதாளமென்றும் பேரையுடைத்தான அதோலோகங்களேழும், இதுக்குமேல் எழுபதினுயிரம் யோஜநமகலத்தை உடைத்தாய், ஸப்தத்வீபஸாகரபர்வதாதி விஶிஷ்டமாய், பாதசாரிகளான மநுஷ்யாதிகள் வர்த்திக்கும் தேஶமாய். பத்மாகாரமான பூலோகமும், பூலோகத்துக்கு மேல் ஆதித்யனுக்குக் கீழ் நூறுயிரம் யோஜநத்தளவு உயர்த்தியையுடைத்தாய், கந்தர்வாதிகள் வர்த்திக்கும் தேஶமான புவர்லோகமும். ஆதித்யனுக்கு மேல் த்ருவனுக்குக்கீழ் பதினுலுநூறுயிரம் யோஜநத்தளவு உயர்த்தியையுடைத்தாய், ஸாதிகாரரான க்ரஹ நக்ஷத்ர இந்த்ராதிகள் வர்த்திக்கும் தேஶமான ஸ்வர்லோகமும், த்ருவனுக்குமேல் ஒருகோடி யோஜநத்தளவு உயர்த்தியையுடைத்தாய், "விநிவ்ருத்தாதிகாராஸ்து மஹர்லோகநிவாஸிநஃ" (விநிவ்ருத்தாதிகாராஸ்து மஹர்லோகநிவாஸிநஃ)[1] என்று, நிவ்ருத்த அதிகாரராய், அதிகார அபேக்ஷரான இந்த்ராதிகள் வர்த்திக்கும் தேஶமான மஹர்லோகமும், அந்த மஹர்லோகத்துக்கு மேல் இரண்டுகோடியோஜநத்தளவு உயர்த்தியையுடைத்தாய், ப்ரஹ்மபுத்ரர்களான ஸநகாதி பரமயோகிகள் வர்த்திக்கும் தேஶமான ஜநர்லோகமும், ஜநர்லோகத்துக்குமேல் எட்டுகோடி யோஜநத்தளவு உயர்த்தியையுடைத்தாய், வைராஜாக்க்யரான ப்ரஜாபதிகள் வர்த்திக்கும் தேஶமான தபோலோகமும், தபோலோகத்துக்குமேல் நாற்பத்தெட்டுகோடி யோஜநத்தளவு உயர்த்

1. மஹர்லோகநிவாஸிந: - மஹர்லோகத்திலே வாஸம் செய்கிறவர்கள், விநிவ்ருத்தாதிகாராஸ்து - அதிகாரம்போனவர் (இந்திராதி) கள்.

தியையுடைத்தாய், “தெஷாஜெஷாம் கெவந ஸ்ரஹ்ம லொகா ரூத்ரஸ்யாநெ ஸந்தி தத்ரைவ லொகாஃ விஷ்ணொரநெ ஸந்தி லொகா விஶாலாஸ்தாம்ஸ்தாந் லொ காம்ஸ்தாநுபாஸ்ய வ்ரஜந்தி” (தேஷாமேஷாம் கேசந ப்ரஹ்மலோகா ருத்ரஸ்யாந்யே ஸந்தி தத்ரைவ லோகாஃ| விஷ்ணோரந்யே ஸந்தி லோகா விஶாலாஸ் தாம்ஸ்தாந் லோகாந் தாநுபாஸ்ய வ்ரஜந்தி)[1] என்கிறபடியே, ப்ரஹ்மா விஷ்ணு சிவர்களும், அவர்களை உபாஸித்து தத் ப்ராப்திபண்ணினவர்களும் வர்த்திக்கும் தேஶமான ஸத்ய லோகமும், ஆக ஊர்த்வாதஃகடாஹங்களுக்கு நடுவு அறு பதுகோடியோஜநம் அண்டோச்ச்ராயமாயிருக்கும். ஐம் பதுகோடி யோஜநம் அண்டோச்ச்ராயமென்பாருமுண்டு. அதில், “ஸூர்யாண்டகோஜயொர்மத்யெ கொட்யஸ்ஸ்யுஃ பஞ்சவிம்ஶதிஃ” (ஸூர்யாண்டகோளயோர்மத்யே கோட் யஸ்ஸ்யுஃ பஞ்சவிம்ஶதிஃ)[2] என்கிற ஶாஸ்த்ரவசநத்தின் படியே, ஸூர்யனுக்கு மேல் இருபத்தஞ்சுகோடியும் கீழ் இருபத்தஞ்சுகோடியுமாயிருக்கும்.

இப்படியிருந்துள்ள சதுர்தஶபுவநங்களோடே கூடி, (ஒன்றுக்கொன்று பதித்துமடங்கான ஏழு ஆவரணங்களா லும் சூழப்பட்டு). அதாவது – கீழ்ச்சொன்ன பதினாலு லோகத்தையும், “ஶததஃஸஹ்ாடஙெந திஶொவாயூ ஊயஷூயா | கவிக்ஷூஸ்ய யயா வீஜம் ஸவலெதா வெ

---

1. கேசந - சிலர், தேஷாம் ஏஷாம் - ஸத்யலோகங்களிலே, ப்ரஹ்மலோகா: - ப்ரஹ்மலோகங்கள், ஸந்தி - இருக்கின்றன. தத்ரைவ - அவ்விடத்திலேயே, அந்யே - சிலர், ருத்ரஸ்ய - ருத்ர னுடைய, லோகா: - லோகங்கள், ஸந்தி - இருக்கின்றன (என்று சொல்லுகிறார்கள்), அந்யே - சிலர், விஷ்ணோ: விசாலா: - விஷ்ணு வினுடைய விசாலங்களான, லோகா: - லோகங்கள், ஸந்தி - இருக் கின்றன (என்று சொல்லுகிறார்கள்), தாந் தாந் - அந்தந்த, தேவதை களை, உபாஸ்ய - உபாஸித்து, அதாவது அடைந்து, தான் லோகான்- அந்த உலகங்களை, வ்ரஜந்தி - செல்கிறார்கள்.

2. பாக. 5-20-42. ஸூர்யாண்டகோளயோ: - ஸூர்யன் என்ன, அண்டகோளங்களென்ன இவைகளுடைய, மத்யே - மத்யத் திலே, பஞ்சவிம்சதி: - இருபத்தைந்து, கோட்ய: - கோடியோஜனை விஸ்தாரம், ஸ்யு: - இருக்கின்றன.

ஸமாவ்ருதம்" (ஏதத்அண்டகடாஹேந திர்யகூர்த்வமதஸ் ததா | கபித்தஸ்ய யதா பீஜம் ஸர்வதோ வை ஸமாவ்ருதம்)[1] என்கிறபடியே, உள்வாயில் விளாம்சதையை விளாவோடு எங்குமொக்க ஆவரிக்குமாபோலே, "கோடியோஜநமாநஸ்து கடாஹஸ்ஸம்வ்யவஸ்திதஃ" (கோடியோஜநமாநஸ்து கடாஹஸ் ஸம்வ்யவஸ்த்திதஃ)[2] என்று, கோடியோஜநமெடுப்பமாக சைவோக்தமானபடியே, அண்டகடாஹம் ஆவரித்து நிற்கும். ஸாண்டகடாஹமான இவ்வண்டம், "தசோத்தரேண பயஸா மைத்ரேயாண்டஞ்ச தத்வ்ருதம்" (தசோத்தரேண பயஸா மைத்ரேயாண்டஞ்ச தத்வ்ருதம்)[3] என்கிறபடியே, தன்னில் பதிற்றுமடங்கு பரந்திருக்கிற ஜலதத்வத்தாலே ஆவ்ருதமாயிருக்கும். "பஞ்சாசத்கோடிவிஸ்தாரா ஸேயமுர்வீ மஹாமுநே | ஸஹைவாண்டகடாஹேந ஸத்வீபாப்திமஹீதரா" (பஞ்சாசத்கோடிவிஸ்தாரா ஸேயமுர்வீ மஹாமுநே | ஸஹைவாண்டகடாஹேந ஸத்வீபாப்திமஹீதரா)[4] என்று,

1. வி. பு. 2-7-22. ஏதத் - இந்த லோகங்கள், அண்டகடாஹேந - அண்டகடாஹத்தாலே, திரச்ச - குறுக்கேயும், ஊர்த்வம் - மேலேயும், ததா - அந்த ப்ரகாரம், அத: - கீழேயும், கபித்தஸ்ய பீஜம் - விளாம்பழத்தினுடைய பீஜம், யதா ஸர்வத: - எப்படி ஓட்டோடு நான்குபக்கங்களிலும் வ்யாபரித்து இருக்கிறதோ, ஸமாவ்ருதம் - அப்படி இந்த லோகங்கள் வ்யாபரிக்கப்பட்டிருக்கிறது.

2. சைவம். கடாஹ: - அண்டகடாஹமானது, கோடியோஜநமாநஸ்து - கோடியோஜனை ப்ரமாணமாக, ஸம்வ்யவஸ்தித: - இருக்கிறது.

3. வி. பு. 2-7-23. மைத்ரேய! - மைத்ரேயனே! தசோத்தரேண - பூமிக்கு பத்துபங்கு அதிகமான, பயஸா - ஜலத்தாலே, தத் அண்டஞ்ச - அவ்வண்டமானதும், ஸமாவ்ருதம் - சூழப்பட்டிருக்கிறது.

4. வி. பு. 2-4-98. மஹாமுநே! - மஹாமுனியே! ஸத்வீபாப்தி மஹீதரா - த்வீபமென்ன, ஸமுத்ரமென்ன, பர்வதமென்ன இவைகளோடுகூடிக் கொண்டிருக்கிற, அண்டகடாஹேந ஸஹைவ - அண்டகடாஹத்தோடுகூடவே, ஸேயம் - அந்த இந்த, உர்வீ - பூமியானது, பஞ்சாசத்கோடி விஸ்தாரா - ஐம்பதுகோடி யோஜனை விஸ்தாரம்.

ஸாண்டகடாஹமான பூமண்டலம் - பஞ்சாசத்கோடிவிஸ்தாரமாகச் சொல்லுவாரும், "ஸாண்டகடாஹம் பூமண்டலம் து ஶதகோடி விஸ்தாரம்" (பூமண்டலம் து ஶதகோடி விஸ்தாரம் ஸாண்டகடாஹம்)[1] என்று, வாராஹபுராணத்திலே சொல்லுகையாலும், இப்படி ஸ்காந்தபுராணத்திலே சிவரஹஸ்யத்திலே பரக்கச் சொல்லுகையாலும், மேருவைச் சுற்றும் பஞ்சாஶத்கோடி விஸ்தாரத்தைக் கொண்டு பூமியை ஶதகோடி விஸ்தாரமாகச் சொல்லுவாருமாயிருக்கும். இதில் இரண்டத்தொரு மர்யாதையைத்தளமாக்கி, அதில் பதிற்றுமடங்கு பெருத்த ஜலதத்வத்தாலே ஆவ்ருதமாயிருக்கும் என்றபடி.

அண்டகடாஹத்தைப் பற்ற பதிற்றுமடங்கு பெருத்த ஜலதத்வத்தாலே ஆவ்ருதமென்பாருமுண்டு. இப்படி தஶோத்தரமாய்க்கொண்டு ஜலதத்வத்தை தேஜஸ்தத்வம் ஆவரிக்கும், அப்படி அத்தை வாயுதத்வம் ஆவரிக்கும், வாயுவை ஆகாஶம் ஆவரிக்கும். ஆகாஶத்தை அஹங்காரம் ஆவரிக்கும், அஹங்காரத்தை மஹாத்தத்வம் ஆவரிக்கும், அந்த மஹத்தத்வத்தை அவ்யக்தம் ஆவரிக்கும். "தத் அநந்தம் அஸங்க்யாத ப்ரமாணம்" (ததநந்தமஸங்க்யாதப்ரமாணம்)[2] என்று அபரிமிதப்ரமாணமான அவ்யக்தத்துக்கு ஆவரணத்வ ப்ரயுக்தமான தஶோத்தரத்வம் கூடும்படி எங்ஙனே? என்னில்; ஆயிரத்திலே பத்துமுண்டாமாபோலே அபரிமிதஸங்க்யையிலே அதுவுமுண்டாகையாலே கூடும்.

"வாரிவஹ்நி நிலாகாஶை: ததோ பூதாதிநா பஹி: । வ்ருதம் தஶகுணைரண்டம் பூதாதிர் மஹதா ததா ॥ அவ்யக்தேநாவ்ருதோ ப்ரஹ்மந் தைஸ் ஸர்வைஸ் ஸஹிதோ மஹாந் । ஏபிராவரணைரண்டம் ஸப்தபி: ப்ராக்ருதைர்வ்ருதம்" (வாரிவஹ்ந்யநிலாகாஶைஸ் ததோ

1. வாராஹம். ஸாண்டகடாஹம் - அண்ட கடாஹத்தோடு கூடிய, பூமண்டலந்து - பூமண்டலமோவென்றால், சதகோடிவிஸ்தாரம் - நூறுகோடி யோஜனை விஸ்தாரம்.

2. வி. பு. 2-7-26. தத் - ப்ரதானமானது. அநந்தம் அஸங்க்யாத ப்ரமாணம் - அபரிமித ஸங்கியையை ப்ரமாணமாகவுடையது.

பூதாதிநா பஹி:| வ்ருதம் தஸகுணேரண்டம் பூதாதிர்மஹ
தா ததா | அவ்யக்தேநாவ்ருதோ ப்ரஹ்மந் தைஸ்ஸர்வைஸ்
ஸஹிதோ மஹாந் | ஏபிராவரணைரண்டம் ஸப்தபி: ப்ராக்
ருதைர் வ்ருதம்)[1] என்கிறபடியே, இப்படி தமோத்தரங்
களான ஸப்த ஆவரணங்களாலும் சூழப்பட்டு, (ஈஶ்வர
னுக்கு க்ரீடாகந்துகஸ்தாநீயங்களாய்). அதாவது-க்ரீடா
பரனான பாலனுக்கு க்ரீடநகங்கள்போலே, க்ரீடாரஸாநு
புபூஷுவான ஈஶ்வரனுக்கு லீலோபகரணங்களாயிருக்கை.
"𑌹𑌰𑍇 𑌵𑌿𑌹𑌰𑌸𑌿 𑌕𑍍𑌰𑍀𑌡𑌾𑌕𑌨𑍍𑌦𑍁𑌕𑍈𑌰𑌿𑌵 𑌜𑌨𑍍𑌤𑍁𑌭𑌿𑌃"
"𑌮𑍋𑌦𑌤𑍇 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌭𑍂𑌤𑍈𑌰𑍍 𑌬𑌾𑌲𑌃 𑌕𑍍𑌰𑍀𑌡𑌨𑌕𑍈𑌰𑌿𑌵"
(ஹரே விஹரஸி க்ரீடாகந்துகைரிவ ஜந்துபி:)[2] என்றும்,
(மோததே பகவாந் பூதைர் பால: க்ரீடநகைரிவ)[3] என்றும்
சொல்லுகிறபடியே, ஈஶ்வரனுக்கு விபூதியாக லீலோப
கரணமாயிறே இருப்பது.

ஜலபுத்புதம்போலே, ஏககாலத்திலே ஸ்ருஷ்டங்களா
யிருக்கும்). அதாவது – இவ்வண்டங்களை ஈஶ்வரன் ஸ்ரு
ஷ்டிக்குமளவில் ஓரோரு படையாக இட்டு அகமெடுக்குமா
போலே, க்ரமத்திலே பரிணமிக்கையன்றியே, ‘𑌨 𑌕𑍍𑌰𑌮𑍇
𑌣 𑌵𑌿𑌵𑍃𑌦𑍍𑌧𑌂 𑌤𑌤𑍍 𑌜𑌲𑌬𑍁𑌦𑍍𑌬𑍁𑌦𑌵𑌤𑍍 𑌸𑌮𑌮𑍍’’ (ந க்ரமேண விவ்
ருத்தம் தத் ஜலபுத்புதவத் ஸமம்)[4] என்கிறபடியே, நீர்க்
குமிழிபோலே யொருக்காலே உத்பந்நங்களாமென்கையும்,

---

1. வி. பு. 1-3-60 தத: - பின்பு, பஹி: - வெளியிலே, வாரி வஹ்ந்யநிலாகாஸை: - ஜலம், அக்நி, வாயு, ஆகாசம் இவைகளாலேயும், பூதாதிநா - அஹங்காரத்தாலே, பஹி: - வெளியில், அண்டம் - அண்டமானது, தசகுணை:-ஒன்றுக்கொன்று பதின்மடங்கு அதிகமாக வ்ருதம் - சூழப்பட்டிருக்கிறது. பூதாதி: - தாமஸாஹங்காரமானது, மஹதா - மஹத்தத்வத்தாலே, ததா - அப்படியே சூழப்பட்டிருக்கிறது. தை: ஸர்வை: ஸஹித: - அந்த ஸமஸ்தமான ஆவரணங்களோடு கூடிய, மஹான் - மஹத் தத்வமானது, ப்ரஹ்மந் - ப்ராஹ்மணனான மைத்ரேயரே! அவ்யக்தேந - அவ்யக்தத்தாலே, வ்ருத: - சூழப்பட்டிருக்கிறது, ஸப்தபி: - ஏழுகளாயிருக்கிற, ஏபி: - இந்த, ப்ராக்ருதை: - ப்ராக்ருதங்களான, ஆவரணை: - ஆவரணங்களாலே, அண்டம் - அண்டமானது, வ்ருதம் - சூழப்பட்டிருக்கிறது.

2. 3. 108-ம் பக்கம் பார்க்க.

4. வி. பு. 1-2-56. தத் - அந்த அண்டமானது, க்ரமேண -

அநேக ஜலபுத்புதங்கள் ஏககாலத்திலே யுத்பந்நங்களாமா போலே, "ஏககாலேந ஸ்ருஜ்யந்தே" (ஏககாலேந ஸ்ருஜ்யந்தே)[1] என்கிறபடியே, ஸகல அண்டங்களும் ஏககாலத்திலே யுத்பந்நங்களாமென்கையும்.

ஆக, (அண்டங்கள்தான் அநேகங்கள்) என்னுமிடமும், அவைதான் எல்லாமொன்று போலே யிருக்கும் என்னுமிடமும் செல்லிற்றாயிற்று.

பூதபஞ்சகங்களுக்கும் தனித்தனியே விநியோகங்களை தர்ஶிப்பிக்கிறார் மேல் ;

37. பூதங்களில் ஆகாஶமவகாஶஹேது; வாயு வஹநாதி ஹேது; தேஜஸ்ஸு பசநாதி ஹேது; ஜலம் ஸேசந பிண்டீகரணாதிஹேது; ப்ருதிவீ தாரணாதி ஹேது என்பர்கள்.

(பூதங்களில் ஆகாஶம் அவகாஶஹேது). அதாவது - ஸகல பதார்த்தங்களுக்கும், ஸ்திதி கமநாதிகளுக்கு இடங்கொடுத்துக் கொண்டிருக்கிறவிது, ஆகாஶத்துக்கு விநியோகமென்கை. "அஸ்ய தேஜஸ்ய வியதோ லாகவம் ஸௌக்ஷ்ம்யமேவ ச | ஶப்த: ஶ்ரோத்ரம் பலம் ப்ரஹ்மந் ஸாுஷிரத்வம் விவிக்ததா" (அஸ்ய தேஹஸ்ய வியதோ லாகவம் ஸௌக்ஷ்ம்யமேவ ச | ஶப்த: ஶ்ரோத்ரம் பலம் ப்ரஹ்மந் ஸாுஷிரத்வம் விவிக்ததா)[2] என்று, இதுக்கு அநேக விநியோகங்களுண்டாயிருக்க இதொன்றையும் அருளிச்செய்

---

க்ரமமாக, நவிவ்ருத்தம் - வ்ருத்தியடையவில்லை, ஜலபுத்புதவத் - நீர்க்குமிழிபோலே, ஸமம் - ஸமகாலத்தில் உண்டாகிறது.

1. வி. பு. 1-3-17. ஏககாலேந - ஏககாலத்திலே, ஸ்ருஜ்யந்தே - ஸ்ருஷ்டிக்கப்படுகிறார்கள்.

2. ப்ரஹ்மன் - ப்ராஹ்மணரான மைத்ரேயரே! அஸ்ய - இந்த, தேஹஸ்ய - தேஹத்திற்கு, வியத: - ஆகாசத்தில் நின்றும், லாகவம் - லேசாகவிருக்கையும், ஸௌக்ஷ்ம்யமேவ ச - ஸூக்ஷ்மமாயிருக்கையும், சப்தச்ரோத்ரம் - சப்தமும் காதும், பலம் - பலத்தையுடைத்தாயிருக்கையும், ஸாுஷிரத்வம் - த்வாரத்தை யுடைத்தாயிருக்கையும், விவிக்ததா - அவகாசத்தை யுடைத்தாயிருக்கையும் உண்டாகிறது.

திகார வேஷத்தையும், ஸ்ரீகீதாபாஷ்யத்திலே அருளிச்செய்தாரிறே. இந்த சதுர்விதபுருஷ ஸமாஶ்ரயணீயத்வத்தை "𑌚𑌤𑍁𑌰𑍍𑌵𑌿𑌧𑌾 𑌭𑌜𑌨𑍍𑌤𑍇 𑌮𑌾𑌂 𑌜𑌨𑌾𑌃 𑌸𑍁𑌕𑍃𑌤𑌿𑌨𑍋𑌽𑌰𑍍𑌜𑍁𑌨 । 𑌆𑌰𑍍𑌤𑍋 𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑍁𑌰𑌰𑍍𑌥𑌾𑌰𑍍𑌥𑍀 𑌜𑍍𑌞𑌾𑌨𑍀 𑌚 𑌭𑌰𑌤𑌰𑍍𑌷𑌭" (சதுர்விதா பஜந்தே மாம் ஜநாஸ்ஸுக்ருதிநோர்ஜுந | ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப)[1] என்றும், "𑌚𑌤𑍁𑌰𑍍𑌵𑌿𑌧𑌾 𑌮𑌮 𑌜𑌨𑌾 𑌭𑌕𑍍𑌤𑌾 𑌏𑌵 𑌹𑌿 𑌤𑍇 𑌶𑍍𑌰𑍁𑌤𑌾𑌃 । 𑌆𑌰𑍍𑌤𑍋 𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑍁𑌰𑌰𑍍𑌥𑌾𑌰𑍍𑌥𑍀 𑌜𑍍𑌞𑌾𑌨𑍀 𑌚𑍇𑌤𑌿 𑌪𑍃𑌥𑌕𑍍𑌪𑍃𑌥𑌕𑍍" (சதுர்விதா மம ஜநா பக்தா ஏவ ஹி தே ஶ்ருதா: | ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ சேதி ப்ருதக் ப்ருதக்)[2] என்றும். தானே அருளிச்செய்தானிறே. இத்தால், ஜகத்காரணபூதனைக் கீழ்ச் சொல்லப்பட்டவனுடைய ஸர்வஸமாஶ்ரயணீயத்வத்தை அருளிச்செய்தாராயிற்று.

(தர்மார்த்தகாம மோக்ஷாக்ய சதுர்விதபலப்ரதனாய்). "𑌧𑌰𑍍𑌮𑌾𑌰𑍍𑌥𑌕𑌾𑌮𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌖𑍍𑌯𑌾𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌰𑍍𑌥𑌾 𑌉𑌦𑌾𑌹𑍃𑌤𑌾𑌃" (தர்மார்த்தகாமமோக்ஷாக்ய: புருஷார்த்த உதாஹ்ருத:)[3] என்று, புருஷார்த்தம் சதுர்விதமாயிறே இருப்பது. தர்ம

---

1. ஸ்ரீகீதை. 7-16. ஹே பரதர்ஷப - பரதகுலச்ரேஷ்டனே, அர்ஜுந - அர்ஜுனனே, ஆர்த்த: - போக்கடித்துக்கொண்ட ஐச்வர்யத்தை மறுபடியும் கேட்கிறவனான ஆர்த்தனும், அர்த்தார்த்தி - நூதன ஐச்வர்யகாமனும், ஜிஜ்ஞாஸு: - ஆத்மஸ்வரூபத்தையடைய இச்சிக்கிறவனும், ஜ்ஞாநீச - பகவத் பிராப்திகாமனும், இதி சதுர்விதா: - இப்படி நான்கு விதமான, ஸுக்ருதிந: - புண்யசாலிகளான ஜனங்கள், மாம் - என்னை, பஜந்தே - பஜிக்கிறார்கள்.

2. மோக்ஷதர்மம். மம - என்னுடையவர்களான, ஜநா: - ஜநங்கள், சதுர்விதா: - நான்கு வகைப்பட்டவர்கள், தே - அவர்கள், ஆர்த்த: - ஆர்த்தனென்றும், ஜிஜ்ஞாஸு: - ஜிஜ்ஞாஸு என்றும், அர்த்தார்த்தீ - அர்த்தார்த்தீ என்றும், ஜ்ஞாநீச - ஜ்ஞாநி என்றும், இதி - இந்தப்ரகாரம், ப்ருதக் ப்ருதக் - வெவ்வேறான, பக்தா ஏவ - பக்தர்களாகவே, ச்ருதா: - சொல்லப்படுகிறார்கள்.

3. மோக்ஷதர்மே. தர்ம - தர்மம், அர்த்த - பொருள், காம - காமம், மோக்ஷாக்ய: - மோக்ஷம் என்று பெயருடைய ஆத்மாநுபவமும் பகவத் அநுபவமும் இவை, புருஷார்த்த: - புருஷார்த்தமாக, உதாஹ்ருத: - சொல்லப்பட்டது.

மாவது - இஷ்டாபூர்த்தங்கள்; இஷ்டமாவது - யாகாதி; பூர்த்தமாவது - காதாதி. அர்த்தமாவது – ஸுவர்ணரஜதாதிகள். காமமாவது - ஐஹிக பாரலௌகிக போக்ய பதார்த்தாநுபவஸுகம். மோக்ஷமாவது - ஆத்மாநுபவ பகவதநுபவங்கள். இவற்றில், தர்மம் – ஸாதநதயாபுருஷார்த்தமாயிருக்கும்; அர்த்தம் - ஸாதநதயாவும், ஸ்வயமாயும் புருஷார்த்தமாயிருக்கும்; காமமோக்ஷங்களிரண்டும் - ஸ்வயம் புருஷார்த்தமாயிருக்கும். ஏவம்விதமான சதுர்விதபலங்களையும் அதிகாராநுகுணமாகக் கொடுக்குமவனென்கை.

இத்தால் - ஸர்வஸமாஶ்ரயணீயனான விவனுடைய ஸகல பலப்ரதத்வத்தையும் அருளிச்செய்தாராயிற்று. "𑌦𑍇𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌭𑍁𑌵𑌨𑌮𑌰𑍍𑌥𑌮𑍇𑌕𑌪𑌿𑌙𑍍𑌗𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌰𑍍𑌦𑍍𑌧𑌿𑌂 𑌤𑍍𑌰𑌿𑌭𑍁𑌵𑌨𑌗𑌾𑌞𑍍𑌚 𑌕𑌾𑌰𑍍𑌤𑌵𑍀𑌰𑍍𑌯𑌃 । 𑌵𑍈𑌦𑍇𑌹𑌃 𑌪𑌰𑌮𑌪𑌦𑌂 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑍍𑌯 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌂 𑌸𑌮𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌸𑍍𑌸𑌕𑌲𑌫𑌲𑌪𑍍𑌰𑌦𑍋 𑌹𑌿 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌃" (தேவேந்த்ரஸ்த்ரிபுவநமர்த்தமேகபிங்கஸ் ஸர்வர்த்திம் த்ரிபுவநகாஞ்ச கார்த்தவீர்ய꞉| வைதேஹ꞉ பரமபதம் ப்ரஸாத்ய விஷ்ணும் ஸம்ப்ராப்தஸ்ஸகலபலப்ரதோ ஹி விஷ்ணு꞉)[1] என்னக்கடவதிறே.

(விலக்ஷணவிக்ரஹயுக்தனாய்). அதாவது – "விக்ரஹந்தான், ஸ்வரூபகுணங்களிலுங்காட்டில் அத்யந்த அபிமதமாய்" என்று தொடங்கி மேலருளிச்செய்கிற வைலக்ஷண்யத்தையுடைய விக்ரஹத்தோடேகூடியிருக்குமவனென்கை. "நீலதோயதஸங்காஶாவிஷ்ணுர்தேவ ஸாஸ்ரா" (நீல

1. மாங்கள்யஸ்தவம். விஷ்ணும் - விஷ்ணுவை, ப்ரஸாத்ய - தன்னிடத்தில் அனுக்ரஹம் பண்ணும்படி செய்துகொண்டு. தேவேந்த்ர: - தேவேந்திரன், த்ரிபுவனம் - மூன்று லோகத்தையும்; ஏகபிங்க: - குபேரனானவன், அர்த்தம் - தனத்தையும்; கார்த்தவீர்ய: - கார்த்த வீர்யார்ஜுனனானவன். த்ரிபுவநகாஞ்ச - த்ரிலோகத்திலிருக்கிற ஸர்வர்த்திம் - ஸகலஸம்ருத்தியையும்; வைதேஹ: - விதேஹ ராஜனானவன், பரமபதம் - பரமபதத்தையும், ஸம்ப்ராப்த: - அடைந்தான், விஷ்ணு; - விஷ்ணுவானவர், ஸகல பலப்ரதோஹி - ஸகல பலங்களையும் கொடுக்குமவரன்றோ!

தோயதமத்யஸ்த்தா வித்யுல்லேகேவ பாஸ்வரா)[1] இத்யாதி யாலே, விக்ரஹவைலக்ஷண்யம் ஶ்ருதி ப்ரஸித்தம். "𑌸𑍍𑌵𑌾-
𑌭𑌿𑌮𑌤𑌾𑌨𑍁𑌰𑍂𑌪𑍈𑌕𑌰𑍂𑌪𑌾𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌦𑍍𑌭𑍁𑌤𑌨𑌿𑌤𑍍𑌯-
𑌨𑌿𑌰𑌵𑌦𑍍𑌯𑌨𑌿𑌰𑌤𑌿𑌶𑌯𑍌𑌜𑍍𑌜𑍍𑌵𑌲𑍍𑌯𑌸𑍌𑌨𑍍𑌦𑌰𑍍𑌯𑌸𑍌𑌗𑌨𑍍𑌧𑍍𑌯𑌸𑍌𑌕𑍁-
𑌮𑌾𑌰𑍍𑌯 𑌲𑌾𑌵𑌣𑍍𑌯𑌯𑍌𑌵𑌨𑌾𑌦𑍍𑌯𑌨𑌨𑍍𑌤𑌗𑍁𑌣𑌨𑌿𑌧𑌿𑌦𑌿𑌵𑍍𑌯𑌰𑍂𑌪" (ஸ்வாபிமதாநுரூபைகரூபாசிந்த்யதிவ்யாத்புத நித்யநிரவத்யநிரதிஶயௌஜ்ஜ்வல்ய ஸௌந்தர்ய ஸௌகந்த்ய ஸௌகுமார்யலாவண்ய யௌவநாத்யநந்தகுணநிதிதிவ்யரூப)[2] என்று திவ்யமங்கள விக்ரஹ வைலக்ஷண்யத்தை அருளிச் செய்தாரிறே எம்பெருமானார்.

இத்தால், கீழ்ச்சொன்ன ஸ்வரூபகுணங்களுக்கு ப்ரகாஶகமாய், ஜகத்காரணத்வத்துக்கும், ஸர்வஸமாஶ்ரயணீயத்வத்துக்கும், ஸர்வபலப்ரதத்வத்துக்கும் ஏகாந்தமான திவ்ய விக்ரஹயோகத்தை யருளிச்செய்தாராயிற்று.

(லக்ஷ்மீ பூமி நீளாநாயகனுமிருக்கும்). அதாவது – "உனக்கேற்கும்" என்னும்படியான வைலக்ஷண்யத்தை யுடையளாய், சேதநர்க்கு புருஷகாரபூதையாயும், ப்ராப்யையாயு மிருக்கும் ப்ரதான மஹிஷியான பெரியபிராட்டி

---

1. தை: உ. 2-11. நீலதோயதமத்யஸ்தா - கருத்த மேகத்தை நடுவிலுடையதான, வித்யுல்லேகேவ - மின்னல்கொடிபோல, பாஸ்வரா - ஒளியுடன் கூடியதாயும்

2. கத்யே. ஸ்வாபிமத - தனக்கு இஷ்டமாயும், அநுரூப - ஸ்வரூபாநுபவத்திற்கு அநுகுணமாயும், ஏகரூப - ஷட்பாவவிகாரமில்லாமலிருப்பதாயும். அசிந்த்ய - இதரங்களோடு ஸமானமாக சிந்திக்கிறதற்கு அசக்யமாயும், திவ்ய - அப்ராக்ருதமாயும், அத்புத - ஆச்சர்யாவஹமாயும், நித்ய நிரவத்ய - நித்ய நிர்தோஷமாயுமுள்ள, நிரதிசயௌஜ்வல்ய - ஸர்வதேஜஸ்ஸுக்களையும் கீழ்ப்படுத்திக்கொண்டிருக்கும் தேஜஸ்ஸு என்ன, ஸௌந்தர்ய - அவயவசோபை யென்ன, ஸௌகந்த்ய - ஸர்வத்தையும் பரிமளிதமாக்கவற்றான கந்தமென்ன, ஸௌகுமார்ய - புஷ்பஹாஸ ஸுகுமாரமாயிருக்கை யென்ன, லாவண்ய - லாவண்யமென்ன, யௌவன - யௌவன மென்ன, ஆதி - இவை முதலான, அனந்த குணநிதி - அஸங்க்யாதமான குணங்களுக்கு கொள்கலமாயிருக்கும், திவ்யரூப - திவ்ய விக்ரஹத்தை யுடையவனே!

யார்க்கும், அவளோடொக்கச்சொல்லலாம்படி யிருக்கும் பூமி நீளைகளான மற்றை யிரண்டுபிராட்டிமார்க்கும் அநுரூபநாயகனுயிருக்குமென்கை.

"ஹ்ரீஶ்சதே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ" (ஹ்ரீஶ்சதே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ)[1] என்று, லக்ஷ்மீ பூமிகளிருவரையும் வேதபுருஷன் சொன்னவிது நீளைக்கும் உபலக்ஷணம். "வைகுண்டேது பரேலோகே ஶ்ரீஸஹாயோ ஜநார்தந꞉ | உபாப்யாம் பூமிநீளாப்யாம் ஸேவித꞉ பரமேஶ்வர꞉" (வைகுண்டேது பரேலோகே ஶ்ரீஸஹாயோ ஜநார்தந꞉ | உபாப்யாம் பூமிநீளாப்யாம் ஸேவித꞉ பரமேஶ்வர꞉)[2] என்னக்கடவதிறே. "ஸ்வாபிமத நித்ய நிரவத்ய அநுரூப ஸ்வரூப ரூப குண விபவ ஐஶ்வர்ய ஶீலாத்யநவதிகாதிஶய அஸங்க்யேய கல்யாண குணகண ஶ்ரீவல்லப! ஏவம்பூத பூமிநீளாநாயக" (ஸ்வாபிமதநித்யநிரவத்யாநுரூப ஸ்வரூபகுணவிபவைஶ்வர்யஶீலாத்யநவதிகாதிஶயாஸங்க்யேய கல்யாணகுணகண ஶ்ரீவல்லப! ஏவம்பூத பூமிநீளாநாயக)[3] என்றிறே எம்பெருமானார் அருளிச்செய்தது. இத்தால்,

1. யஜுஷி. ஆர ப்ர. 3. தே - தேவரீருக்கு, ஹ்ரீச்ச - பூமிப்பிராட்டியாரும், லக்ஷ்மீச்ச - பெரியபிராட்டியாரும், பத்ந்யௌ - மஹிஷிகளாயிருக்கிறார்கள்.

2. சைவபுராணே. அசிந்த்யாத்மா ஜகத்பதி: விஷ்ணு: - நினைவுக்கெட்டாத ஸ்வரூபத்தையுடைய ஜகத்பதியான விஷ்ணுவானவர், பக்தை: - மனன சீலர்களாலும், பாகவதை: ஸஹ - கைங்கர்யபரர்களாலும், ச்ரியா ஸார்த்தம் - பிராட்டியோடு கூட, வைகுண்டேது - வைகுண்டமென்கிற, பரே - உத்க்ருஷ்டமான, லோகே - நித்ய விபூதியில், ஆஸ்தே - எழுந்தருளியிருக்கிறார்.

3. கத்யம். ஸ்வாபிமத - தனக்கிஷ்டமாயும், நித்ய நிரவத்ய - நித்யமாயும் தோஷமற்றதாயும், அநுரூப - அநுரூபமாயுமிருக்கும், ஸ்வரூபரூப - திவ்யாத்ம ஸ்வரூபமென்ன, திவ்யமங்களவிக்ரஹமென்ன, குண - குணங்களென்ன, விபவ ஐச்வர்ய - விபவமென்ன ஐச்வர்யமென்ன, சீல ஆதி - சீலமென்ன இவை முதலான, அநவதிகாதிசய - எல்லையற்ற அதிசயத்தையுடையதாயுமுள்ள, அஸங்க்யேய கல்யாண குணகண - அஸங்க்யேயமான கல்யாண குண ஸமூஹங்களையுடைய, ஶ்ரீவல்லப - பெரியபிராட்டிக்கு பதியே! எவம் பூத பூமி நீளாநாயக - இப்படிக்கொத்த பூமி நீளைக்கு நாயகனானவனே!

கீழ்ச்சொன்ன விக்ரஹவைலக்ஷண்யம், காட்டிலெரித்த நிலாவாகாதபடி அநுபவிக்கக்கடவரான பிராட்டிமாரோட்டைச் சேர்த்தியை யருளிச்செய்தாராயிற்று.

இப்படி, உக்தமான ஸ்வரூபாதிகளை விஸ்தரேண உபபாதித்தருளுகிறார் மேல். அதில், ப்ரதமத்திலே (அகிலஹேயப்ரத்யநீகாநந்த ஜ்ஞாநாநந்தைகஸ்வரூபனுய்) என்றவிதில், அகிலஹேயப்ரத்யநீகத்வத்தை யுபபாதிக்கிறுர்;

2. **அகிலஹேயப்ரத்யநீகனுகையாவது – தமஸ்ஸுக்கு தேஜஸ்ஸு போலேயும், ஸர்ப்பத்துக்கு கருடனைப் போலேயும், விகாராதி தோஷங்களுக்கு ப்ரதிபடமாயிருக்கை.**

(அகிலஹேயப்ரத்யநீகனுகையாவது) என்று தொடங்கி. ஹேயமாவது – தோஷம். அகிலஹேயமென்கையாலே – த்ரிவிதசேதநாசேதந தோஷங்களையும் சொல்லுகிறது. "த்ரிவித சேதநாசேதநதோஷமும் ஈச்வரனுக்கு வாராது" என்று இது தன்னை வ்யக்தமாக மேலே யருளிச்செய்கிறுரிறே.

(தமஸ்ஸுக்கு தேஜஸ்ஸுபோலேயும், ஸர்ப்பத்துக்கு கருடனைப்போலேயும்) என்றது - தமஸ்ஸுக்கு தேஜஸ்ஸு ப்ரதிபடமாயிருக்குமாபோலேயும், ஸர்ப்பத்துக்கு கருடன் ப்ரதிபடனுயிருக்குமாபோலேயும் என்கை.

(விகாராதிதோஷங்கள்) என்கிறவிடத்தில், விகாரசப்தத்தாலே - த்ரிவித அசித்தினுடையவும் பரிணாமத்தைச் சொல்லுகிறது. ஆதிசப்தத்தாலே - பத்தசேதநருடைய அஜ்ஞாநதுக்கங்களையும், முக்தருடைய சேறுதோய்த்துக் கழுவினுரைப்போலே ப்ரக்ருதி ஸம்ஸ்ருஷ்டராய் விடப்பட்ட வாகாரத்தையும், நித்யருடைய பரிச்சிந்நஸ்வரூபத்வ பாரதந்த்ரியங்களையும் சொல்லுகிறது. பாரதந்த்ரியம் தோஷமோ? என்னில்; புருஷனுக்கு ஸ்தநோத்பேதம் போலே, ஸ்வதந்த்ரனுக்கு தோஷமென்கை. இத்தோஷங்களுக்கு

ப்ரதிபடமாயிருக்கையாவது - தான் மாறுயிருக்கை. ப்ரதி படமென்கையாலே – "ஆத்மா ஜ்ஞாநமயோऽமல:" (ஆத்மா ஜ்ஞாநமயோமல:)[1] என்கிறபடியே, ஸ்வரூபநிபந்தநமாக மலஸம்பந்த மில்லையேயாகிலும், உபாதிநிபந்தநமான மல ஸம்பந்தத்துக்கு யோக்யமான ஆத்மஸ்வரூபத்திற்காட்டில் பகவத் ஸ்வரூபத்துக்கு வாசிதோற்றுகிறது. "தத் ப்ரஹ்ம பரமம் நித்யமஜமக்ஷயமவ்யயம் | ஏகஸ்வரூபந்து ஸதா ஹேயாபாவாச்ச நிர்மலம்" (தத் ப்ரஹ்ம பரமம் நித்யமஜ மக்ஷயமவ்யயம் | ஏகஸ்வரூபந்து ஸதா ஹேயாபாவாச்ச நிர் மலம்)[2] "ஸமஸ்தஹேயரஹிதம் விஷ்ண்வாக்யம் பரமம் பதம்" (ஸமஸ்தஹேய ரஹிதம் விஷ்ண்வாக்யம் பரமம் பதம்)[3] "அவிகாராய ஶுத்தாய நித்யாய பரமாத்மநே" (அவிகா ராயஶுத்தாய நித்யாயபரமாத்மநே)[4] என்னக்கடவதிறே.

ஹேயப்ரத்யநீகத்வமாவது – ஆஶ்ரிதருடைய ஹேய நிராஸகத்வத்துக்கு அடியான ஹேயப்ரதிபடத்வ மென்ன வுமாம் என்னுமொருயோஜனையுமுண்டிறே கத்யவ்யாக் யாநங்களிலே. நஞ்சீயர் ஆச்சான்பிள்ளை முதலான ஆசார்

1. வி. பு. 6-7-22. ஆத்மா ஜ்ஞானமயன், நிர்மலன்.

2. வி. பு. 1-2-15, யத் - யாதொன்று, பரமம் - உத்க்ருஷ்ட மாயும், நித்யம் - நித்யமாயும், அஜம் - உத்பத்தி -ஶூன்யமாயும், அக்ஷ யம் - நாசமற்றதாயும், அவ்யயம் - ஒரு நாளும் நசியாததாயும், ஏக ஸ்வரூபந்து - எப்பொழுதும் ஏகரூபமாயும், ஸ தா - ஸர்வகாலத்தி லேயும், ஹேயாபாவாத் - ஹேயமில்லாமையினுலே, நிர்மலம் - நிர் மலமாயுமிருக்கிறதோ, தத் - அதுவானது, ப்ரஹ்ம - ப்ருஹ்மம்.

3. விஷ்ண்வாக்யம் - விஷ்ணு என்று பெயரையுடைய, பரமம் பதம் - பரம ப்ராப்யமானது, ஸமஸ்த ஹேய ரஹிதம் - ஸமஸ்த மான ஹேயமற்றதாயுமிருக்கிறது,

4. வி. பு. 1-2-1- அவிகாராய - விகாரஶூன்யனுயும், சுத்தாய - க்லேசகர்மஶூன்யனுயும், நித்யாய - நித்யனுயும், பரமாத்மநே - ஸ்வ தந்த்ர ஆத்மாவாயும், ஸதைகரூபரூபாய - தன்ஸ்வரூபத்துக்குத் துல் யமான திவ்யமங்கள்விக்ரஹத்தையுடையவனுயும், ஸர்வஜிஷ்ணவே - எல்லாவற்றையும் ஜயிக்கத்தகுந்த சக்தியுடையனுயிருக்கிற, விஷ் ணவே - விஷ்ணுவின் பொருட்டு, நம: - வணங்குகிறேன்.

கர்களருளிச்செய்தது. (ஸர்ப்பத்துக்கு கருடனைப்போலே யும்) என்கிற த்ருஷ்டாந்தத்தாலே, அதுவும் இவ்விடத் துக்கர்த்தமாகுமோ? என்னில்; விகாராதி தோஷங் களுக்கு ப்ரதிபடமாயிருக்கை என்கையாலே, இவ்விடத் தில் இவர்க்கது விவக்ஷிதமன்று.

அநந்தரம், அநந்தத்வத்தை யுபபாதிக்கிறார்;

3. அநந்தனாகையாவது – நித்யனாய், சேதநாசேதநங் களுக்கு வ்யாபகனாய், அந்தர்யாமியா யிருக்கை.

(அநந்தனாகையாவது) என்று தொடங்கி. அநந்த த்வமாவது – தேஶத꞉ காலதோ வஸ்துதஶ்ச பரிச்சேத்யத வம்; விபுத்வாத் தேஶபரிச்சேதராஹித்யம்; நித்யத்வாத் காலபரிச்சேதராஹித்யம்; ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்த வஸ்துக் களுக்கும் ப்ரகாரியாயிருக்கையாலும், தனக்கு ப்ரகார்யந் தரமில்லாதபடி நிற்கையாலும், ஸத்ருஶவஸ்து அபாவத் தாலே வஸ்துபரிச்சேதராஹித்யம்.

அத்தை அருளிச்செய்கிறார்; (நித்யனாய், சேதநாசேத நங்களுக்கு வ்யாபகனாய், அந்தர்யாமியாயிருக்கை) என்று. இத்தால், நித்யனாகையாலே, இன்னகாலத்திலுள்ளான், காலாந்தரத்தில் இல்லையென்கிற காலபரிச்சேதமுமின்றி யிலே, ஸகல சேதநாசேதநங்களுக்கும் வ்யாபகனாய்க் கொண்டு விபுவாயிருக்கையாலே - இன்ன தேஶத்திலுள் ளான், தேஶாந்தரத்திலில்லையென்கிற தேஶபரிச்சேதமின் றியிலே, ஸர்வாந்தர்யாமியாகையாலே ஸர்வத்துக்கும் தான் ப்ரகாரியாய், தனக்கு ப்ரகார்யந்தரமில்லாதபடியிருக் கையாலே இன்னவஸ்து போலே யென்கிற வஸ்துபரிச் சேதமுமின்றியிலே யிருக்கையென்றதாயிற்று. "நித்யம் விபும் ஸர்வகதம் ஸுஸூக்ஷ்மம்" (நித்யம் விபும் ஸர்வ கதம் ஸுஸூக்ஷ்மம்)[1] "அந்த꞉ ப்ரவிஷ்டஶ்ஶாஸ்தா ஜநா நாம் ஸர்வாத்மா" (அந்த꞉ ப்ரவிஷ்டஶ் ஶாஸ்தா ஜநாநாம்

1. மு. உப. 1-1-6. நித்யனாயும், விபுவாயும், ஸர்வத்தையும் அடைந்திருக்குமவனும் அதிஸூக்ஷ்மமானவனும்.

ஸர்வாத்மா)[1] "யஸ்யாத்மா ஶரீரம், யஸ்ய ப்ருதிவீ ஶரீ-ரம்" (யஸ்யாத்மா ஶரீரம், யஸ்ய ப்ருதிவீஶரீரம்)[2] "ந தத்ஸமஶ்சாப்யதிகஶ்ச த்ருஶ்யதே" (ந தத்ஸமஶ்சாப்யதிகஶ்ச த்ருஶ்யதே)[3] என்னக்கடவது

தாமொட்டற்றிருக்கையன்றிக்கே, அந்தர் யாமிதயா அவஸ்திதனாயிருக்குமாகில், தத்கததோஷங்கள் வாராதோ? என்கிற ஶங்கையை அநுவதிக்கிறார்;

4. அந்தர்யாமியானால் தோஷங்கள் வாராதோ வென்னில்;

(அந்தர்யாமியானால் தோஷங்கள் வாராதோவென்னில்) என்று.

அத்தைப் பரிஹரிக்கிறார்;

5. ஶரீரகதங்களான பால்யாதிகள் ஜீவாத்மாவுக்கு வாராதாப் போலே, த்ரிவிதசேதநாசேதநதோஷமும் ஈஶ்வரனுக்கு வாராது.

(ஶரீரகதங்களான) என்று தொடங்கி. அதாவது — இந்த ஶரீரத்தை அதிஷ்டித்து ஸ்வாதீநமாக நிர்வஹித்துக்கொண்டிராநிற்கச் செய்தேயும், தத்கதமான பால்ய யௌவநாதிவிகாரங்கள் ததந்தர்வர்த்தியான ஜீவாத்மாவுக்கு வாராதாப் போலே, த்ரிவித சேதநாசேதநங்களுக்கும் அந்தர்யாமியாய், இவற்றை ஶரீரமாகக் கொண்டு இராநிற்கச் செய்தேயும் தத்கததோஷம் ஈஶ்வரனுக்கு வாராது என்கை. "ஆவிசேருயிரினுள்ளா லாதுமோர் பற்றிலாத பாவனையதனைக்கூடி லவனையுங்கூடலாமே"[4]

1. தை. ஜநாநாம் - எல்லா சேதனர்களுடைய, அந்த. ப்ரவிஷ்ட: - உள்ளே வியாபித்து, சாஸ்தா - நியாமகனாயும், ஸர்வாத்மா - சேதனங்களுக்கு ஆத்மாவாயுமிரா நின்றான்.

2. 12-ம் பக்கம் பார்க்க.

3. ச்வேதாச்வதரம். தத்ஸம;ச - அந்த பரமாத்மாவுக்கு ஸமானமானவரும், அப்யதிக:ச - அவனுக்கு மேலானவனும், நத்ருச்யதே - காணப்படுகிறதில்லை.

4. திவா. 3-4-10.

என்றிறே ஆழ்வாருமருளிச்செய்தது. ஶரீரியான ஜீவாத்மாவுக்கு ஶரீரகதங்களான பால்யாதிகள் வந்ததில்லையேயாகிலும், ஶரீரஸம்பந்த நிபந்தநமாக துக்க அஜ்ஞாநாதிகள் வருகிறவோபாதி, ஶரீரபூதமான விவற்றோட்டை ஸம்பந்தத்தாலே இவனுக்குமிங்ஙனே சில தோஷங்கள் வாராதோ? என்னில்; வாராது. அதுக்கடி - ப்ரவேஶஹேதுவிஶேஷம்; இவனைப்போலே கர்மமடியாகவன்றிக்கே, அநுக்ரஹமடியாகவிறே அவனுக்கு இவற்றில் ப்ரவேஶமிருப்பது. "அநஶ்நந்ந்ய:" (அநஶ்நந்நந்ய:)[1] "ஏஷஸர்வபூதாந்தராத்மாபஹதபாப்மா" (ஏஷஸர்வபூதாந்தராத்மாபஹதபாப்மா)[2] "விஷ்ணவே ஸர்வஜிஷ்ணவே" (விஷ்ணவே ஸர்வஜிஷ்ணவே)[3] என்றுநின்றதிறே.

அநந்தரம், ஜ்ஞாநாநந்தைகஸ்வரூபத்வத்தை உபபாதிக்கிறார்;

6. ஜ்ஞாநாநந்தைகஸ்வரூபனாகையாவது - ஆநந்தரூப ஜ்ஞாநனாயிருக்கை.

(ஜ்ஞாநாநந்த) இத்யாதியாலே. ஜ்ஞாநாநந்தங்களையே ஸ்வரூபமாக வுடையனாயிருக்கை என்று, ஶப்தத்

---

1. ருக்வேதம். ஸுபர்ணா - நல்ல ஜ்ஞானரூபமான சிறகையுடையவர்களாயும், ஸயுஜா - ஒருவருக்கொருவர் ஸமாநர்களாயும், ஸகாயா - சேஷ சேஷி ரூபமான பாந்தவ்யமுடையவர்களாயுங்கொண்டு, ஸமானம் விருக்ஷம் - ஒரு சரீரத்தை, பரிஷஸ்வஜாதே - பற்றிக்கிடக்கிறார்கள், தயோ: - அந்த ஜீவேச்வரர்களுக்குள் அந்ய: - ஜீவனானவன்; பிப்பலம் - கர்மபலத்தை, ஸ்வாது அத்தி - இனிமையாய் புஜிக்கிறான், அந்ய: - வேறான ஈச்வரன், அநச்நந் - (கர்மபலத்தை) புஜியாமல், அபிசாகசீதி - மிகவும் பிரகாசிக்கிறான்.

2. ஸுபாலோபநிஷத். ஸர்வபூதாந்தராத்மா - ஸகலமான ப்ராணிகளுக்கு அந்தராத்மாவாயிருப்பவனும், அபஹதபாப்மா - எல்லாவற்றிற்கும் அந்தராத்மாவாயிருந்தாலும் அவைகளின் தோஷம் தன்னிடம் தட்டாதபடி தோஷமற்றவனும், திவ்ய: - பரமபதத்தையிருப்பிடமாகவுடையவனும், தேவ: - ஸ்வயம் ப்ரகாசனாய் விளங்குகிறவன், ஏக: - அத்விதீயனான, ஏஷ: நாராயண: - இந்த ஸ்ரீமன் நாராயணன்.

3. வி. பு. 1-2-1. ஸர்வஜிஷ்ணவே - ஸர்வத்தையும் ஜயிக்கிறவனான, விஷ்ணவே - விஷ்ணுவின் பொருட்டு.

துக்கு அர்த்தம் சொல்லவேண்டியிருக்க, ஜ்ஞாநமென்றும் ஆநந்தமென்றும் பிரித்துச் சொல்ல, இரண்டவஸ்த்தை யின்றிக்கே ஜ்ஞாநமே ஸ்வரூபமாய், அதுதான் அநுகூலமாயிருக்கை ஆநந்தமாகையாலே, (ஆநந்தரூப ஜ்ஞாநனாயிருக்கை) என்று அருளிச்செய்கிறார். "அநுகூலஜ்ஞாநமே ஸ்வரூபமாயிருக்க ஜ்ஞாநாநந்தங்களென்று பிரித்துச் சொல்லுகிறது, இரண்டுமுண்டாகைக்காக" என்றிறே இவர்தாமிட்டருளின கத்யவ்யாக்யாநத்திலே யருளிச்செய்தது.

(ஆநந்தரூபஜ்ஞாநனாயிருக்கை) என்று, அதுதன்னை யுபபாதிக்கிறார்;

### 7. அதாவது – கட்டடங்க வநுகூலமாய், ப்ரகாஶ முமாயிருக்கை.

(அதாவது) இத்யாதியாலே. கட்டடங்கவென்றது - ஸ்வரூபமுள்ள பரப்பெங்கும் என்றபடி. இத்தால், ஸ்வரூபத்தில் அநநுகூலமாயாதல், அப்ரகாஶமாயாதலிருக்குமிடமில்லை யென்கை. ஜ்ஞாநாநந்த ஏகஸ்வரூபனென்றவிதில், ஏகஶப்தார்த்தமிதுவிறே. அநுகூலத்வமாவது - ஆஹ்லாதகரத்வம். ப்ரகாஶத்வமாவது - ஸ்வயம்ப்ரகாஶத்வம். "அநந்யாதீநப்ரகாஶத்வாஹ்லாதகரத்வரூப-ஜ்ஞாநமேவ யஸ்ய ஸ்வரூபம், ஸ ஹி ஜ்ஞாநாநந்தைகஸ்வரூப:" (அநந்யாதீநப்ரகாஶத்வாஹ்லாதகரத்வரூப ஜ்ஞாநமேவ யஸ்ய ஸ்வரூபம், ஸ ஹி ஜ்ஞாநாநந்தைகஸ்வரூப:)[1] என்னக்கடவதிறே.

இப்படி, ஸ்வரூபவைலக்ஷண்யத்தை யுபபாதித்த வநந்தரம், ஸ்வரூபாஶ்ரிதமான குணங்களினுடைய வைலக்ஷண்யத்தை யருளிச்செய்கிறார்;

1. அநந்யாதீன ப்ரகாசத்வ - வேறொன்றின் அதீனமில்லாத ப்ரகாசத்வமும், ஆஹ்லாத கரத்வ ரூப ஜ்ஞாநமேவ - ஸந்தோஷ கரத்வ ரூபமுமான ஜ்ஞானமே, யஸ்ய ஸ்வரூபம் - யாதொருவனுக்கு ஸ்வரூபமோ, ஸ ஹி - அவனே, ஜ்ஞாநாநந்தைகஸ்வரூப: - ஜ்ஞாநாநந்தைகஸ்வரூபன்.

**8. இவனுடைய ஜ்ஞாநஶக்த்யாதி கல்யாண குணங்கள் நித்யங்களாய், நிஸ்ஸீமங்களாய், நிஸ்ஸங்க்யங்களாய், நிருபாதிகங்களாய், நிர்தோஷங்களாய், ஸமாநாதிகரஹிதங்களாயிருக்கும்.**

*(இவனுடைய ஜ்ஞாநஶக்த்யாதி கல்யாணகுணங்கள்) என்று தொடங்கி. ஆதிஶப்தத்தாலே - பல ஐஶ்வர்ய வீர்ய தேஜஸ்ஸுக்களும், வாத்ஸல்யாதிகளும், ஶௌர்யாதிகளும், ஆகிற குணவிஶேஷங்களெல்லாவற்றையும் சொல்லுகிறது.*

*நித்யங்களாகையாவது - உத்பத்திவிநாஶரஹிதங்களாயிருக்கை. ஸ்வரூபாநுபந்திகளாகையாலே, யாவதாஶ்ரயபாவிகளாயிருக்குமிறே. "𑌤 𑌇𑌮𑍇 𑌸𑌤𑍍𑌯𑌾𑌃 𑌕𑌾𑌮𑌾𑌃" (த இமே ஸத்யாஃ காமாஃ)[1] என்று, குணங்களினுடைய நித்யத்வம் ஶ்ருதிஸித்தம். "𑌕𑌾𑌮𑍍𑌯𑌨𑍍𑌤 𑌇𑌤𑌿 𑌕𑌾𑌮𑌾𑌃 𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌗𑌣𑌾𑌃 𑌤 𑌇𑌮𑍇 𑌸𑌤𑍍𑌯𑌾𑌃 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾 𑌇𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃" (காம்யந்த இதி காமாஃ கல்யாணகுணாஃ த இமே ஸத்யாஃ நித்யா இத்யர்த்தஃ)[2] என்றிறே இந்த ஶ்ருதிக்கர்த்தம். "ஈறிலவண் புகழ்"[3] என்றாரிறே ஆழ்வார்.*

*நிஸ்ஸீமங்களாகையாவது - ஓரொன்றே அவதி காணவொண்ணாதிருக்கை. "𑌯𑌤𑍋 𑌵𑌾𑌚𑍋 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌅𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌮𑌨𑌸𑌾 𑌸𑌹" (யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்யமநஸா ஸஹ)[4] என்று, மீண்டுவிட்டதிறே*

---

1. *சா, உப.* த இமே - அந்த இந்த, ஸத்யா: - ஸத்யங்களான, காமா: - கல்யாண குணங்கள்.

2. காம்யந்த இதி காமா: - விரும்பப்படுமவைகளாகையால் காமங்கள், இதி - என்று, கல்யாண குணா: - கல்யாணகுணங்கள், (சொல்லப்படுகின்றன.) தே இமே ஸத்யா: நித்யா: இதி அர்த்த: - அந்த இவை ஸத்யங்களென்றால் நித்யங்கள் என்று இந்த ச்ருதிக்கு அர்த்தம்

3. தி. வா. 1-2-10.

4. தை. ஆ. 9-1. யத: - யாதொரு பரமாத்மாவிடத்திலிருந்து, வாச: - வேதவாக்குகள், மநஸா ஸஹ - மனதுடன் கூட, அப்ராப்ய - அதன் முடிவை நினைக்கக்கூடாமலும், நிவர்த்தந்தே - திரும்புகின்றனவோ.

ஆநந்த குணத்தையெல்லாங் காணப்புக்க வேதம். இது, ஆநந்தகுணமொன்றிலுமன்றிறே; குணங்களெல்லாம் இப்படியேயிறே இருப்பது. "உபர்யுபர்யப்ஜபுவோ-஽பி பூருஷாந் ப்ரகல்ப்ய தே யே ஶதமித்யநுக்ரமாத் । கிரஸ்த்வதேகைக குணாவதீப்ஸயா ஸதா ஸ்திதா நோத்யமதோ஽திஶேரதே" (உபர்யுபர்யப்ஜபுவோபி பூருஷாந் ப்ரகல்ப்ய தே யே ஶதமித்யநுக்ரமாத் । கிரஸ்த்வதேகைக குணாவதீப்ஸயாஸதா ஸ்த்திதா நோத்யமதோதிஶேரதே)[1] "உயர்நலம்"[2] என்றிறே ஆழ்வாரும் என்னக்கடவதிறே. அருளிச்செய்தது.

(நிஸ்ஸங்க்யங்களாகையாவது) - இப்படிப்பட்ட குணங்கள் தான் எண்ணிறந்திருக்கை. "யதா ரத்நாநி ஜலதேரஸங்க்யேயாநி புத்ரக । ததா குணா ஹ்யநந்தஸ்ய அஸங்க்யேயா மஹாத்மந:" (யதா ரத்நாநி ஜலதேரஸங்க்யேயாநி புத்ரக । ததா குணா ஹ்யநந்தஸ்ய அஸங்க்யேயா மஹாத்மந:)[3] "வர்ஷாயுதைர்யஸ்ய குணா ந ஶக்யா வக்தும் ஸமேதைரபி ஸர்வலோகை: । மஹாத்மந: ஶங்கசக்ராஸிபாணேர் விஷ்ணோர்ஜிஷ்ணோர்வஸுதேவாத்மஜஸ்ய" (வர்ஷாயுதைர்யஸ்ய குணா ந ஶக்யா வக்தும் ஸமேதைரபி ஸர்வலோகை: । மஹாத்மந: ஶங்கசக்ராஸிபாணேர் விஷ்

1. ஸ்தோத்ர ரத்நம். 19. கிர: - வேதவாக்குகள், அப்ஜபுவோபி - ப்ரஜாபதிக்கும், உபரி - மேலே மேலே, புருஷாந் - மனிதர்களை, தேயே சதம் இதி - அந்தந்த நூறுபங்கு, இதி அநுக்ரமாத் - என்கிற ப்ரகாரமாக, ப்ரகல்ப்ய - கல்பித்து, ஏகைககுண - ஒவ்வொரு கல்யாண குணங்களினுடைய, அவதி ஈப்ஸயா - முடிவை அடைய இச்சையினாலே, ஸதாஸ்திதா: - எப்போதுமுள்ளதாய்கொண்டு, உத்யமத: - ஆரம்பத்தைக் காட்டிலும், ந அதிசேரதே - மேல்செல்லவில்லை.

2. தி. வா. 1-1-1.

3. ஹே புத்ரக - ஓ குழந்தாய்! ஜலதே: - ஸமுத்திரத்திற்கு, ரத்நாநி - இரத்தினங்கள், யதா - எப்படி, அஸங்க்யேயாநி - எண்ணிறந்தவைகளோ, ததா - அப்படியே, மஹாத்மந: - மஹாத்மாவான, அநந்தஸ்ய - பகவானுடைய, குணா: - குணங்கள், அஸங்கியேயா: - அளவற்றவை.

ஷ்ணோர் ஜிஷ்ணோர் வஸுதேவாத்மஜஸ்ய)[1] "[illegible] (சதுர்முகாயுர் யதி கோடிவக்த்ரோ பவேந் நர: க்வாபி விசுத்தசேதா: | ஸ தே குணாநாமயுதைகமம்சம் வதேந் ந வா தேவவர ப்ரஸீத)[2] "[illegible]" (ந ஹி தஸ்ய குணாஸ்ஸர்வே ஸர்வைர் முநிகணைரபி | வக்தும் சக்யா வியுக்தஸ்ய ஸத்வாத்யைரகிலைர்குணை:)[3] என்னக் கடவதிறே. "எண்ணில் தொல்புகழ்"[4] என்றாரிறே ஆழ்வாரும். "[illegible]

---

1. பாரதம். பீஷ்மபர்வ. மஹாத்மந: - மஹாத்மாவும், சங்க சக்ராஸிபாணே: - பாஞ்சசந்யம் சக்கரம் வாள் இவைகளை கையில் தரித்திருப்பவனும், ஜிஷ்ணோ: - ஜயசீலனும், வஸுதேவாத்மஜஸ்ய - வஸுதேவனுக்குத்திருக்குமாரனு யவதரித்தவனுமான, விஷ்ணோ: - வ்யாபகனுன, யஸ்ய - யாதொரு கண்ணனுடைய, குணா: - கல்யாணகுணங்கள், ஸர்வலோகை: - எல்லா ஜனங்களாலும், ஸமேதைரபி - சேர்ந்துகொண்டாலும், வர்ஷாயுதை: - பதினாயிரம் வருஷங்களானாலும், வக்தும் - சொல்லுவதற்கு, ந சக்யா; - முடியாது.

2. வராஹபுராணம். சதுர்முகாயு: - பிரும்மாவின் ஆயுளுடையவனும், கோடிவக்த்ர: - கோடிக்கணக்கான முகத்தையுடையவனும், விசுத்தசேதா: - மிகவும் சுத்தமான (பிரும்ஹபாவனைக நிஷ்டமென்கை) மனதையுடையவனுமாக, நர: - ஒரு மனிதன், க்வாபி. எங்காவது, பவேத் யதி - இருப்பானேயாகில், ஸ: - அவன், தே உம்முடைய, குணாநாம் குணங்களுடைய, அயுதைகதேசம் - பதினாயிரத்திலொரு பங்கை, வதேத் ந வா - சொல்லுவானே சொல்லமாட்டானே, அறிகிலோம். ஹே தேவவர - ஓ தேவதைகளுக்குள் மேலானவனே! ப்ரஸீத - கிருபை செய்யவேண்டும்.

3. ஸத்வாத்யை: - ஸத்வகுணத்தை முதலாகவுடைய, அகிலை: - ஸமஸ்தமான, குணை: - குணங்களாலே, வியுக்தஸ்ய - பிரிக்கப்பட்டிருக்கிற, தஸ்ய - அந்த பரமாத்மாவினுடைய, ஸர்வே குணா: - ஸமஸ்த குணங்களும், ஸர்வை: - ஸமஸ்தமான, முநிகணைரபி - ரிஷிக்கூட்டங்களாலேயும், வக்தும் - சொல்லுகைக்கு, ந சக்யா: - ஸமர்த்தமன்று. ஹி ப்ரஸித்தம்.

4. தி. வா. 3-3-3.

𑌕𑍋𑌤𑍍𑌤𑌰𑌂 𑌸𑍍𑌵𑌾𑌶𑍍𑌰𑌯𑌂 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌤𑍍𑌤𑌾𑌦𑍃𑌶𑌵𑍈𑌭𑌵𑍈𑌰𑌗𑌣𑌿-
𑌤𑍈𑌰𑍍𑌨𑌿𑌸𑍍𑌸𑍀𑌮𑌭𑍂𑌮𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑍈𑌃 । 𑌨𑌿𑌤𑍍𑌯𑍈𑌰𑍍𑌦𑌿𑌵𑍍𑌯𑌗𑍁𑌣𑍈-
𑌸𑍍𑌤𑌦𑌤𑌿𑌶𑌯𑌶𑍁𑌭𑌤𑍍𑌵𑍈𑌕𑌾𑌸𑍍𑌪𑌦𑌾𑌤𑍍𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑍈𑌰𑌿𑌤𑍍𑌥𑌂 𑌸𑍌-
𑌨𑍍𑌦𑌰𑌬𑌾𑌹𑍁𑌮𑌸𑍍𑌮𑌿 𑌶𑌰𑌣𑌂 𑌯𑌾𑌤𑍋 𑌵𑌨𑌾𑌦𑍍𑌰𑍀𑌶𑍍𑌵𑌰𑌮𑍍" (ஏகைகஸ்யகுணஸ்யவிப்ருடபி வை லோகோத்தரம் ஸ்வாஶ்ரயம் குர்யாத் தாத்ருஶ வைபவைரகணிதைர் நிஸ்ஸீமபூமாந்விதை: । நித்யைர்திவ்யகுணைஸ்ததோதிகஶுபத்வைகாஸ்பதாத்மாஶ்ரயைரித்தம் ஸௌந்தரபாஹுமஸ்மிஶரணம்யாதோ வநாத்ரீஶ்வரம்)[1] என்கிற ஶ்லோகத்திலே குணங்களினுடைய நித்யநிஸ்ஸீமநிஸ்ஸங்க்யத்வங்களை யருளிச் செய்தாரிறே ஆழ்வான்.

நிருபாதிகங்களாகையாவது – பரதந்த்ர வஸ்துகதங்களாகையாலே – ஸ்வோதயாதிகளிலே ஈஶ்வர இச்சையாகிற உபாதியை யபேக்ஷித்திருக்கும் சேதநகுணங்கள்போலன்றிக்கே, ஸ்வாபாவிகங்களாயிருக்கை. ஸ்ரீபாஷ்யத்தில் "𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌤𑍋 𑌨𑌿𑌰𑌸𑍍𑌤𑌨𑌿𑌖𑌿𑌲𑌦𑍋𑌷𑌾𑌨𑌵𑌧𑌿𑌕𑌾𑌤𑌿𑌶𑌯𑌾-𑌸𑌙𑍍𑌖𑍍𑌯𑍇𑌯𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌗𑍁𑌣𑌗𑌣𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮𑍋𑌽𑌭𑌿𑌧𑍀-𑌯𑌤𑍇"(ஸ்வபாவதோ நிரஸ்தநிகிலதோஷாநவதிகாதிஶயாஸங்க்யேய கல்யாணகுணகண: புருஷோத்தமோபிதீயதே)[2]

---

1. ஸௌ. ஸ்த. 26. (யாதொரு குணங்களிலே) ஏகைகஸ்ய குணஸ்ய - ஒவ்வொரு குணத்தினுடைய, விப்ருடபி - பிந்துவும் அதாவது அல்பமும், ஸ்வாச்ரயம் - ஸ்வாச்ரயத்தை, அதாவது ஆதாரமான குணியை, லோகோத்தரம் - ஸர்வாதிகமாக, குர்யாத் - பண்ணும், வை - ப்ரஸித்தம் தாத்ருசவைபவை; - அப்படிக்கொத்த வைபவத்தையுடையதாயும். அகணிதை: - அஸங்க்யாதமாயும், நிஸ்ஸீமபூமாந்விதை: - முடிவில்லாமலிருக்கிற வைபவத்தோடு கூடினதாயும், நித்யை: - நித்யங்களாயும், ததோதிக சுபத்வைகாஸ்பதாத்மாச்ரயை: - அதைக்காட்டிலும் அதிகமான சுபத்திற்கு முக்யாதாரமான திவ்யாத்ம ஸ்வரூபத்தை ஆசிரயித்திருக்கிற, திவ்யகுணை: - திவ்ய குணங்களாலே, இத்தம் வநாத்ரீச்வரம் - ஸம்ருத்தனாய் சோலைமலைக்கு நிர்வாஹகனை, ஸௌந்தரபாஹும் - ஸௌந்தரபாஹுவை அதாவது ஸௌந்தரத் தோளுடையானை, சரணம் - சரணமாக, யாத: - அடைந்தவனாக, அஸ்மி - ஆகிறேன். வை - ப்ரஸித்தம்.

2. ஸ்ரீபாஷ்யம். ஸ்வபாவத: - ஸ்வபாவத்தாலே, நிரஸ்த நிகில தோஷாநவதிகாதிசயாஸங்க்யேய கல்யாண குண கண: - தன்னைப்

என்கிறவிடத்துக்கு வ்யாக்யாநம் பண்ணுகிற ச்ருதப்ரகா சிகாகாரர், அநவதிகாதிசயபதத்தாலே நித்யஸித்தரை வ்யாவ்ருத்திசொல்லுகிறதென்றுமுந்துறவொருயோஜனை பண்ணி, "அநுஷக்தேந ஸ்வபாவத இதி பதேந வா நித்ய ஸித்தவ்யாவ்ருத்தி: தேஷாம் தாத்ருச குணகத்வம் ஹி பகவந்நித்யேச்சாதீநம்" (அநுஷக்தேந ஸ்வபாவத இதி பதேந வா நித்யஸித்தவ்யாவ்ருத்தி: தேஷாம் தாத்ருசகுணகத்வம் ஹி பகவந்நித்யேச்சாதீநம்)[1] என்று, அநந்தரயோஜனை யிலே யிவ்வர்த்தத்தை யருளிச்செய்தாரிறே. "ஸ்வாபா விகீ ஜ்ஞாநபலக்ரியா ச" (ஸ்வாபாவிகீஜ்ஞாநபலக்ரியா ச)[2] என்று, குணங்களினுடைய ஸ்வாபாவிகத்வத்தை ச்ருதி சொல்லாநின்றதிறே. இந்த ச்ருதியில், க்ரியை யென்கிறது-நியமநத்தை. "பராஸ்யேதி - ஜ்ஞாநசக்த்யா தீநாம் ஸ்வாபாவிகத்வமுக்தம், க்ரியா - நியமநம்" (பராஸ்யே தி - ஜ்ஞாநசக்த்யாதீநாம் ஸ்வாபாவிகத்வமுக்தம் க்ரியா - நியமநம்)[3] என்றிறே இதுக்கும் ச்ருதப்ரகாசிகாகாரர் வ்யாக்யாநம் பண்ணிற்று.

நிர்தோஷங்களாகையாவது - ஹேயகுண ஸம்ஸர் கமாகிற தோஷமின்றிக்கேயிருக்கை. "அபஹதபா.

---

பட்டிருக்கிற, ஸமஸ்த - தோஷத்தையுடையவனுய் எல்லையில்லாத அதிசயத்தை யுடைத்தாய் அஸங்க்யேமான கல்யாணகுண ஸமூஹங் களையுடைய, புருஷோத்தம: - புருஷோத்தமனானவன், அபிதீயதே - சொல்லப்படுகிறுன்.

1. ச்ருதப்ரகாசிகை. அநுஷக்தேந ஸ்வபாவத இதி பதேந - பின்பும் சேர்த்துக்கொள்ளப்பட்ட ஸ்வபாவத: என்கிற பதத்தாலே, நித்யஸித்த வ்யாவ்ருத்தி: - நித்ய ஸித்தர்களுடைய வ்யாவ்ருத்தி சொல்லுகிறது, தேஷாம் தாத்ருச குணத்வம் - அவர்களுக்கு அப்பேர் க்கொத்த குணத்தையுடைத்தாயிருக்கையானது, பகவந்நித்யேச்சா தீநம் - பகவானுடைய நித்யேச்சையால் ஏற்பட்டது.

2. ச்வே. உப. ஜ்ஞாநபல க்ரியாச - ஜ்ஞானமும் பலமும் நிய மநமும், ஸ்வாபாவிகீ - ஸ்வபாவஸித்தமானது.

3. ச்ருதப்ரகாசிகை பராஸ்யேதி - பராஸ்ய என்று ப்ரதீக மெடுத்து, ஜ்ஞாநசக்த்யாதீநாம் - ஜ்ஞாந சக்த்யாதிகளுக்கு, ஸ்வாபா விகத்வம் - ஸ்வாபாவிகத்வமானது, உக்தம் - சொல்லப்பட்டது, க்ரியா - நியமநம் - க்ரியை யென்பது இவ்விடத்தில் நியமனம்.

ஹா விஜரோ விம்ருத்யுர்விஶோகோ விஜிகத்ஸோऽபிபாஸஸ்ஸத்யகாமஸ்ஸத்யஸங்கல்ப:" (அபஹதபாப்மா விஜரோ விம்ருத்யுர்விஶோகோ விஜிகத்ஸோபிபாஸஸ்ஸத்யகாமஸ் ஸத்ய ஸங்கல்ப:)[1] "ஸத்த்வாதயோ ந ஸந்தீஶே யத்ர ச ப்ராக்ருதா குணா:" (ஸத்வாதயோ ந ஸந்தீஶே யத்ரச ப்ராக்ருதா குணா:)[2] ஜ்ஞாநஶக்திபலைஶ்வர்யவீர்யதேஜாம்ஸ்யஶேஷத:। பகவச்சப்தவாச்யாநி விநா ஹேயைர்குணாதிபி:" (ஜ்ஞாநஶக்திபலைஶ்வர்யவீர்யதேஜாம்ஸ்ய ஶேஷத:। பகவச்சப்தவாச்யாநி விநாஹேயைர்குணாதிபி:)[3] "தேஜோபலைஶ்வர்யமஹாவபோதஸுவீர்யஶக்த்யாதிகுணைகராஶி:। பர: பராணாம் ஸகலா ந யத்ர க்லேஶாதய: ஸந்தி பராவரேஶே" (தேஜோபலைஶ்வர்யமஹாவபோதஸுவீர்யஶக்த்யாதிகுணைகராஶி:। பர: பராணும் ஸகலா ந யத்ரக்லேஶாதயஸ்ஸந்தி பராவரேஶே)[4] என்கிறபடியே, ஆஶ்ரயம் - ஹேயப்ரத்யநீகமாகையாலே, இவற்றுக்கு ஹேயகுணஸம்ஸர்கதோஷாபத்திக்கு யோக்யதையில்லையிறே.

---

1. சாந். உப. 8 அபஹதபாப்மா - பாபமில்லாதவன், விஜர: - மூதுமை இல்லாதவன், விம்ருத்யு: - ம்ருத்யு இல்லாதவன், விஶோக: - சோகமில்லாதவன், விஜிகத்ஸ: - பசியில்லாதவன், அபிபாஸ: - தாஹமில்லாதவன், ஸத்யகாம - யதார்த்தமான கல்யாண குணங்களையுடையவன். ஸத்யஸங்கல்ப. - ஸத்திய ஸங்கல்பன்.

2. யத்ர ஈஶே - யாதொரு நியாமகனை பரமாத்மாவினிடத்திலேயே, ப்ராக்ருதா: ஸத்வாதய: - ப்ராக்ருதமான ஸத்வாதிகளான, குணா: - குணங்கள், ந ஸந்தி - இல்லை.

3. வி. பு. 6-5-79. ஹேயகுணங்களில்லாமல் ஜ்ஞானம் சக்தி பலம் ஐச்வர்யம் வீர்யம் தேஜஸ்ஸு என்ற குணங்கள் பகவத் சப்த வாச்யங்கள்.

4. வி, பு. 6-5-85. தேஜோபலைச்வர்ய மஹாவபோதஸுவீர்ய சக்தியாதி குணைகராசி: - தேஜஸ்ஸு பலம் ஐச்வர்யம் ச்லாக்யமான ஜ்ஞானம் வீர்யம் சக்தி இவை முதலான குணங்களுக்கு ஏகராசியாயும் அதாவது குணங்களுக்கு முக்யாச்ரயமாயும், பராணும் - ப்ரஹ்மாதிகளுக்கு, பர: - பரனுயுமிருக்கிறுன் ஸர்வேச்வரன், யத்ர - யாதொரு பராவரேசே - ப்ரஹ்மாதிகளுக்கு நியாமகனை ஸர்வேச்வரனிடத்திலே, ஸகலா: - ஸமஸ்தமான, க்லேசாதய: - துக்கம் முதலான ஹேயகுணங்கள், நஸந்தி - இல்லை.

ஸமாநாதிகரஹிதங்களாகையாவது - சேதநாந்தர குணங்களை ஸமமாகவும், ஈச்வரகுணங்களை அதிகமாகவு முடைத்தாயிருக்கும் சேதநகுணங்கள் போலன்றிக்கே, தனக்கொத்ததும் மிக்கதுமின்றிக்கேயிருக்கை. "[illegible]" (ந தத்ஸமச்சாப்யதிகச்ச த்ருச்யதே)[1] என்கிற ஸமாதிகதரித்ரவஸ்துவை யாச்ரயமாக வுடையவையாகையாலே, இவையும் ஸமாநாதிகரஹிதங் களாயிருக்குமிறே. "[illegible]" (தோஷோபதாவதி ஸமாதிசயாந ஸங்க்யா நிர்லேப மங்கள குணௌகதுகாஷ் ஷடேதா: | ஜ்ஞாநைச்வரீசகநவீர்ய பலார்ச்சிஷஸ்த்வாம் ரங்கேச பாஸ இவ ரத்நமநர்க்கயந்தி)[2] என்கிற ச்லோகத்திலே, இவையித்தனையும் பட்டரருளிச்செய்தாரிறே.

இப்படியிருந்துள்ள குணங்கள்தான் மூன்றுவகைப் பட்டிருக்கையாலே, அம்மூன்றுவகைக்கும் விஷயங்களை வகுத்து அருளிச்செய்கிறார்;

**9. இவற்றில் வாத்ஸல்யாதிகளுக்கு விஷயமநுகூலர்; சௌர்யாதிகளுக்கு விஷயம் ப்ரதிகூலர்; இவற்றுக்குக் காரணமான ஜ்ஞாநசக்த்யாதிகளுக்கெல் லாரும் விஷயம்.**

---

1. ச்வே. உ. 203-ம் பக்கம் பார்க்க.

2. ஸ்ரீரங். ஸ்த. 2-27. ஹே ரங்கேச. ஓ அழகிய மணவாளனே! தோஷ - தோஷமென்ன, உபதா - உபாதியென்ன, அவதி - எல்லையென்ன, ஸமாதிசயாந - ஸமமென்ன, உயர்ந்ததென்ன, ஸங்க்யா - எண்ணிக்கையென்ன, இவைகளோடு, நிர்லேப - ஸம்பந்தியாததாயும், மங்கள - கல்யாணங்களாயுமுள்ள, குணௌக - தயை வாத்ஸல்யம் முதலிய குண ஸமூஹத்தை, துகா: - கறவா நின்றுள்ள, ஏதா: - ப்ரஸித்தங்களான, ஷட் - ஆறுயுமிருக்கிற, ஜ்ஞாநைச்வரீசகநவீர்ய பலார்ச்சிஷ: - ஜ்ஞான ஐச்வர்ய சக்தி வீர்ய பல தேஜஸ்ஸு முதலான குணங்களே, ரத்நம் - ரத்நத்தை, பாஸ: இவ - காந்தியாதிகள் போல, த்வாம் - தேவரீரை, அநர்க்கயந்தி - விலையில்லாததாகச் செய்கின்றன.

(இவற்றில்) என்றுதொடங்கி. (வாத்ஸல்யாதிகள்) என்கிற ஆதிஶப்தத்தாலே, ஸௌஶீல்ய ஸௌலப்ய மார்தவார்ஜவாதிகளான குணவிஶேஷங்களெல்லாவற்றையும் சொல்லுகிறது. விஷயம் அநுகூலரென்றது - ஆஶ்ரிதரென்றபடி.

(ஶௌர்யாதிகளுக்கு) என்கிற ஆதிஶப்தத்தாலே, பராக்ரமத்தைச் சொல்லுகிறது. விஷயம் ப்ரதிகூலரென்றது -ஆஶ்ரிதவிரோதிகளென்றபடி. "𑌦𑍍𑌵𑌿𑌷𑌦𑌨𑍍𑌨𑌂 𑌨 𑌭𑍋𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌦𑍍𑌵𑌿𑌷𑌨𑍍𑌤𑌂 𑌨𑍈𑌵 𑌭𑍋𑌜𑌯𑍇𑌤𑍍 । 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌨𑍍 𑌦𑍍𑌵𑌿𑌷𑌸𑍇 𑌰𑌾𑌜𑌨𑍍 𑌮𑌮 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾 𑌹𑌿 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌃" (த்விஷதந்நம் ந போக்தவ்யம் த்விஷந்தம் நைவ போஜயேத் | பாண்டவாந் த்விஷஸே ராஜந் மம ப்ராணா ஹி பாண்டவா:)[2] என்று, ஆஶ்ரிதவிரோதிகள் தனக்கு ஶத்ருக்களென்று அருளிச் செய்தாரிறே.

(இவற்றுக்குக் காரணமான ஜ்ஞாநஶக்த்யாதிகள்) என்கிறவிதில், ஆதிஶப்தத்தாலே – பல ஐஶ்வர்ய வீர்ய தேஜஸ்ஸுக்களைச் சொல்லுகிறது.

வாத்ஸல்யாதிகளுக்கும், ஶௌர்யாதிகளுக்கும் ஜ்ஞாந ஶக்த்யாதிகள் காரணமாகையாவது -" 𑌪𑍍𑌰𑌕𑍃𑌷𑍍𑌟𑌂 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌬𑌲𑌮𑌤𑍁𑌲𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌮𑌖𑌿𑌲𑌂 𑌵𑌿𑌮𑌰𑍍𑌯𑌾𑌦𑌂 𑌵𑍀𑌰𑍍𑌯𑌂 𑌵𑌰𑌦 𑌪𑌰𑌮𑌾 𑌶𑌕𑍍𑌤𑌿𑌰𑌪𑌿 𑌚 । 𑌪𑌰𑌂 𑌤𑍇𑌜𑌶𑍍𑌚𑍇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌵𑌰𑌗𑍁𑌣𑌷𑌟𑍍𑌕𑌂 𑌪𑍍𑌰𑌥𑌮𑌜𑌂 𑌗𑍁𑌣𑌾𑌨𑌾𑌂 𑌨𑌿𑌸𑍍𑌸𑍀𑌮𑍍𑌨𑌾𑌂 𑌗𑌣𑌨𑌵𑌿𑌗𑍁𑌣𑌾𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌸𑌵𑌭𑍁𑌵𑌃" (ப்ரக்ருஷ்டம் விஜ்ஞாநம் பலமதுலமைஶ்வர்யமகிலம் விமர்யாதம்வீர்யம் வரத பரமா ஶக்திரபி ச | பரம் தேஜஶ்சேதி ப்ரவரகுணஷட்கம் ப்ரதமஜம் குணாநாம்

---

1. பார. உத். 74-27. த்விஷதந்நம் - சத்ருவின் அந்நமானது, ந போக்தவ்யம் - புஜிக்கத் தக்கதன்று. த்விஷந்தம் - சத்ருவையும், நைவ போஜயேத் - புஜிப்பிக்கவே கூடாது, ராஜந் ! - ஓ துர்யோதனனே ! பாண்டவாந் - பாண்டு புத்ரர்களை, த்விஷஸே - நீ த்வேஷிக்கிறாய், பாண்டவா: - பாண்டுபுத்ரர்கள், மம - எனக்கு, ப்ராணா ஹி - மிகவும் இஷ்டமானவர்களன்றோ ?

நிஸ்ஸீம்நாம் கணநவிகுணாநாம் ப்ரஸவபூ:)[1] என்றும், “ உஜஜ ஹ ஹணாஸவஉஹவாஷ்ஷெ.தாஃ ” (மங்களகுணௌக துகாஷ்ஷடேதா:)[2] என்றும் சொல்லுகிறபடியே, அவற்றுக்கு ஊற்றுவாயாயிருக்கை.

அவைதான், வஸ்தூத்கர்ஷாபாதக ஷாட்குண்யாயத்தகுணபாவமாயிறே இருப்பது. “எம்பெருமானுடைய திவ்யாத்மகுணங்களாவன — ஜ்ஞாநஶக்த்யாதிஷட்குணங்களும், அதிலே பிறந்த ஸௌஶீல்யாதிகளும்” என்கிற இவ்வாக்யத்துக்கு அர்த்தமெழுதுகிறவளவில், “அதிலே பிறக்கையாவது - வஸ்தூத்கர்ஷாபாதக ஷாட்குண்யாயத்தகுணபாவமாகை” என்றிறே விவரணத்தில் ஆச்சான்பிள்ளை யருளிச்செய்தது.

இந்த குணஷட்கத்திலும் வைத்துக்கொண்டு, ஜ்ஞாநமாவது - “ அஜ஡ம் ஸ்வாத்மஸம்போதி நித்யம் ஸர்வாவகாஹநம் । ஜ்ஞாநாநாமகுணம் ப்ராஹுஃ ப்ரதமம் குணசிந்தகாஃ ” (அஜடம்ஸ்வாத்மஸம்போதி நித்யம் ஸர்வாவகாஹநம் । ஜ்ஞாநாநாமகுணம் ப்ராஹு: ப்ரதமம் குணசிந்தகா:)[3] என்கிறபடியே, என்றுமொக்க ஸர்வவிஷயப்ரகாஶகமுமாய், ஸ்வப்ரகாஶமுமான குணவிஶேஷம்.

---

1. வரத. 95. வரத - ஹே வரதனே !, ப்ரக்ருஷ்டம் - உத்கிருஷ்டமான, விஜ்ஞாநம் - ஜ்ஞானமும், அதுலம் - அஸத்ருசமான பலம் - பலமும், அகிலம் - ஸமஸ்தமான, ஐச்வர்யம் - ஐச்வர்யமும், விமர்யாதம் - முடிவில்லாத, வீர்யம் - வீர்யமும், பரமா - உத்க்ருஷ்டமான, சக்திரபி ச - சக்தியும், பரம் - உத்க்ருஷ்டமான, தேஜச்ச இதி - தேஜஸ்ஸும் என்கிற, ப்ரதமஜம் - பரவாஸுதேவரிடத்தில் நின்றும் உண்டான ஸமஸ்த குணத்திற்கும் முதலில் எண்ணத்தக்க, ப்ரவர குணஷட்கம் - ச்லாக்கியமான ஆறு குணங்கள், நிஸ்ஸீம்நாம் - எல்லையில்லாமலிருக்கிற, கணந விகுணாநாம் - எண்ணுவதற்கு முடியாததான, குணாநாம் - குணங்களுக்கு, ப்ரஸவபூ: - உத்பத்திஸ்தானமாக, பவதி - ஆகிறது.

2. ஸ்ரீரங். ஸ்த. 212-ம் பக்கம் பார்க்க.

3. குணசிந்தகா: - குணத்தைச் சிந்திக்குமவர்கள், ப்ரதமம் - முதலில், ஜ்ஞாநம்நாம - ஜ்ஞாநமென்று ப்ரஸித்தமான, குணம் - குணத்தை அஜடம் - அஜடமாயும், அதாவது ஸ்வயம் ப்ரகாசமாக

ஶக்தியாவது - "ஜக3த்ப்ரக்ருதிபா4வோ யஸ்ஸா ஶக்தி: பரிகீர்த்திதா" (ஜகத்ப்ரக்ருதிபாவோ யஸ்ஸா ஶக்திஃ பரிகீர்த்திதா)[1] என்கிற ஜகத்ப்ரக்ருதிபாவமாதல், அகடித கடநாஸாமர்த்யமாதல்.

பலமாவது - "ஶ்ரமஹாநிஸ்து யா தஸ்ய ஸததம் குர்வதோ ஜக3த் । ப3லம் நாம கு3ணஸ்தஸ்ய கதி2தோ கு3ணசிந்தகை:" (ஶ்ரமஹாநிஸ்து யா தஸ்ய ஸததம் குர்வதோ ஜகத் । பலம் நாம குணஸ்தஸ்ய கதிதோ குண சிந்தகைஃ)[2] என்கிற ஜகத்காரணத்வ ப்ரயுக்தமான ஶ்ரமமின்றியிலே யொழிகையாதல், "ப3லம் தா4ரணஸாமர்த்2யம்" (பலம் தாரணஸாமர்த்த்யம்)[3] என்கிற ஸமஸ்த வஸ்துதாரணஸாமர்த்த்யமாதல்.

ஐஶ்வர்யமாவது - "கர்த்ருத்வம் நாம யத்தஸ்ய ஸ்வாதந்த்ர்யபரிப்3ரும்ஹிதம் । ஐஶ்வர்யம் நாம தத்ப்ரோக்தம் கு3ணதத்த்வார்த்த2சிந்தகை:" (கர்த்ருத்வம் நாம யத்தஸ்ய ஸ்வாதந்த்ரியபரிப்ரும்ஹிதம் । ஐஶ்வர்யம் நாம தத்ப்ரோக்தம் குணதத்வார்த்தசிந்தகைஃ)[4] என்கிற கர்த்ருத்வலக்ஷணமான ஸ்வாதந்த்ரியமாதல், ஸமஸ்தவஸ்து நியமநஸாமர்த்த்யமாதல்.

---

வும், ஸ்வாத்ம ஸம்போதி - தன்னைத்தான் அறிகிறதாகவும், நித்யம் - நித்யமாகவும், ஸர்வாவகாஹநம் - ஸர்வ விஷய ப்ரகாசகமாகவும், ப்ராஹு: - சொல்லுகிருர்கள்.

1. ய: ஜகத்ப்ரக்ருதிபாவ: - ஜகத்திற்குக் காரணமாயிருப்பதென்று யாதொன்று உண்டோ, ஸா - அதுவானது, சக்தி: - சக்தி என்று, ப்ரகீர்த்தித: - சொல்லப்பட்டது.

2. ஜகத் - ஜகத்தை. குர்வத: - பண்ணுகிற்கிற, தஸ்ய - அந்த பரமாத்மாவுக்கு, ஸததம் - ஸர்வகாலத்திலும், யா - யாதொரு, ச்ரம ஹாநிஸ்து - ச்ரமமில்லமையானது இருக்கிறதோ, தத் - அது, குண சிந்தகை: - குணத்தையறிந்தவர்களாலே, தஸ்ய - அந்த பரமாத்மாவினுடைய, பலம் நாம - பலமென்று ப்ரஸித்தமான, குண: - குணமாக, கதித: - சொல்லப்பட்டது.

3. பலம் - பலமானது, தாரண ஸாமர்த்த்யம் - எல்லாவற்றையும் தரிக்கும் ஸாமர்த்தியம்.

4. தஸ்ய - அந்த பரமாத்மாவுக்கு, ஸ்வாதந்த்ரிய பரிப்ரும்ஹிதம் - ஸ்வாதந்த்ரியத்தோடு கூடின, யத் கர்த்ருத்வம் நாம - யாதொரு

வீர்யமாவது - "𑌤𑌸𑍍𑌯𑍋𑌪𑌾𑌦𑌾𑌨𑌭𑌾𑌵𑍇𑌽𑌪𑌿 𑌵𑌿𑌕𑌾𑌰𑌵𑌿𑌰𑌹𑍋 𑌹𑌿 𑌯𑌃। 𑌵𑍀𑌰𑍍𑌯𑌂 𑌨𑌾𑌮 𑌗𑍁𑌣𑌸𑍍𑌸𑍋𑌽𑌯𑌮𑌚𑍍𑌯𑍁𑌤𑌤𑍍𑌵𑌾𑌪𑌰𑌾𑌹𑍍𑌵𑌯𑌃" . (தஸ்யோபாதாநபாவேபி விகாரவிரஹோ ஹி ய:| வீர்யம் நாம குணஸ்ஸோயமச்யுதத்வாபராஹ்வய:)[1] என்று ஜகதுபாதாநமாக நிற்கச்செய்தேயும் ஸ்வரூபவிகாரமின்றியிலேயொழியும்படியான அவிகாரதை.

தேஜஸ்ஸாவது - "𑌸𑌹𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌨𑌪𑍇𑌕𑍍𑌷𑌾 𑌯𑌾 𑌤𑌤𑍍𑌤𑍇𑌜𑌸𑍍𑌸𑌮𑍁𑌦𑌾𑌹𑍃𑌤𑌮𑍍" (ஸஹகார்யநபேக்ஷா யா தத்தேஜஸ் ஸமுதாஹ்ருதம்)[2] என்கிற ஸஹகாரிநைரபேக்ஷ்யமாதல், பராபிபவந ஸாமர்த்த்யமாதல்.

இவற்றுக்கு எல்லாரும் விஷயமாகையாவது - அநுகூலரக்ஷணாதிகளும், ப்ரதிகூலநிரஸநாதிகளும் ஜ்ஞாநஶக்த்யாதி விஶிஷ்டனாய்க் கொண்டு நிர்வஹிக்கவேண்டுகையாலே, இவற்றுக்கு ஸர்வரும் விஷயமாயிருக்கை.

இப்படி குணங்களை மூன்றுவகையாக்கி, அவற்றுக்கு விஷயங்களை தர்ஶிப்பித்தவளவன்றிக்கே, குணங்களுக்கு ப்ரத்யேகம் விஷயநியமமுண்டாகையாலே, அத்தையும் தர்ஶிப்பிக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றி, கீழேடுத்த

---

கர்த்ருத்வம் என ப்ரஸித்தமாகயிருக்கிறதோ, தத் - அது, குணதத்வார்த்தசிந்தகை: - குணங்களுடைய உண்மையை யறிபவர்களாலே, ஐச்வர்யம் நாம - ஐச்வர்யம் என்ற ப்ரஸித்தமான குணமாக, ப்ரோக்தம் - சொல்லப்பட்டது.

1. தஸ்ய - அந்த ஸர்வேச்வரனுடைய, உபாதாநபாவேபி - ஜகத்திற்கு உபாதான காரணமாக இருக்கிற தன்மையிலேயும், ய: - யாதொரு, விகார விரஹ: - விகாரமில்லாமையான திருக்கிறதோ, ஸோயம் - அந்த இந்த அவிகாரத்வமானது, அச்யுதத்வாபராஹ்வய: - அச்யுத என்று (தன்னுடைய இயற்கையான தன்மையிலிருந்து நழுவாதவனென்று) வேறு நாமதேயமான, வீர்யம் நாம - வீர்யம் என்று ப்ரஸித்தமான, குண: - குணம் என்று சொல்லப்படுகிறது.

2. ஸஹகார்யநபேக்ஷா - ஸஹாயத்தை அபேக்ஷியாமலிருக்கிறதென்று, யா - யாதொன்று உண்டோ, தத் - அது, தேஜ: - தேஜஸ் என்று, ஸமுதாஹ்ருதம் - சொல்லப்படுகிறது.

குணங்களிலே சிலவற்றுக்குத் தனித்தனியே விஷயங்களை தர்ஶிப்பிக்கிறார்;

10. ஜ்ஞாநம் அஜ்ஞர்க்கு, ஶக்தி அஶக்தர்க்கு, க்ஷமை ஸாபராதர்க்கு, க்ருபை துக்கிகளுக்கு, வாத்ஸல்யம் ஸதோஷர்க்கு, ஶீலம் மந்தர்க்கு, ஆர்ஜவம் குடிலர்க்கு, ஸௌஹார்தம் துஷ்டஹ்ருதயர்க்கு, மார்தவம் விஶ்லேஷபீருக்களுக்கு. ஸௌலப்யம் காணவாசைப்பட்டவர்களுக்கு, இப்படியெங்கும் கண்டுகொள்வது.

(ஜ்ஞாநம் அஜ்ஞர்க்கு) என்றுதொடங்கி. ஜ்ஞாநமாவது - சேதநருடைய ஹித அஹித நிரூபணத்துக்கு உறுப்பான குணம்; ஆகையாலே, "𑌕𑍍𑌵𑌾𑌹𑌮𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌦𑍁𑌰𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌕𑍍𑌵𑌚𑌾𑌤𑍍𑌮𑌹𑌿𑌤𑌵𑍀𑌕𑍍𑌷𑌣𑌮𑍍 । 𑌯𑌦𑍍𑌧𑌿𑌤𑌂 𑌮𑌮 𑌦𑍇𑌵𑍇𑌶 𑌤𑌦𑌾𑌜𑍍𑌞𑌾𑌪𑌯 𑌮𑌾𑌧𑌵" (க்வாஹமத்யந்ததுர்புத்தி꞉ க்வசாத்மஹிதவீக்ஷணம் | யத்திதம் மம தேவேஶ ததாஜ்ஞாபயமாதவ)[1] என்கிறபடியே, ஸ்வஹித அஹிதநிரூபணாதிகளில் அஜ்ஞராயிருக்குமவர்களுக்குறுப்பாயிருக்குமென்கை.

(ஶக்தி அஶக்தர்க்கு) என்றது - ஶக்தியாவது - அகடிதகடநா ஸாமர்த்யம்; ஆகையாலே. ஸ்வ இஷ்ட அநிஷ்ட ப்ராப்தி பரிஹாரங்களில் அஶக்தராயிருக்குமவர்களுடைய கார்யஸித்திக்கு உறுப்பாயிருக்குமென்கை.

(க்ஷமை ஸாபராதர்க்கு) என்றது - க்ஷமையாவது - அபராத ஸஹத்வம்; ஆகையாலே, "𑌅𑌹𑌮𑌸𑍍𑌮𑍍𑌯𑌪𑌰𑌾𑌧𑌾𑌨𑌾𑌮𑌾𑌲𑌯𑌃" (அஹமஸ்ம்யபராதாநாமாலய꞉)[2] என்கிற

---

1. ஜிதந்தா. அத்யந்த துர்மதி: - மிகவும் ஜ்ஞானமில்லாமலிருக்கிற, அஹம் - நான், க்வ - எங்கே, ஆத்மஹித வீக்ஷணம் - ஆத்மாவினுடைய ஹிதத்தைப் பார்ப்பதானது, க்வ ச - எங்கே, ஹே தேவேச! - ப்ரஹ்மருத்ராதிகளுக்கு நியாமகனானவனே!, மம - எனக்கு, யத் - யாதொன்று, ஹிதம் - ஹிதமோ, தத் - அதை, மாதவ - ஸ்ரிய:பதியே!, ஆஜ்ஞாபய - நியமிக்கவேணும்.

2. பகவச்சாஸ்த்ரே. அகிஞ்சந: - உன்னைத் தவிர வேறு உபாயமற்றவனும், அகதி: - அநந்யகதிகனுயுமிருக்கிற, அஹம் - நான், அபராதாநம் ஆலய: அஸ்மி - அபராதங்களுக்கு இருப்பிடமாக இருக்கிறேன், மே - எனக்கு- த்வமேவ - தேவரீரே, உபாயபூதோபவ - உபாயமாகவேண்டும், இதி ப்ரார்த்தநாமதி: - என்று பிரார்த்திக்கிற

படியே, அபராதஸஹிதராகத் தங்களையநுஸந்தித்திருப்பார்க்கு உறுப்பாயிருக்குமென்கை. "க்ஷமா ஸாபராதே'நுதாபிந்யுபேயா கத²ம் ஸாபராதே'பி த்ருப்தே மயி ஸ்யாத்" (க்ஷமா ஸாபராதேநுதாபிந்யுபேயா கதம் ஸாபராதேபி த்ருப்தே மயி ஸ்யாத்)[1] என்றிறே பட்டரருளிச் செய்தது.

(க்ருபை துக்கிகளுக்கு) என்றது – க்ருபையாவது – பரதுக்காஸஹிஷ்ணுத்வம்; ஆகையாலே, *ஆவாரார்துணையென்றலைநீர்க்கடலுளழுந்தும் நாவாய்போல், பிறவிக்கடலுள் நின்று துளங்குகை முதலான துக்கமுடையவர்களுக்கு உறுப்பாயிருக்குமென்கை. "த³யா பரவ்யஸநஹரா ப⁴வவ்யதா² ஸுகா²யதே மம தத³ஹம் த³யாதிக³:" (தயா பரவ்யஸநஹரா பவவ்யதா ஸுகாயதே மம ததஹம் தயாதிக:)[2] என்று அருளிச்செய்தாரிறே பட்டர்.

(வாத்ஸல்யம் ஸதோஷர்க்கு) என்றது – வாத்ஸல்யமாவது – அன்றீன்றகன்றினுடம்பின் வழுவை யாதரித்து புஜிக்கும் தேநுவைப்போலே, ஆச்ரிதருடைய தோஷங்களை போக்யமாகக்கொள்ளுவதொரு குணம்; ஆகையாலே அவித்யாகர்மாதிதோஷஸஹிதராகத் தங்களையநுஸந்திப்பார்க்கு உறுப்பாயிருக்குமென்கை.

(ஶீலம் மந்தர்க்கு) என்றது – ஶீலமாவது – பெரியவன் தாழ்ந்தவர்களோடே புரையறக்கலக்கும் ஸ்வபாவம்.

---

புத்தியானது, சரணாகதிரிதி உக்தா - சரணாகதி யென்று சொல்லப்பட்டிருக்கிறது, ஸா - அந்த சரணாகதியானது, அஸ்மிந்தேவே - இந்த தேவனிடத்தில், ப்ரயுஜ்யதாம் - செய்யப்படட்டும்.

1. ஸ்ரீரங். ஸ்த. 2-96. ஸாபராதேபி - அபராதத்தோடுகூடிக் கொண்டிருந்தபோதிலும், அநுதாபிநி - அநுதாபத்தை யுடைத்தாயிருந்தவளவில், க்ஷமா - க்ஷமையானது, உபேயா - வரும், ஸாபராதேபி - அபராதத்தோடுகூடிக் கொண்டிருந்த போதிலும், த்ருப்தே - த்ருப்தனை அதாவது அநுதாபமில்லாமல் கர்வத்தோடு இருக்கிற, மயி - என் விஷயத்தில், கதம் ஸ்யாத் - எப்படி உண்டாகும்.

2. ஸ்ரீரங். ஸ்த. 2-98. தயா - தயையானது, பரவ்யஸநஹரா - இதரர்களுடைய வ்யஸனத்தை அபஹரிக்கிறதாக இருக்கிறது, மம - என்னுடைய, பவவ்யதா - ஸம்ஸார துக்கமானது, ஸுகாயதே - ஸுகமாகவாகிறது, தத் - அந்தக் காரணத்தால், அஹம் - நான், தயாதிக: - தயையை அதிக்ரமித்தவனாக ஆகிறேன் அதாவது தயைக்கு விஷயமாக ஆகிறேனல்லேன்.

ஆகையாலே, தங்களுடைய தண்மையை யநுஸந்தித்திருப் பார்க்கு உறுப்பாயிருக்குமென்கை.

(ஆர்ஜவம் குடிலர்க்கு) என்றது – ஆர்ஜவமாவது - கரணத்ரயத்தாலும் செவ்வியனாயிருக்கை; ஆகையாலே, தங்களுடைய கரணத்ரய கௌடில்யத்தை நினைத்திருப் பார்க்கு உறுப்பாயிருக்குமென்கை.

(ஸௌஹார்தம் துஷ்டஹ்ருதயர்க்கு) என்றது - ஸௌஹார்தமாவது - எப்போதும் நன்மையைச் சிந்தித் திருக்கும் ஸ்வபாவம்; ஆகையாலே, ஸர்வகாலமும் தீமை யே சிந்தித்திருக்கும் துஷ்டஹ்ருதயராகத் தங்களை யநுஸந் தித்திருப்பார்க்கு உறுப்பாயிருக்கு மென்கை,

(மார்தவம் விஶ்லேஷபீருக்களுக்கு) என்றது – மார் தவமாவது - ஆஶ்ரிதவிரஹம் பொறுக்கமாட்டாத மேன் மை; ஆகையாலே தன்னுடைய விஶ்லேஷத்தில் பய முடையவர்களுக்கு உறுப்பாயிருக்குமென்கை.

(ஸௌலப்யம் காணவாசைப்பட்டவர்களுக்கு) என் றது – ஸௌலப்யமாவது – அதீந்த்ரியமான விக்ரஹத்தைக் கண்ணுக்கிலக்காம்படி பண்ணுகை; ஆகையாலே, தன் னைக்காணவேணுமென்று ஆசைப்பட்டவர்களுக்கு உறுப் பாயிருக்குமென்கை.

இத்தால், இவனுடைய ஜ்ஞாநத்தில் அபேக்ஷையுள் ளது - தந்தாமுடைய ஹிதாஹிதநிரூபணத்தில் அறிவில்லா தவர்களுக்காகையாலே, ஜ்ஞாநம் - அஜ்ஞர்க்காயிருக் கும். இவனுடைய ஶக்தியில் அபேக்ஷையுள்ளது - ஸ்வே ஷ்ட அநிஷ்ட ப்ராப்தி பரிஹாரத்தில் அஶக்தராயிருப்பா ருக்காகையாலே, ஶக்தி - அஶக்தர்க்காயிருக்கும். பொறையில் அபேக்ஷையுள்ளது – அபராதமுடையார்க் காகையாலே, க்ஷமை - ஸாபராதர்க்கா யிருக்கும். ஐயோ வென்று இரங்கவேண்டுவது - நோவுபட்டவர்க்காகை யாலே க்ருபை - துக்கிகளுக்காயிருக்கும். தோஷத்தை போக்யமாகக் கொள்ளவேண்டுவது - தோஷவான் களுக்காகையாலே, வாத்ஸல்யம் ஸதோஷர்க்கா யிருக் கும். தண்மைபாராதே புரையறக்கலக்கவேண்டுவது -

*தாழ்ந்தவர்கள் விஷயத்திலேயாகையாலே, சீலம் - மந்தர்க்காயிருக்கும். கரணத்ரயத்தாலும் செவ்வியனாய்க் கொண்டு தன்னை யமைத்துப் பரிமாறவேண்டுவது - செவ்வைக்கேடராம் விஷயத்திலாகையாலே, ஆர்ஜவம் - குடிலர்க்கா யிருக்கும். தானெப்போதும் நன்மை சிந்திக்க வேண்டுவது - தந்தாமுக்குத் தீமைகளைச் சிந்திக்கும் தீமனத்தர் விஷயத்திலாகையாலே, ஸௌஹார்தம் - துஷ்டஹ்ருதயர்க்காயிருக்கும். விரஹம்பொறுத மென்மை வேண்டுவது - விரஹத்துக்கு அஞ்சுவார்திறத்திலாகையாலே, மார்தவம் - விஶ்லேஷபீருக்களுக்காயிருக்கும்; அதீந்த்ரியமான விக்ரஹத்தைக் கண்ணுக்கு இலக்காக்க வேண்டுவது - அவ்வடிவைக் காண்கையில் ஆசையுடையவர்களுக்காகையாலே, ஸௌலப்யம் காணவாசைப்பட்டவர்களுக்காயிருக்கும். என்று, குணங்களினுடைய விஷயப்ரதிநியதத்வத்தை தர்ஶிப்பித்தாராயிற்று.*

*(இப்படியெங்கும் கண்டுகொள்வது) என்றது - கீழ்ச் சொன்ன ப்ரகாரத்திலே, அநுக்தமான குணங்களெல்லாவற்றுக்கும் ப்ரத்யேகம் விஷயங்களை தர்ஶித்துக்கொள்வது என்றபடி.*

*ஏவம்பூதகுண விஶிஷ்டனாகையாலே, ஈஶ்வரன் ஆஶ்ரிதவிஷயத்தில் பரிமாறிப்போரும்படிகளை விஸ்தரேண வொரு சூர்ணையாலே யருளிச்செய்கிறார் மேல்;*

11. இப்படி, ஈஶ்வரன் கல்யாண குணங்களோடே கூடியிருக்கையாலே, பிறர் நோவு கண்டால் ஐயோ! என்றிரங்கி, அவர்களுக்கெப்போது மொக்க நன்மையைச் சிந்தித்து, தனக்கேயாயிருத்தல், தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருத்தல் செய்யாதே, நிலா, தென்றல், சந்தநம், தண்ணீர்போலே பிறர்க்கேயாய், தன்னை யாஶ்ரயித்தவர்கள் பக்கல் ஜந்மஜ்ஞாநவ்ருத்தங்களாலுண்டான நிகர்ஷம் பாராதே, தாங்களும் பிறரும் தஞ்சமல்லாதபோது தான் தஞ்சமாய், ஸாந்தீபிநீபுத்ரனையும், வைதிகன்புத்ரர்களையும் மீட்டுக்கொண்டு வந்தாப்போலே அரி

யனசெய்தும் அவர்களபேக்ஷிதங்களைத் தலைக்கட்டியும், அவர்களுக்கு த்ருவபதம்போலே பண்டில்லாதவற்றையு முண்டாக்கியும், தந்தாம் ஸ்வம் தாந்தாம் விநியோகம் கொண்டாப்போலேயிருக்க, தன்னையும், தன்னுடைமையையும்வழங்கி, அவர்கள் கார்யம் தலைக்கட்டினால், தான் க்ருதக்ருத்யனாய், தான் செய்த நன்மைகளொன்றையும் நினையாதே அவர்கள் செய்த ஸுக்ருதலவத்தையே நினைத்து அநாதிகாலம் வாஸிதங்களானரஸங்களை மறக்கும்படி யெல்லா தஶையிலும் இனியனாய், பார்யாபுத்ரர்கள் குற்றங்களைக் காணக் கண்ணிட்டிருக்கும் புருஷனைப்போலே, அவர்கள் குற்றங்களைத் திருவுள்ளத்தால் நினையாதே, குற்றங்களைப் பெரியபிராட்டியார் காட்டினாலும் அவளோடே மறுதலைத்துத் திண்ணியனாய் நின்று ரக்ஷித்து, காமிநியுடையஅழுக்குகக்கும்காமுகனைப்போலே, அவர்கள் தோஷங்களை போக்யமாகக் கொண்டு, அவர்கள்பக்கல் கரணத்ரயத்தாலும் செவ்வியனாய், பிரிந்தால் அவர்கள் வ்யஸநம் குளப்படி யென்னும்படி தானீடுபட்டு, அவர்களுக்குப் பாங்காகத் தன்னைத் தாழவிட்டு, அவர்களுக்குக் கட்டவுமடிக்கவுமாம்படி யெளியனாய், அன்றீன்ற கன்றுக்குத் தாயிரங்கி, முன்னணைக்கன்றையும், புல்லிடவந்தவர்களையும் கொம்பிலும் குளம்பிலுமேற்குமாப் போலே, பெரியபிராட்டியாரையும், ஸூரிகளையும் விட்டு ஸ்நேஹித்துக் கொண்டு போரும்.

*(இப்படி, ஈஶ்வரன் கல்யாணகுணங்களோடே கூடியிருக்கையாலே) என்று தொடங்கி. இப்படியென்று — கீழுக்தமான குணயோகப்ரகாரத்தைப் பராமர்ஶிக்கிறது, (கல்யாண குணங்களோடே கூடியிருக்கையாலே) என்று குணயோகத்தை ஹேதுவாகவருளிச்செய்தது — மேற் சொல்லுகிற பரிமாற்றங்களெல்லாம் ஓரோ குணகார்யமென்று தோற்றுகைக்காக.*

(பிறர் நோவு கண்டால் ஐயோ! என்று இரங்கி). இது-க்ருபாகார்யம். பிறர் நோவு கண்டால் ஐயோ! என்று ஈடுபடுகிறது - பரதுக்காஸஹிஷ்ணுவாகையாலே யிறே.

(அவர்களுக்கு எப்போதுமொக்க நன்மையைச் சிந்தித்து). இது – ஸௌஹார்தகார்யம். எப்போது மொக்க வென்றது - இவர்கள் அறிந்தகாலத்தோடு அறியாதகாலத் தோடு வாசியற ஸர்வகாலத்திலுமென்றபடி. ஆஶ்ரித ஸர்வமங்களாந்வேஷணபரனாயிருக்கிறது – ஸௌஹார்தத் தாலேயிறே.

(தனக்கேயாயிருத்தல், தனக்கும் பிறர்க்கும் பொது வாயிருத்தல் செய்யாதே, நிலா, தென்றல், சந்தநம், தண்ணீர்போலே பிறர்க்கேயாய்). இது - ஆஶ்ரிதபாரதந்த்ரிய கார்யம். ஸ்வார்த்தபரனேயயிருத்தல், ஸ்வார்த்த பரார்த் தங்கள் இரண்டுக்கும் பொதுவாயிருத்தல் செய்கையன்றிக் கே, சந்த்ரிகாதிபதார்த்தங்கள் போலே, பரார்த்தைக வேஷனாயிருக்கிறது – பாரதந்த்ரியத்தாலேயிறே.

(தன்னையாஶ்ரயித்தவர்கள் பக்கல் ஜந்மஜ்ஞாந வ்ருத் தங்களால் உண்டான நிகர்ஷம் பாராதே). இது – ஸாம்ய குணகார்யம். ஆஶ்ரிதர்பக்கல் ஜந்மாதிகளால் உண்டான தண்மைபாராமல் பரிமாறுகிறது - "ஸமோஹம் ஸர்வ-பூதேஷு" (ஸமோஹம் ஸர்வபூதேஷு)[1] என்கிறபடி யே, ஜந்மாதிகளால் உத்க்ருஷ்டரோடு அபக்ருஷ்டரோடு வாசியற ஆஶ்ரயணீயத்வே ஸமனாயிருக்கும் ஸ்வபாவத்தா லேயிறே.

(தாங்களும் பிறரும் தஞ்சமல்லாதபோது தான் தஞ்ச மாய்). இது - அஶரண்யஶரண்யத்வகார்யம். தாங்களும் தங்களுக்கு ரக்ஷகரன்று, பிறரும் தங்களுக்கு ரக்ஷகரன்று என்று கைவாங்கின தசையில், தான் ரக்ஷகனாகிறது – *பற்றிலார்பற்றநின்றான்[2] ஆகையாலேயிறே.

---

1. ஸ்ரீகீதை. 9-29. அஹம் - நான், ஸர்வபூதேஷு - ஸகலப் பிராணிகளிடத்திலும், ஸம: - ஸமமாயிருக்கிறவன்.
2. தி. வா. 7-2-7.

(ஸாந்தீபிநீ புத்ரனையும், வைதிகன் புத்ரர்களையும் மீட்டுக்கொண்டுவந்தாப்போலே அரியனசெய்தும், அவர்கள பேக்ஷிதங்களைத் தலைக்கட்டியும்). இது - ஸத்யகாமத்வகார்யம். "மாதவத்தோன் புத்திரன்போய் மறிகடல்வாய் மாண்டானை"[1] என்கிறபடியே, நெடுங்காலத்திலே கடல் கொண்டுபோன ஸாந்தீபிநீ புத்ரனையும், "பிறப்பகத்தே மாண்டொழிந்த பிள்ளைகளை நால்வரையும்"[2] என்கிற படியே, ஜநித்தபோதே, "என்னுடையமனைவிகாதல்மக்களைப் பயத்தலும் காணுள்"[3] என்கிறபடியே, பெற்ற தாயும் தர்ஶிக்கப்பெறுதபடி நாய்ச்சிமார், தங்கள் ஸ்வாதந்த்ரியத்தாலே யழைப்பிக்க, "தப்பினபிள்ளைகளை"[4] என்கிறபடியே, கைதப்பிப்போய் *சுடரொளியாய்நின்ற தன்னுடைச்சோதியிலே கிடந்த வைதிகன் புத்ரர்களையும், "உருவுருவேகொடுத்தான்"[1] என்றும், "உடலொடுங் கொண்டு கொடுத்தவனை"[2] என்றுஞ்சொல்லுகிறபடியே, அவ்வவருபங்களோடே மீட்டுக்கொடுவந்து கொடுத்தாப் போலே, துஷ்கரங்களைச்செய்தும் ஆஶ்ரிதர் அபேக்ஷிதங்களைத் தலைக்கட்டுகிறது - "ஆஶ்ரிதரக்ஷணவிஷயோ மநோரதஃ காமஃ ஸோऽப்ரதிஹதோ பவதீதி ஸத்யகாமஃ" (ஆஶ்ரிதரக்ஷணவிஷயோ மநோரதஃ காமஃ ஸோ ப்ரதிஹதோபவதீதி ஸத்யகாமஃ)[5] என்கிற ஸத்யகாமனுகையாலேயிறே. "ஸத்யகாமனுகையாவது – ஸாந்தீபிநீ புத்ரனைக்கொண்டுவந்தாப்போலே, ஸகல அபேக்ஷிதங்களும் முடிக்கவல்லனுகை." என்றிறே நடுவிற்றிருவீதிப் பிள்ளை பட்டர் தத்வத்ரயத்திலே யருளிச்செய்தது.

(அவர்களுக்கு, த்ருவபதம்போலே பண்டில்லாதவற்றையுமுண்டாக்கியும்). இது - ஸத்யஸங்கல்பத்வகார்யம்.

---

1. பெரி. தி. 4-8-1. 2. பெரி. தி, 4-8-2.
3. தி, மொ. 5-8-8. 4. பெரி. தி. 1-6-7,

5. ஆச்ரித ரக்ஷணவிஷய: - ஆச்ரிதர்களுடைய ரக்ஷணவிஷயமான, மநோரத: - மனோரதமானது, காம: - காமம் என்று சொல்லப்படும், ஸ: - அந்த காமமானது, அப்ரதிஹத: தடங்கலில்லாததாக, பவதி ஆகிறது, இதி - என்கிற காரணத்தாலே, ஸத்யகாம: - ஸத்யகாமன் என்னப்படுகிறுன் ஈச்வரன் - அதாவது தடங்கல் இல்லாத இச்சையுடையவன்.

உத்தாநபாதபுத்ரனான த்ருவனுக்கு, ஸ்வர்கத்தினுடைய ஊர்த்வாவதியிலே அபூர்வமாயிருப்பதொரு பதம் கல்பித்துக் கொடுத்தாப்போலே, ஆஶ்ரிதர்க்குப் பண்டில்லாதவற்றையுமுண்டாக்குகிறது — அபூர்வபோக்யங்களை ஸ்ருஷ்டிக்கவல்ல அமோகஸங்கல்பனாகையாலேயிறே. "ஸத்யஸங்கல்பனாகையாவது — த்ருவபதம்போலே பண்டில்லாதவற்றையுமுண்டாக்கவல்லனாகை" என்று, இதுவும் பட்டர் தாமே யருளிச்செய்தாரிறே.

(தம்தாம் ஸ்வம் தாம்தாம் விநியோகங்கொண்டாப் போலேயிருக்கத் தன்னையும் தன்னுடைமையையும் வழங்கி). இது — ஔதார்யகார்யம். "வரத ஸகலமேதத் ஸம்ஶ்ரிதார்த்தஞ்சகர்த்த" (வரத ஸகலமேதத் ஸம்ஶ்ரிதார்த்தஞ்சகர்த்த)[1] என்கிறபடியே, தங்களுடைமையைத் தாங்கள் விநியோகங்கொள்ளுமாபோலே விநியோகங்கொள்ளலாம்படி, ஆத்ம ஆத்மீயங்களை ஆஶ்ரிதர்க்குக்கொடுக்கிறது — கொடுத்தோம் என்னுமபிமாநம் தன்னெஞ்சிலில்லாதபடியாகவும், கொள்ளுமவர்களுக்கு ப்ரத்யுபகாரந் தேடி நெஞ்சாறல்பட வேண்டாதபடியாகவும் கொடுக்கும் பரம உதாரனாகையாலேயிறே.

(அவர்கள் கார்யம் தலைக்கட்டினால், தான் க்ருதக்ருத்யனாய்). இது — க்ருதித்வகார்யம். ஆஶ்ரிதகார்யம்தலைக்கட்டினால், அவர்கள் க்ருதக்ருத்யராகையன்றிக்கே, "அபிஷிச்ய ச லங்காயாம்" (அபிஷிச்ய ச லங்காயாம்)[2] இத்யாதிப்படியே, தான் க்ருதக்ருத்யனாகிறது — ஆஶ்ரிதரக்ஷணம்பெற்றால், பேறு தன்னதாயிருக்கும் ஸ்வபாவத்தாலேயிறே. "க்ருதியாவது — ஆஶ்ரிதருடையவபேக்ஷிதம் பூர்ணமானால்

---

1. வரத. ஸ்தவ. 63. வரத! - ஹே வரதனே! ஏதத் ஸகலம் - இந்த ஸகலமும், ஸம்ச்ரிதார்த்தம் சகர்த்த - ஆச்ரிதர்களின் பொருட்டுப் பண்ணினாய்.

2. ரா. பா. 1. ராம: - பெருமாள், விபீஷணம் - விபீஷணனை, ராக்ஷஸேந்த்ரம் - இராக்ஷஸராஜனாக, லங்காயாம் - லங்கையில், அபிஷிச்ய - அபிஷேகம் பண்ணி, ததா - அப்போது, க்ருதக்ருத்ய: - செய்துமுடித்த ஸகலகார்யங்களையுடையவராயும், விஜ்வர: - ஜ்வரமற்றவராயும், ப்ரமுமோத - ஸந்தோஷித்தார், ஹ - என்று ருஷி ஸந்தோஷிக்கிறான்.

தான் க்ருதக்ருத்யனுகை." என்றிறே பட்டரும் அருளிச் செய்தது.

(தான்செய்த நன்மைகளொன்றையும் நினையாதே, அவர்கள் செய்த ஸுக்ருதலவத்தையே நினைத்து). இது - க்ருதஜ்ஞதாகார்யம். தன்திறத்திலே யொரு ஶரணுக்தி முதலான ஸுக்ருத லேஶத்தைப் பண்ணினுல், அவர்களுக்குத் தான் எல்லா நன்மைகளுஞ் செய்தாலும் அவற்றை யொன்றையும் நினையாதே, அவர்கள் செய்த ஸுக்ருதலவத்தையே நினைத்திருக்கிறது - செய்த நன்றி யறியுமவனுகையாலேயிறே. "க்ருதஜ்ஞனுகையாவது - ஆஶ்ரிதருடைய ஸுக்ருதலவத்தை யொன்றையும் நினைத்து, தான் செய்த நன்மைகளொன்றும் பாராதேயிருக்கை" என்று இதுவும் பட்டரருளிச்செய்தார்.

(அநாதிகாலம் வாஸிதங்களான ரஸங்களை மறக்கும்படி யெல்லாதசையிலும் இனியனுய்). இது - மாதுர்ய கார்யம். அநாதிகாலமே பிடித்துக் கொளுந்திக் கிடக்கிற ப்ராக்ருதவிஷயரஸங்களை விஸ்மரிக்கும்படி ஸர்வாவஸ்தையிலும் இனியனுகிறது - "ஸர்வரஸ:" (ஸர்வரஸ:)[1] என்கிறபடியே, நிரதிஶய போக்யனுயிருக்கையாலேயிறே.

(பார்யாபுத்ராதிகள் குற்றங்களைக் காணுக்கண்ணிட்டிருக்கும் புருஷனைப்போலே, அவர்கள் குற்றங்களைத் திருவுள்ளத்தாலே நினையாதே). இது - சாதுர்யகார்யம். பார்யா புத்ராதிகளோடேகூடி வர்த்திப்பானெருவு புருஷன், அவர்கள் செய்கிற குற்றங்களைக் கண்டிருக்கச் செய்தேயும் காணுதாரைப்போலே யிருக்குமாப்போலே, ஆஶ்ரிதர் செய்த குற்றங்களைக் கண்டிருக்க செய்தேயும் திருவுள்ளத்தால் நினையாதிருக்கிறது — ஆஶ்ரித தோஷங்களைத் தெரியாதபடி மறைக்கவல்ல சதுரனுகையாலேயிறே.

(குற்றங்களைப் பெரிய பிராட்டியார் காட்டினுலும் அவளோடே மறுதலைத்துத் திண்ணியனுய் நின்று

1. சா. உ. 3. 14. 2. ஸர்வரஸ: - எல்லா ரஸமுமானவன்.

ரக்ஷித்து). இது – ஸ்த்தைர்யகார்யம். சொன்னது செய்ய வேண்டும்படி தனக்கு அபிமதையாய், சேதநர் குற்றங் களைப் பொறுப்பித்துச் சேரவிடும் பெரியபிராட்டியார், "தாமரையாளாகிலும் சிதகு*ரைக்குமேல்"[1] என்கிற படியே, குற்றங்களைக்காட்டினாலும், "என்னடியாரது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார்"[1] என்று, அவ ளோடே மறுதலைத்து, நிஶ்சலனாய் நின்று ரக்ஷிக்கிறது - ஸ்த்திர ஸ்வபாவனாகையாலேயிறே.

(காமிநியுடைய அழுக்கு உகக்கும் காமுகனைப்போலே, அவர்கள் தோஷங்களை போக்யமாகக்கொண்டு). இது - ப்ரணயித்வகார்யம். காமிநி விஷயத்தில் ப்ராவண்யத்தா லேயவளுடம்பிலழுக்கை விரும்பும் காமுகனைப்போலே, ஆஶ்ரிதரானவர்களுடைய ப்ரக்ருதி ஸம்பந்தாதி தோஷங் களை போக்யமாகக்கொள்ளுகிறது - பரமப்ரணயியாகை யாலேயிறே.

(அவர்கள்பக்கல் கரணத்ரயத்தாலும் செவ்வியனாய்). இது - ஆர்ஜவகார்யம். மநோவாக்காயங்கள் மூன்றிலும் செவ்வைக் கேடராயிருக்குமவர்கள் பக்கலிலே, நீரேறு மேடுகளிலே விரகாலே நீரேற்றுவாரைப்போலே, தன்னை யமைத்து, த்ரிவித கரணங்களாலும் செவ்வியனாய்ப் போரு கிறது - ருஜுஸ்வபாவனாகையாலேயிறே.

(பிரிந்தால் அவர்கள் வ்யஸநம் குளப்படியென்னும் படி தான் ஈடுபட்டு). இது - மார்தவகார்யம். "ஊர்த்வம் மாஸாந்ந ஜீவிஷ்யே" (ஊர்த்வம் மாஸாந் ந ஜீவிஷ்யே)[2] என் றால் - "ந ஜீவேயம் க்ஷணமபி" (ந ஜீவேயம் க்ஷணமபி)[3] என்கிறபடியே, தன்னைப் பிரிந்தால் ஆஶ்ரிதர்படும் வ்யஸ

*சிதகு - குற்றம், 1. பெரி. தி. 4-9-2.

2. ரா. ஸு. 38-10. தசரதாத்மஜ - ஓ தாசரதியே! ஜீவிதம் - பிராணனை, மாஸம் தாரயிஷ்யாமி - ஒருமாதம் தரித்துக்கொண்டிருக் கிறேன், மாஸாத் ஊர்த்வம் - ஒரு மாதத்திற்கு மேல், ந ஜீவிஷ்யே - பிழைத்திருக்கமாட்டேன், அஹம் - நான், தே - உமக்கு, ஸத்யேந ப்ரவீமி - ஸத்யமாய்ச் சொல்லுகிறேன்.

3. ரா. ஸு. க்ஷணமபி - ஒருகணமும், (அந்த ஸீதையை விட்டு,) ந ஜீவேயம் - ஜீவிக்கமாட்டேன்.

நம் - கடல்போன்ற தன் வ்யஸநத்துக்கு ஒரு குளப்படி மாத்ரமென்னும்படி தான் க்லேசப்படுகிறது – ஆச்ரித விரஹம் பொறுக்கமாட்டாத மென்மையாலேயிறே.

(அவர்களுக்குப் பாங்காகத் தன்னைத் தாழவிட்டு). இது - ஸௌசீல்யகார்யம். ஜந்மாதிகளால் தண்ணியரா யிருக்குமவர்களுக்கு அநுகூலமாக ஸர்வேச்வரன், ஸர் வோத்க்ருஷ்டனான தன்னைத் தாழவிடுகிறது - சீலவத்தை யாலேயிறே.

(அவர்களுக்குக் கட்டவும் அடிக்கவுமாம்படி யெளி யனாய்). இது - ஸௌலப்யகார்யம். அவதாரதசையிலே நவநீதசௌர்யவ்யாஜத்தாலே "சிக்கெனவார்த்தடிப்ப"[1] என்கிறபடியே, யசோதாதிகளுக்குக் கட்டவும், அடிக்க வும் ஆம்படி யெளியனாயிற்றது - * எளிவருமியல்வின னாகையாலேயிறே.

(அன்று ஈன்ற கன்றுக்குத் தாயிரங்கி முன்னணைக் கன்றையும், புல்லிட வந்தவர்களையும் கொம்பிலும் குளம் பிலும் மேற்குமாப்போலே, பெரிய பிராட்டியாரையும், ஸூ ரிகளையும் விட்டு ஸ்நேஹித்துக் கொண்டுபோரும்). இது - வாத்ஸல்யகார்யம். அன்று தான் பெற்ற கன்றுக்குத் தாயான பசுவிரங்கி, முன்பு தான் ஸ்நேஹித்துக் கொண்டு போந்த முன்னணைக்கன்றையும், தனக்கு போக்யமான புல்லிடவந்தவர்களையும் உட்பட ரூசிக் கொம்பிலேகோத் தெடுப்பது, குளம்பாலே மிதிப்பதாமாப்போலே, பரிரம்ப ணாதி போகோபகாரிகையான பெரியபிராட்டியாரையும், முன்பு ஸ்நேஹவிஷயமாய்ப் போந்த நித்யஸூரிகளையும் தள்ளிவிட்டு, இன்று ஆச்ரயித்தவர்களை ஸ்நேஹித்துக் கொண்டுபோருகிறது - வத்ஸலனாகையாலேயிறே.

ஆக, (ஜ்ஞாநசக்த்யாதி கல்யாண குணகணபூஷித னாய்) என்றத்தை விஸ்தரேண உபபாதித்தாராய் நின்றார் கீழ்; அநந்தரம், (ஸகலஜகத்ஸர்கஸ்திதிஸம்ஹாரகர்த் தாவாய்) என்றத்தை, விஸ்தரேண உபபாதிப்பதாக வுப க்ரமிக்கிறார்;

1. சிறியதிருமடல். 36.

## 12. இவனே ஸகலஜகத்துக்கும் காரணபூதன்.

(இவனே ஸகலஜகத்துக்கும் காரணபூதன்) என்று. இவன் என்று, கீழ்ச்சொன்ன விலக்ஷணஸ்வரூபகுணவிசிஷ்டனான ஈச்வரனை பராமர்சிக்கிறது; அவதாரணத்தாலே, ஜகத்காரணத்வத்தினுடைய அந்யயோக வ்யவச்சேதம் பண்ணுகிறது. வேதாந்தத்திலே, "𑌸𑌦𑍇𑌵 𑌸𑍋𑌮𑍍𑌯𑍇𑌦𑌮𑌗𑍍𑌰 𑌆𑌸𑍀𑌤𑍍" (ஸதேவஸோம்யேதமக்ர ஆஸீத்)[1] என்று சாந்தோக்யத்திலும், "𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌵𑌾 𑌇𑌦𑌮𑍇𑌕𑌮𑍇𑌵𑌾𑌗𑍍𑌰 𑌆𑌸𑍀𑌤𑍍" (ப்ரஹ்ம வா இதமேகமேவாக்ர ஆஸீத்)[2] என்று வாஜஸநேயகத்திலும், "𑌆𑌤𑍍𑌮𑌾 𑌵𑌾 𑌇𑌦𑌮𑍇𑌕𑌮𑍇𑌵𑌾𑌗𑍍𑌰 𑌆𑌸𑍀𑌤𑍍" (ஆத்மா வா இதமேகமேவாக்ர ஆஸீத்)[3] என்று ஐதரேயகத்திலும், ஸத்ப்ரஹ்மாத்மரூப ஸாமாந்ய சப்தங்களாலே சொல்லப்பட்ட காரணவஸ்துவேது? என்னுமாகாங்க்ஷையிலே, கதிஸாமாந்ய ந்யாயத்தாலே, "𑌏𑌕𑍋 𑌹 𑌵𑍈 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣 𑌆𑌸𑍀𑌤𑍍" (ஏகோ ஹ வை நாராயண ஆஸீத்)[4] என்று. மஹோபநிஷத்திலே விசேஷிக்கப்பட்ட நாராயணனே ஜகத்காரணபூதனாக நிச்சயித்திருக்கும் பரமவைதிகராகையாலே, (இவனே) என்று ஸாவதாரணமாக வருளிச்செய்கிறார்.

(ஸகலஜகத்துக்கும் காரணபூதன்) என்றது - ஸமஷ்டி, வ்யஷ்டி ரூப ஸமஸ்தகார்யங்களுக்கும் காரணபூதனென்றபடி. இத்தால், ஸமந்வயமும், அவிரோதமும், ஸாதநமும், பலமும் ஆகிற அர்த்தசதுஷ்டயத்தையும் அடைவே ப்ரதிபாதிக்கிற உத்தரமீமாம்ஸையில் அத்யாய

---

1. சா. உ. 6-2-1. ஸோம்ய - ஸோம்யனே! இதம் - இந்த ஜகத்து, அக்ரே - முன்பு, ஸதேவ - ஸத்தாகவே, ஆஸீத் - இருந்தது.

2. வாஜஸநேயகே. இதம் - இந்த ப்ரபஞ்சமானது, அக்ரே - ஸ்ருஷ்டிக்கு முன்பு, ஏகம் - ஒன்றுயிருக்கிற, ப்ரஹ்மவா - ப்ரஹ்மமாகவே, ஆஸீத் - இருந்தது.

3. ஐ. உ. இதம் - இந்த ஜகத்தானது, அக்ரே - ஸ்ருஷ்டி காலத்திலே, ஆத்மா ஏக ஏவ ஆஸீத் - ஆத்மா ஒன்றுகவே இருந்தது.

4. மஹோபநிஷத். நாராயணன் ஒருவனுகவே இருந்தான்.

சதுஷ்டயத்திலும் வைத்துக்கொண்டு, “ அதாதோ ப்ரஹ்ம-ஜிஜ்ஞாஸா ” (அதாதோ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா)[1] என்று ஜிஜ்ஞாஸ்யமாகச் சொல்லப்பட்ட ப்ரஹ்மத்துக்கு லக்ஷணமாக ‘ ஜந்மாத்யஸ்ய யத: ” (ஜந்மாத்யஸ்ய யத:)[2] என்று, ஜகத்காரணத்வத்தைச் சொல்லி, அதினுடைய அயோக அந்யயோக வ்யவச்சேதமுகத்தாலே, ஜகத்காரணவஸ்து ப்ரதிபாதக ஸகல வேதாந்த வாக்யங்களுக்கும், ப்ரஹ்மணி ஸம்யக் அந்வயத்தை ப்ரதிபாதித்த ப்ரதமாத்யாயத்தின் அர்த்தத்தை யருளிச்செய்தாராயிற்று.

அவிரோதப்ரதிபாதகமான த்விதீயாத்யாயத்திற் படியே, ப்ரஹ்மகாரணத்வவிரோதியான பரமாணு காரணவாதிகளை நிராகரிக்கிறார் ;

## 13. சிலர் பரமாணுவை காரணமென்றார்கள்.

( சிலர் பரமாணுவை காரணமென்றார்கள் ) என்று தொடங்கி. சிலரென்று, பௌத்த ஆர்ஹத வைஶேஷிகாதிகளைச் சொல்லுகிறது. இதில், பௌத்த ஆர்ஹதர்க்கு கேவல பரமாணுக்களே ஜகத்காரணமாக மதமாயிருக்கும் ; வைஶேஷிகாதிகளுக்கு பரமாணுக்கள் உபாதாந காரணமாய், ஆநுமாநிகேஶ்வரன் நிமித்தகாரணமாக மதமாயிருக்கும். இவர்களில் பௌத்தவைஶேஷிகாதிகள், பார்த்திவாப்யதைஜஸவாயவீயங்களென்று, பரமாணுக்களை சதுர்விதமாகக் கொள்ளுவர்கள் ; ஆர்ஹதர், ஏகரூபமாகக் கொள்ளுவர்கள். இங்ஙனே சில விஶேஷங்கள் உண்டானாலும், பரமாணு காரணத்வ அங்கீகாரம் எல்லார்க்கும் ஒத்திருக்கையாலே, சிலரென்று ஸமுச்சித்ய உபாதாநம் பண்ணுகிறார்.

---

4. ப்ர. ஸூ. 1-1-1. அத - வேதத்தின் பூர்வபாகமாகிய கர்ம காண்டங்களின் அர்த்தத்தை விசாரித்த பிறகு, அத: - கர்மங்கள் அற்பமென்றும், அஸ்திரமென்றும் ஜ்ஞானமுடையவனுகையால், ப்ரஹ்மஜிஜ்ஞாஸா - அனந்தஸ்திரபலமான ப்ரஹ்மத்தினுடைய விசாரத்தில் இச்சை. (கர்த்தவ்யா - செய்யவேண்டும்).

2. ப்ர ஸூ. 1-1-2. அஸ்ய - இந்த ஜகத்திற்கு, ஜந்மாதி - உத்பத்திஸ்த்திதிலயங்கள், யத: - எதனிடத்தில் நின்றுமோ, (அது ப்ரஹ்மம்.)

இவர்கள், மஹீ மஹீதராதி ஸகலகார்யங்களும் பரமாணுபரிணாமமென்றிறே சொல்லுவது. அந்த பக்ஷத்தை நிராகரிக்கிறார் ;

**14. பரமாணுவில் ப்ரமாணமில்லாமையாலும் ஶ்ருதி விரோதத்தாலும் அது சேராது.**

(பரமாணுவில் ப்ரமாணமில்லாமையாலும், ஶ்ருதி விரோதத்தாலும் அது சேராது) என்று. அதாவது – ஜகத்காரணதயா அங்கீகரிக்கப்படுகிற பரமாணுக்கள் ப்ரத்யக்ஷஸித்தமுமன்றியே, ஆகமஸித்தமுமன்றியே, அநுமாநத்தாலே ஸாதிக்கப்பார்க்கில், அது, ஆகமவிருத்தமான வர்த்தத்தை ஸாதிக்கமாட்டாமையாலே, அநுமாநஸித்தமுமன்றியே யிருக்கையாலே, பரமாணுஸத்பாவத்தில் ஒரு ப்ரமாணமும் இல்லாமையாலும் ஈஶ்வரனே ஜகத்காரணம் என்கிற ஶ்ருதிக்கு விரோதமாகையாலும், பரமாணுக்கள் ஜகத்காரணம் என்றவது சேராது என்கை.

அநந்தரம் ஜகத்துக்கு ப்ரக்ருதியே ஸ்வதந்த்ரகாரணம் என்று சொல்லுகிற காபிலமதத்தை நிராகரிக்கைக்காக அத்தை யுத்க்ஷேபிக்கிறார் ;

**15. காபிலர் ப்ரதாநம் காரணமென்றார்கள்.**

(காபிலர் ப்ரதாநம் காரணமென்றார்கள்) என்று. காபிலரென்கிறது – கபிலமதநிஷ்டரான ஸாங்க்யரை. ம்ருதாத்மகமான கடத்துக்கு ம்ருத்த்ரவ்யமே காரணமாகிறாப்போலே, ஸத்வரஜஸ் தமோமய ஸுகதுக்கமோஹாத்மகமான ஜகத்துக்கும் குணத்ரயங்களினுடைய ஸாம்யரூபமான ப்ரதாநமே ஸ்வதந்த்ரமான காரணம். ததிபாவேந பரிணமியாநிற்கும் பயஸ்ஸுக்கு அநந்யாபேக்ஷமாக ஆத்யபரிஸ்பந்தம் முதலான பரிணாம பரம்பரை ஸ்வத ஏவ கூடுகிறாப்போலேயும், மேகவிமுக்தமாய், ஏகரஸமாயிருக்கிற ஜலத்துக்கு நாரிகேள தால சூத கபித்த நிம்ப திந்த்ரிண்யாதிவிசித்ர ரஸரூபேண பரிணாமப்ரவ்ருத்தி காணப்படுகிறாப் போலேயும் பரிணாமஸ்வபாவமாய் ப்ரதிஸர்காவஸ்தையில் ஸத்ருஶபரிணாமமுமாயிருந்த ப்ரதாநத்துக்கு, அநந்யாதிஷ்டிதமாகவே ஸர்காவஸ்தையில் குணவை

க்ஷம்யநிமித்தமான விசித்ரபரிணமம் கூடுமாகையாலே, ப்ர க்ருதியே ஸ்வதந்த்ரமாய்க்கொண்டு ஜகத்காரணமாகிற தென்றிறே அவர்கள் சொல்லுவது.

அத்தை நிராகரிக்கிறூர் ;

16. ப்ரதாநம் அசேதநமாகையாலும், ஈஶ்வரனதிஷ்ட்டியாதபோது பரிணமிக்க மாட்டாமையாலும், ஸ்ருஷ்டிஸம்ஹாரவ்யவஸ்த்தை கூடாமையாலும் அதுவும் சேராது.

(ப்ரதாநம் அசேதநமாகையாலும்) என்று தொடங்கி. அதாவது – விசித்ரஜகதாகாரேண பரிணமிக்குமிடத்தில், இன்னபடி பரிணமிப்போமென்றிருக்கைக்கு யோக்யதை யில்லாதபடி ப்ரதாநம் சைதந்யரஹிதமான வஸ்துவகை யாலும், “[illegible]” (ப்ரக்ருதிம் புருஷஞ்சைவ ப்ரவிஶ்யாத்மேச்சயா ஹரி:| க்ஷோபயாமாஸ ஸம்ப்ராப்தே ஸர்ககாலே வ்யயாவ்யயௌ)[1] என்கிறபடியே, ஈஶ்வரன் அதிஷ்டித்த போதொழிய பரிணமிக்கமாட்டாமையாலும், ததநிஷ்ட்டாந மொழிய பரிணமிக்குமாகில், ஸர்வகாலமும் ஸ்ருஷ்டி யேயாய்ச் செல்லுமதொழிய ஸம்ஹ்ருதமாய்க்கிடக்கையெ ன்னுமது கூடாமையாலே, காலபேதேந வருகிற ஸ்ருஷ்டி ஸம்ஹார வ்யவஸ்த்தை கூடாமையாலும், ப்ரதாநம் கார ணமென்கிற வதுவும் சேராதென்கை. (அதுவும்) என்று – பூர்வோக்த பரமாணு காரணவாதத்தை ஸமுச்சயிக்கிறது

இப்படி அசேதநமான ப்ரதாநத்தை ஜகத்காரணமா கக் கொள்ளுகிற பக்ஷத்தை நிராகரித்தவநந்தரம், சேதநனை ஜகத்காரணமாகக் கொள்ளும் பாசுபதாதிமதத்தை நிரா கரிக்கிறூர் ;

17. சேதநனும் காரணமாகமாட்டான்.

(சேதநனும் காரணமாகமாட்டான்) என்று. ச – ஶப் தத்தாலே, கீழ்ச்சொன்ன அசேதநத்தை ஸமுச்சயிக்கிறது ஆகமஸித்தேஶ்வரன் நிமித்தகாரணமென்றும், அநுமாநி

1. வி. பு. 1-2-31. 170-ம் பக்கம் பார்க்க.

கேஶ்வரன் நிமித்தகாரணமென்றும், பாஶுபதவைஶேஷிகாதிகள் சொல்லுகிற ருத்ரன் — சேதநரிலே அந்யதமனிறே. "ஹிரண்யகர்ப்பஸ்ஸமவர்த்ததாக்ரே" (ஹிரண்யகர்ப்பஸ்ஸமவர்த்ததாக்ரே)[1] இத்யாதி வாக்யங்களைக் கொண்டு, சேதநரிலே அந்யதமனான ப்ரஹ்மாவையும் ஜகத்காரணமாகச் சொல்லுவாருமுண்டிறே. அவையெல்லாவற்றையும் திருவுள்ளம்பற்றியிறே (சேதநனும்) என்று, பொதுவிலே அருளிச்செய்தது. காரணமாகமாட்டான் என்றது காரணமாக க்ஷமன் அல்லன் என்றபடி.

எத்தாலே? என்ன; அருளிச்செய்கிறார்;

18. கர்ம பரதந்த்ரனுமாய், துக்கியுமா யிருக்கை யாலே.

(கர்மபரதந்த்ரனுமாய்) என்று தொடங்கி. அதாவது ஸங்குசித ஜ்ஞாநஶக்திகனுய்க்கொண்டு, தான் நினைத்தபடியொன்றுஞ்செய்ய க்ஷமனல்லாதபடி கர்மாதீநனுமாய், ஆநந்தியாய்க்கொண்டு ஜகத்வ்யாபாரத்திலே மூளுகைக்கு யோக்யதை யில்லாதபடி துக்கியுமாயிருக்கையாலேயென்கை. "அபஹதபாப்மா" (அபஹதபாப்மா) என்கிறபடியே, அகர்மவஶ்யனுமாய், "ஆநந்தமய:" (ஆநந்தமய:) என்கிறபடியே, நிரதிஶய ஆநந்தியுமாயிருக்குமவனுக்கிறே அப்ரதிஹதஜ்ஞாநஶக்திகனுய்,மஹாப்ரீதியுடையவன் பண்ணும் ஜகத்வ்யாபாரங்கூடுவது; "ப்ரஹ்மாத்யாஸ் ஸகலா தேவா மநுஷ்யா: பஶவஸ்ததா। விஷ்ணோர் மாயாமஹாவர்த்தமோஹாந்ததமஸாவ்ருதா:। ஆப்ரஹ்மஸ்தம்பபர்யந்தா ஜகதந்தர்வ்யவஸ்திதா:। ப்ராணிந: கர்மஜநிதா ஸம்ஸாரவஶவர்த்திந:" (ப்ரஹ்மாத்யாஸ் ஸகலா தேவா மநுஷ்யா: பஶவஸ்ததா। விஷ்ணோர் மாயாமஹாவர்த்தமோஹாந்ததமஸாவ்ருதா:। ஆப்ரஹ்மஸ்தம்ப பர்யந்தா ஜ்ஜகதந்தர்வ்யவஸ்திதா:। ப்ராணிந: கர்மஜநிதா ஸம்ஸாரவஶவர்த்திந:)[2] என்கிறபடியே,

---

1. யஜுஷி. கா. 4. அக்ரே - ஸ்ருஷ்டிக்கு முன்பு, ஹிரண்யகர்ப்ப:- ஸ்வர்ணத்தை கர்ப்பத்திலுடைய, அதாவது ஜீவஸமஷ்டியை உள்ளே வைத்திருக்கிற ஸர்வேச்வரன், ஸமவர்த்தத - இருந்தான்.

2. விஷ்ணுதர்மம். ப்ரஹ்மாத்யா: - ப்ரஹ்மா முதலான ஸகலா: தேவா: - ஸமஸ்தமான தேவதைகளும், மநுஷ்யா: - மநுஷ்

கர்மவஶ்யருமாய், "𑌤𑌤𑌃 𑌕𑍍𑌰𑍋𑌧𑌪𑌰𑍀𑌤𑍇𑌨 𑌸𑌂𑌰𑌕𑍍𑌤𑌨𑌯𑌨𑍇𑌨 𑌚 । 𑌵𑌾𑌮𑌾𑌙𑍍𑌗𑍁𑌷𑍍𑌠𑌨𑌖𑌾𑌗𑍍𑌰𑍇𑌣 𑌛𑌿𑌨𑍍𑌨𑌂 𑌤𑌸𑍍𑌯 𑌶𑌿𑌰𑍋 𑌮𑌯𑌾 । 𑌯𑌸𑍍𑌮𑌾𑌦𑌨𑌪𑌰𑌾𑌧𑌸𑍍𑌯 𑌶𑌿𑌰𑌶𑍍𑌛𑌿𑌨𑍍𑌨𑌂 𑌤𑍍𑌵𑌯𑌾 𑌮𑌮 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌚𑍍𑌛𑌾𑌪𑌸𑌮𑌾𑌵𑌿𑌷𑍍𑌟𑌃 𑌕𑌪𑌾𑌲𑍀 𑌤𑍍𑌵𑌂 𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌸𑌿" (தத꞉ க்ரோத பரீதேந ஸம்ரக்தநயநேந ச | வாமாங்குஷ்டநகாக்ரேண சிந்நம் தஸ்ய ஶிரோ மயா | யஸ்மாதநபராதஸ்ய ஶிரஶ்சிந்நம் த்வயா மம | தஸ்மாச்சாபஸமாவிஷ்ட꞉ கபாலீ த்வம் பவிஷ்யஸி)[1] என்கிறபடியே, தலையறுப்பாரும், அறுப்புண்பாருமாய்க்கொண்டு துக்கிகளுமாயிருப்பார்க்கு ஜகத்ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரம் கூடாதிறே.

ஆக, இப்படி விரோதிபரிஹாரங்களைப் பண்ணி, ப்ரதிஜ்ஞாநுகுணமாக நிகமிக்கிறார்;

## 19. ஆகையால், ஈச்வரனே ஜகத்துக்குக் காரணம்.

(ஆகையால், ஈஶ்வரனே ஜகத்துக்குக் காரணம்) என்று. ஆகையால் என்றது – சேதநாசேதநங்கள் இரண்டும் காரணமன்றிக்கே யொழிகையாலே யென்கை.

---

யர்களும், ததா பசவ: - அப்படியே பசுக்களும், விஷ்ணோ: - விஷ்ணுவினுடைய, மாயாமஹாவர்த்த மோஹாந்த தமஸாவ்ருதா: - மாயையாகிற பெரிதான சுழலிலிருக்கிற அஜ்ஞாநாந்தகாரத்தாலே சூழப்பட்டவர்கள், ஜகதந்தர்வ்யவஸ்திதா: - ஜகத்திற்குள் இருக்கிற ஆப்ரஹ்மஸ்தம்ப பரியந்தா: - ப்ரஹ்மா முதல் ஸ்தம்ப பர்யந்தங்களான, ப்ராணிந: - ஜீவாத்மாக்கள், ஸம்ஸாரவசவர்திந: - ஸம்ஸாரத்திற்கு ஸ்வாதீனப்பட்டிருக்கிறார்கள், கர்ம ஜநிதா: - கர்மத்தாலே உண்டு பண்ணப்பட்டவர்கள்.

1. மாத்ஸ்ய புராணே. தத: - அதற்குப் பின்பு, க்ரோதபரீதேந - கோபத்தால் வியாப்தனும், ஸம்ரக்த நயநேந ச - சிவந்திருக்கிற கண்களையுடையவனுமிருக்கிற, மயா - என்னால், வாமாங்குஷ்ட நகாக்ரேண - இடக்கைக் கட்டை விரலினுடைய நகத்தின் நுனியாலே, தஸ்ய - பிதாவான ப்ரஹ்மாவினுடைய ஶிர: - சிரஸ்ஸானது சிந்நம் - அறுக்கப்பட்டது, யஸ்மாத் - யாதொரு காரணத்தாலே, அநபராதஸ்ய - தவறு செய்யாமலிருக்கிற, மம - என்னுடைய, ஶிர: சிரஸ்ஸானது, த்வயா - உன்னாலே, சிந்நம் - அறுக்கப்பட்டதோ, தஸ்மாத் - அந்தக்காரணத்தாலே, த்வம் - நீ, சாப ஸமாவிஷ்ட: - சாபத்தை அடைந்தவனாய்க்கொண்டு, கபாலீ - கபாலத்தை அதாவது மண்டையோட்டைக் கையிலுடையவனாக, பவிஷ்யஸி - ஆகப்போகிறாய் (என்று ப்ரஹ்மா ருத்ரனைக் குறித்துச் சபித்தார்).

லோகத்திலே அவித்யாகர்மநிபந்தநமாகவும், பர நியோகநிபந்தநமாகவும் காரணமாகையுண்டாகையாலே அவற்றைக் கழித்து, இவனுடைய காரணத்வஹேதுவை அருளிச்செய்கிறார் ;

**20. இவன் காரணமாகிறது – அவித்யாகர்மபரநியோகாதிகளாலன்றிக்கே ஸ்வேச்சையாலே.**

(இவன்காரணமாகிறது) என்று தொடங்கி. அவித்யா கர்மநிபந்தநமான காரணத்வம் ஸகலஜந்து ஸாதாரணம். அதாவது - லோகத்தில் ஒன்றுக்கொன்று உத்பாதகமாய்க் கொண்டு வருகிற காரணத்வம், வைஷயிக ஸுகப்ராவண்ய ஹேதுவான அஜ்ஞாநத்தாலும், கர்மத்தாலுமிறே. அதில், ஶாஸ்த்ரவஶ்யமானவற்றினுடைய உத்பாதகத்வம் கர்மப்ரதாநமாயிருக்கும் ; அல்லாதது, அவித்யா ப்ரதாந மாயிருக்கும். இரண்டும், ஒன்றையொன்று விட்டிராது. அதிகாரி புருஷர்களான ப்ரஹ்மாதிகளுடைய காரணத்வம் பரநியோகப்ரதாநமாயிருக்கும். "𑌪𑍍𑌰𑌾𑌜𑌾𑌪𑌤𑍍𑌯𑌂 𑌤𑍍𑌵𑌯𑌾 𑌕𑌰𑍍𑌮 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌮𑌯𑌿 𑌨𑌿𑌵𑍇𑌶𑌿𑌤𑌮𑍍" (ப்ராஜாபத்யம் த்வயா கர்ம பூர்வம் மயி நிவேஶிதம்)[1] "𑌏𑌤𑍌 𑌦𑍍𑌵𑍌 𑌵𑌿𑌬𑍁𑌧𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠𑍌 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌕𑍍𑌰𑍋𑌧𑌜𑍌 𑌸𑍍𑌮𑍃𑌤𑍌 | 𑌤𑌦𑌾 𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑌪𑌨𑍍𑌥𑌾𑌨𑍌 𑌸𑍃𑌷𑍍𑌟𑌿𑌸𑌂𑌹𑌾𑌰𑌕𑌾𑌰𑌕𑍌" (ஏதௌ த்வௌ புருஷஶ்ரேஷ்டௌ ப்ரஸாதக்ரோதஜௌ ஸ்ம்ருதௌ | ததா தர்ஶிதபந்தாநௌ ஸ்ருஷ்டிஸம்ஹாரகாரகௌ)[2] இத்யாதிகளிலே கண்டுகொள்வது. "ஆதிஶப்தத்தால், இவர்க்கு விவக்ஷிதம் - அவர்ஜநீயமான ராகமோ" என்று,

---

1. த்வயா - தேவரீராலே, பூர்வம் - முன்னே, ப்ராஜாபத்யம் - ப்ரஹ்ம ஸம்பந்தியான, அதாவது ஸ்ருஷ்டி கார்யமானது, மயி - என்னிடத்தில், நிவேசிதம் - வைக்கப்பட்டது.

2. மோக்ஷதர்மம். விபுதச்ரேஷ்டௌ - தேவர்களுக்குள் ச்ரேஷ்டர்களாயும், ப்ரஸாதக்ரோதஜௌ - அந்த நாராயணனுடைய அநுக்கிரஹத்தாலும் கோபத்தாலும் உண்டானவர்களாயிருக்கிற, ஏதௌ த்வௌ - இந்த ப்ரஹ்மா சிவன் என்ற இரண்டு பேர்களும், ததா தர்சித பந்தாநௌ - அந்த நாராயணனால் நன்கு காண்பிக்கப் பட்ட ஸ்ருஷ்டி ஸம்ஹார மார்கத்தையுடையவர்களாய்க் கொண்டு, ஸ்ருஷ்டி ஸம்ஹாரகாரகௌ - ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களைச் செய்கிறார் களென்று, ஸ்ம்ருதௌ - ஸ்ம்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறார்கள்.

நடுவிற்றிருவீதிப்பிள்ளை பட்டர் அருளிச்செய்ததாமித்தனை.

"இந்த ஸ்ருஷ்ட்யாதிவ்யாபாரங்கள், எம்பெருமானுக்கு அவித்யாகர்ம நிபந்தநமோ? அன்றிக்கே, அவர் ஜீயமாயிருப்பதொரு ராகமோ? இல்லையாகில், பரப்ரேரிதனாய்க்கொண்டு செய்கிறானோ?" என்றிறே அவர் சங்கா வாக்யத்தில் அருளிச்செய்தது.

இவற்றாலன்றிக்கே, ஸ்வேச்சையாலே என்றது - "நிரவத்யம் நிரஞ்ஜநம்" (நிரவத்யம் நிரஞ்ஜநம்)[1] "அபஹதபாப்மா" (அபஹதபாப்மா) "ந தஸ்யேஶ கஶ்சந" (ந தஸ்யேஶ கஶ்சந)[2] என்கிறபடியே, அவித்யாதிதோஷ ப்ரதிபடனாய், தனக்கொரு நியாமகரின்றிக்கேயிருப்பானொருவனாகையாலே, தன்னிச்சையொழிய ஹேத்வந்தரமில்லையென்றபடி. "அசித்விஶேஷிதாந் ப்ரளயஸீமநி ஸம்ஸரதஃ கரணகளேபரைர்கடயிதும் தயமாநமநாஃ। வரத நிஜேச்சயைவ பரவாநகரோஃ ப்ரக்ருதிம் மஹதபிமாநபூதகரணாவளிகோரகிணீம்" (அசித்விஶேஷிதாந் ப்ரளயஸீமநி ஸம்ஸரதஃ கரணகளேபரைர் கடயிதும் தயமாநமநா। வரத நிஜேச்சயைவ பரவாநகரோஃ ப்ரக்ருதிம் மஹதபிமாநபூதகரணாவளிகோரகிணீம்)[3] "ஸ்ருஷ்டம் ஸ்தாவரஜங்கமம் ஸம் ஶ்ரீரங்கேஶம்

1. ச்வேத. உ. நிரவத்யம் - நாசமில்லாதவனாயும், நிரஞ்ஜநம் - பாபமில்லாதவனாயுமிருக்கிறான் ஈச்வரன்.

2. தை. உ. 2-1-10. தஸ்ய - அந்த பரமாத்மாவுக்கு, கச்சந - ஒருவனும், நேசே - நியாமகன் இல்லை.

3. ஸ்ரீரங்க. ஸ்தவ. ஹே வரத - ஓ வரதனே! ப்ரளயஸீமநி - பிரளயகாலத்தில், அசிதவிசேஷிதாந் - அசேதனத்திற்றத் துல்யரான, ஸம்ஸரத: - ஸம்ஸரிக்கிற சேதனரை, தயமாநமநா: - இரங்கின நெஞ்சையுடையராய், கரணகளேபரை: - இந்திரியங்களோடும் சரீரங்களோடும், கடயிதும் - சேர்ப்பிக்கைக்காக, நிஜேச்சயைவ - தன்னுடைய ஸங்கல்பத்தாலேயே, பரவாந் - பராதீனராய், ப்ரக்ருதிம் - மூலப்ரக்ருதியை மஹத் - மஹானென்ன, அபிமான - அஹங்காரங்களென்ன, பூத - பஞ்சபூதங்களென்ன, கரணாவளி - இந்திரிய ஸமூஹங்களென்ன, கோரகிணீம் - இவைகளாகிற மொட்டுக்களையுடைத்தானதாம்படி, அகரோ: - (தேவரீர்) பண்ணியருளிற்று.

[illegible] ” (ப்ரளயஸமயஸுப்தம் ஸ்வம் ஶரீரைகதேஶம் வரத சிதசிதாக்யம் ஸ்வேச்சயா விஸ்த்ருணோஷி | ககநமிவ கலாபம் சித்ரமாதத்ய தாந்வந்நநுஶிகிநி ஶிகீவ க்ரீடஸி ஸ்ரீஸமக்ஷம்)[1] என்றிறே பட்டரருளிச்செய்தது.

இப்படி- இச்சையாலேயாகிலும் இதுதான் ஆயாஸ ரூபமாயிருக்குமோ என்ன ; அருளிச்செய்கிறார் ;

21. ஸ்வஸங்கல்பத்தாலே செய்கையாலே, இதுதான் வருத்தமற்றிருக்கும்.

(ஸ்வஸங்கல்பத்தாலே செய்கையாலே இது தான் வருத்தமற்றிருக்கும்) என்று. அதாவது – யத்நரூபமான காயிகவ்யாபாரத்தாலன்றிக்கே, அயத்நமான மாநஸ வ்யாபாரரூப ஸங்கல்பத்தாலே செய்கையாலே, இந்த ஜகத் ஸ்ருஷ்டிரூப வ்யாபாரந்தான் அவனுக்கு அநாயாஸமாயிருக்குமென்கை. “[illegible]” (ஸோகாமயத பஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி)[2] “[illegible] |

---

1. ஸ்ரீரங். ஸ்தவ. 2 44 ஹே வரத ! - ஆச்ரிதர்களுடைய அபீஷ்டத்தைக் கொடுக்குமவனே ! த்வம் - தேவரீர், ப்ரளயஸமய ஸுப்தம் - ப்ரளயகாலத்தில் தூங்காநின்றிருக்கிற, (ஒழிந்திருக்கிற வ்யாபாரத்தையுடையதாயிருக்கிற), சித் அசிதாக்யம் - சித்தென்றும் அசித்தென்றும் பெயருடைய, ஸ்வம் சரீரைகதேசம் - ஸ்வகீயமாயிருக்கிற சரீரத்தினுடைய ஏகதேசத்தை, ஸ்வேச்சயா - தன்னுடைய ஸங்கல்பத்தாலே, விஸ்த்ருணோஷி - நாநாவிதமாயும் விசித்ரமாயுமிருக்கிற ஜகதாகாரமாக பரிணமிப்பியாநின்று கொண்டு. அநுசிகிநி - மயில் பேடையினுடைய ஸமீபத்தில், சித்ரம் - நாநாவர்ணமாயிருக்கிற, கலாபம் - மயில் தோகையை, ககநமிவ - ஆகாசத்தில் வ்யாப்தமானது போல், ஆதத்ய - பரப்பி, தாந்வந் - உதாராநின்றிருக்கிற, சிகீவ - மயில்போல், ச்ரீஸமக்ஷம் - பிராட்டியினுடைய ஸமீபத்தில், க்ரீடஸி - விளையாடுகிறாய்.

2. தைத். ஆ. 6. பஹு - தேவமநுஷ்யாதி ரூபேண அநேகமாக, ஸ்யாம் - ஆகக்கடவேன், (வ்யஷ்டி ஸ்ருஷ்டி) அதற்காக ப்ரஜாயேய - ஆகாசாதிகளை உண்டாக்கக்கடவேன். (ஸமஷ்டி ஸ்ருஷ்டி) இதி என்று, அகாமயத - சங்கல்பித்தான்.

தஸ்யாரிபக்ஷக்ஷபணே கியாநுத்யமவிஸ்தர:” (மந ஸைவ ஜகத் ஸ்ருஷ்டிம் ஸம்ஹாரஞ்ச கரோதி ய: | தஸ்யாரிபக்ஷக்ஷபணே கியாநுத்யமவிஸ்தர:)[1] “நினைந்தவெல்லாப் பொருள்களுக்கும் வித்தாய் முதலிற் சிதையாமே மனஞ் செய் ஞானத்துன் பெருமை”[2] என்னக்கடவதிறே.

அநாதரஸமாயிருந்ததேயாகிலும், அவாப்த ஸமஸ்த காமதயா பரிபூர்ணனாயிருக்கிறவனுக்கு இந்த வ்யாபாரத்தால் ப்ரயோஜநமென்? என்ன; அருளிச்செய்கிறார்;

## 22. இதுக்கு ப்ரயோஜநம் கேவலலீலை.

(இதுக்கு ப்ரயோஜநம் கேவலலீலை) என்று. அதாவது – இந்த ஜகத்ஸ்ருஷ்டிரூப வ்யாபாரத்துக்கு ப்ரயோஜநம் வெறும் லீலையென்றபடி. லீலையாவது – தாதாத்விகரஸமொழிய காலாந்தரத்தில் வருவதொரு பலத்தைக் கணிசியாமல் பண்ணும் வ்யாபாரமேயாகிலும், (இதுக்கு ப்ரயோஜநம்) என்று, ஸ்ருஷ்டிரூபவ்யாபாரத்துக்கு ப்ரயோஜநமாகச் சொல்லுகையாலே, தாதாத்விகரஸமாத்ரத்தைச் சொல்லிற்றாகக் கடவது. இந்த ஸ்ருஷ்டிரூபவ்யாபாரந்தான் – ஸார்வபௌமரான ராஜாக்களுக்கு த்யூதாதிகள் போலேயும், பாலர்க்கு மணற்கொட்டகம் போலேயும் தாதாத்விகரஸமாயிருப்பதொன்றிறே இவனுக்கு. இத்தால், “லோகவத்து லீலா கைவல்யம்” (லோகவத்து லீலாகைவல்யம்)[3] என்கிற ஸூத்ரார்த்தத்தை அருளிச்செய்தாராயிற்று. “க்ரீடா ஹரேரிதம் ஸர்வம்

1. வி. பு. 5.22-15: ய: - யாதொரு பரமாத்மாவானவன், மநஸைவ - ஸங்கல்பமாத்ரத்தாலே, ஜகத் ஸ்ருஷ்டிம் - ஜகத்தினுடைய ஸ்ருஷ்டியையும், ஸம்ஹாரஞ்ச - ஸம்ஹாரத்தையும், கரோதி - பண்ணுகிறானோ, தஸ்ய - அவனுக்கு, அரிபக்ஷக்ஷபணே - சத்ருபக்ஷத்தை ஸம்ஹரிக்கிற விஷயத்தில், உத்யம விஸ்தர: - ப்ரயத்னத்தினுடைய விஸ்தாரமானது, கியான் - எவ்வளவு? அதாவது அல்பம்.

2. தி. வா. 1-5-2.

3. பிரு. ஸூ. 2-1-33. லீலாகைவல்யம் - கேவலம் லீலையே ஜகத்ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜனமாகிறது, (அதெப்படியென்றால்) லோகவத் - லோகத்தில் ராஜாக்களுக்குப் பந்தாடுகிற வ்யாபாரம் போலே.

தஸ்ய நிரூாமய" (க்ரீடதோ பாலகஸ்யேவ சேஷ்டாம் தஸ்ய நிசாமய)[1] என்று, ஸ்ரீபராசர பகவானும், "அப்ரமேயோ நியோஜ்யஶ்ச யத்ர காமகமோ வஶீ | மோததே பகவாந் பூதைர் பாலஃ க்ரீடநகைரிவ"[2] (அப்ரமேயோ நியோஜ்யஶ்ச யத்ர காமகமோ வஶீ | மோததே பகவாந் பூதைர் பாலஃ க்ரீடநகைரிவ)[2] என்று, ஸ்ரீவேதவ்யாஸ பகவானும், "நளிர்மாமலருந்தி வீட்டைப் பண்ணி விளையாடும் விமலன்"[3] "இன்பருமிவ்விளையாட்டுடையான்"[4] என்று அபியுக்தரும், இவனுடைய ஜகத்வ்யாபாரத்துக்கு ப்ரயோஜநம் லீலையாகவே சொன்னார்களிறே.

ஆனால், "சென்று சென்றாகிலும் கண்டு சன்மம் கழிப்பானெண்ணி யொன்றியொன்றி யுலகம்படைத்தான்"[5] என்றும், "உய்யவுலகுபடைத்து"[6] என்றும், "விசித்ரா தேஹஸம்பத்திரீஶ்வராய நிவேதிதும் | பூர்வமேவ க்ருதா ப்ரஹ்மந் ஹஸ்தபாதாதி ஸம்யுதா" (விசித்ரா தேஹ ஸம்பத்திரீஶ்வராய நிவேதிதும் | பூர்வமேவ க்ருதா ப்ரஹ்மந் ஹஸ்தபாதாதி ஸம்யுதா)[7] என்றும், "மாயவன்றன்னை வணங்க வைத்த கரணமிவை"[8] என்றும், "அசிதவிஶேஷிதாந் ப்ரளயஸீமநி ஸம்ஸரதஃ கரணகளேபரைர் கடயிதும் தயமாநமநாஃ" (அசிதவிஶேஷிதாந் ப்ரளய ஸீமநி ஸம்ஸரதஃ கரணகளேபரைர் கடயிதும் தயமாந மநாஃ)[9] என்றும், சேதநருடைய உஜ்ஜீவநம் ப்ரயோஜநமாக ஜகத்ஸ்ருஷ்டி பண்ணினான் என்று சொல்லுகிற இவ்வசநங்களுக்கு வையர்த்த்யம் வாராதோ? என்னில்; வாராது. எங்ஙனே? என்னில்; உபயப்ரயோஜந முண்டாயிருக்கச் செய்தேயும், லீலையே ப்ரயோஜநம் என்றவிது - ப்ராசுர்யத்தைப் பற்றச்சொன்ன வித்தனையாகையாலே. "ஸம்பவஶாக்ஷாத்காரபக்தித்வம் விஶ்வம் விஶ்வ-

1. 108-ம் பக்கம் பார்க்.
2. " "
3. நா. தி. 14-9.
4. தி. வா. 3-10-7.
5. தி. வா. 3-9-10.
6. பெரி. தி. 1-6-1.
7. 2-ம் பக்கம் பார்க்க-
8. நா. நூ. 67.
9. 235-ம் பக்கம் பார்க்க.

𑌸𑌿𑌤𑍁𑌮𑌨𑍍𑌯𑌥𑌾 𑌸𑌚𑍍𑌚 𑌕𑌰𑍍𑌤𑍁𑌮𑍍 | 𑌕𑍍𑌷𑌾𑌮𑍍𑌯𑌨𑍍 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌨𑌿𑌯𑌮𑌂 𑌕𑌿𑌮𑍁𑌦𑍀𑌕𑍍𑌷𑌸𑍇 𑌤𑍍𑌵𑌂 𑌸𑍍𑌵𑌾𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍍𑌯𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑌮𑌪𑌰𑍍𑌯𑌨𑍁𑌯𑍋𑌜𑍍𑌯𑌮𑌾𑌹𑍁𑌃" (ரூபப்ரகாரபரிணமக்ருதவ்யவஸ்த்தம் விஶ்வம் விபர்யஸிதுமந்யதஸச்ச கர்த்தும் | க்ஷாம்யந் ஸ்வபாவ நியமம் கிமுதீக்ஷஸே த்வம் ஸ்வாதந்த்ரியமைஶ்வரமபர்யநுயோஜ்யமாஹு:)[1] என்கிறபடியே, நினைத்தபடி செய்ய வல்ல ஶக்திமானுகையாலே, ஸகலாத்மாக்களையும் யுகபதேவ முக்தராக்கவல்லவனுயிருக்கச்செய்தேயும், ஸ்வாதீந ஸ்வரூபஸ்த்தித்யாதிகரான ஆத்மாக்களை கர்மத்தை வ்யாஜீகரித்துக் கைகழியவிட்டு, ஶாஸ்த்ரமர்யாதையிலே வரவர அங்கீகரிப்பனென்று இருக்கிறவிது - லீலாரஸேச்சையாலேயிறே. லீலாவிபூதியென்றிறே இதுதனக்கு நிரூபகம். ஆகையாலே, இவ்விபூதியில் லீலையே ப்ரசுரப்ரயோஜநமாய்ச் சொல்லுகையாலே, ஸூத்ரகாராதிகளெல்லாரும், ஸ்ருஷ்டிப்ரயோஜனம் - லீலையேயாகச் சொல்லுகையாலே, இவரும் (கேவலலீலை) என்று அருளிச் செய்தாராயிற்று.

இப்படி ஜகத்ஸ்ருஷ்டி பண்ணுகிறது - லீலார்த்தமாகவாகில், ஸம்ஹாரதஶையில் லீலை குலையாதோ? என்கிற சங்கையை அநுவதிக்கிருர்;

23. ஆனுல், ஸம்ஹாரத்தில் லீலை குலையாதோவென்னில்;

(ஆனுல், ஸம்ஹாரத்தில் லீலைகுலையாதோ? என்னில்) என்று.

1. வைகுண்டஸ்தவம் 53. ரூபப்ரகார பரிணமக்ருதவ்யவஸ்தம் - ஸ்வரூபத்தினுடையவும் ஸ்வபாவத்தினுடையவும் பரிணமத்தாலே பண்ணப்பட்டிருக்கிற மர்யாதையையுடைய, விச்வம் - சேதநுசேதநுத்மகமான ஸமஸ்த ஜகத்தையும், விபர்யஸிதும் - மாருட்டமாகப் பண்ணுகைக்கும், அஸச்ச கர்தும் - அஸத்தோடு ஸத்ருசமாகும்படி பண்ணுகைக்கும், அந்யச்ச கர்த்தும் - வேறுவிதமாகப் பண்ணுவதற்கும், க்ஷாம்யன் - சக்தரான, த்வம் - தேவரீர், ஸ்வபாவ நியமம் - அததினுடைய கர்மபல ஸ்வபாவத்திற்குத் தக்கபடி, உதீக்ஷஸே கிம் - கடாக்ஷிக்கிருயன்ருே! அத: - ஆகையாலே, ஐச்வரம் - ஈச்வர சம்பந்தமான, ஸ்வாதந்த்ர்யம் - ஸ்வாதந்த்ரியமானது, அபர்யநுயோஜ்யம் - ப்ரச்னம் பண்ணுகைக்குத்தக்கதன்று.

அத்தை பரிஹரிக்கிறார் ;

**24. ஸம்ஹாரந்தானும் லீலையாகையாலே குலையாது.**

(ஸம்ஹாரந்தானும் - லீலையாகையாலே குலையாது) என்று. அதாவது - கொட்டகமிட்டு விளையாடுகிற பாலர்க்கு, இட்ட கொட்டகந்தன்னை மீளவழித்துப் பொகடுகிறதுதானும் லீலையாயிருக்குமாபோலே, இவற்றை ஸம்ஹரிக்கைதானும் ஸ்ருஷ்டியோபாதி லீலையாயிருக்கையாலே, எப்போதும் லீலை குலையாது என்றபடி. "𑌅𑌖𑌿𑌲𑌭𑌁𑌵𑌨𑌜𑌨𑍍𑌮𑌸𑍍𑌥𑍇𑌮𑌭𑌙𑍍𑌗𑌾𑌦𑌿𑌲𑍀𑌲𑍇" (அகிலபுவநஜந்மஸ்த்தேமபங்காதிலீலே)[1] என்றும், "𑌨𑌿𑌖𑌿𑌲𑌜𑌗𑌦𑍁𑌦𑌯𑌵𑌿𑌭𑌵𑌲𑌯𑌲𑍀𑌲" (நிகிலஜகதுதயவிபவலயலீல)[2] என்றும், ஸ்ருஷ்டியோபாதி ஸம்ஹாரத்தையும் அவனுக்கு லீலையாக அருளிச்செய்தாரிறே எம்பெருமானார்.

ஆக இதுக்குக் கீழ், ஈஶ்வரனே ஜகத்துக்குக் காரணமென்றும், இவன் காரணமாகிறது ஹேத்வந்தரங்களாலன்று ; ஸ்வேச்சையாலேயென்றும், ஸங்கல்பமாத்ராவக்லுப்தமாகையாலே. இதுதான் அநாயாஸமாயிருக்குமென்றும், இதுதனக்கு ப்ரயோஜநம் லீலையென்றும் சொல்லிநின்றது.

இனி, இவனுக்கு ஜகத்தைப் பற்ற உண்டான காரணத்வம், கடபடாதிகளைப் பற்ற குலாலாதிகளுக்குண்டான காரணத்வம் போலே, நிமித்தத்வமாத்ரமோ? என்கிற சங்கையிலே, உபாதாநகாரணமும் இவனே என்னுமத்தை அருளிச்செய்கிறார் ;

**25. இவன், தானே - ஜகத்தாய் பரிணமிக்கையாலே, உபாதாநமுமாயிருக்கும்.**

---

1. ஸ்ரீபாஷ்யம். அகில புவந ஜந்மஸ்தேம பங்காதிலீலே - எல்லா உலகின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் முதலியவைகளை விளையாட்டாக உடைய.

2. கத்யம், நிகில ஜகதுதய விபவலயலீல - ஸமஸ்தமான ஜகத்தினுடைய ஸ்ருஷ்டியென்ன ஸ்திதியென்ன ஸம்ஹாரமென்ன இவைகளை லீலையாகயுடையவனே !

(இவன், தானே) என்று தொடங்கி. லோகத்தில், கார்யோத்பத்தியில் காரணம் நிமித்த உபாதாந ஸஹகாரி ரூபேண த்ரிவிதமாயிருக்கும். இதில், நிமித்தகாரணமாவது - உபாதாநமான வஸ்துவை கார்யரூபேண விகரிப்பிக்கும் கர்த்ருவஸ்து. உபாதாந காரணமாவது - கார்ய ரூபேண விகரிக்கைக்கு யோக்யமான வஸ்து. ஸஹகாரி காரணமாவது – கார்ய உத்பத்திக்கு உபகரணமான வஸ்து. கடபடாதிகளுக்கு குலாலகுவிந்தாதிகள் நிமித்தமாய், ம்ருத்தந்த்வாதிகள் உபாதாநமாய், தண்டசக்ர வேமாதிகள் ஸஹகாரியாயிருக்கும். இங்ஙனன்றிக்கே, ஜகத்ரூபகார்ய உத்பத்தியில் ஈச்வரனே த்ரிவிதகாரணமுமாயிருக்கும். எங்ஙனே? என்னில்; "஬ஹு ஸ்யாம்" (பஹுஸ்யாம்)[1] என்கிற ஸங்கல்பவிசிஷ்டனாய்க்கொண்டு நிமித்தகாரணனாயும், நாமரூபவிபாக அநர்ஹமாம்படி தன்னுடனே கூடிக்கிடக்கிற ஸூக்ஷ்ம சிதசித்விசிஷ்டனாய்க் கொண்டு உபாதாநகாரணமாயும், ஜ்ஞாநசக்த்யாதி விசிஷ்டனாய்க்கொண்டு ஸஹகாரிகாரணமாயும் இருக்கும். ஆகையாலே, உபாதாநகாரணமும் இவனே யென்கிறார்.

(இவன்) என்று, கீழ் நிமித்தகாரணமாகச் சொன்ன ஈச்வரனைப் பராமர்சிக்கிறது. சித் அசித்துக்கள் இரண்டும் அப்ருதக்ஸித்த விசேஷணமாய்க் கொண்டு, தான் என்கிற சொல்லுக்குள்ளே அந்தர்பூதமாம்படியிருக்கையாலே, (தானே ஜகத்தாய் பரிணமிக்கையாலே) என்கிறார். (உபாதாநமுமாயிருக்கும்) என்று, கீழ்ச்சொன்ன நிமித்தகாரணத்வத்தோடே உபாதாந காரணத்வத்தையும் ஸமுச்சயிக்கிறது.

இத்தால், ப்ரஹ்மத்தினுடைய ஜகத் காரணத்வத்தை ப்ரதிபாதிக்கிற வேதாந்தஸூத்திரத்தில் நிமித்த காரணத்வத்தை ஸாதித்தவநந்தரம், "ப்ரக்ருதிஶ்ச ப்ரதிஜ்ஞா த்ருஷ்டாந்தாநுபரோதாத்" (ப்ரக்ருதிஶ்ச ப்ரதிஜ்ஞாத்ருஷ்டாந்தாநுபரோதாத்)[2] என்று, உபாதாநகாரணத்வத்தை,

1. 236-ம் பக்கம் பார்க்க
2. 110-ம் பக்கம் பார்க்க.

யும் சொன்னுப்போலே, இவரும் அருளிச்செய்தாரா யிற்று.

“ப்ரக்ருதிஶ்ச” (ப்ரக்ருதிஶ்ச) என்றத்தை யுட்கொண்டிறே இவரும் உபாதாநமுமாயிருக்கும் என்றது. அங்கு, “ப்ரதிஜ்ஞாத்ருஷ்டாந்தாநுபரோதாத்” (ப்ரதிஜ்ஞாத்ருஷ்டாந்தாநுபரோதாத்) என்று, ஸாத்யம் முன்னாக ஸாதநத்தைச் சொல்லிற்று; இங்கு, (இவன், தானே ஜகத்தாய் பரிணமிக்கையாலே) என்று, ஸாதநம் முன்னாக ஸாத்யத்தைச் சொல்லிற்று. அங்கு, “யேநாஶ்ருதம் ஶ்ருதம்பவத்யமதம் மதமவிஜ்ஞாதம் விஜ்ஞாதம் ஸ்யாத்” (யேநாஶ்ருதம் ஶ்ருதம் பவத்யமதம் மதமவிஜ்ஞாதம் விஜ்ஞாதம் ஸ்யாத்)[1] என்று, ஏகவிஜ்ஞாநேந ஸர்வ விஜ்ஞாநப்ரதிஜ்ஞையாலும், “யதா ஸோம்யைகேந ம்ருத்பிண்டேந ஸர்வம் ம்ருண்மயம் விஜ்ஞாதம் ஸ்யாத்” (யதா ஸோம்யேகேந ம்ருத்பிண்டேந ஸர்வம் ம்ருண்மயம் விஜ்ஞாதம் ஸ்யாத்)[2] என்கிற தது்பபாதகமான த்ருஷ்டாந்தத்தாலும், ஏகவஸ்துபரிணமம் - ஜகத்து என்றிறே சொல்லிற்று. அந்த ஏகவஸ்துவாகிறது - ஸூக்ஷ்ம சித சித்விஶிஷ்டமான ப்ரஹ்மமிறே. அத்தையிறே இவரும், (தானே) என்கிற சொல்லாலே யருளிச்செய்தது. ஆகையால், அந்த ஸூத்ரார்த்தமேயிது என்னத்தட்டில்லை. “ஏகமேவாத்விதீயம்” (ஏகமேவாத்விதீயம்) “ததாத்மாநம் ஸ்வயமகுருத” (ததாத்மாநம் ஸ்வயம குருத)[3] “ஸ்ரஷ்டா ஸ்ருஜதி சாத்மாநம் விஷ்ணு: பால்யம்”

1. யேந - எந்த வஸ்துவைக் கேட்டதால், அச்ருதம் - கேட்கப்படாதது, ச்ருதம்பவதி - கேட்கப்பட்டதாக ஆகிறதோ, (இப்படியே மேலும்).

2. சா. உப. 6-1-3-4. ஹே ஸோம்ய - ஸோமபானத்திற்கு அர்ஹனானவனே! யதா - எப்படி, ஏகேந ம்ருத்பிண்டேந - ஒரு ம்ருத்பிண்ட ஜ்ஞானத்தாலே, அதாவது ஒரு மண்கட்டியின் ஜ்ஞானத்தாலே, ஸர்வம் - ஸமஸ்தமான, ம்ருண்மயம் - மண்மயமான அதாவது பானை மடக்கு இவை முதலியவையானது, விஜ்ஞாதம் ஸ்யாத் - அறியப்பட்டதாக ஆகிறதோ!

3. தை. உப. ஆ. 7-1. தத் - அந்த அஸத்து என்று சொல்லப்பட்ட ப்ரஹ்மமானது, ஆத்மாநம் - தன்னையே, (உபாதாநமாக ஸ்வீகரித்து), ஸ்வயம் அகுருத - தானாகவே செய்தது.

𑌚 𑌪𑌾𑌤𑌿 𑌚 । 𑌉𑌪𑌸𑌂𑌹𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌚𑌾𑌨𑍍𑌤𑍇 𑌸𑌂𑌹𑌰𑍍𑌤𑌾 𑌚 𑌸𑍍𑌵𑌯𑌂 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃" (ஸ்ருஷ்டௌ ஸ்ருஜதி சாத்மாநம் விஷ்ணு: பால்யஞ்ச பாதி ச | உபஸம்ஹ்ரியதே சாந்தே ஸம்ஹர்த்தா ச ஸ்வயம் ப்ரபு:)[1] "𑌸 𑌏𑌵 𑌸𑍃𑌜𑍍𑌯𑌃 𑌸 𑌚 𑌸𑌰𑍍𑌗𑌕𑌰𑍍𑌤𑌾 𑌸 𑌏𑌵 𑌪𑌾𑌤𑍍𑌯𑌤𑍍𑌤𑌿 𑌚 𑌪𑌾𑌲𑍍𑌯𑌤𑍇 𑌚 । 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌦𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌾𑌭𑌿𑌰𑌶𑍇𑌷𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌰𑍍𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍍𑌵𑌰𑌿𑌷𑍍𑌠𑍋 𑌵𑌰𑌦𑍋 𑌵𑌰𑌣𑍇𑌯𑌃" (ஸ ஏவ ஸ்ருஜ்யஸ் ஸ ச ஸர்ககர்த்தா ஸ ஏவ பாத்யத்தி ச பால்யதே ச | ப்ரஹ்மாத்யவஸ்தாபி ரஶேஷமூர்த்திர் விஷ்ணுர் வரிஷ்டோ வரதோ வரேண்ய:)[2] இத்யாதிகளாலே, இந்த நிமித்த உபாதாநயோரைக்யத்தை ஶ்ருதிஸ்ம்ருதிகள் ஸுவ்யக்தமாகச் சொல்லாநின்றனவிறே.

இப்படி, தானே ஜகத்தாய் பரிணமிக்குமாகில், "𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌂 𑌨𑌿𑌰𑌞𑍍𑌜𑌨𑌂 𑌨𑌿𑌷𑍍𑌕𑌲𑌂 𑌨𑌿𑌷𑍍𑌕𑍍𑌰𑌿𑌯𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌂" (நிர்குணம் நிரஞ்ஜநம் நிஷ்களம் நிஷ்க்ரியம் ஶாந்தம்)[3] "𑌸𑌤𑍍𑌯𑌂

---

1. வி. பு. 1-12-67. ஸ்ருஷ்டௌ - (பிரம்மாவாய்க்கொண்டு,) ஸ்ருஷ்டியில் ஆத்மாநம் ஸ்ருஜதி - தன்னை ஸ்ருஷ்டிக்கிருன், விஷ்ணு: - விஷ்ணுவாய், பால்யம் ச பாதிச - காப்பாற்றத் தகுந்தவைகளேயும் காப்பாற்றுகிருன். ஸம்ஹர்த்தா - ஸம்ஹாரம் செய்கிற ருத்திரனாய், அந்தே - கடைசி காலத்தில், உபஸம்ஹ்ரியதே - ஸம்ஹாரஞ் செய்கிருன், ஸ்வயம் ப்ரபு: - தானே நியந்தாவாயிருக்கிருன், பர பிரம்மத்துக்கு அவைகளில் போக்த்ருத்வம் கிடையாது.

2. வி. பு. 1-2-70. விஷ்ணு: - விஷ்ணுவானவர், ப்ரஹ்மாத்ய வஸ்தாபி: - ப்ரஹ்மா முதலான அவஸ்தைகளாலே, அஶேஷ மூர்த்தி: - ஸர்வ சரீரியாயும், வரிஷ்ட: - பலிஷ்டராயும். வரத: - ஆச்ரிதாளுக்கு வரத்தைக் கொடுப்பவனுயும், வரேண்ய: - எல்லாராலும் அடையத்தக்கவராயுமிருக்கிருர். ஸ்ருஜ்ய: - ஸ்ருஷ்டிக்கப்பட்ட பதார்த்தமும், ஸ ஏவ - அந்த விஷ்ணுவே, ஸர்ககர்த்தா - ஸ்ருஷ்டிக்கிறவரும், ஸ ஏவ - அந்த விஷ்ணுவே, ஸ ஏவ பாதி அத்திச - அவனே ரக்ஷிக்கிருன், ஸம்ஹரிக்கிருன், பால்யதேச - பரிபாலிக்கப்படுகிறவனும் அவனே.

3. நிர்குணம் - ஹேயகுணமற்றதாயும், நிரஞ்ஜநம் - பாபமில்லாததாயும், நிஷ்களங்கம் - அவயவமில்லாததாயும், நிஷ்க்ரியம் - வ்யாபாரமற்றதாயும், சாந்தம் - ஊர்மிஷட்ரஹிதமாயுமிருக்கிறது (ப்ரஹ்மம்.)

ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம" (ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம)[1] "அவிகாராய ஶுத்தாய" (அவிகாராய ஶுத்தாய)[2] என்று இவனை நிர்விகாரனாகச் சொல்லும்படி யெங்ஙனே? என்கிற சங்கையை அநுவதிக்கிறார்;

26. ஆனால், நிர்விகாரனென்னும்படி யென்னென்னில்;

(ஆனால், நிர்விகாரன் என்னும்படியென்? என்னில்) என்று.

அத்தைப் பரிஹரிக்கிறார்;

27. ஸ்வரூபத்துக்கு விகாரமில்லாமையாலே.

(ஸ்வரூபத்துக்கு) இத்யாதியாலே. அதாவது - சித் அசித்ரூபவிஶேஷண விஶிஷ்டனான தானே ஜகத்தாய் பரிணமிக்குமிடத்தில், விஶேஷ்யமான ஸ்வரூபத்துக்கு விகாரமில்லாமையாலே, நிர்விகாரன் என்னக் குறையில்லை யென்கை.

ஸ்வரூபத்துக்கு விகாரமில்லையாகில், 'இவன் தானே ஜகத்தாய் பரிணமிக்கிறான்' என்ற பரிணாமம் - இவனுக் குண்டாம்படி எங்ஙனே? என்கிற சங்கையை அநுவதிக்கிறார்;

28. ஆனால், பரிணாம முண்டாம்படி யென்னென்னில்;

(ஆனால், பரிணாமமுண்டாம்படி என்? என்னில்) என்று.

அதுக்கு உத்தரம் அருளிச்செய்கிறார்;

29. விஶிஷ்டவிஶேஷணஸத்வாரகமாக,

(விஶிஷ்டவிஶேஷணஸத்வாரகமாக) என்று. "விஶிஷ்டஞ்ச தத் விஶேஷணஞ்சேதி விஶிஷ்டவிஶேஷணம்" (விஶிஷ்டஞ்ச தத் விஶேஷணம் சேதி விஶிஷ்ட விஶேஷணம்) என்று, ப்ரதமம் கர்மதாரயஸமாஸத்தைப்பண்ணி,

1. 192-ம் பக்கம் பார்க்க.
2. 201-ம் பக்கம் பார்க்க.

“த்வாரேண ஸஹ வர்த்ததே இதி ஸத்வாரகம்” (த்வாரேண ஸஹ வர்த்தத இதி ஸத்வாரகம்) என்று, அநந்தரபதத்தை பஹுவ்ரீஹித்து, “விஶிஷ்டவிஶேஷணேந ஸத்வாரகம் விஶிஷ்டவிஶேஷணஸத்வாரகம்” (விஶிஷ்ட விஶேஷணேந ஸத்வாரகம் விஶிஷ்டவிஶேஷணஸத்வாரகம்) என்று, த்ருதீயாதத்புருஷனுக ஸமஸ்தத்துக்கு வ்யுத்பத்தி பண்ணிக் கொள்வது. விஶிஷ்டமாவது — விஶேஷயுக்தமானதாய், விஶிஷ்டமான விஶேஷணமென்று, தண்டகுண்டலாதிகள் போலன்றிக்கே ஶரீரபூதமாகையாலே, ப்ருதக்ஸித்த்யர்ஹமல்லாத விஶேஷத்தை உடைத்தான சித் அசித்ரூப விஶேஷணத்தைச் சொல்லுகிறது. அன்றிக்கே, விஶிஷ்ட விஶேஷணம் என்கிற விது்க்கு – ஶரீரபூதமாய்க் கொண்டு என்றுமொக்கத் தன்னோடே கூடியிருக்கிற விஶேஷணமென்று பொருளாகவுமாம். அப்போதும், ப்ருதக்ஸித்தி அர்ஹமான தண்டகுண்டலாதிகளில் வ்யாவ்ருத்தி ஸித்திக்குமிறே. விஶேஷணத்தாலே ஸத்வாரகமாகவென்றது — இப்படி அப்ருதக் ஸித்தமான விஶேஷணமாகிற ஹேதுவாலே, த்வாரஸஹிதமாக இவனுக்கு பரிணாமம் உண்டாகிறதென்கை.

இத்தால், அப்ருதக்ஸித்தமான சித் - அசித்ரூப விஶேஷணத்வாரா இவனுக்கு பரிணாமம் உண்டாகிறது என்றதாயிற்று.

இப்படி ஸ்வரூபத்துக்கு விகாரமின்றிக்கே யிருக்க, ஸ்வஶரீரபூத விஶேஷணத்வாரா, கார்யஜாதத்துக்கெல்லாம் இவனே உபாதாநமாகை கூடுமோ? என்ன; அருளிச் செய்கிறார்;

30. ஒரு சிலந்திக்குண்டான ஸ்வபாவம் ஸர்வஶக்தி[illegible]க் கூடாதொழியாதிறே.

(ஒரு சிலந்திக்குண்டான) என்று தொடங்கி. அதாவது - அல்பஶக்திகமான சிலந்திக்கு ஸ்வரூபவிகாரமின்றிக்கே யிருக்கச்செய்தே, ஸ்வஶரீரபூத விஶேஷண முகத்

தாலே தந்துஜாதமான கார்யஜாதத்துக்குத் தான் உபா
தானமாம்படியுண்டான ஸ்வபாவம்; "பராஸ்ய ஶக்திர்
விவிதைவ ஶ்ரூயதே" (பராஸ்ய ஶக்திர் விவிதைவ ஶ்ரூய
தே)[1] என்று ஓதப்படுகிற ஸர்வஶக்திக்குக் கூடாதொழி
யாதிறே என்கை. "யதோர்ணநாபிஸ் ஸ்ருஜதே க்ருஹ்ண
தே ச" (யதோர்ணநாபிஸ் ஸ்ருஜதே க்ருஹ்ணதே ச)[2]
"ஊர்ணநாபிர் யதா ஸ்ருஷ்ட்வா ஸ்வயம் தத் க்ரஸதே
புந: । ததா ஸ்ருஷ்ட்வேதமகிலம் ஸ்வயம் தத் க்ரஸதே ஹரி:"
(ஊர்ணநாபிர் யதா ஸ்ருஷ்ட்வா ஸ்வயம் தத் க்ரஸதே
புந: । ததா ஸ்ருஷ்ட்வேதமகிலம் ஸ்வயம் தத் க்ரஸதே
ஹரி:)[3] என்னக்கடவதிறே. "கார்யேஷ்வந்தே ஸ்வதநுமுகத
ஸ்த்வாமுபாதாநமாஹுஸ் ஸா தே ஶக்திஸ் ஸ்வகரமித
ரச்சேதி வேலாம் விலங்க்ய । இச்சா யாவத் விஹரதி ஸதா
ரங்கராஜாநபேக்ஷா ஸைவேஶாநாததிஶயகரீ ஸோர்ணநா
பௌ விபாவ்யா" (கார்யேஷ்வந்தே ஸ்வதநுமுகதஸ்
த்வாமுபாதாநமாஹுஸ் ஸா தே ஶக்திஸ் ஸ்வகரமிதரச்
சேதி வேலாம் விலங்க்ய । இச்சா யாவத் விஹரதி ஸதா
ரங்கராஜாநபேக்ஷா ஸைவேஶாநாததிஶயகரீ ஸோர்ணநா
பௌ விபாவ்யா)[3] என்றருளிச்செய்தாரிறே பட்டர்.

---

1. மு. உப. 1-1-7. யதா - எப்படி, ஊர்ணநாபி: - சிலந்திப்பூச்சி, ஸ்ருஜதே க்ருஹ்ணதேச - ஸ்ருஷ்டிக்கிறதோ ஸம்ஹரிக்கிறதோ.

2. ஊர்ணநாபி: ஸ்வயம் ஸ்ருஷ்ட்வா - சிலந்திப்பூச்சியானது ஸ்வயமாக ஸ்ருஷ்டித்து, புந: யதா தத் க்ரஸதே - மறுபடி எப்படி அதை விழுங்குகின்றதோ, ததா ஸ்ருஷ்ட்வா ஏதத் அகிலம் - அப்படியே இந்த ஸ்கலத்தையும் ஸ்ருஷ்டித்து, ஹரி: ஸ்வயம் தத் க்ரஸதே - ஹரியானவர் ஸ்வயமாகவே அத்தை விழுங்குகிறார்.

3. ஸ்ரீரங். ஸ்த. 2-31, ஹே ரங்கராஜ! ஹே அழகிய மணவாளனே! அநபேக்ஷா - ஹேது நிரபேக்ஷமான, தே - தேவரீருடைய, இச்சா - ஸங்கல்பமானது, ஸ்வகரம் - ஸுலபமாகப் பண்ணத்தக்கது, இதரச்ச - கஷ்டத்தால் பண்ணத்தக்கது, இதி - என்கிற, வேலாம் - தரையை விலங்க்ய - அதிக்ரமித்து, ஸதா - எப்போதும், யாவத் - எவ்வளவு, விசரதி - ஸஞ்சரிக்கிறதோ, அந்தே - கணக்கில்லாமலிருக்கிற, கார்யே - அவ்வளவு கார்யத்திலும், த்வாம் - தேவரீரை, ஸ்வதநுமுகத: - தன்னுடைய சரீரபூதமான சிதசித் த்வாரமாக,

(ஈஶ்வரன் ஸ்ருஷ்டிக்கையாவது) என்று தொடங்கி, கீழ், ஜகத்காரணபூதனாகச் சொல்லப்பட்ட வீஶ்வரன் சேதநாசேதநாத்மகமான ஜகத்தை ஸ்ருஷ்டிக்கையாவது - "𑌤𑌮𑌃 𑌪𑌰𑍇 𑌦𑍇𑌵 𑌏𑌕𑍀𑌭𑌵𑌤𑌿" (தம: பரே தேவ ஏகீ பவதி)[1] என்கிறபடியே, தன்னோடு அவிபக்தமாய்க் கிடந்து தமஶ்ஶப்தவாச்யமான வசித்தை, "𑌤𑌤𑌃 𑌸𑍍𑌵𑌯𑌮𑍍𑌭𑍂𑌰𑍍𑌭𑌗𑌵𑌾𑌨𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑍋 𑌵𑍍𑌯𑌞𑍍𑌜𑌯𑌨𑍍𑌨𑌿𑌦𑌮𑍍 । 𑌮𑌹𑌾𑌭𑍂𑌤𑌾𑌦𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑍌𑌜𑌾𑌃 𑌪𑍍𑌰𑌾𑌦𑍁𑌰𑌾𑌸𑍀𑌤𑍍𑌤𑌮𑍋𑌨𑍁𑌦𑌃" (தமஸ் ஸ்வயம்பூர் பகவாநவ்யக்தோ வ்யஞ்ஜயந்நிதம் | மஹாபூதாதிவ்ருத்தௌஜா: ப்ராதுராஸீத் தமோநுத:)[2] என்கிறபடியே, ஸ்வப்ரேரணவிஶேஷத்தாலே ஸ்வஸ்மாத் விபக்தமாக்கி, அநந்தரம், அக்ஷராவஸ்த்தமாக்கி, அது தன்னைப் பின்பு அவ்யக்தாவஸ்த்தமாக்கி, அத்தை வ்யக்த ஶப்தவாச்யமான ஸமஷ்டி வ்யஷ்டிரூப ஸமஸ்தகார்யங்களுமாம்படி பரிணமிப்பிக்கையும், "𑌅𑌚𑌿𑌦𑍍𑌵𑌿𑌶𑍇𑌷𑌿𑌤𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌲𑌯𑌸𑍀𑌮𑌨𑌿 𑌸𑌂𑌸𑌰𑌤𑌃" (அசிதவிஶேஷிதாந் ப்ரளயஸீமநி ஸம்ஸரத:)[3] என்கிறபடியே, கரணகளேபரவிதுரனாய், போகமோக்ஷஶூந்யனாய், அசிதவிஶேஷிதனாய்க் கிடந்த சேதநனுக்கு போகஸ்த்தாநமான ஶரீரத்தையும், போக உபகரணங்களான விந்த்ரியங்களையும் கொடுத்து, போகமோக்ஷபாகித்வ அநர்ஹனும்படி, முன்பு ஸங்குசிதமாய்க்கிடந்த ஜ்ஞாநத்தினுடைய விகாஸத்தைப் பண்ணுகையும் என்கை. சேதநனுக்கு என்றவிது - ஜாத்யேகவசநம்.

---

1. ஸுபா. உப. தம: - மூலப்ரக்ருதி, பரே தேவே - பரமபுருஷனிடத்தில், ஏகீபவதி - ஒன்றாயிருப்பதை அடைகிறது.

2. மநுஸ்ம்ருதி. 1-6. தத: - அதற்குப் பின்பு, பகவாந் - ஷாட்குண்ய பரிபூர்ணனாய், ஸ்வயம்பூ: - ஸ்வதந்த்ரனான ஸர்வேச்வரன், தமோநுத: - தமச்சப்தவாச்யமான அசித்தை ப்ரேரிப்பித்துக் கொண்டு, இதம் - இந்த தமச்சப்த வாச்யமான ப்ரக்ருதியை, வ்யஞ்ஜயந் - ப்ரகாசிப்பியாநின்றுகொண்டு அதாவது தன்னிடத்தில் நின்றும் பிரித்து, அவ்யக்த: - அவ்யக்தாவஸ்தமாக்கியும், மஹாபூதாதிவ்ருத்தௌஜா: - வ்யக்தசப்த வாச்யமான ஸமஷ்டி ஸ்ருஷ்டி ரூபமான ஸமஸ்த கார்யங்களுமாம்படி, ப்ராதுராஸீத் - ஆவிர்பவித்தருளினார்.

3. 235-ம் பக்கம் பார்க்க.

அநந்தரம், ஸ்திதி ஸம்ஹாரங்களினுடைய ப்ரகாரங்களையும் அருளிச்செய்யவேணுமென்று திருவுள்ளம்பற்றி, ப்ரதமம் ஸ்திதியினுடைய ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார்;

**32. ஸ்திதிப்பிக்கையாவது – ஸ்ருஷ்டமான வஸ்துக்களிலே, பயிருக்கு நீர்நிலை போலே, அநுகூலமாக ப்ரவேஶித்து நின்று ஸர்வரக்ஷைகளையும் பண்ணுகை.**

(ஸ்திதிப்பிக்கையாவது) என்று தொடங்கி, ஸ்திதிக்கையாவது என்னாதே, ஸ்திதிப்பிக்கையாவது என்றது – ஸ்திதியாவது – ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்கள்போலே கர்த்ருகதமன்றிக்கே, ரக்ஷணத்துக்கு கர்மீபவிக்கிறவஸ்துகதமாயிருப்பதொன்றாகையாலே, ஸ்திதிப்பிக்கையே கர்த்ரு வ்யாபாரமாகையால்.

(ஸ்ருஷ்டமான) இத்யாதி. அதாவது - "தத்ஸ்ருஷ்ட்வா" (தத்ஸ்ருஷ்ட்வா)[1] என்கிறபடியே, தன்னாலே ஸ்ருஷ்டமான வஸ்துக்களிலே, பயிருக்கு ரக்ஷகமாய்க் கொண்டு அநுகூலமாய் நிற்கும் நீர்நிலைபோலே, "ததேவாநுப்ராவிஶத்" (ததேவாநுப்ராவிஶத்)[2] என்கிறபடியே, தத்ரக்ஷணாநுகூலமாக உள்ளே ப்ரவேஶித்து நின்று, தத்தத்வஸ்து அநுகுணமான ஸர்வரக்ஷைகளையும் பண்ணுகையென்கை. அநுப்ரவேஶ ஶப்தத்துக்கு அநுகூலதயா ப்ரவேஶம் இவர்க்கிவ்விடத்தில் விவக்ஷிதம். இத்தால் - ஸ்திதிப்பிக்கையாவது - நிலைப்பிக்கையாகையாலே. தத்ரக்ஷணங்களைப் பண்ணுகையென்றதாயிற்று.

அநந்தரம், ஸம்ஹாரப்ரகாரத்தை யருளிச்செய்கிறார்;

**33. ஸம்ஹரிக்கையாவது – அவிநீதனான புத்ரனை பிதா விலங்கிட்டு வைக்குமாப்போலே, விஷயாந்**

1. தத் - அதை, ஸ்ருஷ்ட்வா - ஸ்ருஷ்டித்து.
2. ததேவ - அதையே, அநுப்ராவிசத் - உள்ளே பிரவேசித்தது.

**தரங்களிலே கைவளருகிற கரணங்களைக் குலைத் திட்டு வைக்கும்.**

*(ஸம்ஹரிக்கையாவது) என்று தொடங்கி. அதாவது - "விசித்ரா தேஹஸம்பத்திரீஶ்வராய நிவேதிதும்" (விசித்ரா தேஹஸம்பத்திரீஶ்வராய நிவேதிதும்)[1] என்கிறபடியே, ஸ்வஸமாஶ்ரயணத்தைப் பண்ணி, உஜ்ஜீவிக்கைக்கு உறுப்பாகத் தான் கொடுத்த கரணங்களைக் கொண்டு தன்னை வழிபடுகையன்றிக்கே, பாஹ்ய விஷயப்ரவணனாய்ப் போகப் புக்கவாறே, விதிநிஷேதவஶ்யனாய் ஒடுங்கி வர்த்தியாமல், ஸ்வைரசாரியான புத்ரனை ஹிதபரனான பிதாவானவன் ஒரு வ்யாபாரார்ஹனல்லாதபடி விலங்கையிட்டு ஒடுக்கி வைக்குமாப்போலே, தன்னையொழிந்த விஷயங்களிலே அதிப்ரவணமாய் நடக்கிற கரணங்களைக் குலைத்து ஒடுக்கியிட்டு வைக்கையென்கை.*

*இனி, இந்த ஸ்ருஷ்ட்யாதிகள், தான் ப்ரத்யேகம் சதுர்விதமாயிருக்கையாலே, அத்தையும் தர்ஶிப்பிக்கைக்காக அருளிச்செய்கிறார் ;*

**34. இம்மூன்றும், தனித்தனியே நாலு ப்ரகாரமாயிருக்கும்.**

*(இம்மூன்றும், தனித்தனியே நாலுப்ரகாரமாயிருக்கும்) என்று. "சதுர்விபாகஸ் ஸம்ஸ்ருஷ்டௌ சதுர்தா ஸம்ஸ்த்திதஸ் ஸ்த்திதௌ | ப்ரளயஞ்ச கரோத்யந்தே சதுர்பேதோ ஜநார்தந:" (சதுர்விபாகஸ் ஸம்ஸ்ருஷ்டௌ சதுர்த்தா ஸம்ஸ்த்திதஸ் ஸ்த்திதௌ | ப்ரளயஞ்ச கரோத்யந்தே சதுர் பேதோ ஜநார்தந:)[2] என்னக்கடவதிறே.*

1. 2-ம் பக்கம் பார்க்க.

2. *ஜநார்த்தந: - ஜநார்தநனான விஷ்ணுவானவன், ஸம்ஸ்ருஷ்டௌ - ஸ்ருஷ்டியில், சதுர்விபாக: - நான்கு விபாகமாகவும், ஸ்திதௌ - ஸம்ரக்ஷணத்திலே, சதுர்த்தா - நான்கு ப்ரகாரமாகவும், ஸம்ஸ்தித: - இருக்கிறான், அந்தே - யுகத்தினுடைய முடிவில், சதுர்வித: - நான்குவிதமான பேதத்தையுடையவராய்க்கொண்டு, ப்ரளயம் - நாசத்தையும், கரோதி - பண்ணுகிறான்.*

35. ஸ்ருஷ்டியில், ப்ரஹ்மாவுக்கும்,ப்ரஜாபதிகளுக்கும் காலத்துக்கும். ஸகல ஜந்துக்களுக்கும்அந்தர்யாமியாய், ரஜோகுணத்தோடே கூடி ஸ்ருஷ்டிக்கும்.

(ஸ்ருஷ்டியில்) இத்யாதி. அதாவது – ஸ்ருஷ்டியில் வந்தால் சதுர்தஶபுவந ஸ்ரஷ்டாவாய், ஸமஷ்டி புருஷனான ப்ரஹ்மாவுக்கும், அவனாலே ஸ்ருஷ்டராய், நித்யஸ்ருஷ்டி கர்த்தாக்களான தஶப்ரஜாபதிகளுக்கும், ஸ்ருஷ்டிக்கு அபேக்ஷிதமான காலத்துக்கும், ஒன்றுக்கொன்று உத்பாதகங்களான ஸகலஜந்துக்களுக்கும், தத்தத்ப்ரவ்ருத்திகளைடையத் தன்பக்கலிலே பர்யவஸிக்கும்படி அந்தராத்மாவாய். ப்ரவ்ருத்திஹேதுவான ரஜோகுண விஶிஷ்டனாய்க் கொண்டு ஸ்ருஷ்டிக்குமென்கை. "ஏகேநாம்ஶேந ப்ரஹ்மாஸௌ பவத்யவ்யக்தமூர்த்திமாந் | மரீசிமிஶ்ரா: பதய: ப்ரஜாநாமந்யபாகத: | காலஸ்த்ருதீயஸ்தஸ்யாம்ஶஸ் ஸர்வபூதாநி சாபர: | இத்தம் சதுர்த்தா ஸம்ஸ்ருஷ்டௌ வர்த்ததேஸௌ ரஜோகுண:" (ஏகேநாம்ஶேந ப்ரஹ்மாஸௌ பவத்யவ்யக்தமூர்த்திமாந் | மரீசிமிஶ்ரா: பதய: ப்ரஜாநாமந்யபாகத: | காலஸ்த்ருதீயஸ் தஸ்யாம்ஶஸ் ஸர்வ பூதாநி சாபர: | இத்தம் சதுர்த்தா ஸம்ஸ்ருஷ்டௌ வர்த்ததேஸௌ ரஜோகுண:)[1] என்னக்கடவதிறே.

---

1. வி. பு. 1-22-25. அவ்யக்த மூர்த்திமான் - அவ்யக்த ஸ்வரூபனான, அஸௌ - இந்த ஜநார்தநனானவர், ஏகேந அம்ஶேந - ஒரு அம்சத்தாலே, ப்ரஹ்மா பவதி - ப்ரஹ்மாவாக ஆகிறான். அதாவது ப்ரஹ்மாவுக்கு அந்தர்யாமியாய்க் கொண்டு ஸ்ருஷ்டிக்கிறான், அந்ய பாகத: - மற்றொரு அம்சத்தாலே, ப்ரஜாநாம் - ஜனங்களுக்கு, பதய:- பதிகளான அதாவது ஸ்ருஷ்டிகர்த்தாக்களான, மரீசிமிச்ரா: - மரீசி முதலானவர்களாக ஆகிறான், அதாவது அவர்களுக்கு அந்தர்யாமியாய்க்கொண்டு ஸ்ருஷ்டிக்கிறான். தஸ்ய - அந்த ஜநார்தனனுடைய த்ருதீய: - மூன்றாவதான, அம்ச: - அம்சமானது, கால: - காலமாகவும், அபர: - மற்றொரு அம்சமானது, ஸர்வபூதாநி - ஸமஸ்த ஜந்துக்களாகவும் அதாவது அவைகளுக்கு அந்தராத்மாவாயுமிருக்கிறது, அஸௌ - இந்த ஜநார்தனன், ரஜோகுண: - ரஜோகுணவிசிஷ்டனாய்க் கொண்டு, இத்தம் - இந்தப்ரகாரம், ஸம்ஸ்ருஷ்டௌ - ஸ்ருஷ்டியிலே, சதுர்த்தா - நான்கு ப்ரகாரமாக, வர்த்ததே - இருக்கிறான்.

36. ஸ்த்திதியில், விஷ்ண்வாதிரூபேண அவதரித்து, மந்வாதிமுகேந ஶாஸ்த்ரங்களை ப்ரவர்த்திப்பித்து, நல்வழிகாட்டி, காலத்துக்கும், ஸகலபூதங்களுக்கு மந்தர்யாமியாய், ஸத்வகுணத்தோடேகூடி ஸ்த்திதிப்பிக்கும்.

(ஸ்த்திதியில்) இத்யாதி. அதாவது — ஸ்த்திதியில் வந்தால், "மத்யே விரிஞ்சகிரிஶம் ப்ரதமாவதார:" (மத்யே விரிஞ்சகிரிஶம் ப்ரதமாவதார:)[1] என்கிற விஷ்ணு அவதாரம் தொடக்கமாக, "ஸுரநரதிரஶ்சாமவதரந்" (ஸுரநரதிரஶ்சாமவதரந்)[2] "என்னின்றயோநியுமாய்ப் பிறந்தாய்"[3] என்கிறபடியே, அநேக அவதாரங்களைப் பண்ணி, "யத்வை கிஞ்ச மநுரவதத் தத்பேஷஜம்" (யத் வை கிஞ்ச மநுரவதத் தத்பேஷஜம்)[4] என்று, ஆப்ததமனாக ஶ்ருதி ப்ரஸித்தனான மநுமுதலான யாஜ்ஞவல்க்ய பராஶர வால்மீகி ஶௌநகாதிகள் முகேந ஸ்ம்ருதிஇதிஹாஸ புராணரூப ஶாஸ்த்ரங்களை ப்ரவர்த்திப்பித்து, சேதநர் அபதேப்ரவ்ருத்தராகாமல் ஈடேறுகைக்கு உறுப்பான நல்வழிகளை தர்ஶிப்பித்து, ரக்ஷணோபயோகியான காலத்துக்கும், லோகத்தில் ஒன்றுக்கொன்று ரக்ஷகமான ஸர்வபூதங்களுக்கும், தத்தத் ப்ரவ்ருத்திகள் தன்னதாம்படி அந்தராத்மாவாய், ஜ்ஞாநப்ரகாஶாதி ஹேதுவான ஸத்வகுண விஶிஷ்டனாய்க் கொண்டு ஸ்த்திதிப்பிக்கும் என்கை. "மநுகாலாதிரூபேண ஸ்திதிம் விஷ்ணு: கரோதி வை ... ஸர்வபூதேஷு ஸம்ஸ்திதஃ காலரூபேண ஸ்திதிம் ... ஸத்வம் ..."

1. ஸ்ரீரங். ஸ்தவ. 2-51. மத்யே விரிஞ்ச கிரிசம் - ப்ரஹ்மாவுக்கும் சிவனுக்கும் மத்தியில், ப்ரதமாவதார:- முதல் அவதாரம்.

2. வரத. ஸ்த. 17. ஸுரநரதிரச்சாம் அவதரன் - தேவ மனுஷ்ய திரியக்ஜாதிகளிலே அவதரித்துக் கொண்டு,

3. திருவிருத்தம். 1.

4. யஜுர்வேதம், மநு: - மநுவானவர், யத்வை கிஞ்ச - யாதொன்றை, அவதத் - சொன்னரோ, தத் - அது, பேஷஜம் - மருந்து அதாவது எல்லாருக்கும் அநுஷ்டிக்கத்தக்கது.

ஸம்ஶ்ரித்ய ஜகத: ஸ்திதிம்" (ஏகாம்ஶேந ஸ்த்திதோவிஷ்ணு: கரோதி பரிபாலநம் | மந்வாதிரூபீ சாந்யேந காலரூபோபரேண ச || ஸர்வபூதேஷு சாந்யேந ஸம்ஸ்த்தித: குருதே ஸ்த்திதிம் | ஸத்வம் குணம் ஸமாஶ்ரித்ய ஜகத: புருஷோத்தம:)[1] என்னக்கடவதிறே. புராணத்தில் "ஏகாம்ஶேந ஸ்த்திதோ விஷ்ணு:" (ஏகாம்ஶேந ஸ்த்திதோ விஷ்ணு:) என்று, விஷ்ணு அவதார மொன்றையும் சொன்னவிது - அவதாராந்தரங்களுக்கும் உபலக்ஷண மென்று கொள்ளவேணும் (விஷ்ண்வாதிரூபேண அவதரித்து) என்று அவர் அருளிச்செய்கையாலே.

37. ஸம்ஹாரத்தில், ருத்ரனுக்கும், அக்ந்யந்தகாதிகளுக்கும், காலத்துக்கும் ஸகலபூதங்களுக்கு மந்தர்யாமியாய், தமோகுணத்தோடே கூடி ஸம்ஹரிக்கும்.

(ஸம்ஹாரத்தில்) இத்யாதி. அதாவது - ஸம்ஹாரத்தில் வந்தால், ஸம்ஹர்த்தாக்களில் தலையான ருத்ரனுக்கும், அவாந்தரஸம்ஹர்த்தாக்களான அக்நி, அந்தகாதிகளுக்கும், ஸம்ஹார உபயோகியான காலத்துக்கும், ஒன்றுக்கொன்று நாஶகமான ஸகலபூதங்களுக்கும், தத்தத் ப்ரவ்ருத்திகளெல்லாம் தன்னதாம்படி அந்தராத்மாவாய், கண் பாராமல் செய்கைக்கு உறுப்பான தமோகுண விஶிஷ்டனுய்க்

---

1. வி. பு.1-22-26-27-28. புருஷோத்தம: - புருஷச்ரேஷ்டரான, விஷ்ணு: - விஷ்ணுவானவர், ஏகாம்சேன - ஒரு அம்சத்தினுலே, ஸ்தித: - இருந்தவராய்க்கொண்டு, பரிபாலநம் - ரக்ஷணத்தை, கரோதி - பண்ணுகிருர், அந்யேந - வேருயிருக்கும் மற்ரெரு அம்சத்தினுலே, மந்வாதிரூபீ - மநுமுதலானவர்களுடைய ரூபத்தையுடையவராயம் அதாவது மன்வாதிகளாயும், அபரேண ச - வேறு அம்சத்தினுலே, காலரூப: - காலரூபியாயும், அந்யேந - மற்ரெரு அம்சத்தினுலே, ஸர்வபூதேஷு - ஸர்வபூதங்களிலேயும், ஸம்ஸ்தித, - இருந்தவராய்க் கொண்டு, ஸத்வம் குணம் - ஸத்வ குணத்தை, ஸமாச்ரித்ய - ஆச்ரயித்து, ஜகத: - லோகத்திற்கு, ஸ்திதிம் - ஸம்ரக்ஷணத்தை, குருதே- பண்ணுகிருர்.

கொண்டு ஸம்ஹரிக்குமென்கை. “[illegible]” (ஆஶ்ரித்ய தமஸோ வ்ருத்தி மந்தகாலே ததா ப்ரபு꞉ | ருத்ரஸ்வரூபோ பகவாநேகாம்ஶேந பவத்யஜ꞉ | அக்ந்யந்தகாதிரூபேண பாகேநாந்யேந வர்த்ததே | காலஸ்வரூபோ பாகோ(அ)ந்யஸ் ஸர்வபூதாநி சாபர꞉ | விநாஶம் குர்வதஸ் தஸ்ய சதுர்த்தைவ மஹாத்மந꞉)[1] என்னக்கடவதிறே. ஸ்ருஷ்ட்யாதிகளில், சதுர்விபாகஞ் சொல்லுகிற விடத்தில் அம்ஶ ஶப்தத்தாலே ப்ரஹ்மாதிகளைச் சொல்லிற்று; அவர்கள் அவனுக்கு ப்ரகாரபூதராகையாலே யென்னுமிடத்தை; அநந்தரம், “[illegible]” (ப்ரஹ்மா தக்ஷாதய꞉ காலஸ் ததைவாகிலஜந்தவ꞉ | விபூதயோ ஹரேரேதா ஜகதஸ்ஸ்ருஷ்டிஹேதவ꞉ | விஷ்ணுர் மந்வாதய꞉ காலஸ் ஸர்வபூதாநி ச த்விஜ | ஸ்திதேர் நிமித்தபூதஸ்ய விஷ்ணோ

1. வி-பு. 1-22-31. அஜ: - உத்பத்தியில்லாதவராயும், ப்ரபு: - ப்ரபுவாயுமிருக்கிற, பகவான் - விஷ்ணுவானவர், அந்தகாலே - ஸம்ஹாரகாலத்திலே, தமஸ: - தமோகுணத்தினுடைய, வ்ருத்திம் - வியாபாரத்தை, ஆச்ரித்ய - ஆச்ரயித்து, ஏகாம்சேந - ஒரு அம்சத்தினாலே, ருத்ரஸ்வரூப: - ருத்ரஸ்வருபனாக, பவதி - ஆகிறார், ததா - அப்படியே, அந்யேந பாகேந - வேறுபாகத்தினாலே அதாவது மற்றொரு ரூபத்தினாலே, அக்நியந்தகாதி ரூபேண - அக்னி யமன் முதலான ரூபத்தினாலே, வர்த்ததே - இருக்கிறார், அந்ய: - அந்யமான, பாக: - பாகமானது, காலஸ்ய ரூப: - காலஸ்வருபமாயும், அபர: - வேறுபாகமானது, ஸர்வபூதாநி ச - ஸமஸ்தபூதங்களாகவும் இருக்கிறது, விநாசம் - விநாசத்தை, குர்வத: - பண்ணுனிற்கிற, தஸ்ய மஹாத்மந: - அந்த மஹாத்மாவுக்கு, சதுர்த்தைவ - இவ்விதம் நான்கு ப்ரகாரம் இருக்கிறது.

ரேதா விபூதய: । ருத்ரோ காலாந்தகாத்யாஶ்ச ஸமஸ்தாஶ் சைவ ஜந்தவ: । சதுர்த்தா ப்ரளயே ஹ்யேதா ஜநார்தந விபூதய:)[1] என்று, மூன்று ஶ்லோகத்தாலே ஸ்புடமாக ப்ரதிபாதித்தானிறே ஸ்ரீபராஶரபகவான். இத்தை நினைத் திறே இவரும், (அந்தர்யாமியாய்) என்று அருளிச்செய்தது. "விஷ்ணுர்மந்வாதய:" (விஷ்ணுர்மந்வாதய:) என்கிற ஶ்லோகத்தில், விஷ்ணுவையும் விபூதியாகச் சொன்னவிது, அவதார ப்ரயுக்தமான விக்ரஹபரமாகக் கடவது.

இனி, விஷமஸ்ருஷ்டியடியாக மந்தமதிகளுக்கு உண் டாகக் கடவ சங்கையை பரிஹரிக்கைக்காக, ப்ரதமம், தத் விஷய சங்கையை அநுவதிக்கிறார்;

38. சிலரை ஸுகிகளாகவும், சிலரை துக்கிகளாகவும் ஸ்ருஷ்டித்தால், ஈஶ்வரனுக்கு வைஷம்ய நைர்க்க் ருண்யங்கள் வாராதோ? என்னில்;

(சிலரை) என்று தொடங்கி. அதாவது – ஸ்ருஷ்டிக் கிறவளவில், ஸர்வ ஆத்மாக்களையும் ஏகப்ரகாரமாகவன் றிக்கே தேவமநுஷ்யாதி விபாகேந, சிலவாத்மாக்களை ஸுகி களாகவும், சில வாத்மாக்களை துக்கிகளாகவும் ஸ்ருஷ்டித் தால், ஸர்வஸமனாய், பரமதயாவானாயிருக்கும் ஈஶ்வர னுக்கு, எல்லாரளவிலும் ஒத்திராமையாகிற வைஷம்ய மும், துக்கிகளாக ஸ்ருஷ்டிக்கையாலே, பரதுக்காஸஹிஷ்

1. ஜகத: ஸ்ருஷ்டிஹேதவ: - ஜகத்தினுடைய ஸ்ருஷ்டிக்கு ஹேதுவான, ப்ரஹ்மா - ப்ரஹ்மாவும், தக்ஷாதய: - தக்ஷாதிகளான ப்ரஜாபதிகளும், ததைவ - அந்தப்பிரகாரமே, கால: - காலமும் அகில ஜந்தவ: - ஸமஸ்த ஜந்துக்களும், ஏதா: - இவைகள், ஹரே: - விஷ் விஷ்ணுவினுடைய, விபூதய. - விபூதிகள், ஹே த்விஜ - ஹே மைத் ரேயனே, விஷ்ணு: - விஷ்ணுவும், மந்வாதய: - மநுமுதலானவர் களும், கால: - காலமும், ஸர்வபூதாநிச - ஸமஸ்த பூதங்களும், ஏதா: - இவைகள், ஸ்திதே: - ஸ்திதிக்கு, நிமித்த பூதஸ்ய - காரண பூதமான, விஷ்ணோ: - விஷ்ணுவினுடைய, விபூதய: - விபூதிகள், ருத்ர: - ருத்ரனும், காலாந்தகாத்யாச்ச - காலம் யமன் இவர்கள் முத லானவர்களும், ஸமஸ்தாச்சைவ - ஸமஸ்தமான, ஜந்தவ: - ஜந்துக் களும், சதுர்தா ஏதா: - இவ்விதம் நான்கான இவைகள், ப்ரளயே - ப்ரளயகாலத்திலே, ஜநார்தன விபூதய: ஹரி - பகவானுடைய விபூதிகளென்று பிரஸித்தம்.

*ணுத்வ ரூபையான க்ருபையில்லாமையும் வாராதோ? என்கிறதாகில் என்கை.*

*அத்தை பரிஹரிக்கிருர் ;*

**39. கர்மமடியாகச் செய்கையாலும், மண் தின்ற ப்ரஜையை நாக்கிலே குறியிட்டஞ்சப்பண்ணும் மாதாவைப்போலே ஹிதபரனுய்ச் செய்கையாலும் வாராது.**

*(கர்மமடியாக) என்று தொடங்கி. அதாவது - சிலரை சுகிகளாகவும், சிலரை துக்கிகளாகவும் ஸ்ருஷ்டிக்கிறவிது. விஷம ஸ்ருஷ்டிக்குறுப்பான சேதநருடைய கர்மமடியாகச் செய்கையாலும், துக்கிகளாக ஸ்ருஷ்டிக்கிறவிது – தனக்கு ரோககரமான மண்ணை விரும்பித் தின்ற ப்ரஜையை, மேலேதின்னுதபடி நாக்கிலே குறியிட்டு மண் தின்ன பயப் படும்படி பண்ணும் ஹிதபரையான மாதாவைப் போலே, இவர்கள் மேல் துக்கஹேதுவான கர்மங்களைப் பண்ண அஞ்சும்படி ஹிதபரனுய்ச் செய்கையாலும், வைஷம்ய நைர்க்ருண்யங்களிரண்டும் இவனுக்கு வாராதென்கை.*

*இத்தால், "𑌵𑍈𑌷𑌮𑍍𑌯𑌨𑍈𑌰𑍍𑌘𑍃𑌣𑍍𑌯𑍇 𑌨 𑌸𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌤𑍍𑌵𑌾𑌤𑍍" (வைஷம்யநைர்க்ருண்யேந ஸாபேக்ஷத்வாத்)[2] என்கிற வேதாந்தஸூத்ரார்த்தத்தை அருளிச்செய்தாராயிற்று. "𑌨𑌿𑌮𑍍𑌨𑍋𑌨𑍍𑌨𑌤𑌞𑍍𑌚 𑌕𑌰𑍁𑌣𑌞𑍍𑌚 𑌜𑌗𑌦𑍍𑌵𑌿𑌚𑌿𑌤𑍍𑌰𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌵𑍍𑌯𑌪𑍇𑌕𑍍𑌷𑍍𑌯 𑌸𑍃𑌜𑌤𑌸𑍍𑌤𑌵 𑌰𑌙𑍍𑌗𑌶𑌾𑌯𑌿𑌨𑍍 । 𑌵𑍈𑌷𑌮𑍍𑌯𑌨𑌿𑌰𑍍𑌘𑍃𑌣𑌤𑌯𑍋𑌰𑍍𑌨 𑌖𑌲𑍁 𑌪𑍍𑌰𑌸𑌕𑍍𑌤𑌿𑌸𑍍𑌤𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌦𑌃 𑌶𑍍𑌰𑍁𑌤𑌯𑍋 𑌗𑍃𑌣𑌨𑍍𑌤𑌿" (நிம்நோந்நதஞ்ச கருணஞ்ச ஜகத் விசித்ரம் கர்ம வ்யபேக்ஷ்ய ஸ்ருஜத ஸ் தவ ரங்கஶேஷிந் | வைஷம்யநிர்க்க்ருணதயோர் ந கலு ப்ரஸக்திஸ் தத்ப்ரஹ்ம*

---

1. ***பிர.*** *ஸூ.* **2-1-34.** *வைஷம்யநைர்க்ருண்யே - (ஈச்வரன் ஜகத் ஸ்ரஷ்டாவானுல் அவனுக்கு; வைஷம்யமூம் ப்ரஸங்கிக்கும் (என்ருல்) ந - அவை ஸம்பவியாது, (ஏனென்ருல்) ஸாபேக்ஷத்வாத் - சேதநர்களுடைய கர்ம ஸாபேக்ஷனுயிருக்கையாலே, ததாஹி - அப்படியே, தர்சயதி - (வேதவாக்யம்) காண்பிக்கிறது.*

ஸூத்ர ஸஹிவாஶ் ஶ்ருதயோ க்ருணந்தி)[1] என்று, இது தன்னை பட்டரும் அருளிச்செய்தாரிறே.

ஆக, (ஸகலஜகத்ஸர்கஸ்த்திதி ஸம்ஹாரகர்த்தாவாய்) என்றத்தை உபபாதித்தாராய் நின்றார் கீழ்; அநந்தரம், (விலக்ஷண விக்ரஹயுக்தனாய்) என்றத்தை உபபாதிப்பதாக உபக்ரமிக்கிறார்*;

40. இவன்றான் * "முந்நீர் ஞாலம் படைத்த வெம் முகில் வண்ணன்" என்கிறபடியே, ஸவிக்ரஹனாய்க் கொண்டு ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணும்.

(இவன்றான்) என்று தொடங்கி. நடுவு சொன்ன, ஆர்த்தாதி சதுர்விதபுருஷஸமாஶ்ரயணீயத்வமும், தர்மாதி சதுர்வித பலப்ரதத்வமும் ஆகிற இவையிரண்டையும் உபபாதியாதொழிவானென்? என்னில்; "காரணந்து த்யேயः" (காரணந்து த்யேயः)[2] "யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்" (யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்)[3] இத்

1. ஸ்ரீரங். ஸ்த. 2-42. ஹே ரங்கசேஷிந் - வாராய் ஸ்ரீரங்கத்தில் விளங்கானிற்கிற ஸ்வாமியே! விசித்திரம் - விசித்ரமாகவும், நிம்நோந்நதஞ்ச - ஈச, ஈசிதவ்யமாகிற வைஷம்யத்தையுடையதாகவும், கருணஞ்ச - தயை -பண்ணத்தகுந்ததாகவுமிருக்கிற, ஜகத் - ஜகத்தை, கர்ம வ்யபேக்ஷ்ய - அந்தந்த சேதனனாலே பண்ணப்படும் புண்ணியபாபங்களான கர்மத்தை விசாரித்து, ஸ்ருஜத: - ஸ்ருஷ்டியானிற்கிற, தவ - தேவரீருக்கு, வைஷம்ய நிர்க்ருணதயோ: - பக்ஷபாதித்வ நிர்தயத்வங்களுடைய, ப்ரஸக்தி: - ப்ரஸக்தியானது, ந கலு - இல்லையன்றோ, இதி யத் தத் - என்கிறது யாதொன்று உண்டோ அத்தை, ப்ரஹ்மஸூத்ர ஸஹிவா: - ப்ரஹ்மஸூத்ரத்தை ஸஹாயங்களாகவுடைய, ச்ருதய: - ச்ருதிகள், க்ருணந்தி - ப்ரதிபாதிக்கின்றன.

2. ச்வே. உப. காரணந்து - காரணவஸ்துவே, த்யேய: - த்யானம் பண்ணத்தக்கது.

3. ச்வே. உப. ய: - எந்த ஸ்ரீமந்நாராயணன், பூர்வம் - உலகங்களை ஸ்ருஷ்டிபண்ணுவதற்கு முன்னே, ப்ரஹ்மாணம் - நான்முகனை, விததாதி - ஸ்ருஷடித்தாரோ, ய: - எவன் (அந்த ஸ்ரீமந்நாராயணன் தானே), தஸ்மை - அந்த நான்முகனுக்கு, வேதான் ச - வேதங்களையும், ப்ரஹிணோதி - உபதேசம் செய்தாரோ.

யாதியிற்சொல்லுகிறபடியே, காரணவஸ்துவே உபாஸ்ய மும், ஆஶ்ரயணீயமுமாகையாலே, காரணத்வம் சொன்ன போதே, "சதுர்விதா பஜந்தே மாம்" (சதுர்விதா பஜந்தே மாம்)[1] என்கிற சதுர்வித புருஷஸமாஶ்ரயணீயத்வமும், "ஃபலமத உபபத்தே:" (பலமத உபபத்தே:)[2] என்கிற படியே, பலப்ரதத்வஹேதுவான ஸர்வஶக்தியோகம் கீழே உக்தமாகையாலே, தர்மாதி சதுர்விதபலப்ரதத்வமும் அர்த்தாத் உக்தமென்னும் நினைவாலும், அவற்றில் உபபாதநீயாம்ஶம் மிகவுமில்லாமையாலும் ததுபபாதநம் பண்ணிற்றிலர். ஆகையாலே, கீழ்ச்சொன்ன காரணத்வத்தோடே விக்ரஹயோகத்துக்கு அந்வயத்தைச் சொல்லிக்கொண்டு கிளருகிறார்;

(இவன்றான் "முந்நீர் ஞாலம்படைத்த வெம்முகில் வண்ணனே"[3] என்கிறபடியே, ஸவிக்ரஹனாய்க்கொண்டு ஸ்ருஷ்ட்யாதிகளைப்பண்ணும்) என்று. அதாவது – இப்படி ஜகத்ஸர்காதி கர்த்தாவாகச் சொல்லப்பட்ட விவன்றான், எனக்காக, ஆற்று நீர், ஊற்று நீர், வர்ஷ ஜலமென்று ன்றுவகைப்பட்ட நீரையுடைத்தான ஸமுத்ரத்தோடே கூடின ஜகத்தை ஸ்ருஷ்டித்த வர்ஷுக வலாஹகம்போலே யிருக்கிறவடிவை யுடையவனேயென்று, ஆழ்வாருடைய திவ்யப்ரபந்தத்திற் சொல்லுகிறபடியே, விக்ரஹஸஹிதனாய்க்கொண்டு ஸ்ருஷ்டி ஸ்த்திதி ஸம்ஹாரங்கள் மூன்றையும் பண்ணுமென்கை. "முகில்வண்ணன்" என்கிறவிது - ஔதார்யகுணபரமாக, வ்யாக்யாதாக்கள் பலரும் வ்யாக்யாநம் பண்ணினார்களேயாகிலும், விக்ரஹபரமாக விவரருளிச்செய்கையாலே, இங்ஙனுமொரு யோஜனையுண்டென்று கொள்ளவேணும். ஒன்றுக்குப் பல யோஜனையுமுண்டாயிறே இருப்பது.

---

1. 196-ம் பக்கம் பார்க்க.

2. ப்ர, ஸூ. 3-2-37. உபபத்தே: - யுக்தி யுக்தமாகையால், அத: - இப்பரம புருஷனிடத்திலிருந்து, பலம் - புருஷார்த்தம் (கிடைக்கிறது)

3. தி: வா. 3-2-1.

இனி, இந்த விக்ரஹத்தினுடைய வைலக்ஷண்யத்தை யொரு சூர்ணையாலே விஸ்தரேண உபபாதிக்கிறார்;

41. விக்ரஹந்தான் ஸ்வரூபகுணங்களிலுங்காட்டில் அத்யந்தாபிமதமாய், ஸ்வாநுரூபமாய், நித்யமாய், ஏகரூபமாய், ஶுத்தஸத்வாத்மகமாய், சேதநதேஹம்போலே ஜ்ஞாநமயமான ஸ்வரூபத்தை மறைக்கையன்றிக்கே, மாணிக்கச்செப்பிலே பொன்னையிட்டுவைத்தாப்போலே யிருக்க, பொன்னுருவான திவ்யாத்ம ஸ்வரூபத்துக்கு ப்ரகாஶகமாய், நிரவதிக தேஜோரூபமாய், ஸௌகுமார்யாதி கல்யாணகுண கண நிதியாய், யோகித்யேயமாய், ஸகலஜநமோஹநமாய், ஸமஸ்தபோக வைராக்யஜநகமாய், நித்யமுக்தாநுபாவ்யமாய், * வாசத்தடம் போலே ஸகலதாபஹரமாய், அநந்தாவதாரகந்தமாய், ஸர்வரக்ஷகமாய், ஸர்வாஶ்ரயமாய், அஸ்த்ரபூஷண பூஷிதமாயிருக்கும்.

(விக்ரஹந்தான்) என்று தொடங்கி, ஸ்வரூபகுணங்களிலுங்காட்டில் அத்யந்த அபிமதமாகையாவது – ஆநந்தமயமான ஸ்வரூபமும், ஆநந்தாவஹமான குணங்களும் போலன்றியே, நிரதிஶயாநந்தாவஹமா யிருக்கையாலே, அவற்றிற்காட்டிலும் மிகவுமபிமதமாயிருக்கை. "இச்சாக்ருஹீதாபிமதோருதேஹ:" (இச்சாக்ருஹீதாபிமதோருதேஹ:)[1] என்னக்கடவதிறே. (ஸ்வாநுரூபமாகை) ஆவது – அநநுரூபமாயிருக்கச் செய்தேயும் அபிமதமா யிருக்கு மவைபோலன்றிக்கே, தனக்கு அநுரூபமா யிருக்கை.

(நித்யமாகை) ஆவது – ஸ்வரூபகுணங்களைப்போலே அநாதிநிதநமாயிருக்கை. லோகத்தில் அவயவிகளுக்கு அநித்யத்வம் காண்கையாலே, இதுக்கும் அவயவித்வேந

1. வி. பு. 6-5-84. இச்சாக்ருஹீதாபிமதோரு தேஹ: - தன் இஷ்டத்தால் ஸ்வீகரிக்கப்பட்ட அநுரூபமான ராமக்ருஷ்ணாதி அநேக சரீரங்களையுடைய,

அநித்யத்வம் வாராதோ? என்னில்; வாராது. "எங்கு மொக்க அவயவஸம்பந்தமாத்ரமல்ல; அநித்யத்வஹேது; அவயவ ஆரப்தத்வம். அவயவ ஸம்பந்தமாத்ரமே அநித்ய த்வ ஹேதுவாமாகில் கரசரணாத்யவயவ ஸம்பந்தமுண்டான வாத்மாவுக்கும் விநாஶம் வரவேணும்; இங்கு, அப்படி அவயவாரப்தத்வத்தில் ப்ரமாணமில்லாமையாலே, இது கரசரணாத்யவயவ யோகியாகாநிற்கச் செய்தேயும் நித்யமாயே யிருக்கும்" என்று, இப்படி விவரணத்திலே ஆச்சான் பிள்ளை யருளிச்செய்தாரிறே.

(ஏகரூபமாகை) ஆவது – வ்ருத்தி க்ஷயாதி விகாரரஹிதமாயிருக்கை. "ஸதைகரூபரூபாய" (ஸதைகரூப ரூபாய)[1] என்னக்கடவதிறே.

(ஶுத்தஸத்வாத்மகமாகை) ஆவது – குணாந்தர ஸம்ஸர்கமில்லாத ஸத்வத்துக்கு ஆஶ்ரயமாயிருக்கிற அப்ராக்ருத த்ரவ்யமே வடிவாயிருக்கை. "ந தஸ்ய ப்ராக்ருதா மூர்த்தி:" (ந தஸ்ய ப்ராக்ருதா மூர்த்தி:)[2] என்னக்கடவதிறே.

(சேதநதேஹம்போலே) இத்யாதி. (பொன்னுருவான திவ்யாத்ம ஸ்வரூபத்துக்கு ப்ரகாஶகமாகை) ஆவது – ஶுத்தஸத்வாத்மகமாகையாலே குணத்ரய ஆஶ்ரயமான சேதநதேஹம் போலே ஜ்ஞாநமயமாகையாலே; தேஜோரூபமான ஸ்வரூபத்தைப் புறந்தோற்றாதபடி மறைக்கையன்றிக்கே மாணிக்யத்தைச் செப்பாகச்சமைத்து அதிலே பொன்னையிட்டுவைத்தால் உள்ளிருக்கிற பொன்னை அது புறம்பேநிழலெழும்படி தோற்றுவிக்குமாப்போலே; "எண்ணும் பொன்னுருவாய்"[2] என்கிறபடியே, ஸ்ப்ருஹணீயமாகையாலே, பொன்னுருவென்று சொல்லப்படுமதான திவ்யாத்ம ஸ்வரூபத்துக்குத் தான் ப்ரகாஶகமாயிருக்கை.

(நிரவதிகதேஜோரூபமாகை) ஆவது - நித்யமுக்த விக்ரஹங்களும், இதுவும் ஏகஜாதிய த்ரவ்யமாயிருக்கச்

---

1. 201-ம் பக்கம் பார்க்க.

2. பாரதம். தஸ்ய - அவனுடைய, மூர்த்தி: - திருமேனி, ந ப்ராக்ருதா - அப்ராக்ருதம்.

செய்தே, ஏகஜாதீய த்ரவ்யாத்மகமான கத்யோதஶரீர தேஜஸ்ஸிற்காட்டில் ஆதித்ய ஶரீரத்துக்குண்டான தேஜோதிஶயம் போலே, இவை ஸாவதிக தேஜஸ்ஸாம்படி தான் நிரவதிகதேஜஸ்ஸை வடிவாகவுடைத்தாயிருக்கை.

(ஸௌகுமார்யாதி கல்யாண குணகண நிதியாகை) ஆவது - ஸௌகுமார்யம், ஸௌந்தர்யம், லாவண்யம்; ஸௌகந்த்யம், யௌவனம் முதலான கல்யாணகுண ஸமூஹத்துக்குக் கொள்கலமாயிருக்கை. "ஸௌந்தர்ய ஸௌகுமார்ய ஸௌகந்த்ய லாவண்ய யௌவனாத்யனந்த குணநிதி திவ்யரூப" (ஸௌந்தர்ய ஸௌகந்த்ய ஸௌகுமார்ய லாவண்ய யௌவநாத்யநந்த குணநிதி திவ்யரூப)[1] என்று எம்பெருமானாரருளிச் செய்தாரிறே.

(யோகித்யேயமாகை) ஆவது - பகவத்த்யானபரரான பரமயோகிகளுக்கு ஶுபாஶ்ரயமாய்க் கொண்டு எப்போதும் த்யானவிஷயமாயிருக்கை. "கா த்வந்யா த்வாம்ருதே தேவி ஸர்வயஜ்ஞமயம் வபு꞉ । அத்யாஸ்தே தேவதேவஸ்ய யோகிசிந்த்யம் கதாப்ருத꞉" (கா சாந்யா த்வாம் ருதே தேவி ஸர்வயஜ்ஞமயம் வபு꞉ । அத்யாஸ்தே தேவதேவஸ்ய யோகி சிந்த்யம் கதாப்ருத꞉)[2] என்று அஸாதாரண விக்ரஹமே யோகிசிந்த்யமாகச் சொல்லப்பட்டதிறே.

(ஸகலஜநமோஹநமாகை) ஆவது - ஜ்ஞாஜ்ஞவிபாகமற ஸகல ஜநங்களையும் ஸ்வ வைலக்ஷண்யத்தாலே பிச்சேற்றுமதாயிருக்கை. "பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" (பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்)[3] "ஸவ-

1. 198-ம் பக்கம் பார்க்க

2. வி. பு. 1-9-122. தேவி - பிராட்டியே! தேவ தேவஸ்ய - தேவ தேவனுடைய, கதாப்ருத꞉ - கதையைத் தரித்திருக்கிற விஷ்ணுவினுடைய, யோகி சிந்த்யம் - யோகிகளாலே த்யானம் பண்ணத்தக்க, ஸர்வயஜ்ஞமயம் - ஸமஸ்த யஜ்ஞ ஸ்வரூபமான, வபு꞉ - திருமேனியை, த்வாம் ருதே - உம்மைவிட்டு, அந்யா - இதரையான, கா ச - எவள் தான், அத்யாஸ்தே - அடைவாள்.

3. ராமா. அ. 2. ரூப - திருமேனியழகென்ன, ஔதார்ய - ஔதார்யமென்ன, குணை꞉ - இவை முதலிய குணங்களாலே, பும்ஸாம் -

ஸர்வஸத்வமநோஹர:" (ஸர்வஸத்வமநோஹர:)[1] "கண்டவர் தம் மனம் வழங்கும்"[2] என்னக்கடவதிறே.

(ஸமஸ்தபோக வைராக்ய ஜநகமாகை) ஆவது - தன் வைலக்ஷண்யத்தைக் கண்டவர்களுக்கு ஸ்வேதர ஸகல விஷயாநுபவத்திலும் ஆசையறுதியை விளைக்குமதாயிருக்கை. "பேரின்பமெல்லாம் துறந்தார் தொழுதாரத் தோள்"[3] என்னக்கடவதிறே.

(நித்யமுக்த அநுபாவ்யமாகை) ஆவது - அபரிச்சிந்ந ஜ்ஞாநாதிகுணகரான நித்யராலும் முக்தராலும், * ஸதா பஶ்யந்திப்படியே அநவரதம் அநுபவிக்கப்படுமதாயிருக்கை.

* (வாசத்தடம்போலே ஸகலதாபஹரமாகை) ஆவது - "கண் கை கால் தூய செய்யமலர்கள்"[4] என்று தொடங்கி ஆழ்வார் வர்ணித்தபடியே, திவ்ய அவயவங்களும் திருமேனியுமான சேர்த்தியாலே, பரப்புமாறத் தாமரைபூத்து பரிமளம் அலையெறியாநிற்பதொரு தடாகம் போலேயிருக்கையாலே, தன்னைக் கிட்டினவர்களுடைய ஸாம்ஸாரிக விவித தாபத்தோடு விரஹதாபத்தோடு வாசியற ஸகலதாபத்தையும் போக்குமதாயிருக்கை.

(அநந்தாவதார கந்தமாகை) ஆவது -"அஜாயமாநோ பஹுதா விஜாயதே" (அஜாயமாநோ பஹுதா விஜாயதே)[5] "பஹூநி மே வ்யதீதாநி" (பஹூநி மே வ்யதீ

---

புருஷர்களுடைய, த்ருஷ்டி - கண்ணென்ன, சித்த - மனதென்ன இவைகளை அபஹாரிணம் - அபஹரிப்பவனை, (ராமனைப் பார்த்து தசரதன் திருப்தியடையவே யில்லை).

1. ரா. ஸு. ஸர்வஸத்வ மநோஹர: - ஸமஸ்த ஜந்துக்களுக்கும் மநோஹரன், (பெருமாள்).

2. பெரு. தி. 8. 2. 3. 2. தி. 42. 4. தி. வா. 8-5-1.

5. புருஷஸூக்தே. அஜாயமாந: - கர்மநிபந்தனமான பிறப்பில்லாமலிருக்கிற ஈசுவரன், பஹுதா - இச்சையடியாக அநேகப்ரகாரங்களாக, விஜாயதே - இதர ஸஜாதீயனாய் வந்தவதரிக்கிறான். தஸ்ய - அதற்கு, யோநிம் - காரணத்தை தீரா: - பெரியோர்கள், பரிஜாநந்தி - நன்கு அறிகிறார்கள்.

தாநி)[1] என்று சொல்லப்படுகிற அஸங்க்யாதமான அவதாரங்களும், அப்ராக்ருத திவ்ய ஸம்ஸ்தாநத்தை இதர ஸஜாதீயமாக்கிக் கொண்டு, தீபாத் உத்பந்ந ப்ரதீபம்போலே வருகிறவையாகையாலே அவையெல்லாவற்றுக்கும் மூலமாயிருக்கை. "𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌸𑍍𑌵𑌾𑌮𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌯 𑌸𑌂𑌭𑌵𑌾𑌮𑌿" (ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாமி)[2] "𑌕𑌲𑍍𑌪𑍇 𑌕𑌲𑍍𑌪𑍇 𑌜𑌾𑌯𑌮𑌾𑌨𑌸𑍍𑌸𑍍𑌵𑌮𑍂𑌰𑍍𑌤𑍍𑌯𑌾" (கல்பே கல்பே ஜாயமாநஸ்ஸ்வ மூர்த்யா)[3] "ஆதியஞ்சோதியுருவை யங்குவைத்திங்குப்பிறந்த"[4] என்னக்கடவதிறே.

(ஸர்வரக்ஷகமாகை) ஆவது-ஐஶ்வர்யார்த்திகளோடு, கேவலரோடு, பகவச்சரணார்த்திகளில் உபாஸகரோடு, ப்ரபந்நரோடு, அநுபவகைங்கர்யபரரான நித்யமுக்தரோடு வாசியற ஸர்வருடையவும் அநிஷ்டநிவ்ருத்தி, இஷ்டப்ராப்திகளைப் பண்ணுவது திவ்யமங்களவிக்ரஹோபேதனாய்க் கொண்டாகையாலே, எல்லாருக்கும் ரக்ஷகமாயிருக்கை.

(ஸர்வாஶ்ரயமாகை) ஆவது - உபயவிபூதிக்கும் ஆஶ்ரயமா யிருக்கை,

(அஸ்த்ரபூஷணபூஷிதமாகை) ஆவது - கீழ்ச் சொன்ன ஸர்வாஶ்ரயத்வ ஸூசகமாம்படி, அஸ்த்ரபூஷணாத்யாயத்திற் சொல்லுகிறபடியே, விபூத்யபிமாநிகளான திவ்யாயுதங்களாலும், திவ்யாபரணங்களாலும் அலங்க்ருதமாயிருக்

---

1. ஸ்ரீகீதை. 4-5. ஹே அர்ஜுந - ஓ அர்ஜுநா, மே - என்னுடையவும், தவச - உன்னுடையவும், பஹூநி - அநேகங்களான, ஜன்மாநி - ஜன்மங்கள், வ்யதீதாநி - கழிந்து போயின, தாநி ஸர்வாணி - அவை யெல்லா ஜன்மங்களையும், அஹம் வேத - நான் அறிகிறேன், ஹே பரந்தப - சத்ருக்களை யழியும்படி செய்பவனே, த்வம் ந வேத்த - நீ யறியமாட்டாய்.

2. ஸ்ரீகீதை. 4-6. அஜோபி ஸன் - பிறப்பில்லாதவனாயிருந்தாலும், அவ்யயாத்மா - நாசமற்ற ஸ்வபாவமுடையவனாயிருந்தபோதிலும், ஸ்வாம் ப்ரக்ருதிம் - என்னுடையதான ஸ்வபாவத்தை, அதிஷ்டாய - ஸ்வீகரித்துக் கொண்டு ஆத்மமாயயா - என்னுடைய ஸங்கல்பத்தினால், ஸம்பவாமி - அவதரிக்கிறேன்.

3. ஸ்ரீகீதை. கல்பே கல்பே - கல்பங்கள் தோறும், ஸ்வமூர்த்யா - தன் திருமேனியோடு, ஜாயமாநः - அவதரியாநிற்கிற ஸர்வேச்வரன்.

4. தி. வா. 4-55.

கை. "𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑌸𑍍𑌯 𑌜𑌗𑌤𑍋 𑌨𑌿𑌰𑍍𑌲𑍇𑌪𑌮𑌗𑍁𑌣𑌾𑌮𑌲𑌮𑍍 |
𑌬𑌿𑌭𑌰𑍍𑌤𑌿 𑌕𑍌𑌸𑍍𑌤𑍁𑌭𑌮𑌣𑌿𑌂 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌹𑌰𑌿𑌃 |
𑌶𑍍𑌰𑍀𑌵𑌤𑍍𑌸𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌨𑌧𑌰𑌮𑌨𑌨𑍍𑌤𑍇 𑌚 𑌸𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌮𑍍 | 𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌂
𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑌪𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑍇 𑌗𑌦𑌾𑌰𑍂𑌪𑍇𑌣 𑌮𑌾𑌧𑌵𑍇 | 𑌭𑍂𑌤𑌾𑌦𑌿-
𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌦𑌿𑌂 𑌚 𑌦𑍍𑌵𑌿𑌧𑌾𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑌃 | 𑌬𑌿𑌭𑌰𑍍𑌤𑌿 𑌶𑌙𑍍𑌖𑌰𑍂-
𑌪𑍇𑌣 𑌶𑌾𑌰𑍍𑌙𑍍𑌗𑌰𑍂𑌪𑍇𑌣 𑌚 𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍 | 𑌚𑌲𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌮𑌤𑍍𑌯𑌨𑍍-
𑌤𑌜𑌵𑍇𑌨𑌾𑌨𑍍𑌤𑌰𑌿𑌤𑌾𑌨𑌿𑌲𑌮𑍍 | 𑌚𑌕𑍍𑌰𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌚 𑌮𑌨𑍋 𑌧𑌤𑍍𑌤𑍇
𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌕𑌰𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍 | 𑌪𑌞𑍍𑌚𑌰𑍂𑌪𑌾 𑌤𑍁 𑌯𑌾 𑌮𑌾𑌲𑌾 𑌵𑍈-
𑌜𑌯𑌨𑍍𑌤𑍀 𑌗𑌦𑌾𑌭𑍃𑌤𑌃 | 𑌸𑌾 𑌭𑍂𑌤𑌹𑍇𑌤𑍁𑌸𑌙𑍍𑌘𑌾𑌤𑍋
𑌭𑍂𑌤𑌮𑌾𑌲𑌾 𑌚 𑌵𑍈 𑌦𑍍𑌵𑌿𑌜 | 𑌯𑌾𑌨𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌣𑌿 𑌬𑍁𑌦𑍍-
𑌧𑌿𑌕𑌰𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌕𑌾𑌨𑌿 𑌵𑍈 | 𑌶𑌰𑌰𑍂𑌪𑌾𑌣𑍍𑌯𑌶𑍇𑌷𑌾𑌣𑌿 𑌤𑌾𑌨𑌿
𑌧𑌤𑍍𑌤𑍇 𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨𑌃 | 𑌬𑌿𑌭𑌰𑍍𑌤𑌿 𑌯𑌚𑍍𑌚𑌾𑌸𑌿𑌰𑌤𑍍𑌨𑌮𑌚𑍍𑌯𑍁𑌤𑍋𑌽𑌤𑍍𑌯𑌨𑍍-
𑌤𑌨𑌿𑌰𑍍𑌮𑌲𑌮𑍍 | 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌮𑌯𑌂 𑌤𑍁 𑌤𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌚 𑌮𑌮 𑌸𑌂-
𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍" (ஆத்மாநமஸ்ய ஜகதோ நிர்லேபமகுணமலம் | பிபர்த்தி கௌஸ்துபமணிம் ஸ்வரூபம் பகவாந் ஹரி: | ஸ்ரீவத்ஸ ஸம்ஸ்த்தாநதரமநந்தே ச ஸமாஶ்ரிதம் | ப்ரதாநம் புத்திரப்யாஸ்தே கதாரூபேண மாதவே | பூதாதிமிந்த்ரியாதிஞ்ச த்விதாஹங்காரமீஶ்வர: | பிபர்த்தி ஶங்கரூபேண ஶார்ங்க ரூபேண ச ஸ்த்திதம் | சலஸ்வரூபமத்யந்த ஜவேநாந்தரிதாநிலம் | சக்ரஸ்வரூபஞ்ச மநோ தத்தே விஷ்ணுகரே ஸ்த்திதம் | பஞ்சரூபா து யா மாலா வைஜயந்தீ கதாப்ருத: | ஸா பூதஹேதுஸங்காதோ பூதமாலா ச வை த்விஜ | யாநீந்த்ரிய விஶேஷாணி புத்திகர்மாத்மகாநி வை | ஶரரூபாண்ய ஶேஷாணி தாநி தத்தே ஜநார்த்தந: | பிபர்த்தி யச்சாஸி ரத்நமச்யுதோத்யந்த நிர்மலம் | வித்யாமயந்து தத்ஜ்ஞாநம் வித்யா ச மம ஸம்ஸ்த்திதம்)[1] என்னக்கடவதிறே.

---

2. வி. பு. 1-22 67+74. பகவான் ஹரி: - பகவானான ஹரியா யானவர், நிர்லேபம் - துக்கமில்லாதவர்களும், அகுண அமலம் - துர்குணமில்லாதவர்களும், நிர்மலமானவர்களும், அஸ்ய ஜகத: - இந்த ஜகத்திலுள்ள, ஆத்மானம் - ஜீவாத்மாக்களை, கௌஸ்துபமணி ஸ்வரூபம் - கௌஸ்துபமணி ஸ்வரூபமாக. பிபர்த்தி - தரித்துக்கொண்டிருக்கிறார், ப்ரதாநம் - மூலப்ரக்ருதியானது, ஸ்ரீவத்ஸ ஸம்ஸ்தான மயம் - ஸ்ரீவத்ஸ ஸம்ஸ்தானரூபமாய், அநந்தே ச ஸமாச்ரிதம் - அனந்தனிலே ஆச்ரயிக்கப்பட்டிருக்கிறது, புத்திரபி கதாரூபேண மாத

ஆக, (விலக்ஷணவிக்ரஹயுக்தனாய்) என்றத்தை யுபபா தித்தார் கீழ்; அநந்தரம், இந்த விக்ரஹயோக ப்ரயுக்த மான ஈஶ்வரனுடைய பரத்வாதி பஞ்சப்ரகாரத்தையும், தனித்தனியே ஸுவ்யக்தமாக தர்ஶிப்பிக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றி, ப்ரதமம் அதுதன்னை யுத்க்ஷேபிக்கிறார் ;

42. ஈஶ்வர ஸ்வரூபந்தான், பரத்வம், வ்யூஹம், விப வம், அந்தர்யாமித்வம், அர்ச்சாவதாரமென்றஞ்சு ப்ரகாரத்தோட கூடி யிருக்கும்.

(ஈஶ்வரஸ்வரூபந்தான், பரத்வம், வ்யூஹம், விபவம், அந்தர்யாமித்வம், அர்ச்சாவதாரம் என்று அஞ்சு ப்ரகாரத் தோடே கூடியிருக்கும்) என்று. (லக்ஷ்மீபூமீநீளாநாயக னாய்) என்றத்தையும் உபபாதித்துவிட்டு, பின்னை யிது சொல்லாதொழிவானென் ? என்னில் ; அதில் உபபாதிக்க

வே ஆஸ்தே - புத்தியும் கதைரூபமாக ஸ்ரிய:பதியினிடத்தில் இருக் கிறது, ஈச்வர: - ஈச்வரன், பூதாதிம் இந்திரியாதிம் ச த்விதா அஹங் காரம் - தாமஸமென்றும், ஸாத்விக மென்றும், இரண்டு விதமான அஹங்காரத்தை, சங்கரூபேண - சங்கரூபமாகவும், சார்ங்கரூபேண ச - சார்ங்கரூபமாகவும், ஸ்திதம் - இருப்பதாக, பிபர்தி - தரித்துக் கொண்டிருக்கிறான், சலஸ்வரூபம் - சஞ்சலத்ஸ்வபாவமாயும், அத் யந்த ஜவேந அந்தரிதா நிலம் - மிகவும் வேகத்தாலே வாயுவை அதி க்ரமித்ததுமான, மந: - மனஸ்ஸை, கரே ஸ்திதம் - கையிலிருக்கும் சக்ரஸ்வரூபஞ்ச - சக்ரஸ்வரூபமாக, விஷ்ணு : - விஷ்ணுவானவர் தத்தே - தரிக்கிறான், த்விஜ - ஓ ப்ராஹ்மணனே ! பஞ்சரூபா து - ஐந்துவித வர்ணங்களையுடைய, கதாப்ருத: - விஷ்ணுவினுடைய, வைஜயந்தீ மாலா - வைஜயந்தீ என்கிற மாலை, யா - எதுண்டோ, ஸா - அது, பூத ஹேது ஸங்காத: - தந்மாத்ரைகளின் கூட்டமும், பூதமாலா ச வை - பஞ்ச பூதங்களும், ஜநார்தந. - பகவான், புத்தி கர்மாத்மகாநிவை - ஜ்ஞான கர்மாத்மகமான, இந்திரிய விசேஷாணி - இந்திரியங்களெல்லாம், யாநி தாநி அசேஷாணி - எவையுண்டோ அவைகளெல்லாவற்றையும், சரரூபேண - பாணரூபமாக, தத்தே - தரித்துக்கொண்டிருக்கிறான், அத்யந்த நிர்மலம் - மிகவும் நிர்மல மான, யச்சாஸிரத்னம் - எந்த கட்கம், அச்யுத: பிபர்த்தி - அச்யுதன் தரித்திருக்கிறானோ, தத் - அது, அவித்யா சர்ம ஸம்ஸ்திதம் - அவித் என்கிற உறைக்குள்ளிருக்கிற, வித்யாமயம் து - வித்யா ஸ்வபாவ மான, ஜ்ஞாநம் - ஜ்ஞாநம்.

வேண்டுவது பணியில்லாமையாலும், "வைகுண்டே து பரே லோகே ஸ்ரீஸஹாயோ ஜநார்தந:। உபாப்யாம் பூமிநீளாப்யாம் ஸேவித: பரமேஶ்வர:" (வைகுண்டே து பரே லோகே ஸ்ரீஸஹாயோ ஜநார்தந:। உபாப்யாம் பூமிநீளாப்யாம் ஸேவித: பரமேஶ்வர:)[1] என்கையாலே, மேல் சொல்லுகிற பரத்வத்திலே அர்த்தாதுக்தமாம் என்னுமத்தைப் பற்றவும் தலித்து உபபாதித்திலர். ஆகையால், விரோதமில்லை.

(ஈஶ்வரஸ்வரூபம்) என்கிறவிடத்தில், ஸ்வரூபஶப்தத்தாலே சொல்லுகிறது - ஸ்வாஸாதாரண விக்ரஹத்தையாதல், விக்ரஹவிஶிஷ்டமான ஸ்வரூபந்தன்னையாதல். ஸங்க்ரஹேண இட்டருளின மற்றை யிரண்டு தத்வத்ரயப் படியிலும், ஒருபடியிலே, "திருமேனியும், அஞ்சுபடியாயிருக்கும்; அதாவது - பரத்வமும், வ்யூஹமும், அந்தர்யாமித்வமும், விபவமும், அர்ச்சாவதாரமும்" என்றும், மற்றைப்படியிலே, "ஈஶ்வரஸ்வரூபம ஹேயப்ரதிபடமாய்" என்று தொடங்கி, "பத்நீபரிஜநவிஶிஷ்டமாயிருக்கும்" என்றத்தை யுபபாதித்தவநந்தரம், "இதுதான் அஞ்சுபடியாயிருக்கும்" என்றும், இதம் ஶப்தத்தாலே - ப்ரக்ருதமான வீஶ்வரஸ்வரூபத்தை பராமர்ஶித்து, அதுதான் பரத்வாதிரூபேண பஞ்சப்ரகாரமா யிருக்குமென்றும் இவர் தாமே யருளிச்செய்கையாலே. இப்படி, பரத்வாதி பஞ்ச ப்ரகார விஶிஷ்டனா யிருப்பான் என்னுமிடத்தை, "மம ப்ரகாரா: பஞ்சேதி ப்ராஹுர் வேதாந்தபாரகா:। பரோ வ்யூஹஶ்ச விபவோ நியந்தா ஸர்வதேஹிநாம்। அர்ச்சாவதாரஶ்ச ததா தயாலு: புருஷாக்ருதி:। இத்யேவம் பஞ்சதா ப்ராஹுர் மாம் வேதாந்தவிதோ ஜநா:" (மம ப்ரகாராꣳபஞ்சேதி ப்ராஹுர் வேதாந்தபாரகா:। பரோ வ்யூஹஶ்ச விபவோ நியந்தா ஸர்வதேஹிநாம்। அர்ச்சாவதாரஶ்ச ததா தயாலு: புருஷாக்ருதி:। இத்யேவம் பஞ்சதா ப்ராஹுர் மாம் வேதாந்தவிதோ ஜநா:)[2] என்று,

1. 199-ம் பக்கம் பார்க்க.

2. விஷ்வக்ஸேந ஸம்ஹிதா. மம - என்னுடைய, ப்ரகாரா: - ப்ரகாரங்கள், பஞ்ச இதி - ஐந்து என்று, வேதாந்த பாரகா: - வேதா

விஷ்வக்ஸேநஸம்ஹிதையிலே தானே அருளிச்செய்தா ரிறே.

இனி, இந்த அஞ்சு ப்ரகாரத்தையும் அடைவே உபபா திக்கக் கோலி, ப்ரதமம், பரத்வத்தை உபபாதிக்கிறார்;

**43. அதில் பரத்வமாவது — அகாலகால்யமான *நல மந்தமில்லதோர் நாட்டிலே நித்யமுக்தர்க்கு போக் யனாய்க்கொண்டெழுந்தருளியிருக்குமிருப்பு.**

(அதில் பரத்வமாவது) என்று தொடங்கி, அதாவது - அவையைந்திலும் வைத்துக் கொண்டு, பரத்வமாவது - "ந காலஸ்தத்ர வை ப்ரபு:" (ந காலஸ் தத்ர வை ப்ர பு:)[1] என்றும், "கலா முஹூர்த்தாதிமயஶ்ச காலோ ந யத்விபூதே: பரிணாமஹேது:" (கலா முஹூர்த்தாதி மயஶ்ச காலோ ந யத் விபூதே: பரிணாமஹேது:)[2] என் றும், "யோ வை ந ஜாது பரிணாமபதாஸ்பதம் ஸா காலாதிகா தவ பரா மஹதீ விபூதி:" (யோ வை ந ஜாது பரிணாமபதாஸ்பதம் ஸா காலாதிகா தவ பரா மஹதீ விபூதி:)[3] என்றும், "யத்ராஸ்வபிவதீ..." (யத்

ந்தத்தின் கரை கண்டவர்கள, ப்ராஹு: - சொல்லுகிறார்கள, வேதா ந்த விதோ ஜநா: - வேதாந்தங்களை அறிந்த ஜனங்கள். மாம் என்னை, பர: - பரமென்ன, வ்யூஹஶ்ச - வ்யூஹமென்ன, ஸர்வதேஹிநம் - ஸ மஸ்த பிராணிகளுக்கு, நியந்தா - நியந்தாவான அந்தர்யாமி யென்ன, ததா - அந்தப்பிரகாரம், தயாளு: - தயாளுவாய், புருஷாக்ருதி: - புரு ஷாக்ருதியாயிருக்கிற, அர்ச்சாவதாரச்ச - அர்ச்சாவதாரமென்ன, இத் யேவம் - இந்தப்ரகாரம், பஞ்சதா - ஐந்து ப்ரகாரமாக, ப்ராஹு: - சொல்லுகிறார்கள்.

1. பாரதம். தத்ரவை - அவ்விடத்தில், கால: ந ப்ரபு: - காலம் ஸமர்த்தமல்ல.

2. கலாமுஹூர்த்தாதிமய.ச - கலை முஹூர்த்தம் இவைகள் முதலான, கால: - கண்டமாயும் அகண்டமாயுமிருக்கிற காலமானது, யத் - யாதொரு ஸ்ரீய பதியினுடைய, விபூதே: - நித்யவிபூதியினு டைய, பரிணாமஹேது; - மாறுதல் அழிதல் முதலிய வேறுபாடுகளுக் குக் காரணமாக, ந - இருக்கிறதில்லை.

3. யா - யாதொரு நித்ய விபூதியானது, பரிணமபதாஸ்பதம் - பரிணமத்திற்குக் காரணமாக, ந - இருக்கிறதில்லை, ஸா - அப்படிப்

காலாதபசேளிமம்)[1] என்றும் சொல்லுகிறபடியே, காலக்ருதபரிணாம மில்லாத தேஶமாகையாலே, கால கார்ய மன்றிக்கே யிருப்பதாய், "நலமந்தமில்லதோர் நாடு"[2] என்னும்படி, ஆநந்தம் அளவிறந்து அத்விதீயமாயிருக்கிற ஸ்ரீவைகுண்டத்திலே, "யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்தி தேவா:" (யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்தி தேவா:)[3] "யத்ர ருஷய: ப்ரதமஜா யே புராணா:" (யத்ர ருஷய: ப்ரதமஜா யே புராணா:)[4] என்றும், "அயர்வறுமமரர்கள்"[5] என்றும் சொல்லுகிறபடியே, நித்யாஸங்குசித ஜ்ஞாநராயிருந்துள்ள அநந்தகருட விஷ்வக்ஸேநாதிகளான நித்யஸூரிகளுக்கும், "ஸூர்யகோடிப்ரதீகாஶா: பூர்ணேந்த்வயுத ஸந்நிபா: | யஸ்மிந் பதே விராஜந்தே முக்தாஸ் ஸம்ஸார பந்தநை:" (ஸூர்யகோடிப்ரதீகாஶா: பூர்ணேந்த்வயுத ஸந்நிபா: | யஸ்மிந் பதே விராஜந்தே முக்தாஸ் ஸம்ஸார பந்தநை:)[6] என்கிறபடியே, நிவ்ருத்த ஸம்ஸாரராய்,

---

பட்ட, தவ - தேவரீருடைய, பரா - உத்க்ருஷ்டமான, மஹதீ விபூதி: - மஹத்தான விபூதியானது, காலாதிகா - முக்காலத்தையும் கடந்திருக்கிறது. இதி என்று.

1. ஸ்ரீகுண. யத் யாதொரு பரமபதமாகிற ஸ்தானமானது, காலாத் - காலத்தினாலே, அபசேளிமம் - பக்வமாயிராதோ.

2. திருவாய்மொழி. 2-8-4.

3. புருஷஸூக்தம். யத்ர - யாதொரு பரமபதத்தில், பூர்வே ஸாத்யா: - ப்ரதமப்ராப்ய பூதரான, தேவா: - நித்யர்கள், ஸந்தி - இருக்கிறார்கள்.

4. யஜுர் - அச்சித்ரம். யத்ர - யாதொரு பரமபதத்தில், ருஷய: - ஸர்வத்தையும் ஸாக்ஷாத்கரிக்க வல்லவர்களான, யே - யாதொரு நித்யஸூரிகள், ப்ரதமஜா: - அநாதி ஸித்தர்களாயும், புராணா: - அநேக காலமானாலும் நூதனமான திவ்யமங்கள விக்ரஹத்தை யுடையவர்களாயுமிருக்கிறார்கள்.

5. திருவாய்மொழி. 1-1-1.

6. லக்ஷ்மீ தந்த்ரம். ஸூர்யகோடி ப்ரதீகாசா: - கோடி ஸூர்யர்களோடு ஸமானர்களான, பூர்ணேந்த்வயுதஸந்நிபா: - பதினாயிரம் பூர்ணசந்திரனுக்குச் சமானர்களான, முக்தா: - முக்தர்கள், யஸ்மிந் பதே - யாதொரு பரமபதத்தில், விராஜந்தே - ப்ரகாசிக்கிறார்களோ.

அஸங்குசித ஜ்ஞாநரான முக்தர்க்கும், அநுபவ விஷய பூதனாய்க்கொண்டு எழுந்தருளியிருக்கும் இருப்பென்கை. "[illegible]" (வைகுண்டே து பரே லோகே நித்யத்வேந வ்யவஸ்திதம் | பஶ்யந்தி ச ஸதா தேவம் நேத்ரைர் ஜ்ஞாநேந வாமரா:)[1] என்னக்கடவதிறே.

அநந்தரம், வ்யூஹத்தை உபபாதிக்கிறார்;

**44. வ்யூஹமாவது – ஸ்ருஷ்டி ஸ்த்திதி ஸம்ஹாரார்த்தமாகவும், ஸம்ஸாரிஸம்ரக்ஷணார்த்தமாகவும், உபாஸகாநுக்ரஹார்த்தமாகவும், ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்தரூபேண நிற்கும் நிலை.**

(வ்யூஹமாவது) என்று தொடங்கி. அதாவது - வ்யூஹத்துக்கு விநியோகம் - லீலாவிபூதியிலே யாகையாலே, இவ்விபூதியினுடைய ஸ்ருஷ்டியென்ன, ஸ்த்திதியென்ன, ஸம்ஹாரமென்ன, இவற்றை நிர்வஹிக்கைக்காகவும், புபக்ஷுக்களான ஸம்ஸாரிகளை, அநிஷ்டநிவ்ருத்யாதிகளைப் பண்ணி ரக்ஷிக்கைக்காகவும், முமுக்ஷுக்களாய் உபாஸிக்குமவர்களுக்கு, ஸம்ஸார நிவ்ருத்திபூர்வகமாகத் தன்னை வந்து ப்ராபிக்கைக்கு உடலான அநுக்ரஹத்தைப் பண்ணுகைக்கு உடலாகைக்காகவும், ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்தர்களாய்க் கொண்டு நிற்கும் நிலை வ்யூஹமாவது என்கை. இதில், இன்ன வ்யூஹத்தாலே யின்னது செய்யுமிடம், மேல் உபபாதநத்திலே கண்டுகொள்வது. "[illegible]" (சதுர்விதஸ் ஸ

1. வைகுண்டே து - வைகுண்டமென்கிற பெயரையுடைய. பரே லோகே - உத்க்ருஷ்டமான லோகத்திலே, நித்யத்வேந - நித்யனாக, வ்யவஸ்திதம் - வ்யவஸ்திதனை, தேவம் - தேவனை அமரா: - நித்யஸூரிகள் ஸதா - ஸர்வகாலத்திலும், நேத்ரை: - கண்களாலேயாவது, ஜ்ஞாநேநவா - ஜ்ஞானத்தாலாவது, பஶ்யந்தி - பார்க்கிறார்கள்.

பகவாந் முமுக்ஷூணாம் ஹிதாய வை | அந்யேஷாமபி லோகாநாம் ஸ்ருஷ்டிஸ்தித்யந்தஸித்தயே)[1] என்றும், "[illegible] | [illegible]" (ஆநந்த்யாத் தவ ஸேநாநே வ்யூஹ ஆத்யோ மயேரித꞉ | அநாதிகர்மவஶ்யாநாம் ஸம்ஸாரே பததாமத꞉)[2] என்று தொடங்கி, "[illegible]" (உபாஸகாநுக்ரஹார்த்தம் ஜகதோ ரக்ஷணாய ச)[3] என்றும், "[illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible]" (ஆவிராஸீத் பகவத꞉ பஞ்சாயுதபரிஷ்க்ருத꞉ | ருக்மாபஸ் ஸோயமமலஸ் ஸர்வஶாஸ்த்ரேஷு ஶப்தித꞉ | ஸோயம் ப்ரத்யும்நநாம்நாபூத் ததேகாந்த வபுர்த்தர꞉ | ஸோயம் ஸங்கர்ஷணுக்க்யோபூத் ததேகாந்தவபுர்த்

---

1. விஷ்வக்ஸேந ஸம்ஹிதை. முமுக்ஷூணாம் - முமுக்ஷுக்களுடைய, ஹிதாய - ஹிதத்தின் பொருட்டும், அந்யேஷாம் - இதரமாயிருக்கிற, லோகாநாம் - லோகங்களுடைய, ஸ்ருஷ்டிஸ்தித்யந்த ஸித்தயே - ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் இவைகளுடைய ஸித்தியின் பொருட்டும், ஸ꞉ - ச்ருதிப்ரஸித்தனை, பகவாந் - பகவானனவர், சதுர்வித꞉ - நான்குவிதமாயிருக்கிறுர். (வாஸுதேவ, ப்ரத்யும்ந, ஸங்கர்ஷண, அநிருத்த ரூபம்).

2. ஸேநாநே - சேனைதிபதியாழ்வானே, ஆநந்த்யாத் - அதிகமாயிருப்பதால், ஆத்ய꞉ - முந்தினதான, வ்யூஹ꞉ - வ்யூஹமானது, தவ - உனக்கு, மயா - என்னுல், ஈரித꞉ - சொல்லப்பட்டது, அநாதிகர்மவச்யாநாம் - அநாதியானகர்மத்திற்கு வச்யர்களுக்கும், ஸம்ஸாரே - ஸம்ஸாரத்திலே, அத꞉ - கீழே, அதாவது நரகத்திலே, பததாம் - விழுகிறவர்களுக்கும் (அநுக்கிரஹார்த்தமாகவும்).

3. உபாஸகாநுக்ரஹார்த்தம் - உபாஸகர்களுடைய அனுக்ரஹார்த்தமாகவும், ஜகத꞉ - லோகத்தினுடைய, ரக்ஷணாய ச - ரக்ஷணத்தின் பொருட்டும் என்று என்னுல் சொல்லப்பட்டது.

தர | இந்த்ர நீலப்ரதிகாஶ ஏஷ ஶாஸ்த்ரேஷு ஶப்திதః |
ததோ நாம்நா அநிருத்தோயம் ஸ்வயமேவாபவந் முநே |
ததேகாந்தவபுர் யுக்தஸ் தாதாத்விக கநப்ரபః)[1] என்றும், பகவச்சாஸ்த்ரத்திலே ஸ்ருஷ்ட்யாதிகளும், ஸம்ஸாரிஸம் ரக்ஷணமும், உபாஸக அநுக்ரஹமுமாகிற வ்யூஹக்ருத்யங் களும், ஸங்கர்ஷணாதி வ்யூஹங்களும் சொல்லப்பட்ட திறே. "ஸ சதுர்தா பகவாந்" (சதுர்விதஸ் ஸ பக வாந்)[2] என்கிறவிடத்தில், சதுர்விதமாகச் சொல்லிற்று, வாஸுதேவரையும் கூட்டுகையாலே.

இந்த பர வ்யூஹங்களுக்குத் தன்னில் விஶேஷமேது? என்ன அருளிச்செய்கிறார்;

45. பரத்வத்தில் ஜ்ஞாநாதிகளாறும் பூர்ணமாயிருக் கும்; வ்யூஹத்திலிவ்விரண்டு குணம் ப்ரகடமா யிருக்கும்.

---

1. ஸோயம் - அந்த இந்த, ருக்மாப: - ஸ்வர்ணம்போல் காந்தி யுடையவராயும், அமல: . நிர்மலமாயும், ஸர்வ சாஸ்த்ரேஷு - ஸர்வ சாஸ்திரங்களிலும், சப்தித: - சொல்லப்பட்டவரும், பஞ்சாயுத பரிஷ் க்ருத: - பஞ்சாயுதங்களாலே அலங்கரிக்கப்பட்டுமிருக்கிறவர், பகவ த: - பரவாஸுதேவனிடத்திலிருந்து, ஆவிராஸீத் - ஆவிர்பவித்தார், ஸோ(அ)யம் ப்ரத்யும்ந நாம்நா - அவர் ப்ரத்யும்னன் என்கிற பெயரை யுடையவராய்க்கொண்டு, தத் ஏகாந்தவபுர்தர: - அந்த ப்ரத்யும்ன னுக்கு உரியதான திருமேனியை தரித்தவராக, அபூத் - ஆனார், ஸோயம் - அந்த இந்த ப்ரத்யுமனனவர், ஸங்கர்ஷணாக்ய: - ஸங்கர்ஷ ணன் என்று பெயரையுடையவராய்க் கொண்டு, தத் ஏகாந்தவபுர் தர: - அந்த ஸங்கர்ஷணனுக்கு ஏகாந்தமான திருமேனியைத் தரிக் கிறவராக, அபூத் - ஆனார். ஏஷ: - இந்த ஸங்கர்ஷணனவர், இந்த்ர நீலப்ரதிகாச: - இந்த்ரநீலக்கல்லோடு துல்யன் என்று, சாஸ்த்ரே ஷு - சாஸ்திரங்களிலே, சப்தித: - சொல்லப்பட்டிருக்கிறார், ஹே முநே - ஹே ருஷியே! தத: - அதற்குப் பின்பு. அயம் - இந்த ஸங் கர்ஷணனவர், ஸ்வயமேவ - தானே, நாம்நா - பேரினலே, அநி ருத்த: - அநிருத்தன் என்கிற பெயரையுடையவனாக, அபவத் - ஆனார். ததேகாந்தவபுர்யுக்த: - அந்த அனிருத்தனுக்கு அந்தரங்க மான திருமேனியோடுகூடிக் கொண்டவராய்க் கொண்டு, ததாத்விக கந ப்ரப: - தத்காலத்திலுண்டான மேகத்தினுடைய காந்தியைப் போலொத்த காந்தியையுடையவராக, அபவத் - ஆனார்.

2. 269-ம் பக்கம் பார்க்க.

(பரத்வத்தில்) என்று தொடங்கி. அதாவது – "ஸம்பூர்ணஷட்குணஸ்தேஷு வாஸுதேவோ ஜகத்பதி:" (ஸம்பூர்ணஷட்குணஸ்தேஷு வாஸுதேவோ ஜகத்பதி:)[1] என்றும், "பூர்ணஸ்திமிதஷாட்குண்யோ நிஸ்தரங்கார்ணவோபம: । ஷண்ணாம் யுகபதுந்மேஷாத் குணாநாம் ஸ்வப்ரசோதிதாத் । அநந்த ஏவ பகவாந் வாஸுதேவஸ் ஸநாதந:" (பூர்ணஸ்திமிதஷாட்குண்யோ நிஸ்தரங்கார்ணவோபம: । ஷண்ணாம் யுகபதுந்மேஷாத் குணாநாம் ஸ்வப்ரசோதிதாத் । அநந்த ஏவ பகவாந் வாஸுதேவஸ் ஸநாதந:)[2] என்றும் சொல்லுகிறபடியே, வாஸுதேவரூபமான பரத்வத்தில் ஜ்ஞாந பல ஐஶ்வர்ய வீர்ய ஶக்தி தேஜஸ்ஸுக்களாகிற ஆறுகுணங்களும் பரிபூர்ணமாயிருக்கும். ஸங்கர்ஷணாதி ரூபமான வ்யூஹத்தில், "தத்ர தத்ராவஶிஷ்டம் யத் குணாநாம் த்வியுகம் முநே । அநுவ்ருத்திம் பஜத்யேவ தத்ர தத்ர யதாததம்" (தத்ர தத்ராவஶிஷ்டம் யத் குணாநாம் த்வியுகம் முநே । அநுவ்ருத்திம் பஜத்யேவ தத்ர தத்ர யதாததம்)[3] என்கிறபடியே, அவஶிஷ்டமான குணசதுஷ்டயமும் தத்ர தத்ராநுவ்ருத்தமாய்

---

1. அஹி. ஸம். தேஷு - அவர்களுக்குள், ஜகத்பதி: ஜகத்திற்குப் பதியான, வாஸுதேவ: - வாஸுதேவமூர்த்தியானவர், ஸம்பூர்ண ஷட்குண:- பூர்ணமாயிருக்கிற ஆறு குணங்களை யுடையவர்.

2. அநந்த: - நாசமில்லாமலிருக்கிறவராயும், ஸநாதந: - நித்யராயுமிருக்கிற, பகவாந் - பகவானுன, வாஸுதேவ: - வாஸுதேவமூர்த்தியானவர், ஸ்வப்ரசோதிதாத் - தன்னுலே உண்டுபண்ணப்பட்டிருக்கிற, ஷண்ணாம் குணாநாம் - ஆறுகுணங்களுடைய, யுகபத் - ஒரே காலத்தில், உன்மேஷாத் - விருத்தியினுலே. நிஸ்தரங்கார்ணவோபம: - அலையில்லாமலிருக்கிற ஸமுத்திரத்தோடு ஸமராய்க் கொண்டு, பூர்ணஸ்திமித ஷாட்குண்ய: - பூர்ணமாய் சலியாமலிருக்கிற, ஆறு குணத்தையுடையவராக, அபூத் - ஆனர்.

3. ஹே முநே - ஹே ருஷியே! அவசிஷ்டம் - ஸங்கர்ஷணாதிகளிடத்தில் மிகுதியாயிருக்கிற, குணாநாம் - குணங்களுடைய, யத் த்வியுகம் - யாதொரு நாலும் அதாவது நாலு குணமும், தத்ரதத்ர - அந்த அந்த மூர்த்திகளிடங்களியே, யதாததம் - அவர்களுக்குள்ள இரண்டு குணத்தை அதிக்ரமிக்காமல், அநுவ்ருத்திம் - அநுவ்ருத்தியை அதாவது இருக்குகையை, பஜத்யேவ - அடைகிறது.

நிற்கச்செய்தேயும், அதிகரித்த கார்யங்களுக்கு அநுகுண மான இவ்விரண்டு குணமே ப்ரகாஶமாயிருக்குமென்கை. “𑌗𑍁𑌣𑍈𑌷𑍍𑌷𑌡𑍍𑌭𑌿𑌸𑍍𑌤𑍍𑌵𑍇𑌤𑍈𑌃 𑌪𑍍𑌰𑌥𑌮𑌤𑌰𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌸𑍍𑌤𑌵 𑌬𑌭𑍌
𑌤𑌤𑌸𑍍𑌤𑌿𑌸𑍍𑌰𑌸𑍍𑌤𑍇𑌷𑌾𑌂 𑌤𑍍𑌰𑌿𑌯𑍁𑌗𑌯𑍁𑌗𑌳𑍈𑌰𑍍𑌹𑌿 𑌤𑍍𑌰𑌿𑌭𑌿𑌰
𑌭𑍂𑌃। 𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌾 𑌯𑌾 𑌚𑍈𑌷𑌾 𑌨𑌨𑍁 𑌵𑌰𑌦 𑌸𑌾𑌵𑌿𑌷𑍍𑌕𑍃𑌤𑌿𑌵
𑌶𑌾𑌤𑍍 𑌭𑌵𑌾𑌨𑍍 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰𑍈𑌵 𑌤𑍍𑌵𑌗𑌣𑌿𑌤𑌮𑌹𑌾𑌮𑌙𑍍𑌗𑌳𑌗𑍁𑌣𑌃”
(குணைஷ்ஷட்பிஸ்த்வேதைஃ ப்ரதமதர மூர்த்திஸ் தவ பபௌ ததஸ் திஸ்ரஸ் தேஷாம் த்ரியுகயுகளைர் ஹி த்ரிபிர பூ:| வ்யவஸ்த்தா யா சைஷா நநு வரத ஸாவிஷ்க்ருதி வஶாத் பவாந் ஸர்வத்ரைவ த்வகணிதமஹாமங்கள குண:)[1] என்று, இது தன்னை ஆழ்வானருளிச் செய்தாரிறே.

இனி, இந்த ஸங்கர்ஷணாதிகள் மூவர் பக்கலிலும் ப்ர காஶிக்கிற குணவிஶேஷங்களையும், இவர்கள் தான் இன்ன க்ருத்யங்களுக்குக் கடவராயிருப்பார்களென்னுமத்தையும், தனித்தனியே அருளிச்செய்யவேணுமென்று திருவுள்ளம் பற்றி, ப்ரதமம் ஸங்கர்ஷணர் படியை அருளிச்செய்கிறார்;

46. அதில் ஸங்கர்ஷணர், ஜ்ஞாநபலங்களிரண்டோ டுங்கூடி ஜீவதத்வத்தை அதிஷ்ட்டித்து, அத்தை ப்ரக்ருதியில் நின்றும் விவேகித்து, ப்ரத்யும்நா வஸ்த்தையையும் பஜித்து, ஶாஸ்த்ரப்ரவர்த்தநத்

1. வர. ஸ்த 16. ஹே வரத - ஓ வரதனே! - தவ - உன்னுடைய, ப்ரதமதரமூர்த்தி: - முதலாவது பரவாஸுதேவ மூர்த்தியானது, ஏதை: ஷட்குணை: து - இந்த ஆறு குணங்களாலும், பபௌ - ப்ரகாசித்தது, தத: - பிறகு, த்ரியுக - மூன்று இரண்டை (ஆறு குணங்களை) யுடைய பகவானே! திஸ்ர: - ஸங்கர்ஷண, ப்ரத்யும்ந, அநிருத்த என்கிற மூன்று ரூபங்கள், தேஷாம் - அந்தக் குணங்களினுடைய, த்ரியுகளை: - மூன்றுகளாகிய இரண்டுகளினால், அதாவது - ஒவ்வொன்றிலும் இரண்டு இரண்டு குணங்களாக, பபு: - ப்ரகாசித்தன. யா ச ஏஷா வ்யவஸ்தா - இந்த யாதொரு வியவஸ்தை யுண்டோ, ஸா - அது ஆவிஷ்க்ருதிவசாத் நநு - பிரகாசப்படுத்துவதின் அதீனத்தால் அன்றோ இருக்கிறது, பவாந் து - தேவரீரோ, ஸர்வத்ர ஏவ - எப்பொழுதும், அகணித மஹாமங்கள குண: - எண்ணமுடியாத பெரியமங்களகரமான குணங்களையுடையவர்.

தையும் ஜகத்ஸம்ஹாரத்தையும் பண்ணக் கட வராயிருப்பர்.

(அதில் ஸங்கர்ஷணர்) என்று தொடங்கி. அதாவது - வ்யூஹத்ரயத்திலும் வைத்துக்கொண்டு. ஸங்கர்ஷணர், "[illegible]" (தத்ர ஜ்ஞாநபலத்வந்த்வாத் ரூபம் ஸாங்கர்ஷணம் ஹரேः)[1] என்றும், "[illegible]" (பகவாநச்யுதோபீத்தம் ஷட்குணேந ஸமேதிதः | பலஜ்ஞாநௌ குணௌ தஸ்ய ஸ்ப்புடௌ கார்யவஸாந் முநே)[2] என்றும் சொல்லுகிறபடியே, ஸர்வ குணங்களுமுண்டாயிருக்கச் செய்தேயும் கார்யாநுகுண மாக ஜ்ஞாநபலங்களிரண்டோடுங் கூடி, "[illegible]" (ஸோயம் ஸமஸ்தஜீவா நாமதிஷ்ட்டாத்ருதயா ஸ்த்திதः)[3] என்றும் "[illegible]" (ஸங்கர்ஷணஸ் து தேவேஸோ ஜகத்ஸ்ரஷ்டுமநாஸ் ததः | ஜீவதத்வமதிஷ் ட்டாய ப்ரக்ருதேஸ்து விவிச்ய தத்)[4] என்றும் சொல்லு

1. விஷ்வக்ஸேந ஸம்ஹிதை. தத்ர - வ்யூஹத்ரயத்திற்குள்ளே, ஹரே: - விஷ்ணுவினுடைய, ஸாங்கர்ஷணம் - ஸங்கர்ஷண ஸம்பந்த மான, ரூபம் - ரூபமானது, ஜ்ஞாந பலத்வந்த்வாத் - ஜ்ஞானம் பலம் இந்த இரண்டு குணங்களாலுண்டானது.

2. ஹே முநே, ! - ஹே ரிஷியே ! இத்தம் - இந்தப்ரகாரம், அச் யுத: - ஆச்ரிதரை நழுவவிடாதவனான, பகவான் - பகவானானவர், இத்தம் ஷட்குணேந - இப்படி ஆறு குணங்களாலே, ஸமேதித: அபி - ப்ரகாசிக்கப்பட்ட போதிலும், கார்யவசாத் - கார்யானுகுணமாக, பலஜ்ஞாநௌ குணௌ - ஜ்ஞானம் பலம் இந்த இரண்டு குணங்கள், தஸ்ய - அந்த ஸங்கர்ஷணனுக்கு, ஸ்புடௌ - ஸ்புடங்களாயிருக்கின் றன.

3 ஸோயம் - அந்த இந்த ஸங்கர்ஷணர், ஸமஸ்த ஜீவானாம் - ஸமஸ்த ஜீவர்களுக்கும், அதிஷ்டாத்ருதயா - அதிஷ்டாதாவாக அதா வது ஆதாரமாக, ஸ்தித: - இருக்கிறார்.

4. தத: - அதற்குப்பின்பு, தேவேச: - தேவதைகளுக்கு நியா மகனான, ஸங்கர்ஷணஸ்து - ஸங்கர்ஷணனேவென்றால், ஜகத் - ஜகத்

கிறபடியே, ப்ரக்ருதிக்குள்ளே மயங்கிக் கிடக்கிற ஜீவதத்வத்தை அதிஷ்டித்து, அந்த அதிஷ்டாநவிஶேஷத்தாலே இத்தை ப்ரக்ருதியிலே நின்றும், நாமரூபவிஶேஷம் தோற்றும்படி விவேகித்து, "விவேகாநந்தரம் தேவ꞉ ப்ரத்யும்நத்வமவாப ஸ꞉" (விவேகாநந்தரம் தேவ꞉ ப்ரத்யும்நத்வமவாப ஸ꞉)[1] என்றும், "ஸோயம் ப்ரத்யும்நநாமாபூத் ததேகாந்தவபுர்த்தர꞉" (ஸோயம் ப்ரத்யும்நநாமாபூத் ததேகாந்தவபுர்த்தர꞉)[2] என்றும்சொல்லுகிறபடியே,ப்ரத்யும்நாவஸ்தையையும் பஜித்து, "ஶாஸ்த்ரப்ரவர்த்தநஞ்சாபி ஸம்ஹாரஞ்சைவ தேஹிநாம்" (ஶாஸ்த்ரப்ரவர்த்தநஞ்சாபி ஸம்ஹாரஞ்சைவ தேஹிநாம்)[3] என்றும், "பலேந ஹரதீதம் ஸ குணேந நிகிலம் முநே । ஜ்ஞாநேந தநுதே ஶாஸ்த்ரம் ஸர்வஸித்தாந்தகோசரம் । வேதஶாஸ்த்ரமிதி க்யாதம் பாஞ்சராத்ரம் விஶேஷத꞉" (பலேந ஹரதீதம் ஸ குணேந நிகிலம் முநே । ஜ்ஞாநேந தநுதே ஶாஸ்த்ரம் ஸர்வஸித்தாந்தகோசரம் । வேதஶாஸ்த்ரமிதி க்யாதம் பாஞ்சராத்ரம் விஶேஷத꞉)[4] என்றும் சொல்லுகிறபடியே

---

தை, ஸ்ருஷ்டிமநா: - ஸ்ருஷ்டிக்கவேணுமென்று இச்சித்தவனுய்க் கொண்டு, ஜீவதத்வம் - ஜீவதத்வத்தை, அதிஷ்டாய - அநுப்ரவேசித்து, ப்ரக்ருதேஸ்து - ப்ரக்ருதியில் நின்றும், தத் - அந்த ஜீவதத்வத்தை, விவிச்ய - நாமரூபம் தோற்றும்படி பிரித்து.

1. விவேகாநந்தரம் - அப்படிப் பிரித்த பின்பு, ஸ: தேவ: - அந்த ஸங்கர்ஷணனுனவர், ப்ரத்யும்நத்வம் - ப்ரத்யும்னனுயிருக்குகையை, அவாப - அடைந்தார்.

2. 220-ம் பக்கம் பார்க்க.

3. தேஹிநாம் - ப்ராணிகளுக்கு, சாஸ்த்ரப்ரவர்தநம் சாபி - சாஸ்த்ரப்ரவர்த்தனத்தையும், ஸம்ஹாரஞ்ச - ஸம்ஹாரத்தையும்,

4. பலேந - பலம் என்கிற, குணேந - குணத்தாலே, ஹரதி - ஸம்ஹரிக்கிருன். வேதசாஸ்த்ரம் இதி - வேதசாஸ்திரமென்றும், விசேஷத: - விசேஷமாக, பாஞ்சராத்ரம் இதி - பாஞ்சராத்ரமென்றும், க்யாதம் - ப்ரஸித்தமான, ஸர்வஸித்தாந்த கோசரம் - ஸமஸ்த ஸித்தாந்தங்களுக்கும் விஷயமான அதாவது ஸமஸ்த ஸித்தாந்தங்களுமடங்கிய, சாஸ்த்ரம் - சாஸ்திரத்தை, ஜ்ஞானேந - ஜ்ஞானத்தாலே தநுதே - விஸ்தரிப்பிக்கிருன் அதாவது சாஸ்திரப்ரவர்த்தனம் பண்ணுகிருன்.

வேதாதிஶாஸ்த்ரப்ரவர்த்தநத்தையும், ஜகத்ஸம்ஹாரத்தையும் பண்ணக் கடவராயிருப்பரென்கை.

*அநந்தரம், ப்ரத்யும்நர் படியை அருளிச்செய்கிறார் ;*

**47. ப்ரத்யும்நர், ஐஶ்வர்யவீர்யங்களிரண்டோடும்கூடி மனஸ்தத்வத்தை அதிஷ்ட்டித்து, தர்மோபதேஶத்தையும், மநுசதுஷ்டயம் தொடக்கமான சுத்தவர்க ஸ்ருஷ்டியையும் பண்ணக்கடவராயிருப்பர்.**

(ப்ரத்யும்நர்) என்று தொடங்கி. அதாவது - ப்ரத்யும்நர் "𑌐𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌵𑍀𑌰𑍍𑌯𑌸𑌂𑌭𑍇𑌦𑌾𑌤𑍍 𑌰𑍂𑌪𑌂 𑌪𑍍𑌰𑌾𑌦𑍍𑌯𑍁𑌮𑍍𑌨𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇" (ஐஶ்வர்ய வீர்ய ஸம்பேதாத் ரூபம் ப்ராத்யும்நமுச்யதே)[1] என்றும், "𑌪𑍂𑌰𑍍𑌣𑌷𑌾𑌡𑍍𑌗𑍁𑌣𑍍𑌯 𑌏𑌵𑌾𑌯𑌮𑌚𑍍𑌯𑍁𑌤𑍋𑌽𑌪𑌿 𑌮𑌹𑌾𑌮𑍁𑌨𑍇 । 𑌗𑍁𑌣𑌾𑌵𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌵𑍀𑌰𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑍌 𑌸𑍍𑌫𑍁𑌟𑍌 𑌤𑌸𑍍𑌯 𑌵𑌿𑌶𑍇𑌷𑌤𑌃" (பூர்ணஷட்குண ஏவாயமச்யுதோபி மஹாமுநே । குணாவைஶ்வர்யவீர்யாக்யௌ ஸ்புடௌ தஸ்ய விஶேஷத:)[2] என்றும் சொல்லுகிறபடியே, ஸகலகுணங்களுமுண்டாயிருக்கச் செய்தேயும், கார்யாநுகுணமாக விஶேஷேண ஸ்ப்புடங்களாயிருக்கிற ஐஶ்வர்ய வீர்யங்களோடே கூடி, "𑌮𑌨𑌸𑍋𑌽𑌯𑌮𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌤𑌾 𑌮𑌨𑍋𑌮𑌯 𑌇𑌤𑍀𑌰𑌿𑌤𑌃" (மநஸோயமதிஷ்ட்டாதா மநோமய இதீரித:)[3]

---

1. ப்ரத்யும்ந ரூபம் - ப்ரத்யும்னனுடைய ஸம்பந்தியான ரூபமானது, ஐச்வர்ய வீர்யஸம்பேதாத் - ஐச்வர்யம் வீர்யம் இவைகளுடைய சேர்க்கையினாலே உண்டானதாக, - உச்யதே - சொல்லப்படுகிறது.

2. ஹே மஹா முநே - மஹா முனியே! அச்யுத: - அச்யுதனை, அயம் - ப்ரத்யும்னனைவர், பூர்ண ஷட்குண ஏவாபி - பூர்ணமாயிருக்கிற ஷட்குணத்தை உடைத்தாயிருந்த போதிலும், தஸ்ய - அந்த ப்ரத்யும்னனுக்கு, விசேஷத: - விசேஷமாக, ஐச்வர்ய வீர்யாக்யௌ - ஐச்வர்யமென்றும் வீர்யமென்றும் பெயருடைய, குணௌ - குணங்கள், ஸ்புடௌ - ஸ்பஷ்டங்களாயிருக்கின்றன.

3. இந்த ப்ரத்யும்னனைவர், மநஸ: - மனதிற்கு, அதிஷ்டாதா - அதிஷ்டாதா வென்றும், மநோமய: இதி - மநோமயனென்றும், ஈரித: - சொல்லப்படுகிறான்.

என்கிறபடியே, ஜ்ஞாநப்ரஸரணத்வாரமான மநஸ்தத்வத்தை அதிஷ்டித்து, "𑌐𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑍇𑌣 𑌗𑍁𑌣𑍇𑌨𑌾𑌸𑍌 𑌸𑍃𑌜𑌤𑍇 𑌤𑌚𑍍𑌚𑌰𑌾𑌚𑌰𑌮𑍍 । 𑌵𑍀𑌰𑍍𑌯𑍇𑌣 𑌸𑌰𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌯𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃" (ஐஶ்வர்யேண குணேநாஸௌ ஸ்ருஜதே தச்சராசரம் | வீர்யேண ஸர்வதர்மாணி ப்ரவர்த்தயதி ஸர்வஶ:)[1] என்கிறபடியே, ஶாஸ்த்ரார்த்தாநுஷ்டாநரூபமான தர்மங்களினுடைய உபதேஶத்தையும், "𑌮𑌨𑍂𑌨𑌾𑌂 𑌸𑌰𑍍𑌗𑌮𑌕𑌰𑍋𑌨𑍍𑌮𑍁𑌖𑌬𑌾𑌹𑍂𑌰𑍁𑌪𑌾𑌦𑌤𑌃 । 𑌚𑌤𑍁𑌰𑍍𑌣𑌾𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌸𑌰𑍍𑌗𑌦𑍍𑌵𑌾𑌰𑌂 𑌜𑌗𑌤𑍍𑌪𑌤𑌿𑌃 । 𑌦𑍍𑌵𑌿𑌜𑌯𑍁𑌗𑍍𑌮𑌂 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌯𑍁𑌗𑍍𑌮𑌂 𑌵𑍈𑌶𑍍𑌯𑌯𑍁𑌗𑍍𑌮𑌂 𑌤𑌥𑍈𑌵 𑌚 । 𑌮𑌿𑌥𑍁𑌨𑌞𑍍𑌚 𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑌸𑍍𑌯 𑌏𑌤𑌨𑍍𑌮𑌨𑍁𑌚𑌤𑍁𑌷𑍍𑌟𑌯𑌮𑍍 । 𑌮𑌨𑍁𑌭𑍍𑌯𑍋 𑌮𑌾𑌨𑌵𑌶𑌤𑌂 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌪𑍁𑌂𑌮𑌿𑌥𑍁𑌨𑌤𑍋 𑌭𑌵𑍇𑌤𑍍 । 𑌏𑌕𑍈𑌕𑌂 𑌵𑌰𑍍𑌗𑌭𑍇𑌦𑍇𑌨 𑌤𑍇𑌭𑍍𑌯𑍋 𑌮𑌾𑌨𑌵𑌮𑌾𑌨𑌵𑌾𑌃 । 𑌸𑌹𑌸𑍍𑌰𑌶𑌃 𑌸𑌂𑌬𑌭𑍂𑌵𑍁𑌃 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌪𑍁𑌂𑌮𑌿𑌥𑍁𑌨𑌤𑌸𑍍𑌤𑌥𑌾 । 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌶𑍍𑌚 𑌤𑌤𑌸𑍍𑌤𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑍍𑌰𑌾𑌦𑍁𑌰𑍍𑌭𑍂𑌤𑌾𑌃 𑌸𑌹𑌸𑍍𑌰𑌶𑌃 । 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌹𑌿 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌸𑌂𑌪𑌨𑍍𑌨𑌾 𑌵𑍇𑌦𑌾𑌙𑍍𑌗𑌾 𑌨𑌾𑌨𑍍𑌯𑌯𑌾𑌜𑌿𑌨𑌃 । 𑌨𑌿𑌰𑌾𑌶𑌾𑌃 𑌕𑌰𑍍𑌮𑌕𑌾𑌰𑌣𑌾𑌨𑍍𑌨𑍈𑌵 𑌪𑍍𑌰𑌾𑌦𑍁𑌰𑍍𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇 । 𑌤𑍍𑌰𑌯𑍍𑌯𑌨𑍍𑌤𑍇𑌷𑍁 𑌚 𑌨𑌿𑌷𑍍𑌣𑌾𑌤𑌾 𑌆𑌤𑍍𑌮𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌵𑌿𑌜𑍍𑌞𑌕𑌾𑌃 । [illegible] 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑍇 𑌤𑍇 𑌜𑌗𑌤𑍍𑌪𑌤𑍇𑌃 । 𑌤𑍃𑌤𑍀𑌯𑍇𑌨 𑌜𑌗𑌨𑍍𑌨𑌾𑌥 𑌨𑌿𑌰𑍍𑌮𑌿𑌤𑌾 𑌮𑌨𑌵𑌾 𑌸𑍍𑌵𑌯𑌮𑍍 । 𑌪𑍍𑌰𑌾𑌣𑌪𑍍𑌰𑌯𑌾𑌣𑌯𑍋𑌶𑍍𑌚 𑌨𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾𑌃 𑌪𑌾𑌰𑌮𑌰𑍍𑌷𑌿𑌕𑍇 । 𑌇𑌤𑍍𑌯𑍇𑌷 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌃 𑌸𑌰𑍍𑌗𑌃 𑌸𑍍𑌮𑌰𑌣𑌸𑍍𑌯 𑌤𑌵 𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌃" (மநூநாம் ஸர்கமகரோத் முகபாஹூருபாதத: | சதுர்ணாம் ப்ராஹ்மணாதீநாம் ஸர்கத்வாரம் ஜகத்பதி: | த்விஜயுக்மம் க்ஷத்ரயுக்மம் வைஶ்யயுக்மம் ததைவ ச | மிதுநஞ்ச சதுர்த்தஸ்ய ஏதந்மநுசதுஷ்டயம் | மநுப்யோ மாநவஶதம் ஸ்த்ரீபும்மிதுநதோ பவேத் | ஏகைகம் வர்கபேதேந தேப்யோ மாநவ மாநவா: | ஸஹ

1. அஸௌ - இந்த ப்ரத்யும்நனானவர், தத் சராசரம் - அந்த சராசராத்மகமான ப்ரபஞ்சத்தை, ஐஶ்வர்யேண - ஐஶ்வர்யமென்கிற, குணேந - குணத்தாலே, ஸ்ருஜதே - ஸ்ருஷ்டிக்கிறான், வீர்யேண - வீர்யமென்கிற குணத்தாலே, ஸர்வஶ: - ஸமஸ்தமான ப்ரபஞ்சத்திலே, ஸர்வதர்மாணி - ஸமஸ்த தர்மங்களையும், ப்ரவர்த்தயதி - ப்ரவர்த்திப்பிக்கிறான்,

ஸா ஸம்பபூவுஶ்ச ஸ்த்ரீபும்மிதுநதஸ் ததா । மநுஷ்யாஶ்ச ததஸ் தேப்ய: ப்ராதுஶ்யுர் வீதமத்ஸரா: । ஏதே ஹி ஶுத்தஸத்வஸ்த்தா தேஹாந்தம் நாந்யயாஜிந: । நிராஶா: கர்ம கரணாந் மாமேவ ப்ராப்நுவந்தி தே । த்ரய்யந்தேஷு ச நிஷ்ணாதா த்வாதஶாத்யாத்மசிந்தகா: । வ்யூஹாநுவ்ருத்திம் ஸததம் குர்வதே தே ஜகத்பதே: । த்ருதீயேந ஜகத்தாத்ரா நிர்மிதா மநஸா ஸ்வயம் । குணப்ரதாநயோகே ச நிஷ்டிதா: புருஷர்ஷப । இத்யேஷ ஶாஸ்த்தவர்கோயம் கணேஶ தவ கீர்த்தித:)[1] என்று விஷ்வக்ஸேந ஸம்ஹிதையிற் சொல்லுகிறபடியே, முகபாஹூருபாதஜராய், மிதுநமா

1. சதுர்ணாம் ப்ராஹ்மணாநாம் - நான்காயிருக்கிற ப்ராஹ்மணாதிகளுடைய, ஸர்கத்வாரம் - ஸ்ருஷ்டிகாரணமாயிருக்கிற, ஜகத்பதி: - ஜகத்பதியான ப்ரத்யும்னனானவர், முகபாஹூருபாதத: - முகம், கை, துடை, பாதம் இவைகளிடத்தில் நின்றும், மநூநாம் - மநுக்களுடையவும், ஸர்க்கம் - ஸ்ருஷ்டியை, அகரோத் - பண்ணினார், த்விஜயுக்மம் - ப்ராஹ்மண மிதுனத்தையும் அதாவது ஸ்திரீ புமான்களென்ன, க்ஷத்ரயுக்மம் - க்ஷத்ரிய மிதுனங்களென்ன, வைச்யயுக்மம் - வைச்யமிதுனங்களென்ன, ததைவ ச - அந்தப்ரகாரம், சதுர்த்தஸ்ய - சதுர்த்தனுடைய அதாவது சூத்ரனுடைய, மிதுனம் ச - மிதுனமென்ன, ஏதத் - இது, மநுசதுஷ்டயம் - நான்கு மநுக்கள், ஸ்தரீபும் மிதுனத: - ஸ்த்ரீபுமான்களான மிதுனங்களான, மநுப்ய: - மநுக்களிடத்தில் நின்றும், மாநவசதம் - மானவசதமானது, அபவத் - உண்டாயிற்று. ததா - அந்தப்ரகாரம், தேப்ய: - அந்த மனுக்களிடத்தில் நின்றும், ஏகைகவர்க(ண)பேதேந - தனித்தனியான (வர்ணங்களின்) பேதத்தினாலே உண்டான, மாநவமாநவா :- அநேகமாநவர்கள், ஸ்த்ரீபும் மிதுனத:-ஸ்த்ரீபுமான்களாகக்கொண்டு, ஸஹஸா-சீக்கிரமாக, ஸம்பபூவு: - உண்டானார்கள், தத: - அதற்குப்பின், தேப்ய: - அந்த மானவர்களிடத்தில் நின்றும், மநுஷ்யா: ச - மநுஷ்யர்களும், வீதமத்ஸரா: - த்வேஷமற்றவர்களாய்க் கொண்டு, ப்ராதுஷ்யு: - உண்டானார்கள், ஏதே ஹி - இந்த மநுஷ்யர்களும், சுத்தஸத்வஸ்தா :- சுத்தஸத்வஸ்தராயும், தேஹாந்தம் நாந்யயாஜிந :- தேஹாவஸானபர்யந்தம் அன்யரைக் குறித்து யஜநம் பண்ணுதவர்களாயும், நிராசா: - பலாபிஸந்திரஹிதர்களாயும், கர்ம கரணாத் - கர்மத்தை அநுஷ்டிக்கிறவர்களாயு மிருப்பதினால், தே - அவர்கள், மாமேவ - என்னையே, ப்ராப்நுவந்தி - அடைகிறார்கள். த்வாதசாத்யாத்மசிந்தகா: - த்வாதசாக்ஷரமுகத்தாலே அத்யாத்மசிந்தகர்களாயுமிருக்கிற அவர்கள், ஸததம் ஜகத்பதே: - ஸர்வ காலத்திலும் ஜகத்பதியினுடைய, வ்யூஹாநுவ்ருத்திம் - வ்யூஹாநுவ்ருத்தியை, குர்வதே -

யிருக்கிற ப்ராஹ்மணாதிமநுசதுஷ்டயம் தொடக்கமாக இந்த மநுக்கள் பக்கலிலே நின்றும் மிதுநங்களாய்க் கொண்டு, தனித்தனியே வர்ணபேதந உண்டான மாநவ ஶதமும், அப்படியே ஸ்த்ரீபும்மிதுநங்களாய்க் கொண்டு, அந்த மாநவர் பக்கலிலே நின்றும் உண்டான மாநவரும், அவர்கள் பக்கலிலே நின்றும் உண்டான மநுஷ்யருமாய்க் கொண்டு, நிர்மத்ஸரராய், ஶுத்தஸத்வஸ்த்தராய், தேஹாந்தமந்யயாஜிகளன்றிக்கே, பலாபிஸந்தி ரஹிதராய்க் கொண்டு, பகவத்ஸமாராதநரூபமான கர்மத்தை அநுஷ்ட்டியாநிற்பாராய், வேதாந்தத்திலே நிஷ்ணாதராய், த்வாதஶாக்ஷரமுகேந அத்யாத்மசிந்தகராய், ஸர்வேஶ்வரனுடைய வ்யூஹாநுவ்ருத்தியை எப்போதும் பண்ணாநின்றுகொண்டு, பகவத் ப்ராப்தியைப் பண்ணாநிற்கும் ஶுத்தவர்கத்தினுடைய ஸ்ருஷ்டியையும் பண்ணக்கடவராயிருப்பரென்கை.

அநந்தரம், அநிருத்தர்படியை அருளிச்செய்கிறார் ;

**48. அநிருத்தர், ஶக்தி தேஜஸ்ஸுக்களிரண்டோடும் கூடி ரக்ஷணத்துக்கும், தத்வஜ்ஞாநப்ரதாநத்துக்கும், காலஸ்ருஷ்டிக்கும், மிஶ்ரஸ்ருஷ்டிக்கும் கடவராயிருப்பர்.**

(அநிருத்தர்) என்று தொடங்கி. அதாவது — அநிருத்தர், "ஶக்திதேஜஸ்ஸமுத்கர்ஷாதநிருத்ததநுர்ஹரே:" (ஶக்திதேஜஸ்ஸமுத்கர்ஷாதநிருத்ததநுர்ஹரே:)[1] என்றும்

பண்ணுகிறார்கள், ஹே புருஷர்ஷப - ஹே புருஷச்ரேஷ்டனே, ஹே கணேச - ஹேகணேசனே, ஜகத் தாத்ரா - ஜகத்தைத் தரிக்கிறவனை, த்ருதீயேந - நாலுவ்யூஹத்தில் மூன்றாவதான ப்ரத்யும்னனாலே, குண ப்ரதாநயோகே ச - குண ப்ரதான யோகத்திலேயும், நிஷ்டிதா: - நிஷ்டையையுடையவர்களாக, ஸ்வயம் - தானே, மநஸா - மனஸ்ஸினாலே, நிர்மிதா: - ஸ்ருஷ்டிக்கப்பட்டார்கள், இத்யேஷ: - இந்த ப்ரகாரம், அயம் இந்த, சுத்த ஸர்க: - சுத்த ஸர்கமானது, தவ - உனக்கு, கீர்த்தித: - சொல்லப்பட்டது.

1. விஷ்வக்ஸேந ஸம்ஹிதை. ஹரே: - விஷ்ணுவினுடைய, அநிருத்த தநு: - அநிருத்தனுடைய திருமேனியானது, சக்தி தேஜ: ஸமுத்கர்ஷாத் - சக்தி தேஜஸ்ஸுக்களுடைய உத்கர்ஷத்தினாலே உண்டாகிறது.

"[illegible]" (புருஷோபி மஹாத்யக்ஷ: பூர்ணஷட்குண உச்யதே, சக்திதேஜஸௌ குணௌ தஸ்ய ஸ்ப்புடௌ கார்ய வசாந் முநே)[1] என்றும் சொல்லுகிறபடியே, ஸர்வகுணங்களும் உண்டாயிருக்கச் செய்தேயும், கார்யாநுகுணமான சக்திதேஜஸ்ஸுக்களோடே கூடி, "[illegible]" (சக்த்யா ஜகதிதம் ஸர்வமநந்தாண்ட நிரந்தரம், பிபர்த்தி பாதி ச ஹரிர் மணிஸாநுரிவாணுகம், தேஜஸா நிகிலம் தத்வம் ஜ்ஞாபயத்யாத்மநோ முநே)[2] என்கிறபடியே ஜகத்ரக்ஷணத்துக்கும் உஜ்ஜீவந ஹேதுவான தத்வஜ்ஞாநப்ரதாநத்துக்கும் [illegible] என்கிறபடியே த்ருடி முதலாக த்விபரார்த்த பர்யந்தமாக உண்டான காலஸ்ருஷ்டிக்கும், "[illegible]"

1. மஹாத்யக்ஷ: - பெரிய யஜமானனுன, புருஷோபி - பரமபுருஷனும், பூர்ணஷட்குண: - பூர்ணமான ஷட்குணத்தையுடையவனுக, உச்யதே - சொல்லப்படுகிருன், தஸ்ய - அந்த அநிருத்தனுக்கு, சக்தி தேஜஸௌ - சக்தி தேஜஸ்ஸுக்களாகிற, குணௌ - குணங்கள், கார்ய வசாத் - கார்யவசத்தாலே, ஸ்புடௌ - ஸ்பஷ்டங்களாயிருக்கின்றன.

2. ஹே முநே - ஹே முநியே, அநந்தாண்ட நிரந்தரம் - அனந்தமான அண்டங்களாலே நிரந்தரமான அதாவது நெருங்கியிருக்கிற, இதம் ஸர்வம் - இந்த ஸமஸ்தமான, ஜகத் - ஜகத்தை, சக்த்யா - சக்தியினுலே, ஹரி: - விஷ்ணுவானவர், மணிஸாநு: - மாணிக்கபர்வதத்தினுடைய தாழ்வரையானது, அணுகம் இவ - அணுவைத் தரிப்பது போல, பிபர்த்தி - புரிக்கிருர், ஆத்மந - ஆத்மாவுக்கு, தேஜஸா - தேஜஸ்ஸினுலே, நிகிலம் - ஸமஸ்தமான, தத்வம் - தத்வத்தையும், ஜ்ஞாபயித்வா - அறிவிப்பித்து, பாதி ச - ரக்ஷிக்கிருர்.

[illegible] கீர்த்திதः" (துரீயோயம் ஜகந்நாதோ ப்ரஹ்மாணமஸ்ருஜத் ப்ரபு: | முகபாஹூருபஜ்ஜாதோ ப்ரஹ்மணः பரமேஷ்டிந: | சதுர்விதோ பூதஸர்கஸ் தேந ஸ்ருஷ்டஸ் ஸ்வயம்புவா | ப்ராஹ்மணாத்யாஸ் ததா வர்ணாः ரஜः ப்ராசுர்யதோபவந் | த்ரயீமார்கேஷு நிஷ்ணாதாः பலவாதே ரமந்தி தே | தேவாதீநேவ மந்வாநா ந ச மாம் மேநிரே ஸ்வதः | தம ப்ராயாஸ்த்விமே கேசிந் மம நிந்தாம் ப்ரகுர்வதே | ஆராத்யஞ்ச நியந்தாரம் ந ஜாநந்தः பரஸ்பரம் | ஸல்லாபம் குர்வதோ வ்யக்ரவே[illegible]தாः | மாம் ந ஜாநந்தி மோஹேந மயி பக்திபராங்முகாः | ஸ்வர்காதிஷு ரமந்த்யேதே அவஸாநே பதந்தி தே | காமாத்மாநோ மஹாபாக ஜராமரணயோகிந: | ஏவந்த்யேதே த்விஜா மோஹாத்தே ஹி ஸம்ஸாரவர்த்மநி | இத்யேஷ மிஶ்ரஸர்கஸ்து கர்ணைஶ தவ கீர்த்திதः)[1] என்று, விஷ்வக்

---

1. அயம் துரீய:- இந்த வாஸுதேவாதிகளுக்குள் நான்காவதான, ஜகந்நாத:-ஜகன்னாதனை அனிருத்தனென்பவன, ப்ரபு:-ஸமர்த்தனும். ப்ரஹ்மாணம் - பிரம்மாவை, அஸ்ருஜத் - ஸ்ருஷ்டித்தார், பரமேஷ்டிந:- பரமேஷ்டி யென்றுபெயரை யுடைத்தான, ப்ரஹ்மண: - ப்ரஹ்மாவினுடைய, முகபாஹூருபஜ்ஜாத:-முகம் கை துடை கால் இவைகளிடத்தில் நின்றுமுண்டான, சதுர்வித: - நான்குவிதமான, பூதஸர்க: - பிராணிகளுடைய ஸ்ருஷ்டியானது. தேந ஸ்வயம்புவா - அந்த ப்ரஹ்மாவினாலே, ஸ்ருஷ்ட: - ஸ்ருஷ்டிக்கப்பட்டது, ததா - அப்படியே, ப்ராஹ்மணாத்ய: - ப்ராஹ்மணன் முதலான, வர்ணா: - வர்ணங்கள், ரஜ: ப்ராசுர்யத: - ரஜோகுணப்ரசுரங்களாக, அபவன் - ஆயிற்று. தே - அவர்கள், த்ரயீமார்கேஷு - வேதமார்கங்களிலே, நிஷ்ணாதா: - நிஷ்டையை யுடையவர்களாயும், பலவாதே - பலவாதத்திலே, ரமந்தி - ரமிக்கிறவர்களாய் ஆகிறார்கள். தேவாதீநேவ - தேவாதிகளையே மந்வாநா: - ஆராத்யராக நினைத்தவர்களாய்க் கொண்டு, ஸ்வத: -

ஸேந ஸம்ஹிதையிற் சொல்லுகிறபடியே, ப்ரஹ்மாவி
னுடைய முகபாஹூருபாதஜராய், ப்ராஹ்மணாதி வர்ண
ராய், ரஜஃப்ரசுரராய், பூர்வபாகமார்க நிஷ்ணாதராய், பல
வாதத்திலே ரமியாநிற்பாரராய், ஈஶ்வரனையொழிய தேவா
திகளையே ஆராத்யராக நினைத்து, அதிலே சிலர் தமஃப்ரசுர
ராய் பகவந்நிந்தையைப் பண்ணி, ஆராத்யனாய், நியந்தா
வாயிருக்கிற அவனையறியாமல் வ்யக்ரமான வேதவாதங்
களிலே மநஸ்ஸை வைத்து, ஒருவர்க்கொருவர் அவற்றை
ஸல்லாபித்துக் கொண்டு, ஆகையாலே, பகவத்ஜ்ஞாந
பக்திகளில் அந்வயமின்றிக்கே, ஸ்வர்காதிகளிலே ரமியா
நின்றுகொண்டு, ஸ்வகர்மபலாவஸாநத்திலே அதஃபதித்து
காமவிஷயமான மநஸ்ஸையுடையராய், ஜராமரணங்களை
யடைந்து, ஸம்ஸாரமார்க காமிகளாய்த் திரியுமவர்களா
கிற மிஶ்ரவர்கத்தினுடைய ஸ்ருஷ்டியையும் பண்ணக் கட
வராயிருப்பரென்கை.

(அண்டத்தையும், அண்டகாரணங்களையும் தானே யுண்
டாக்கும், அண்டத்துக்கு உட்பட்ட வஸ்துக்களை, சேதநர்
க்கு அந்தர்யாமியாய் நின்று உண்டாக்கும்) என்று. ஸமஷ்
டிஸ்ருஷ்டியெல்லாம் அத்வாரகமாகவும், வ்யஷ்டி ஸ்ருஷ்டி

---

தாங்கள், மாம் - என்னை, ந ச மேநிரே - நினைக்கிறார்களில்லை, இமே - கேசித் - சிலர், தம:ப்ராயா: - தம:ப்ரசுரர்களாய்க்கொண்டு, மம நிந்தாம் - என்னுடைய நிந்தையை, ப்ரகுர்வதே - பண்ணுகிறார்கள், ஆராத்யஞ்ச - ஆராத்யனையும் நியந்தாரம் - நியந்தாவாயுமிருக்கிறவனை, ந ஜாநந்த: - அறியாதவர்களாய்க்கொண்டு, பரஸ்பரம் - ஒருவருக்கொருவர், ஸல்லாபம் - ஸல்லாபத்தை, குர்வத: - பண்ணாநின்றுகொண்டு, வ்யக்ரவேத வாதேஷு - வ்யக்ரங்களான வேதவாதங்களிலே, நிஷ்டிதா: - மனதையுடையவர்களாய்க் கொண்டு, மாம் - என்னை, நஜாநந்தி - அறிகிறார்களில்லை, ஏதே - இவர்கள், மோஹேந - அஜ்ஞானத்தாலே, மம - என்னிடத்திலே, பக்திபராங்முகா: - பக்தி இல்லாதவர்களாய்க் கொண்டு, ஸ்வர்காதிஷு - ஸ்வர்காதிகளிலே, ரமந்தி - ரமிக்கிறார்கள், தே - அவர்கள், அவஸாநே - ஸ்வர்கானுபவத்தினுடைய முடிவில், பதந்தி - விழுகிறார்கள். (இந்த லோகத்தில் பிறக்கிறார்கள்) மஹாபாக! ஏதே த்விஜா: - மஹாபாகனே இந்த ப்ராஹ்மணர்கள், காமாத்மாந: - காமவிஷயமான மனதை யுடையவர்களாய், ஜராமரணயோகிந: - ஜராமரணங்களை யடைந்தவர்களாய்க் கொண்டும், மோஹாத் - அஜ்ஞானத்தாலே, ஸம்ஸார வர்த்மநி - ஸம்ஸாரமார்க்

யெல்லாம் ஸத்வாரகமாகவும், இவர்தாம் கீழ் அருளிச் செய்கையாலும், "இவ்வண்டத்திலே பத்தாத்ம ஸமஷ்டி பூதனான ப்ரஹ்மாவுக்கும், இதுக்குக் கீழ் ஸ்வ ஸங்கல்பத் தாலே, எம்பெருமான்றானே ஸ்ருஷ்டித்தருளும்; இதுக்கு மேல், ப்ரஹ்மாவுக்கு அந்தர்யாமியாய் நின்று ஸ்ருஷ்டித் தருளும்" என்று, ஆச்சான்பிள்ளை யருளிச்செய்கையா லும், வ்யஷ்டி ஸ்ருஷ்டியெல்லாம் ஸத்வாரகமாகவே கொள்ளவேண்டுமாகையாலே, ப்ரத்யும்ந க்ருத்யமாகச் சொன்ன ஶுத்தவர்க ஸ்ருஷ்டி அத்வாரகம்; அநிருத்த க்ருத்யமாகச் சொன்ன மிஶ்ரவர்க ஸ்ருஷ்டி ஸத்வாரகம்; என்னவொண்ணாது. ஆகையால், ஶுத்தவர்கஸ்ருஷ்டி யும், மிஶ்ரவர்கஸ்ருஷ்டியும், ஸத்வாரகஸ்ருஷ்டிதன்னிலே சேதநருடைய கர்மவிஶேஷத்தாலேயாகக் கடவது. இந்த ஶுத்தவர்கஸ்ருஷ்டியும், மிஶ்ரவர்கஸ்ருஷ்டியும் எம்பெரு மான்றானே அருளிச்செய்யக் கேட்ட வநந்தரம், "[illegible] [illegible] [illegible]" (பகவந் தேவதேவே ஶ ஸர்வஜ்ஞ பரமேஶ்வர। கிமேஷ பவதா ஸ்ருஷ்டோ மிஶ்ரவர்கோ ஜகத்பதே। ஶுத்தஸ்ருஷ்டிம் விஹாயைஷாம் நிர்தய: புருஷோத்தம)[1] என்று, ஸேனைமுதலியார்கேட்க, "[illegible] [illegible] [illegible] [illegible] [illegible] வீக்ஷ்யா

---

கத்திலே, ப்லவந்த: - மிதக்கிறார்கள், இத்யேஷ: - என்றிந்த, மிச்ர ஸர்க: - மிச்ரஸர்கமானது, கணேச - கணேசனே, தவ - உனக்கு, கீர்த்தித: - சொல்லப்பட்டது.

1. ஹே பகவந் - ஓ! பகவானே! ஹே தேவ தேவேச - ஓ தேவாதி தேவனே, ஹே ஸர்வஜ்ஞ - ஹே ஸர்வஜ்ஞனே, பரமேச்வர - பரமேசுவரனே, ஜகத்பதே - ஜகத்பதியே, புருஷோத்தம - புருஷோத்தமனே, ஏஷாம் - இவர்களுடைய விஷயத்தில், நிர்தய: - நிர்தயராய்க் கொண்டு, சுத்தஸ்ருஷ்டிம் விஹாய - சுத்த ஸ்ருஷ் டியை விட்டு, ஏஷ: மிச்ரஸர்க: - இந்த மிச்ரஸ்ருஷ்டியானது, கிம் பவதா ஸ்ருஷ்ட: - ஏன் உன்னால் ஸ்ருஷ்டிக்கப்பட்டது?

ஜ்ஞாநப்ரஸங்கம் நிஷித்தகரணம் ததா | விஹிதாகர
ணஞ்சாபி வீக்ஷ்யைவாபராதகாந் | மிஶ்ரஸர்கங்
கரோம்யேவ ப்ரஹ்மணா பரமேஷ்டிநா | ஏவம் ஶாக்ருத
லேஶேந ஶுத்தஸர்கம் கரோமி ச | மநுப்ரமுக
ஸர்கோ யஶ் ஶுத்தஸர்கோ மயேரிதஃ | ஶுத்தஸத்த்வமயா
ஸ்ஸர்வே மத்பக்திநிரதாஸ்ஸதா | மமார்ச்சநபராஸ்ஸர்வே மத்த்யா
நபரிப்ரும்ஹிதாஃ | நமஸ்யந்தோ மஹாபாகா மஹாத்மா
நோ ஜிதேந்த்ரியாஃ | பக்த்யா பரமயா சைவ ப்ரபத்த்யா
வா மஹாமுநே | ப்ராப்யம் வைகுண்டமாஸாத்ய ந நிவ
ர்த்தந்தி தேவ்யயாஃ | ஏவம் ஸர்வேஷு குர்வத்ஸு மாந
வேஷு முமுக்ஷுஷு | ஸ்ருஷ்டிக்ஷயோ மஹாநாஸீந்
நாரகீ பூஸ்த்ருணாவ்ருதா | இதி ஜ்ஞாத்வா மிஶ்ரஸர்கஃ
க்ரியதே லீலயா மயா" (விஹாய ஶுத்தஸர்கஞ்ச மிஶ்ர
ஸர்கஸ்ய காரணம் | ஶ்ருணுஷ்வ கணநாத த்வம் தயாலுர்
நிர்தயோ ந ச | ஸர்வஜ்ஞோஹம் ந ஸந்தேஹஸ் ததாபி ச
ஸ்ருஜாம்யஹம் | அநாத்யவித்யாஸம்ருஷ்டசேமுஷீகாந்
நராநிஹ | வீக்ஷ்யாஜ்ஞாநப்ரஸங்கம் து நிஷித்த கரணம்
ததா | விஹிதாகரணஞ்சாபி வீக்ஷ்யைவாபராதகாந் |
மிஶ்ரஸர்கம் கரோம்யேவ ப்ரஹ்மணா பரமேஷ்டிநா | ஏவம்
ஶாக்ருதலேஶேந ஶுத்தஸர்கம் கரோமி ச | மநுப்ரமுக
ஸர்கோ யஶ் ஶுத்தஸர்கோ மயேரிதஃ | ஶுத்தஸத்வமயா
ஸ்ஸர்வே மத்பக்திநிரதாஸ் ஸதா | மமார்ச்சநபராஸ் ஸர்
வே மத்த்யாந பரிப்ரும்ஹிதாஃ | நமஸ்யந்தோ மஹாபாக
மஹாத்மாநோ ஜிதேந்த்ரியாஃ | பக்த்யா பரமயா சைவ ப்ர
பத்த்யா வா மஹாமுநே | ப்ராப்யம் வைகுண்ட்டமாஸா
த்ய ந நிவர்த்தந்தி தேவ்யயாஃ | ஏவம் ஸர்வேஷு குர்வத்
ஸு மாநவேஷு முமுக்ஷுஷு | ஸ்ருஷ்டிக்ஷயோ மஹா
நாஸீத் நாரகீ பூஸ்த்ருணவ்ருதா | இதி ஜ்ஞாத்வா மிஶ்ர
ஸர்கஃ க்ரியதே லீலயா மயா)[1] என்று, பகவான்றானே
அருளிச்செய்கையாலே.

---

1. கணநாத - கணேசனே ! த்வம் - நீ, சுத்தஸர்கஞ்ச - சுத்த
ஸர்கஸ்ருஷ்டியை, விஹாய - விட்டு விட்டு, மிச்ரஸர்கஸ்ய - மிச்ரஸர்க
ஸ்ருஷ்டிக்கு, காரணம் - காரணத்தை, ச்ருணுஷ்வ - கேளும்,
அஹம் - நான், தயாளு: - தயாளுதான், நிர்தயோ ந ச - தயையற்றவ

ஆக, வ்யூஹத்தின்படியை உபபாதித்தாராய் நின்றார் கீழ்; அநந்தரம், விபவத்தின் படியை, விஸ்தரேண உபபாதிக்கிறார் மேல் :

---

னன்று, ஸர்வஜ்ஞ: - ஸர்வஜ்ஞன், ந ஸந்தேஹ: - ஸந்தேஹமில்லை, ததாபிச - ஆனபோதிலும், அநாத்யவித்யாஸம்மூஷ்டசேமுஷீகாந் - அநாதியான அஜ்ஞானத்தாலே அபஹரிக்கப்பட்ட ஞானத்தை யுடையவர்களான, நராந் - மநுஷ்யர்களை, அஹம் - நான், இஹ - இங்கு, ஸ்ருஜாமி - ஸ்ருஷ்டிக்கிறேன், ஏஷாம் - இந்த மநுஷ்யர்களுடைய, அஜ்ஞாந ப்ரஸங்கம்து - அஜ்ஞானமுண்டாவதையும், ததா - அப்படியே, நிஷித்தகரணம் - செய்யத்தகாததைச் செய்கிறதையும், விஹிதாகரணஞ்சாபி - செய்யவேண்டியதைச் செய்யாமலிருக்கிறதையும், வீக்ஷ்ய - பார்த்து, பரமேஷ்டிநா - பரமேஷ்டியான, ப்ரஹ்மணா - ப்ரஹ்மமுகமாக, மிச்ரஸர்கம் - மிச்ரவர்கஸ்ருஷ்டியை, கரோம்யேவ - செய்யவே செய்கிறேன், ஏவம் - இப்படியே, ஸுக்ருதலேசேந - அல்ப ஸுக்ருதத்தாலே, சுத்த ஸர்கம் ச - சுத்தவர்கஸ்ருஷ்டியையும், கரோமி - பண்ணுகிறேன். மஹாபாக - மஹாபாகனே, ய: - யாதொரு மநுப்ரமுக ஸர்க: - மநுமுதலானவர்களுடைய ஸ்ருஷ்டியானது உண்டோ அது, சுத்த ஸர்க: - சுத்தவர்கஸ்ருஷ்டியென்று, மயா - என்னாலே, ஈரித: - சொல்லப்பட்டது, ஸர்வே - ஸமஸ்தமான பேர்களும், சுத்தஸத்வமயா: - சுத்தஸத்வமயர்களாயும், ஸதா - ஸர்வ காலத்திலும், மத்பக்திநிரதா: - என்னுடைய விஷயமான பக்தியையுடையவர்களாயும், ஸர்வே - ஸமஸ்தமான பேர்களும், மம அர்ச்சனபரா: - என்னுடைய ஆராதனத்தில் ஆஸக்தியுடையவர்களாயும், மத் தியான பரிப்ரும்ஹிதா: - என் விஷயமான த்யானத்தைச் செய்கிறவர்களாயும், ஜிதேந்திரியா: - ஜிதேந்திரியர்களாயுமிருக்கிறார்கள், மஹா முனே - மஹா முனியே, தே - அவர்கள், பரமயா பக்த்யா சைவ - உயர்ந்த பக்தியினாலாவது ப்ரபத்த்யாவா - பிரபத்தியினாலாவது, ப்ராப்யம் - ப்ராப்யமான, வைகுண்டம் - வைகுண்டத்தை, ஆஸாத்ய - அடைந்து, அவ்யயா: - நாசமற்றவர்களாய்க்கொண்டு, ந நிவர்த்தந்தி - திரும்புகிறார்களில்லை. ஏவம் - இந்தப்ரகாரம், ஸர்வேஷு - ஸமஸ்தமான, மானவேஷு - மநுஷ்யர்களும், முமுக்ஷுஷு - முமுக்ஷுவாக, குர்வத்ஸு - பண்ணப்பட்டவளவில், மஹாந் - அதிகமாக, ஸ்ருஷ்டிக்ஷய: - ஸ்ருஷ்டியினுடைய க்ஷயமானது, ஆஸீத் - உண்டாகும், நாரகீ பூ: - நரகபூமியானது, த்ருணாவ்ருதா - புற்களால் வ்யாப்தமாக ஆகும், அதாவது புல்லெழுந்து விடும், இதி - என்று, ஜ்ஞாத்வா - அறிந்து, மிச்ர ஸர்க: - மிச்ரவர்க ஸ்ருஷ்டியானது, மயா - என்னால், லீலயா - லீலையினாலே, க்ரியதே - பண்ணப்பட்டது.

த—72.

49. விபவம், அநந்தமாய் கௌணமுக்யபேதத்தாலே பேதித்திருக்கும்.

(விபவம், அநந்தமாய்) என்று தொடங்கி. அதாவது - "விஸவொ஽பி தயாநஜொ ஜெஸவ பரி கீத்ய்தெ। மௌணமுவ்யவிலாமெந லாஸ்ரெஷு ஷ ஹ஭ரௌநெ" (விபவோபி ததாநந்தோ த்விதைவ பரி கீர்த்யதே । கௌணமுக்யவிபாகேந ஸாஸ்த்ரேஷு ச ஹரேர்முநே!)[1] என்றும், "ப்ராது஭ாவொ த்விதா ப்ரொக்தொ மௌணமுவ்யவிஜெஜதஃ" (ப்ராதுர்ப்பாவோ த்விதா ப்ரோக்தோ கௌணமுக்யவிபேததஃ)[2] என்றும் சொல்லுகிறபடியே, விபவமானது - பரிகணித்துத் தலைக்கட்டப் போகாதபடி அநந்தமாய், கௌணமுக்யமாகிற பேதத்தாலே இரண்டுவகையாகப் பிரிந்திருக்குமென்கை. விபவமாவது - இதர ஸஜாதீயமாய்க் கொண்டு ஆவிர்ப்பவிக்கை. இதில், கௌணமென்றது - அவரமென்றபடி; முக்யமென்றது - ஶ்ரேஷ்டமென்றபடி. கௌணமாவது - ஆவேஶாவதாரம்; முக்யமாவது - ஸாக்ஷாதவதாரம். ஆவேஶந்தான் - ஸ்வரூபாவேஶமென்றும், ஶக்த்யாவேஶமென்றும், த்விவிதமாயிருக்கும். அதில், ஸ்வரூபாவேஶமாவது - ஸ்வஂமான ரூபத்தாலே ஆவேஶிக்கை; அதாவது - பரஶுராமாதிகளான சேதநருடைய ஶரீரங்களிலே, தன்னுடைய அஸாதாரணவிக்ரஹத்தோடே ஆவேஶித்து நிற்கை. ஶக்த்யாவேஶமாவது - கார்யகாலத்திலே, விதி ஶிவாதிகளான சேதநர் பக்கலிலே, ஶக்திமாத்ரத்தாலே ஸ்ப்புரித்து நிற்கை.

---

1. வி. ஸ. ஹே முநே - முனியே! ததா - அப்படியே, ஹரேः - விஷ்ணுவினுடைய. அநந்தः - முடிவில்லாமலிருக்கிற, விபவோபி - விபவாவதாரங்களும், கௌண முக்ய விபாகேந - கௌண முக்ய மென்கிற பேதத்தாலே அதாவது ஆவேசாவதாரம். ஸாக்ஷாதவதாரம் என்கிற பேதத்தாலே, சாஸ்த்ரேஷு - சாஸ்த்ரங்களிலே, த்விதைவ - இரண்டு ப்ரகாரமாக, பரிகீர்த்யதே - சொல்லப்படுகிறது.

2. வி. ஸ. ப்ராதுர்பாவः - எம்பெருமானுடைய அவதாரங்கள், கௌணமுக்ய விபேததः - கௌண முக்ய பேதத்தாலே, த்விதா - இரண்டுப்ரகாரமாக, ப்ரோக்தः - சொல்லப்படுகிறது.

இனி, முக்ய விபவத்தோடு கௌணவிபவத்துக்குண்ண்டான ஸாம்யவைஷம்யங்களை அருளிச்செய்கிறார் ;

50. மநுஷ்யத்வம், திர்யக்த்வம், ஸ்த்தாவரத்வம் போலே, கௌணத்வமும் இச்சையாலே வந்தது; ஸ்வரூபேணவன்று.

(மநுஷ்யத்வம்) என்று தொடங்கி. அதாவது - “[illegible]” (மதிச்சயா ஹி கௌணத்வம் மாநுஷ்யமிவ சேச்சயா । ஸௌகரத்வஞ்ச மத்ஸ்யத்வம் நாரஸிம்ஹத்வமேவ ச । யதா வா தண்டகாரண்யே குப்ஜாம்ரத்வம் மமேச்சயா । யதா வாஜிமுகத்வஞ்ச மம ஸங்கல்பதோ பவேத் । ஸேநாபதே மமேச்சாதோ கௌணத்வம் ந ச கர்மணா)[1] என்கிறபடியே, ராமக்ருஷ்ணத்வாதியான மநுஷ்யத்வம், மத்ஸ்ய கூர்மத்வாதியான திர்யக்த்வம், குப்ஜாம்ரத்வமாகிற ஸ்த்தாவரத்வமாகிற விவை இச்சையாலேயானுப் போலே, ஆவேசரூபமான கௌணத்வமும் இச்சையாலே வந்ததென்னும் ஆகாரமொக்

1. வி. ஸ. மதிச்சயாஹி - என்னுடைய இச்சையினாலே யன்றோ, கௌணத்வம் - ஆவேச ரூபமான கௌணத்வம் வருகிறது, மாநுஷ்யம் - ராமகிருஷ்ணாதியான மநுஷ்யாவதாரம், இச்சயா இவ - இச்சையிலே போல, ஸௌகரத்வஞ்ச - பன்றியாயிருக்கையும், மத்ஸ்யத்வம் - மத்ஸ்யமாயிருக்கையும், நாரஸிம்ஹத்வமேவ ச - நரஸிம்ஹமாயிருக்கையும், யதாவா - எப்படியானுல், தண்டகாரண்யே - தண்டகாரண்யத்திலே, குப்ஜாம்ரத்வம் - குட்டை மாமரமாயிருக்கையும், மமேச்சயா - என்னுடைய இச்சையினாலே ஏற்பட்டதோ, யதா - எப்படி, வாஜிமுகத்வஞ்ச - குதிரை முகமாயிருக்கையும், மம - என்னுடைய, ஸங்கல்பத: பவேத் - இச்சையினால் உண்டாகிறதோ, அப்படியே, ஹே ஸேநாபதே - ஸேநாபதியாழ்வானே, மம - என்னுடைய, இச்சாத: - இச்சையினாலேயே, கௌணத்வம் - ஆவேசாவதாரமும் வந்தது ந ச கர்மணா - கர்மத்தாலன்று.

கும்; அப்ராக்ருதமாயிருந்துள்ள ஸ்வாஸாதாரண விக்ரஹத்தோடே வந்ததன்று என்கை.

உபாத்தவசநங்கள் இச்சையாலே வந்ததென்கிற மாத்ரத்தைச் சொல்லிற்றேயாகிலும், கௌணத்வமாவது - மநுஷ்யத்வாதிகள் போலே, அப்ராக்ருத திவ்ய ஸம்ஸ்த்தாநத்தை இதரஸஜாதீயமாக்கிக்கொண்டு அவதரித்ததல்லாமையாலே, ஸ்வரூபேண வந்ததன்றென்னுமிடமும் ஸித்தமிறே.

இன்னமும், உபாஸ்யத்வ அநுபாஸ்யத்வகதநமுகத்தாலும், உபயத்துக்குமுண்டான விசேஷத்தை தர்சிப்பிப்பதாகத் திருவுள்ளம் பற்றி, ப்ரதமம் முக்யவிபவத்தினுடைய உபாஸ்யத்வத்தை ஸஹேதுகமாக அருளிச் செய்கிறார்;

**51. அதில், அப்ராக்ருத விக்ரஹங்களுமாய், அஜஹத் ஸ்வபாவ விபவங்களுமாய்; தீபாதுத்பந்ந ப்ரதீபம்போலே யிருக்கக்கடவதான முக்யப்ராதுர்ப் பாவங்களெல்லாம் முமுக்ஷுக்களுக்குபாஸ்யங்களாயிருக்கும்.**

(அதில்) என்று தொடங்கி. அதாவது - உபயவிதமான விபவத்திலும் வைத்துக் கொண்டு, "ப்ராதுர்பாவாஸ்து முக்யா யே மதம்ஸத்வாத் விஸேஷத: | அஜஹத்ஸ்வபாவ விபவா திவ்யா: ப்ராக்ருத விக்ரஹா: | தீபாத்தீபா இவோத்பந்நா ஜகதோ ரக்ஷணாய தே | அர்ச்யா ஏவ ஹி ஸேவ்யாஸ்தே ஸம்ஸ்ருத்யுத்தரணாய தே | முக்யா உபாஸ்யாஸ்ஸேவ்யாஸ் அநர்ச்யாநிதராந்விது:" (ப்ராதுர்ப்பாவாஸ்து முக்யா யே மதம்ஸத்வாத் விஸேஷத: | அஜஹத்ஸ்வபாவ விபவா திவ்யா: ப்ராக்ருதவிக்ரஹா: | தீபாத் தீபா இவோத்பந்நா ஜகதோ ரக்ஷணாயதே | அர்ச்யா ஏவ ஹி ஸேவ்யாஸ்தே ஸம்ஸ்ருத்யுத்தரணாயதே | முக்யா உபாஸ்யாஸ் ஸேவ்யாஸ் அநர்ச்யாநிதராந் விது:)[1] என்கிறபடியே,

1. வி. ஸ. யே - யாதொரு, ப்ராதுர்பாவா: - அவதாரங்கள், விசேஷ: - விசேஷமாக, மதம்சத்வாத் - என்னுடைய அம்சமாயிருக்

*ஆதியஞ்சோதியுருவையங்கு வைத்திங்குப் பிறந்ததாகை யாலே', அப்ராக்ருதவிக்ரஹங்களுமாய், "அஜோऽபி ஸந் அவ்யயாத்மா பூதாநாமீஶ்வரோऽபி ஸந்" (அஜோபி ஸந்நவ்யயாத்மா பூதாநாமீஶ்வரோபி ஸந் )[1] என்கையா லே, விடாதேயிருந்துள்ள அஜத்வ அவ்யயத்வ ஸர்வேஶ் வரத்வாதியான ஸ்வபாவ விபவங்களையுடையவையுமாய் அத ஏவ தீபத்தில் நின்றும் உத்பந்நமான ப்ரதீபம், ஸ்வகா ரணமான தீபத்தினுடைய ஸ்வபாவங்களை யுடைத்தா யிருக்குமாபோலே, ஸ்வகாரணதுல்ய ஸ்வபாவமாயிருக்கிற முக்யப்ராதுர்ப்பாவங்களெல்லாம் முமுக்ஷுக்களுக்கு உபா ஸ்யங்களாயிருக்குமென்கை.

அநந்தரம், கௌணவிபவத்தினுடைய அநுபாஸ்யத் வத்தை ஸஹேதுகமாக அருளிச்செய்கிறார்;

52. விதி ஶிவ பாவக வ்யாஸ ஜாமதக்ந்யார்ஜுந வித்தேஶாதிகளாகிற கௌண ப்ராதுர்ப்பாவங்க ளெல்லாம், அஹங்காரயுக்த ஜீவர்களை அதிஷ்ட் டித்து நிற்கையாலே, முமுக்ஷுக்களுக்கநுபாஸ் யங்கள்

---

கையினாலே, முக்யா - முக்யாவதாரங்களே, அஜஹத்ஸ்வபாவவிப வா: - விடாமலிருக்கிற ஸ்வபாவ விபவங்களை யுடைத்தாயும், திவ்யா: - விலக்ஷணங்களாயும், அப்ராக்ருத விக்ரஹா: - அப்ராகிருதமான திருமேனியையுடையவைகளாயும், தீபாத் உத்பந்நா: - தீபத்தில் நின்று உண்டான, தீபா இவ - தீபங்கள் போல ப்ரகாசமாயிருக் கிற, தே - அந்த முக்கிய அவதாரங்கள், ஜகத: - ஜகத்தினுடைய, ரக்ஷாயை - ரக்ஷணத்தின் பொருட்டு ஆகிறது. தே - அவைகள், ஸேநேச - ஸேனாபதியே, ஸம்ஸ்ருத்யுத்தரணாய - ஸம்ஸாரத்தைத் தாண்டுகிறதின் பொருட்டு, அர்ச்யா: ஏவ - ஆராதிக்கத்தகுந்தவை களே, ஸேநேச - ஸேநாபதியே, முக்யா: - முக்யாவதாரங்கள், உபா ஸ்யா: - உபாஸிக்கத் தகுந்தவைகள், இதராந் - அமுக்யமான ஆவேசாவதாரங்களை, அநர்ச்யாந் - ஆராதிக்கத் தகாதவைகளாக, விது: - அறிகிறார்கள்.

1, கீதை. 4-6. அஜோபி ஸந் - பிறப்பில்லாதவனா யிருந்தா லும், அவ்யயாத்மா - நாசமற்ற ஸ்வபாவ முடையவனாயிருந்தபோதி லும், பூதாநாம் ஈச்வரோபிஸந் - எல்லா பூதங்களுக்கும் ஈச்வரனா யிருந்தபோதிலும்.

(விதிஶிவ) இத்யாதியாலே. அதாவது “அநர்ச்யாநபி வக்ஷ்யாமி ப்ராதுர்பாவாந் யதாக்ரமம் | சதுர்முகஸ்து பகவாந் ஸ்ருஷ்டிகார்யே நியோஜித: | ஶங்கராக்யோ மஹாருத்ரஸ் ஸம்ஹாரே விநியோஜித: | மோஹநாக்யஸ் ததா புத்தோ வ்யாஸஶ்சைவ மஹாந்ருஷி: | வேதாநாம் வ்யஸநே தத்ர தேவேந விநியோஜித: | அர்ஜுநோ தந்விநாம் ஶ்ரேஷ்டோ ஜாமதக்ந்யோ மஹாந் ருஷி: | வஸூநாம் பாவகஶ்சாபி வித்தேஶஶ்ச ததைவ ச | ஏவமாத்யாஸ்து யேऽந்யேऽபி ப்ராதுர்பாவைரதிஷ்டிதா: || ஜீவாத்மாநஸ் ஸர்வ ஏதே நோபாஸ்யா வைஷ்ணவைர் ஹி வை | ஆவிஷ்டமாத்ராஸ் தே ஸர்வே கார்யார்த்தமமிதத்யுதே | அநர்ச்யாஸ் ஸர்வ ஏவைதே விருத்தத்வாந் மஹாமதே | அஹங்க்ருதியுதாஶ்சைதே ஜீவமிஶ்ரா ஹ்யதிஷ்டிதா:” (அநர்ச்யாநபி வக்ஷ்யாமி ப்ராதுர்ப்பாவாந் யதாக்ரமம் | சதுர்முகஸ்து பகவாந்ஸ்ருஷ்டிகார்யே நியோஜித: | ஶங்கராக்யோ மஹாருத்ரஸ் ஸம்ஹாரே விநியோஜித: | மோஹநாக்யஸ் ததா புத்தோ வ்யாஸஶ்சைவமஹாந்ருஷி: | வேதாநாம் வ்யஸநே தத்ர தேவேந விநியோஜித: | அர்ஜுநோ தந்விநாம் ஶ்ரேஷ்ட்டோ ஜாமதக்ந்யோ மஹாந் ருஷி: | வஸூநாம் பாவகஶ்சாபி வித்தேஶஶ்ச ததைவ ச | ஏவமாத்யாஸ்து வேஶேஶ ப்ராதுர்ப்பாவைரதிஷ்ட்டிதா: || ஜீவாத்மாநஸ் ஸர்வ ஏதே நோபாஸ்யிர்வைஷ்ணவீர்ஹி வை | ஆவிஷ்டமாத்ராஸ் தே ஸர்வே கார்யார்த்தமமிதத்யுதே | அநர்ச்யாஸ் ஸர்வ ஏவைதே விருத்தத்வாந் மஹாமதே | அஹங்க்ருதியுதாஶ்சேமே ஜீவமிஶ்ரா ஹ்யதிஷ்ட்டிதா:)[1]

---

1. அநர்ச்யாந் - ஆராதிக்கத் தகாமலிருக்கிற, ப்ராதுர்பாவாந் அபி - அவதாரங்களையும், யதாக்ரமம் - வரிசையாக, வக்ஷ்யாமி - சொல்லுகிறேன், பகவாந் - பூஜ்யனாய், ஸ்ருஷ்டிகார்யே - ஸ்ருஷ்டி காரியத்திலே, நியோஜித: - நியமிக்கப்பட்ட, சதுர்முகஸ்து - பிரம்மாவும், ஸம்ஹாரே - ஸம்ஹார காரியத்திலே, விநியோஜித: - நியமிக்கப்பட்ட சங்கராக்ய: - சங்கரரென்று பெயரையுடைய, மஹாருத்ர:-ச்லாக்யனான, ருத்ரனும், ததா - அப்படியே, மோஹநாக்ய: - மோஹனனென்று பெயரையுடைய, புத்த: - புத்ததேவனும், வேதாநாம் - வேதங்களுடைய, வ்யஸநே தத்ர - பிரிக்கிற காரியத்திலே, தேவேந - தேவனாலே, விநியோஜித: - நியமிக்கப்பட்ட, மஹாந்ருஷி: - மஹர்ஷியான,

என்கிறபடியே, ஸ்ருஷ்டிகர்த்தாவான ப்ரஹ்மாவும், ஸம்ஹாரகர்த்தாக்களான ஶிவபாவகர்களும், வேதங்களை வ்யஸித்த வ்யாஸனும். துஷ்டக்ஷத்ரிய நிரஸநம்பண்ணின ஜமதக்நிபுத்ரனான பரஶுராமனும், "அகார்யசிந்தாஸம காலமேவ ப்ராதுர்ப்பவஞ்சாபதர: புரஸ்தாத்" (அகார்யசிந்தா ஸமகாலமேவ ப்ராதுர்ப்பவஞ்சாபதர புரஸ்தாத்)[2] என்கிறபடியே, சாபதரனாய்க் கொண்டு ஜகத்தை ரக்ஷித்துக் கொண்டு போந்த கார்த்தவீர்யார்ஜுநனும், ஔதார்ய ப்ரதாநனான வித்தேசனும், ஆகிஶப்தத்தாலே, க்ரோடீக்ருதரான ககுத்ஸ்த்த முசுகுந்த ப்ரப்ருதிகளுமாகிற கௌண ப்ராதுர்ப்பாவங்களெல்லாம், ஸ்வாதந்த்ரியரூபமான அஹங்காரயுக்தரான ஜீவர்களை, கார்யார்த்தமாக ஆவேசமுகேந அதிஷ்ட்டித்து நிற்கையாலே, புபுக்ஷுக்களாயிருப்பார்க்கொழிய முமுக்ஷுக்களுக்கு உபாஸ்யங்களன்றென்கை. (வ்யாஸ ஜாமதக்ந்யார்ஜுந) என்கிற விடத்தில், அர்ஜுநன் என்றது - பாண்டுபுத்ர

---

வ்யாஸ: சைவ - வ்யாஸனும், தந்விநாம் - வில்லாளிகளுக்குள், ச்ரேஷ்ட: - சிறந்தவனான, அர்ஜுந: - கார்த்தவீர்யார்ஜுனனும், மஹாந் ருஷி: - மஹாஜ்ஞாதாவான, ஜாமதக்ந்ய: - ஜமதக்னி புத்ரனான பரசுராமனும், வஸூநாம் - வஸுக்களுக்குக்குள், பாவகச்சாபி - பாவகனும், ததைவச - அந்தப்ரகாரமே, வித்தேச:ச - குபேரனும், ஏவமாத்யாஸ்து - இவர்கள் முதலானவர்களோவென்றால், ஸேநேச - ஸேநாபதியே, ப்ராதுர்பாவை: - ஆவேசாவதாரங்களாலே, அதிஷ்டிதா: - அதிஷ்டாநம் செய்யப்பட்டவர்கள், ஏதே ஸர்வே - இந்த எல்லாரும், ஜீவாத்மாந: - ஜீவாத்மாக்கள், ஸா வைஷ்ணவீ - அந்த விஷ்ணுஸம்பந்தமானது, உபாஸ்திர்நஹி - உபாஸநம் செய்யத்தக்கன்று என்பது ப்ரஸித்தம், அமிதத்யுதே - அதிகமான காந்தியையுடையவனே! தே ஸர்வே - இந்த ஸமஸ்தமானபேர்களும், கார்யார்த்தம் ஒரு கார்யத்திற்காக, ஆவிஷ்டமாத்ரா: - ஆவேசிக்கப்பட்டவர்கள், மஹாமதே - மகா புத்திமானே! அஹங்க்ருதியுதா: - அஹங்காரத்தோடு கூடியும், ஜீவமிச்ரா: - ஜீவன்களோடும் இருக்கிற, இமே - இவர்கள் அதிஷ்டிதா: - அதிஷ்டிக்கப்பட்டவர்கள், ஏதே - இந்த, ஸர்வே ஏவ - ஸமஸ்தமான பேர்களும், விருத்தத்வாத் - விருத்தமாயிருப்பதினாலே, அநர்ச்யா: - பூஜிக்கத்தக்கவர்களன்று.

1, ரகுவம்சம். 6. ஸ. ஜனங்களுக்கு, அகார்யசிந்தா ஸமகாலமேவ - கெட்டகாரியத்தைச் செய்யப்போகிறேன் என்கிற எண்ணம்

னை அர்ஜுநனையாகவுமாம்; அவனையும் ஆவேஶாவதார மாக இதிஹாஸாதிகளிலே சொல்லுகையாலே.

இந்த கௌணப்ராதுர்ப்பாவ அநுபாஸ்யத்வந்தான் "𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑌵𑍍𑌯𑌾𑌸𑌸𑌹𑌸𑍍𑌰𑌕𑌰𑌭𑌾𑌰𑍍𑌗𑌵𑌾𑌃 𑌕𑌕𑍁𑌤𑍍𑌸𑍍𑌥𑌾𑌤𑍍𑌰𑍇𑌯𑌕𑌪𑌿𑌲𑌬𑍁𑌦𑍍𑌧𑌾𑌦𑍍𑌯𑌾 𑌯𑍇 𑌸𑌹𑌸𑍍𑌰𑌶𑌃 । 𑌶𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌵𑍇𑌶𑌾𑌵𑌤𑌾𑌰𑌾𑌸𑍍𑌤𑍁 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌸𑍍𑌤𑌤𑍍𑌕𑌾𑌲𑌵𑌿𑌗𑍍𑌰𑌹𑌾𑌃 । 𑌅𑌨𑍁𑌪𑌾𑌸𑍍𑌯𑌾 𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑍂𑌣𑌾𑌂 𑌯𑌥𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌗𑍍𑌨𑍍𑌯𑌾𑌦𑌿 𑌦𑍇𑌵𑌤𑌾𑌃" (ப்ரஹ்ம ருத்ரார்ஜுநவ்யாஸஸஹஸ்ரகர பார்கவா꞉ | ககுத்ஸ்த்தாத்ரேய கபிலபுத்தாத்யா யே ஸஹஸ்ரஶ꞉ | ஶக்த்யாவேஶாவதாராஸ் து விஷ்ணோஸ் தத்காலவிக்ரஹா꞉ | அநுபாஸ்யா முமுக்ஷூணும் யதேந்த்ராக்ந்யாதிதேவதா꞉)[1] என்றும், ஸம்ஹிதாந்தரத்திலும் சொல்லப்பட்டதிறே.

உபாத்தவசநங்களில், புத்தமுநியையும் ஆவேஶாவதாரங்களிலே யொன்றாகச் சொன்னவிது, "மாவுருவிற் கள்ள வேடம்" [2] என்று, ஸ்வேந ரூபேண அவதரித்ததாகச் சொன்ன நம்மாசார்யர்கள் வசநத்தோடு விருத்தமன்றோ என்னில்; கல்பபேதத்தாலே அப்படியுஞ் செய்யக் கூடுகையாலே விருத்தமன்று,

ஜாமதக்ந்யன் - ஸ்வரூபாவேஶ அவதாரமாயிருக்க, ஶக்தி ஆவேஶங்களோடே ஸஹ படித்தது - ஸ்வரூபேண

---

உதிக்கும் அநேககாலத்திலேயே, புரஸ்தாத் - அவர்கள் முன்பு, சாபதர꞉ - வில் லேந்தினவனுய், ப்ராதுர்ப்பவன் - தோன்றி,

1. பாஞ்சராத்ரம். ப்ரஹ்ம ருத்ரார்ஜுந வ்யாஸ ஸஹஸ்ரகர பார்கவா꞉ - ப்ரஹ்மா, ருத்ரன், அர்ஜுனன், வ்யாஸர், சூரியன், பரசுராமன் இவர்கள், ககுத்ஸ்தாத்ரேய கபிலபுத்தாத்யா꞉ - ககுத்ஸ்தர், ஆத்ரேயர், கபிலர், புத்தன் இவர்கள் முதலான, ஸஹஸ்ரஶ꞉ யே - அநேகம் பேர்களான யாதொருபேர்கள் உண்டோ, அவர்கள் விஷ்ணோ꞉ - விஷ்ணுவினுடைய, தத்கால விக்ரஹா꞉ - தத்காலத்திலுண்டான விக்ரஹங்கள், சக்தயாவேசாவதாரா꞉ து - சக்தியினுலே ஆவேசித்திருக்கிற அவதாரங்கள், முமுக்ஷூணும் - முமுக்ஷுக்களுக்கு, இந்த்ராக்ந்யாதி தேவதா꞉ யதா - இந்திரன், அக்நிமுதலான தேவதைகள்போல, அநுபாஸ்யா꞉ - உபாஸிக்கத்தக்கவர்களன்று.

2 ஆசார்யஹ்ருதயம். ப்ர. 2.

ஆவேசிக்கிறது, சக்தி விசேஷத்தாலேயாகையாலே யென்று நியமித்துக் கொள்வது.

ஆக, விபவங்களினுடைய ஆநந்த்யத்தையும், அதில் கௌணமுக்கிய விபாகத்தையும், அந்த கௌணமுக்யங்களுக்குண்டான பரஸ்பரவிசேஷத்தையும் அருளிச் செய்தார் கீழ். அநந்தரம், கீழ்ச் சொன்ன பரவ்யூஹங்களிலும், முக்ய விபவங்களிலும் உண்டான அவாந்தரபிதைகளும், அவற்றினுடைய புஜாயுதவர்ணாதிபேதங்களும் சொல்ல வேண்டியிருக்கச் செய்தேயும், சொல்லாமைக்கு ஹேதுவை அருளிச் செய்கிறார்;

53. நித்யோதித சாந்தோதிதாதிபேதமும், ஜாக்ரத் ஸ்வப்நாதியான சாதுராத்ம்யமும், கேசவாதி மூர்த்யந்தரமும், ஷட்த்ரிம்சத் பேத பிந்நமான பத்மநாபாதி விபவமும், உபேந்த்ர த்ரிவிக்ரம ததிபக்த ஹயக்ரீவ நர நாராயண ஹரி க்ருஷ்ண மத்ஸ்ய கூர்ம வராஹாத்யவதார விசேஷங்களும் அவற்றினுடைய புஜாயுதவர்ண க்ருத்யஸ்தாநாதிபேதங்களும், துரவதாரங்களுமாய், குஹ்யதமங்களுமாயிருக்கையாலே சொல்லுகிறிலோம்.

(நித்யோதித) இத்யாதியாலே. நித்யோதித சாந்தோதிதாதி பேதமாவது — "நித்யோதிதஸ்ஸம்பபூவ ததா சாந்தோதிதோ ஹரி:" (நித்யோதிதாத் ஸம்பபூவ ததா சாந்தோதிதோ ஹரி:)[1] இத்யாதியிற் சொல்லுகிறபடியே, நித்யமுக்த அநுபாவ்யராய், நித்யோதித ஸம்ஜ்ஞகராயிருக்கிற பரவாஸுதேவரும், அவர் பக்கலில் நின்றும் உத்பந்நராய், ஸங்கர்ஷணவ்யூஹ காரணபூதராய், சாந்தோதித ஸம்ஜ்ஞகராயிருக்கிற வ்யூஹவாஸுதேவரும் முதலான வாஸு

1. வி ஸ. நித்யோதிதாத் - நித்யோதிதரென்று பெயரையுடைய பரவாஸுதேவனிடத்தில் நின்றும், சாந்தோதித: - சாந்தோதிதரென்று பெயருடைய வ்யூஹவாஸுதேவரான, ஹரி: - ஹரியானவர், ஸம்பபூவ - உண்டானார்.

